யுத்த காண்டம்

(இரண்டாம் பகுதி)

+ தேவ காண்டம்

(4) H5

உ

சிவமயம்

கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தபுராணம்

நான்காவது

# யுத்தகாண்டம்

(இரண்டாம்பகுதியும்)

ஐந்தாவது

# தேவகாண்டமும்



உரையாசிரியர்:—

நவாலியூர் வை. நல்லையா அவர்கள்

ஆனந்த வருஷம் மாசி மகம்.

# முன்னுரை

உலகில் தெய்வநம்பிக்கை கெட்டு மக்கள் மனம்போனபடி வாழ்ந்து தானமும் தவமும் சுருங்கிய காலத்து நாராயணப் பெருமானின் பல கலைகளில் ஒன்றானது வியாச முனிவராகத்தோன்றி புராணங்களை உலக மக்கள் ஓதி உய்யும்பொருட்டு அருள் புரிந்துள்ளார்.

அப்புராணங்களின் ஓர் பகுதியான கந்த புராணத்தை காஞ்சியில் அவதரித்த கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தமிழால் பாடியுள்ளார். அற்புதமும் அருள் நிறைவும் கொண்ட இப்புராணத்தின் சிறப்பை அனைவரும் உணர்ந்து உயிர்க்குயிராகிய முருகப்பெருமானின் இன்னருளைப் பெறும்பொருட்டாக இப்புராணம் முழுமைக்கும் உரை எழுதத் தொடங்கி இப்பொழுது நான்காவது யுத்தகாண்டத்தின் இரண்டாம் பகுதியும், ஐந்தாவதான தேவகாண்டமும் பூர்த்தியாகி அச்சிட்டு ஒன்றாக வெளிவருகின்றது.

இப்பகுதியில் கூறப்படும் சிறப்புக்கள் அநேகம் உண்டு. விசேடமாக சூரபன்மன் வதைப்படலத்து எம்பெருமான் முருகன் சூரபன்மன் முன்பு தமது திருப்பெருவடிவத்தைத் தோற்றுவிக்கின்ற பகுதிகள் அற்புதமாக உள்ளன. எம்பெருமானுடைய எல்லாமாய் நிறைகின்ற கோலத்தைக் கண்டபோது சூரபன்மனது உள்ளத்தே விளங்கிடும் மாறுபாடுகளை நோக்கும்பொழுது இந்த உலகில் தீமையை நீக்கி நல்வழி ஒழுகுதற்கு இறைவன் அருள்தான் வேண்டுமென்பது புலப்படுகின்றது.

இறைவனோடு இயைந்ததுதான் இன்பம். ஏனையயாவும் எத்துணை இன்பத்தை நமக்கு ஊட்டுவன போன்றிருப்பினும், முடிவில் துன்பத்தைத்தான் தருவன. இப்பகுதிகளில் இக்கருத்துக்கள் சிறந்திருப்பதைக் காணலாம்.

தேவர்கள் போற்று படலமாக அமைந்த செய்யுட்களில் மிகு மேலான கருத்துக்களை இதன் ஆசிரியர் தெளிவுற வைக்கிறார். சூரசங்காரத்தின் தத்துவமே எம் உடலில் உள்ள வினையாவையும் போக்குவதாக அமைந்தது. இதனை தேவர்கள் வாக்கில் வைத்துப் பேசிடும்போது ''சூர்தடிந்தாய் அன்றே தொழுமடியோம் வல்வினையின் வேர் தடிந்தாய்'' எனப் பேசுதல் காண்க.

தெய்வயானையம்மை திருமணப்படலத்து திருமணத்தின் சிறப்பை நோக்கச் சென்றிடும் முசுகுந்தச் சக்கரவர்த்தியின் சேனைகளின் களி

யாட்டங்களை மிக வேடிக்கையாகப் பேசுகின்றார். மது உண்டோனுடைய இயல்புகளும் பேச்சும் காதலின் இயல்பும் அக்காலத்து அவர்கள்பால் நிகழும் அன்புடைய வாக்குகளும் இன்னும் வெறுப்புக்களுமானவை, மிகு சிறப்புடன் எடுத்து இயம்பப்பெற்றிருக்கின்றன.

எவர்க்கும் ஒருவனே கடவுள். அவனே ஆறுமுகமுடைய பெருமான். அவன் அருள் வடிவாகும் தெய்வநாயகியைக் கூடிக் கலத்தலாலே அனைத்தும் இயங்குகின்றன என்கின்றதை ''உலகருள் கருணையோடிருந்தான்'' என்கின்றார்.

இந்த ஐந்தாவது பகுதி பெரும்பாலும் கந்தசட்டி விரத காலங்களில் ஓதிடுவதற்கு ஏற்றதாக இருக்கின்றது. அநேக ஆலயங்களுக்கு இப்பகுதி பெரும் உதவியாக இருக்கும் என எண்ணுகிறேன்.

இந்த ஐந்தாவது பகுதியை வெளியிடுவதற்கு பணவசதியிராது தவிப்புற்ற போது கண்ணருள் நிறைந்த விநாயகப் பெருமான் திருவருளால் குப்பிளானைச் சேர்ந்த ஓர் அம்மையார் தெய்வீகநூல்களை அச்சிட்டு வெளியிடும் தொண்டின் பெருமையை உணர்ந்து தாமாகவே பொருள் ஈந்து நமக்கு ஊக்கம் கொடுத்தனர். அவர்கட்கு எனது நன்றி.

இக் காண்டத்தை அச்சிடுவதற்கு பெரும் உதவி புரிந்து பூர்த்தியாக்கி வைத்த ஸ்ரீ லங்கா அச்சக முதல்வருக்கும், முகாமையாளர்க்கும், ஊழியர்கட்கும் எனது நன்றியறிதலைத் தெரிவிக்கின்றேன்.

எம்பெருமானுடைய புகழ் எங்கும் பெருகுக. எல்லோரும் இதனை ஓதி இன்புற்று வாழ்ந்திடுக.

உயரப்புலம்.
24-2-75.

வை. நல்லையா.
உரையாசிரியன்.

# சிங்கமுகாசுரன் வதைப்படலம்

என்னலும் ஒற்றர் கேளா இறைவனை இறைஞ்சி ஏகி
உன்னுறு நினைப்பின் முந்தி உத்தரத் தளக்கர் நண்ணி
மன்னகர் புகுந்து ஞெள்ளல் கடந்துமந் திரத்துட் புக்குச்
சென்னியா யிரங்கொண் டுள்ள சிங்கமா முகவற் கண்டார்.

என்று இவ்வாறு சூரபன்மன் சொல்லலும். தூதுவர் அதனைக்கேட்டு, சூரபன் மனை வணங்கி. விடைபெற்று அப்பால் மனம் ஒன்றை நினைக்கும் வேகத்திலும் விரைவாக முந்திஓடி வடக்கில் உள்ள சமுத்திரத்தை அடைந்து, அதன் நடுவுள்ள நல்ல நகரினுள் பிரவேசித்து, அதன் மதிலைக் கடந்து சபையினுட் புகுந்து அச்ச பையில் தலைமைப்பாட்டுடன் இருந்த ஆயிரம் தலையுடைய சிங்கமுகாசுரனைக் கண் டார்கள். 1

களித்தனர் மகிழ்ந்து தூதர் கான்முறை வணங்கி நிற்ப
அளித்திடும் அரசின் வைகும் அரிமுகன் வந்த தென்னை
கிளத்திடு வீர்கள் என்னக் கேடிலா அவுணர் மேலோன்
விளித்தனன் ஐய நின்னை விரைந்தனை வருக வென்றார்.

சிங்கமுகாசுரன் இருந்த நிலையைக் கண்டு தூதுவர்கள் மனம் மலர்ந்து மகிழ்ச்சி யடைந்து, அவன் காலிலே வணக்கம்செய்து அத்தூதுவர் முன்நிற்றலும், உலகினைக் காக்கும் அரசில் இருக்கின்ற சிங்கமுகன் தூதுவரை நோக்கி நீங்கள் வந்த காரணம் என்ன? சொல்வீர்களாக எனக் கேட்டலும், அத்தூதுவர் அவனை நோக்கிக் கேடு இலாத அசுரர்க்கு மேலாய சூரபன்மன் உம்மை அங்கு வருமாறு அழைத்துள்ளான்; எம்ஐயனே! விரைவாக நீர்வருவீராக என்றார்கள். 2

## வேறு

சரத்தினுங் கடியவர் இனைய சாற்றலும்
அரித்திறல் முகத்தவன் வினவி ஆயிடை
விருத்தமுண் டேலது விளம்பு வீரென
உரைத்தனன் நன்றென ஒற்றர் கூறுவார்.

அம்பிலும் பார்க்க வேகமுடன் செல்லும் தூதுவர் இவற்றைச் சொல்லலும். சிங்கத்தின் திறமையான முகமுடைய சிங்கமுகாசுரன் அதுகேட்டு, மீளவும் தூது வரை நோக்கி அவ்விடம் விசேடமான செய்திகள் உண்டோ? அதைச் சொல்வீர்க ளாக எனக்கேட்டலும்: அத்தூதுவர் நன்று என்று அங்குள்ள நிகழ்ச்சிகளைக் கூறு வார்கள். 3

நும்பியை வரையொடு நுதிகொள் வேலினல்
அம்புவி வரைப்பில்வந் தட்ட கந்தவேள்
நம்பதி முன்னவன் நகர்வந் தெய்தினன்
செம்பது மன்முதல் தேவர் சூழவே.

உமது தம்பி தாரகனை கிரவுஞ்சமலையுடன் சேர கூர்மை கொண்ட வேலினல் இப்பூமியின் எல்லையில் வந்து சங்கரித்த கந்தக்கடவுள் நமது அரசனின் பதியான வீரமகேந்திரபுரத்தில் வந்து அடைந்துள்ளார்: செந்தாமரை மலர்மேல் இருக்கும் பிரமன் திருமால் முதல் தேவர்கள் சூழ்ந்திடும்படியாக 4

வந்திடும் எல்லைபோய் மலைந்து பைப்பயப்
புந்திகொள் அமைச்சருஞ் சிறுரும் பொன்றினர்
உய்ந்தனன் இரணியன் உததி ஓடினன்
எந்தையங் கிருந்தனன் புதுமை ஈதென்றார்.

முருகப்பெருமான் வந்துற்ற எல்லையில்; அவருடன் சென்று போரிட்ட சூழ்ச்சியில் வல்லமைமிகுந்த மந்திரிகளும் மற்றைய அரசனின் மைந்தர்களும் இறந்து போனார்கள் இரணியன் தப்பித்துக்கொண்டு கடலினுள் ஓடிப்போயினான். எமது அரசர்பெருமான் அங்கு தனித்து இருக்கின்றான். இதுதான் அங்குள்ள புதுமைகள் என்றார் தூதுவர். 5

தொழுந்துணைக் கையுடைத் தூதர் இன்னணம்
மொழிந்தது வினவலும் முனிவும் மானமும்
அழுந்திடு துயரமும் ஆகம் போழ்ந்திட
எழுந்தனன் அவுணரோ டேகல் மேயினான்.

இரு கைகளும் கூப்பித் தொழுது வண்ணம் அமைந்து நின்ற தூதுவர் இத்தன்மையால் மொழிந்ததை சிங்கமுகன் கேட்டலும்; கோபமும் மானமும்; தவிர்க்க முடியாதபடி மனதை ஆழ்த்திடும் துயரமும் ஆயவை எல்லாம் உடலைப் பிளப்பது போன்று வருத்திட எழுந்து தூதுவருடன் செல்லலுற்றான். 6

முன்புறு கடையுறு மொய்த்த தூதரை
என்பெருஞ் சேனையைக் கொணர்திர் ஈண்டெனத்
தென்புலக் கோமகன் ஒற்றிற் செப்பலும்
மன்பெருந் தானைகள் வல்லை வந்தவே.

முன்னாக உள்ள கடைவாய்தலில் மொய்த்து நின்ற தூதுவரை நோக்கி: என் பெரும் சேனையை இங்கு கொண்டுவாருங்கள் என்னலும்; தென்திசையில் உள்ள இயமதேவனின் தூதுவர்கள் போன்று; அதிவிரைவாக அத்தூதுவர் செய்திகளை அறிவித்த நேரத்து அங்கிருந்த மிகப் பெருஞ் சேனைகள் விரைவாக வந்தன. 7

தூசிகொள் நாற்படை துவன்றிச் சேர்தலும்
ஆசுறும் அரிமுகத் தண்ணல் கண்ணுறீஇப்
பாசன மன்னவர் பாங்கர் சுற்றிடத்
தேசுடை மணிநெடுந் தேரொன் றேறினான்.

முன் அணி கொண்ட நான்கு விதமான அசுரசேனைகள் நெருக்கமுடன் வந்து சேர்தலும்; தீமை மிகுந்த சிங்கமுகாசுரன் என்னும் பெரியவன் அதனைக் கண்ணுற்று; தனது துணையான அசுரத்தலைவர்கள் பக்கரில் சூழ்ந்து வந்திட ஒளிமிகுந்த ஓர் பெரிய இரத்தினத் தேரில் ஏறினான். 8

தாரொலி செய்தன தாள்வ யப்பரி
பேரொலி செய்தன பிறங்கு பூட்கைசேர்
காரொலி செய்தன கண்டை ஆர்த்தன
தேரொலி செய்தன தெழித்த சில்லியே.

வீரர்களது மாலைகளில் வண்டுகள் ஒலி செய்தன. வலிமை மிகுந்த காலினையுடைய வீரக்குதிரைகள் பெரும் கனைப்பொலியைச் செய்தன. மேகம் துதிக்கையுடன் வருவது போன்ற பெரு யானைகள் முழக்கம் செய்தன. கண்டைகள் ஆர்ப்பரித்தன. தேர்கள் ஓசை செய்தன. வாத்தியங்கள் முழக்கம் செய்தன. 9

முரட்டுடி சல்லிகை முரசங் காகளம்
உருட்டுறு சுரிமுகம் உடுக்கை துந்துபி
திரட்டுறு தண்ணுமை திமிலை யாதிகள்
இரட்டிய கேதனம் எங்கும் ஈண்டிற்றே.

மிகவும் பேர் ஓசையுடைய சல்லிகை; முரசப்பறை; காகளம், உருண்டைவடிவான சுரிமுகம்; உடுக்கை துந்துபி திரண்டுள்ள மத்தளம்; திமிலை ஆதியான வாத்தியங்கள் அங்கு முழக்கம் செய்தன. கொடிகள் எங்கும் பரந்து கொண்டன. 10

தழங்குரன் மால்கரி புரவி தானவர்
அழுங்குறு தேர்நிரை அனிகம் வானமே
வழங்குறு நெறியதா வலிதிற் சென்றன
முழங்கில பெயர்கில முகில்கள் அஞ்சியே.

அதிரும் குரல் கொண்ட மதயானை; குதிரை; அசுரர்; இரைகின்ற தேர் ஆனவைகளின் நிரைகளான சேனைகள் வானத்தில் இவர்களுக்கென விளங்கிய மார்க்கமாக வலியுடன் சென்றன. இச் சேனையின் செல்லலை நோக்கி பயத்தினால் முகில்கள் முழங்கவுமில்லை அல்லது அசையவுமில்லை. 11

ஏயிது தன்மையின் ஈண்டு தானைகள்
பாயின சென்றிடப் பரிதி போலொளிர்
ஆயிர மவுலியன் அவுணர் நாயகன்
சேயுயர் விசும்பினில் எழுந்து சென்றனன்.

இத்தன்மையான நிலையால் இவ்விடம் கூடித்திரண்ட அசுரச்சேனைகள் எங்கும் பரவலாகச் சென்றிட; சூரியனைப் போன்று ஒளிர்கின்ற ஆயிரம் முடிகளை அணிந்த ஆயிரம் தலையும் இரண்டாயிரம் கையுமுடைய அசுரர்க்குள் நாயகமான சிங்கமுகாசுரன் மிகு உயர்ந்த வானத்தில் எழுந்து தேருடன் போயினான். 12

கன்னலொன் றளவையில் ககனத் தாற்றினால்
சென்னிகள் பலவுடைச் சீய மாமுகன்
மன்னவன் உறைதரு மகேந்தி ரப்புரந்
துன்னினன் வெருவியே சுரர்கள் ஓடவே.

ஒரு நாழிகைப் பொழுதளவிலே வானமார்க்கமாக பலதலைகளையுமுடைய சிங்கமுகாசுரன்; சூரபன்மன் இருக்கும் வீரமகேந்திரபுரம் சென்று சேர்ந்தான். அவன் வருகை கண்ட தேவர்கள் யாவரும் பயங்கொண்டு ஓட்டம்மெடுக்கும்படியாக; 13

அடைத்தலை நீங்கிய அம்பொற் கோநகர்க்
கடைத்தலை வந்தனன் கனகத் தேரொரீஇப்
படைத்தலை மன்னவர் பரவ உள்புகாக்
கிடைத்தலை மேயினன் கெழுமு சூரவை.

பெருங் காவலுடன் தலைமையாக இது காறும் இருந்த நிலைநீங்கிய அழகுடைய பொன்னான தலைநகரிடத்துள்ள கடைவாயிலில் வந்தான் சிங்கமுகன். பொன்னினாற் செய்த தனது தேரைவிட்டு இறங்கினான். சேனைகட்குத் தலைவரான அதிபர்கள் இருபுறமும் வணக்க மரியாதை செய்திட அரண்மனையின் உட்புகுந்து சூரபன்மனுடைய அரசசபையிடத்தை வந்து கிட்டினான். 14

அரசியல் புரிந்திடும் அவையை நண்ணிய
முரணுறு சிங்கமா முகத்தன் முன்னவன்
திருவடி மலர்களில் சென்னி தீண்டுறப்
பரிவொடு வணங்கினன் தொழுத பாணியான்.

சூரபன்மன் அரசியல் புரிந்திடுகின்ற சபையை அடைந்துகொண்ட முரணான வலியால் மிகுந்த சிங்கமுகாசுரன்; தமையனது திருவடி மலர்களில் தன் சிரசு தீண்டுறும்படி வீழ்ந்து பரிவுடன் வணங்கினான், கைகள் இரண்டும் கூப்பித் தொழுத வண்ணமுடையோனாக. 15

வணங்கிய தம்பியை மலர்க்கை தொட்டெடா
இணங்கிய மார்புறுத் திறுகப் புல்லலும்
நிணங்கவர் வேலினுய் நினது செம்முகம்
உணங்கிய துற்றதென் உரைத்தியால் என்ருன்.

வணங்கிய தம்பியை சூரபன்மன் தனது மலர்போலும் அழகிய கையால் தொட்டு எடுத்து; இணங்கிய தன் நெஞ்சுடனுக இறுகச் சேரத் தழுவிக்கொண்டு மகிழ்ந்து கொள்ளலும்; அதுவேளை சிங்கமுகன் தமையனை நோக்கி; பகைவரது உடலின் நிணத்தில் தோய்ந்து வீரம் நிறைந்த வேலுடையோய்! உனது செம்மையான முகம் வாடியது; உனக்கு உற்றதுயாது உரைத்தியால் என்ருன். 16

என்னலும் அவுணர்கோன் இளைய வன்றனை
முன்னுற இருத்தியே முரணின் மேலையோய்
என்னிடை யுற்றன இசைப்பன் கேளெனு
அன்னவன் உணர்வகை அறைதல் மேயினுன்.

என்ற காலையில் அசுரர்க்கெல்லாம் தலைவனுன சூரபன்மன் தனது தம்பியை முன்னுக இருத்தி, மாறுதல் இல்லாத மேன்மை உடையோய்! என்னிடத்து நேர்ந்துள்ள காரியங்கள் பற்றி எடுத்துக் கூறுவேன் கேட்பாய் என்று, சிங்கமுகாசுரன் தனது நிலையை நன்கு உணரும் வண்ணம் இவற்றைக் கூறுகின்ருன். 17

அன்றுநீ போந்தபின் அயில்கொள் வேலினுற்
குன்றினை எறிந்திடு குமரன் என்பவன்
தன்றுணைச் சேனையுந் தானும் இந்நகர்
சென்றனன் பாசறை சேர்ந்து வைகினுன்.

தம்பீ! அன்று எனது மந்திராலோசனைச்சபை முடிந்து நீபோன பின்பு; கூரிய இலையின் வடிவுடைய வேலினுல் கிரவுஞ்ச மலையை பிளந்திட்ட குழந்தையாகும் முருகன் என்பவன் தனது துணையாகும் சேனையும் தானுமாக இந்த நகரிடை வந்தனன்; வந்து இங்கு பாசறை அமைத்து அதில் அவன் வீற்றிருந்தான். 18

மற்றவன் சேனைகள் மலைய மைந்தர்கள்
இற்றனர் அமைச்சனும் இறந்து போயினுன்
அற்றன தானையும் ஆட கப்பெயர்
உற்றவன் இரிந்தனன் உததி ஓடினுன்.

அவ்வாருக வந்த குமரனுடைய சேனைகள் தலைவருடன் வந்து எமது நகரில் போரிட என் பிள்ளைகள் இறந்தனர். எனது முதன் மந்திரியும் இறந்தான். என் சேனையும் அழிந்தன. இரணியன் என்னும் பெயருடையவன் போரிட அஞ்சி ஓடிக் கடலினுள் மறைந்தான். 19

பொங்குளை அரிமுக புகுதி இன்னதால்
சங்கையில் படையொடு சமரின் ஏகியே
அங்கவன் வலியினை யடர்த்து மீளுதி
இங்குனை விளித்தனன் இதனுக்கா வென்ருன்.

சிலிர்க்கின்ற பிடரி மயிருடைய என் சிங்கமுகனே! இங்கு நேர்ந்தது இதுவாகும்; ஆதலின் நீ இப்போது குறைவிலாத உனது பெரும் படையுடன் போரிடச் சென்று; அங்கு அந்த குமரனுடைய வலியினை அழித்து வெற்றியுடன் வந்திடுவாயாக; இதைப் புரிவதற்காகவே இங்கு உன்னை அழைத்தேன் என்ருன் சூரபன்மன். 20

எஞ்சலில் சூரன்மற் றிதனைச் செப்பலும்
வெஞ்சின அரிமுக வீரன் தேர்வுறு
நெஞ்சினில் ஆகுலம் நிகழ முன்னவன்
செஞ்சரண் வீழ்ந்துநின் றிதனைச் செப்புவான்.

முடிவு என்பதில்லாத சூரபன்மன் இவற்றைச் சொல்லலும்; கொடும் கோபம் இயல்பிலுடைய சிங்கமுகன் அதைக்கேட்டு; சிந்தித்து தன் நெஞ்சில் மிகு கவலை நிரம்பத் தனது தமையனின் செம்மையான பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று இதனைச் சொல்கின்றான். 21

மல்லலம் புயமுடை மைந்தர் தங்களைத்
தொல்லையில் அமைச்சரைச் சுற்றத் தோர்களை
எல்லவர் தம்மையும் இழந்து வைகினாய்
புல்லிது புல்லிதுன் புந்தி எண்ணமே.

அழகிய மலைபோன்ற தோள்களை உடைய பிள்ளைகளை; மிகவும் முதுமையான அனுபவமுடைய மந்திரிமார்களை, சேனாதிபதிகளை, எம்குலத்து ஏனைய அரசரை எல்லோரையும் நீ இழந்துவிட்டு இருக்கின்றாய். என் அண்ணனே! உன்மன எண்ணமானது மிகவும் சிறுமையுற்றது சிறுமையுற்றது. 22

மூலமும் முடிவுமில் லாத மூர்த்தியைப்
பாலனென் றெண்ணினை படுவ தோர்ந்திலை
ஆலம தானதே ஐய என்மொழி
மேலையின் விதியையார் வெல்லும் நீரினார்.

மூலமும் முடிவும் இலாத ஆறுமுகமுடைய பகவானை நீ பாலன் என நினைந்தாய். அந்த ஒரு நினைப்பாலே நீ படப் போகின்ற தீமைகளை நினைத்துப் பார்க்கின்றாயில்லை; நான் அன்று மந்திராலோசனைச் சபையில் கூறிய வார்த்தைகள் உனக்கு நஞ்சாகி இருந்ததே! இன்று அதை அனுபவித்தும் உணர்வாயோ? முன்னாளே முடிந்த முடிபாகும்; விதியின் விளைவை யார் வெல்லும் நிலைமை உடையார்கள். 23

சென்றிடு புனலினைச் சிறைசெய் தாவதென்
இன்றினி ஏகியே எண்ண லாரெனத்
துன்றிய குழுவெலாந் துடைத்து நுங்கியே
நின்றிடு கின்றனன் நீயுங் காண்டியால்.

குளத்திநின்றும் உடைபட்டு ஓடிப்போன நீரை குளத்து அணையின் உடைப்பைக் கட்டியும் அதனைப் பின்னரும் சேர்க்கலாமோ? ஓடிய நீர் ஓடியதே. அதைப்போல் நான் நடந்து முடிந்ததைப்பற்றி இங்கு பேசப்போவதில்லை. இன்று இனி நான் சென்று எனது பகைவர் எனத் திரண்டு வந்த கூட்டத்தினர் யாவரையும் கொன்று அவர்கள் உடலை உண்டு கொண்டு நிற்கின்றேன். நீயும் என் நிலையை நன்கு காண்பாயாக. 24

கந்தனும் ஒருவனைக் கடக்கப் பெற்றிடின்
வந்துனைக் காண்பனால் மற்ற தில்லையேல்
அந்தம தடைவரால் ஆரும் ஐயநீ
புந்தியின் நினைந்தன புரிதியா லென்றான்.

கந்தன் என்னும் அந்த ஒருவனை வெற்றிகொள்ளப் பெற்றால் நான் வந்து உன்னைக் காண்பேன். அது வல்லாது போனால் நான் இங்கு வருவதில்லையே! இங்கு உள்ளார் யாவரும் முடிவாய்ப் போவார்கள்; என் ஐயா! உனது மனதில் நினைத்தபடி நீ செய்து கொள்வாய் எனக் கூறினான் சிங்கமுகன் 25

என்றுகை தொழுதுபின் இறையும் அவ்விடை
நின்றிலன் விடைகொடு நிருதன் ஏகியே
துன்றிய தானைகள் சூழ மற்றவண்
ஒன்றுதன் மந்திரத் துறையுள் எய்தினான்.

என்று சிங்கமுகன் கைகூப்பித் தொழுது; ஓர் இறைப்பொழுதும் அங்கு நில்லாத வனாய் தமையனிடம் விடைபெற்றுக்கொண்டு அப்பால் அந்த அசுரன் சென்று; வாய்தலில் காத்துநின்ற தனது சேனையை அடைந்து அவை முன்புபோல் சூழ்ந்து வர தன்னுடைய இருப்பிட நகரை அடைந்து; அங்குள்ள தனது அரண்மனையில் புகுந்தான். 26

போனக மேருவும் புடையிற் சூழ்வரும்
ஊனெனும் வரைகளும் உலப்பில் சோரிநீர்
தேனொடு பால்தயிர் தேற லாதிகள்
ஆனபல் கடல்களும் அயிறல் மேயினான்.

அங்குபோன அவன்; போரினுக்கு புறப்படுமுன் உணவருந்த வேண்டி மேருமலை போன்ற அமுதும்: அம்மேரு மலையைச் சூழ்ந்த மற்றைய மலைபோன்ற இறைச்சிக் கறிகளும்; அதுவன்றி அளவற்ற இரத்த நீரும், தேன், பால், தயிர், கள் ஆகியான குடிவகைகளான கடல்களையுமே உறிஞ்சிக் குடிப்பானாயினன். 27

வாசநீர் தோய்ந்திடு நரந்த மான்மதம்
பூசினன் பாளித மிசைபு னைந்தனன்
வீசுபன் மதுமலர் மிலைச்சு கின்றனன்
காசினி வரைப்பெலாங் கந்தஞ் சூழ்தர.

வாசநீரில் கலந்துள்ள நாரத்தம் கஸ்த்தூரி இவை கூட்டிய குழம்பை மேனியில் பூசினான். அதன்மேல் பச்சைக்கற்பூரக் கூட்டை அணிந்தனன். மணம் வீசிடும் பலவகை பூமாலைகள் விதம் விதமானவற்றை அணிகின்றான். அச் செய்கையால் பூமியின் இடம் எங்கும் அவற்றின் வாசனை சூழ்ந்திட. 28

களைந்தனன் பழையன கவினப் பூண்டனன்
வளந்தரு கின்றதோர் யாணர் மாண்கலன்
மிளிர்ந்திடு தினகரர் புணரி வீழ்ந்துழி
ஒளிர்ந்துடன் பலகதிர் உதிக்கு மாறுபோல்.

முன்பு அணிந்துள்ள பழைய ஆபரங்களைக் களைந்து நீக்கிவிட்டு; புதிய அழகுடையதும் வளமுடையதுமாய பெருமை மிகுந்த நகைகளை எழில் விளங்கிட அணிந்தான். அச்செயல் எதுபோல் இருந்தது என்றால் பிரகாசமுடைய சூரியர் மேற்குப் புறமுள்ள சமுத்திரத்தில் அத்தமனமாய நேரத்து மறுபடி அவ்விடத்துப் பிரகாசமாகும் ஒளியுடன் பல சூரியர் உதிப்பது போன்றது: 29

படிதவிர் பருப்பதம் பத்து நூற்றினின்
முடிதொறும் இளம்பிறை முளைத்த வாறுபோல்
நெடுமைகொள் அரிமுகன் நெற்றி தோறும்வெண்
பொடிதனை அணிந்தனன் புனித மாயினான்.

நிகரற்று விளங்கிடும் ஆயிரம் பெருமலைகளின் முடிமீதினில் இளம் பிறைகள் முளைத்து நிற்கின்ற காட்சிபோல்; நீண்டவடிவுடைய சிங்கமுகாசுரன் தன்னுடைய ஆயிரம்தலைகளின் நெற்றிதோறும் வெண்மை நிறமுடைய திரு நீற்றை எடுத்து அணிந்தான். அச்செயல் ஒன்றால் அவன் புனிதனாயினான். 30

தண்டமும் நேமியுஞ் சங்க ரன்தரக்
கொண்டதோர் சூலமுங் குலிச மேமுதல்
அண்டர் தம் படைகளும் அன்னை ஈந்திடு
திண்டிறற் பாசமுஞ் செங்கை பற்றினன்.

தண்டாயுதமும் சக்கரப்படையும் சிவபிரான் முன்னர் கொடுத்திடப் பெற்றுக் கொண்டதொரு சூலப்படையும்; குலிசாயுதம் முதலாகச் சொல்லப்பெறும் பலவித மான தேவப் படைகளும், மாயவள் முன்னர் கொடுத்திட்ட மிகவும் வலிமையும் திறனும் உடைய பாசமும் தனது அழகிய செங்கையில் எடுத்துக்கொண்டான். 31

கைத்தலம் யாவையுங் கதிர்கள் கான்றிட
எத்திறப் படைகளும் பின்னர் ஏந்துறுப்
பத்துநூ றுயிரம் பரிகள் பூண்டதோர்
சித்திர மணிநெடுந் தேரில் ஏறினன்.

இரண்டாயிரம் எனும் தொகைப்பட்ட கைகள்யாவற்றிலும் எல்லாவிதமான படைகளையும் பின்னர் எடுத்து ஒளியுடன் பிரகாசிக்கும்படி ஏந்திக்கொண்டு பத்து இலக்கம் குதிரைகள் பூட்டப்பெற்ற சித்திரப் பாட்டுடன் மணிகள் பூண்ட நெடிய தேர் ஒன்றின்மீது சிங்கமுகாசுரன் ஏறிக்கொண்டான். 32

தந்திரத் தலைவருந் தனயர் யாவருஞ்
சிந்துரத் தொகுதியுந் தேரும் மாக்களும்
இந்திரப் பெருவளம் யாவுஞ் சூழ்தர
மந்திரத் திருநகர் வாயில் எய்தினன்.

சேனாதிபதிகள் மந்திரிகள் தனது பிள்ளைகள் எல்லாரும் யானைப்படையும் தேர்ப் படையும் குதிரைப்படையும் காலாட்படையும் ஆகும் எல்லாவித சேனைகளும் இந் திரச் சிறப்பிற்குரிய பெரும் வரிசைகளுடன் சூழ்ந்துவர சிங்கமுகாசுரன் அரண்மனை யாகும் திருவுடைய நகரின் வாய்தலில் வந்தனன். 33

வேறு

மேற்படு கேசரி வெம்முக வீரன்
மாற்படு கோநகர் வாய்தலின் மேவ
நாற்படை யானவும் நண்ணின வெம்போர்
ஏற்புடை வெள்ளமி லக்கம தன்றே.

யாவர்க்கும் மேற்பட்ட வீரமுடைய கொடிய சிங்கமுகா சூரன் தான் அரசாண் டிருக்கும் அரண்மனை நகரின் வாயிலில் வந்து இங்ஙனம் சேர்ந்திட அவனுடன் கூடி போரிடுவதற்கு நான்கு வகையான படைகளும் வந்து கூடிக் கொண்டது. இதன் கணக்கை எண்ணுங்கால் கொடும்போரைப் புரிவதற்கு ஏற்ற இலக்கம் வெள்ளம் எனத் தொகை பெற்றிருந்தது. 34

வானவர் ஏற்றமும் மண்ணவர் வாழ்வும்
தானவர் இன்னலும் நீக்கிய தக்கோர்
ஊனமில் செய்கையர் ஒள்ளெரி உண்ணுங்
கானமெ னப்பொலி காட்சியின் மிக்கோர்.

இச் சேனைகளாயுள்ளோர் தேவர்களது உயர்வையும்; பூவுலகில் உள்ள மனிதர் களது வாழ்க்கையையும்; அசுரர்களுடைய இன்னல்களையும் நீக்கிடும் செயல்களுக்கு மிகு பொருத்தமானவர்; அச்செயலில் எத்தகைய தவறுதலு மிலாதவர், அவர்களை பார்த்திடும் போது நெருப்பு எரித்திடுகின்ற காடு இதுதான் எனும் காட்சி யுடையவர். 35

கார்பயில் கின்ற கருத்தினர் காமன்
கூர்பயில் கின்ற கொடுங்கணை யுண்ணுந்
தார்பயில் தோளர் சமர்த்தொழில் செய்தே
மார்பக மன்றி வடுப்புனை யாதோர்.

கருமேகம் போன்று இருண்ட மனம் உடையவர்; மன்மதனுடைய கூர்மை மிக்க அம்புகளை ஒத்த பல பூக்களால் ஆயபெருமாலைகள் அணிந்து கொண்ட அழகுடைய பெரும் தோள்களை உடையவர்; போர்த் தொழிலைச் செய்து படைகள் பட்ட மார்பின் புண்களின் வடுவேயன்றி வேறு எதுவிதமான அவமானத்தையும் அடையாதவர்கள். 36

எண்ணமில் தொல்லுயிர் யாவும் அலைக்கும்
அண்ணலை அன்னவர் ஆரழல் காலுங்
கண்ணினர் வார்கழல் கட்டிய தாளார்
விண்ணினை யேனும் விழுங்கவும் வல்லோர்.

எண்ணிட முடியாத பல உயிர்களை எல்லாம் இறந்திடவைக்கின்ற தலைவனை இயமனை ஒத்தவர். நெருப்பினைக் கக்கிடும் கண்களை உடையவர். வீரக்கழல் கட்டிய காலினை உடையவர்; வான உலகை என்றாலும் பிடித்து விழுங்கவல்லவர். 37

நேருதிர் என்றெதிர் நேர்ந்தவ ராகங்
கூர்நுதி வேல்கொடு கூறுப டுத்துப்
பேருதி ரந்தசை பெய்துநி ரம்பா
வாரிதி யென்ன வகுத்திடும் வாயார்.

போரிடவாவென அழைப்போருடைய உடலினை கூரிய நுனியுடைய வேலால் பிளந்து கூறுக்கி அங்கு பெருகிடும் இரத்தம் தசை இவற்றினை வாயில் போட்டாலும் நிரம்பிடாத கடல்போன்ற பெரிய வாயினை உடையவர். 38

தண்ட மழுப்படை தட்டை முசுண்டி
விண்டுயர் கொல்சிலை வேலெழு நாஞ்சில்
எண்டகு பல்படை யாவையும் ஏந்தி
அண்டமு டைந்த திரும்படி ஆர்த்தார்.

தண்டாயுதம் மழுவாயுதம் தட்டை முசுண்டி மிக நீண்ட வானவில் போலும் கொலைபுரியும் வில் வேல் எழுவாயுதம் நாஞ்சில் படை ஆகச் சொல்லப்பட்ட பல வகையாகும் கொடிய படைகளை ஏந்தி அண்டமும் உடைந்து அதிரும்படியாக பெரும் சத்தமிட்டனர் அந்தச் சேனை வீரர்கள். 39

அந்தர மாமுகி லாமென ஆர்க்குந்
தந்திகள் வீழ்த்துறு தானம தோடி
உந்திக ளாயுல வைக்கதி கொண்டு
முந்திய தூசியின் முன்னுறு கின்ற.

வானில் உள்ள முகில்போன்று முழங்கி சத்தமிடும் யானைகள் சொரிகின்ற மதநீரானது ஓடி ஆறுபோன்று பெருகி வாயுவின் வேகம் கொண்டு முன்னால் செல்கின்ற தூசிப்படைக்கு முன்னாக அந்நீர் ஓடிப் போகின்றன. 40

வேலைய தன்னவி லாழிய வன்னிக்
கோலம தான குரங்கொள் பதத்த
கால்விசை கொண்டன கந்துக ராசி
மாலுறு பூழியின் வான்புவி செய்வ.

சமுத்திரத்தைப் போன்று வாய் நீரைப்பெருக்குவன; நெருப்பின் கோலம்போன்ற செவ்விய உடலும் குளம்புடைய காலுடன் காற்றின்வேகமுடைய குதிரைகள் பாய்ந்துசென்றிடும்போது திசை தெரியாதபடி மயங்கவைக்கப் புழுதி எங்கும் எழச் செய்து, அப்புழுதி மேலெழுந்துபோதலாலே வானஉலகையும் மண்ணுலகமாக்குவன. 41

சூழ்வரு தேரிடை துன்றுப தாகைக்
காழ்வரு கோனுதி கார்முகி லுந்தி
போழ்வன வாடுறு பூந்துகில் அங்கண்
ஆழ்வரு பூழைய டைத்தன வன்றே.

சூழ்ந்து வருகின்ற தேர்கள் மேல் உள்ள கொடிகள் மாட்டிய தண்டின் நுனியானது, வானில் உள்ள கறுத்த முகிலைக் கிழித்து பிளந்திடுகின்றன. ஆனால் அங்ஙனம் உண்டாக்கிய பிளவை தண்டுகளில் நின்று படபடத்தாடும் பட்டுக்கொடிச் சீலைகள் அடைத்திடுவன. 42

வரங்கெழு சூர்துணை மாய்ந்திடும் என்றே
உரங்கொடு முன்னம் உணர்ந்தன கொல்லோ
துரங்கம ழுங்கின தோல்புலம் புற்ற
இரங்கின பல்லியம் ஏங்கின தேர்கள்.

வரத்தில் மேம்பட்ட சூரபன்மனின் தம்பியான சிங்கமுகன் இன்று இறந்திடுவான் என்று மிகு திடமுடன் முன் கூட்டியே இவைகள் உணர்ந்து கொண்டன போலும். ஏனெனில் குதிரைகள் கனைத்துக் கண்ணீர் சொரிந்தன; தோல்வாத்தியம் புலம்புவது போன்று இருந்தன. ஏனைய வாத்தியங்கள் அழுவன போன்று இசைத்தன. தேர்கள் யாவும் ஏக்கமுடன் ஓடுவன போன்றிருப்பன. சிங்கமுகாசுரனின் அழிவை முன் கூட்டியே இவைகள் உணர்ந்துகொண்டு தங்கள் செயலில் சோகமே உருவாக இருந்தது என்றார். 43

கட்புலன் நாசிக வின்செவி துன்னப்
பட்டன பூழிப தாகையும் அற்றே
ஒட்டலர் விண்செல ஒட்டல ரென்னு
விட்டனர் தூக்கம் விரைந்தனர் வெய்யோர்.

காண்கின்ற கண் மூக்கு சிறப்புடைய காது ஆகிய உறுப்பெல்லாம் புழுதியாகவே வந்து படுகின்றது. கொடிகளும் அப்படியே கண்விண் தெரியாதபடி மறைப்பன. இவர்கள் எம் பகையசுரராயிற்றே, எம்மை இவர்கள் எங்களது வான்வழியால் செல்லவிடமாட்டார்கள் என்று தாம் வழமையாகச் செய்கின்ற மந்தமான நிலையைக் கைவிட்டு விரைவாகச் சென்றனர் சூரியர்கள். 44

தேரினர் ஓர்பலர் திண்டிறல் வாசி
ஊருநர் ஓர்பலர் ஓங்கிய வேழம்
பேருநர் ஓர்பலர் பேரடல் கொண்டு
பாரினர் ஓர்பல ராற்படை மள்ளர்.

தேரில் செல்வார் பல அசுரரும்; மிகவும் திடமும் வலியுமுடைய குதிரைமீது செல்வார் பல அசுரரும்; பெரிய உருவுடைய யானைமீது செல்வார் பல அசுரரும் மிகு வலிகொண்டு பூமிமீது நடந்துசெல்வார் பல அசுரருமாக; சிங்கமுகாசுரனுடைய சேனை வீரர் செல்கின்றனர். 45

துங்கமில் சூர்துணை தொல்படை மன்னன்
அங்கவன் என்ன அரித்தலை கொண்டான்.
மங்கல மாயவள் மாமகன் ஆடற்
சிங்கன் எனப்படு சீர்ப்பெய ருள்ளான்.

மேன்மை இலாத சூரபன்மனுடைய மிகு முன்னவனான சேனைத்தலைவன்; அவன் சிங்கமுகாசுரனைப் போன்றே சிங்கத்தலை உடையவன்: சகல மங்கலமுமுடைய மாயவள் பெற்ற பெருமைந்தனானவன். வலிமிகுந்த சிங்கன் என்னப் பெறுகின்ற சீருடைய பெயருடையவன். 46

போர்ப்படை கொண்டு புறம்படர் கின்ற
தேர்ப்படை காற்படை சிந்துரம் வாசித்
தார்ப்படை கொண்டு தடங்கட லென்ன
ஆர்ப்படை நெற்றிய னாகி அகன்றான்.

கைகளில் பல படைகளையும் கொண்டு வெளியே வருகின்ற தேர்ப்படையும்; காலாட்படையும் சிந்துரம் உடைய யானைப்படையும்; மாலையணிந்த, குதிரைப் படையும் ஆக கடல் போன்று பெருகிவரும் படைகளுக்கெல்லாம் முன்னணியில் தலைமை அதிபனாகி வருகின்றான் சிங்கன் என்னும் அச்சேனைத்தலைவன். 47

நீள்வயிர் பேரி நிசாளம் உடுக்கை
தாளம் வழிப்படு தண்ணுமை தக்கை
காளம் வலம்புரி கைத்துடி யாதி
யாளி முகன்முன் அளப்பில ஆர்ப்ப.

நீண்ட குழல் வாத்தியம்; நிசாளம் உடுக்கை தாளமிட்டுவர அதன் வழி அடிக்கப்பெறும் மத்தளம்; தக்கை, காளம், வலம்புரிச் சங்கு கையினால் குலுக்கி அடிக்கப்பெறும் உடுக்கு ஆதியாகச் சொல்லப்பெறும் பலவகை வாத்தியங்களையும் சிங்கமுகாசுரன் முன்பாகப் பல அசுரர் முழக்கியவாறு ஆரவாரிப்புடன் வந்திடவும்; 48

ஆகிய தால்அமர் ஐதென யாமும்
ஏகுதும் உண்டி எமக்குள தென்னா
மாக நெருங்கின வன்கழு கீட்டங்
காகம் வருந்திய காளிகள் கூளி.

ஓகோ! போர் தொடங்கி வந்துவிட்டது; நாமும் விறுக்கென அவ்விடம் போவோம்; எமக்கும் நல்ல உணவு இருக்கின்றது என்று வானத்தில் நெருக்கமாக கூடுகின்றன; கொடிய கழுகின் கூட்டமும் பிணம் தின்னும் பூதங்களும் அத்துடன் காகங்களும், பசியால் வருந்திய காளிகளும் 49

வேறு

ஆழியை யொத்துய ரம்பொற் றேர்களில்
ஆழியை உண்டெழு புயல்தந் தார்த்தன
ஆழிய நிலத்துருண் டழுதி யோவெனா
ஆழியை வினவியே அமர்தல் போலுமால்.

சக்கரவாள மலையை ஒத்து உயர்ந்த அழகிய பொன்னான தேர்கள்மீது; கடலினைப் பருகி வந்து படிந்து கொண்ட மேகங்கள் முழக்கம் செய்வன எதுபோல் இருப்பதென்றால்; தாம் இருந்த தேரின் சில்லைநோக்கி சில்லே நீ ஆழ்வுடையதாக நிலத்து அழுந்திட உருண்டோடுதலாலே வேதனை உற்று அழுகின்றாயோ என்று தேர் சில்லைநோக்கி வினாவிடை செய்துகொண்டு அமர்வது போன்றிருப்பது. 50

இவ்வகை சேனைகள் யாவும் ஏழ்பெரும்
பவ்வமும் ஒருவழி படர்ந்த தேயென
அவ்வயிற் போந்திட அமரை முன்னியே
தெவ்வடும் அரிமுகன் சேறல் மேயினன்.

இவ்வகையாக சேனைகள் எல்லாம்; ஏழுவகையாகும் சமுத்திரங்களும் ஒருவழியாகத் திரண்டு பரந்துசெல்வது போன்று அவ்விடமாக போய்க்கொண்டிருப்ப; போர் புரிதலையே நினைந்துகொண்டு பகைவரை அழித்திடும் சிங்கமுகாசுரன் செல்கின்றான். 51

வேறு

சேரலர் ஆவிகொள் சீயமு கத்தோன்
பேரனி கத்தொடு பேர்ந்திடல் காணூஉ
வாரிச மேலவன் வாசவன் வானோர்
ஆரும்வெ ரீஇயினர் அச்சம் அடைந்தார்.

பகைவரைக் கொன்று அவரது உயிரை நீக்கிடும் சிங்கமுகாசுரன்; பெரும் சேனைகளுடன் புறப்பட்டு வருதலைக்கண்டு; தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவன் இந்திரன் தேவர்கள் ஆகிய எல்லோரும் பெரும் அச்சங்கொண்டு நடுக்கமுற்றுத் தளர்ந்தனர். 52

செய்ய கரத்தினர் சிந்தை வியர்த்தே
மெய்யல சுற்றிட மேற்றுகில் சோர
ஐயுறும் எல்லையில் ஆகம் இரைப்ப
ஒய்யென யாவரும் ஓடினர் போனார்.

அச்சத்தால் அகல நீட்டிய சிவந்த கையுடையராய்; மனம்பயப்படுதலாலே மேனி வியர்த்து வாடிட, மேல்அணிந்த ஆடைகள் நழுவ; உடலானது இறப்பார்க்கு உற்ற நிலைபோன்று சேடம் மேற்கொள்ளும் எல்லையில் மேனிசுருங்கிட, எல்லோரும் தம்மால் இயன்றளவு வேகமுடன் ஓடிப்போயினார்கள். 53

ஆவதொர் பாசறை ஆலய வைப்பில்
தேவர்கள் ஈண்டுறு சிற்சபை தன்னில்
மேவரு வேற்படை விண்ணவன் முன்போய்ப்
பூவடி தாழ்ந்து புகன்றிடு கின்றார்.

ஓடிச்சென்றிடும் இவர்கள் எல்லா மங்கலப் பேறுகளுடனும் விளங்கிடும் பாசறைத் தலத்தில் உள்ள கோயிலிடத்துத் தேவர்கள் தரிசனத்திற்காக நெருங்கி இருக்கும் சிற்சபையில் அருளுடன் அமர்ந்தருளுகின்ற ஆறுமுகப்பெருமான் திருமுன்போய் எம்பெருமானுடைய மலர்போன்ற பாதகமலங்களில் தாழ்ந்து வணங்கி இதனைச் சொல்கின்றனர். 54

ஆயிர மான அகன்றலை கொண்டான்
ஆயிரம் ஆயிரம் அங்கை படைத்தான்
ஆயிர மேற்படும் அண்டமும் வென்றான்
ஆயிரம் யோசனை யாவுயர் மெய்யான்.

பெருமானே கேட்டருள்க! ஆயிரமான அகன்ற சிங்கமுகமுடைய தலையைக் கொண்டவன்; இரண்டாயிரம்அழகிய கைகளை உடையவன். ஆயிரத்திற்கு மேற்பட்ட அண்டங்களையும் வென்றவன்; ஆயிரம் யோசனை அளவு உயர்ந்த மேனியை உடையவன். 55

நெஞ்சில் எவர்க்கும் நினைப்பரி தாகும்
வஞ்சமும் மாயையின் வன்மையும் வல்லோன்
எஞ்சலில் வன்மையன் இவ்வுல கெல்லாந்
துஞ்சினும் ஆருயிர் துஞ்சுத லில்லோன்.

நெஞ்சிலே எவராலும் நினைக்க முடியாத அத்துணைத் தீயதான வஞ்சனையும், மாயச் செயல்களும் செய்வதில் மிகு தீவிரமுடையவன்; எக்காலமும் குறைவிலாத வலியுடையவன்; இந்த உலகெலாம் அழிந்தாலும் தான் மட்டும் அழிவிலாதவன். 56

ஓங்கல் இனங்கல் உவாத்தொகை நாகம்
பாங்கம ராமை பரித்திடல் மாற்றி
ஈங்குல கங்கள் எவற்றையும் ஓர்நாள்
ஆங்கொரு செங்கையில் ஆற்றிய தொல்லோன்.

இப்படியான கொடிய அசுரன் மலைகளின் இனங்களும் திக்கில் உள்ளயானைகளும் நாகங்களும் பாதாளத்திலுள்ள ஆமையும் யாவுமாக தாங்கிநிற்கின்ற இவ்வுலகங்கள் அனைத்தையும்; அவைகளின் அச்செயலை நீக்கிவிட்டுத் தனது ஒருகையில் வைத்துத் தாங்கிநின்ற மிகுவலிமைமிக்க பழமையானவன். 57

பாந்தள் புனைந்த பராபர மூர்த்தி
ஈந்தது மாற்றலர் எல்லையி லோரைக்
காய்ந்துயி ருண்டு கறைப்பெரு நீத்தந்
தோய்ந்திடு கின்றதொர் சூலம் எடுத்தான்.

பாம்பினை ஆபரணமாக அணிந்த பராபரன் சிவமூர்த்தி முன்னுள் கொடுத்ததும்; அதைவிடுத்தால் பகைவர் எல்லையற்றோரைக் கொன்று உயிருண்டு அவர்களது இரத்தக்கடலில் பலகாலும் தோய்ந்துகொண்டதுமான ஓர் சூலப்படையை கையில் எடுத்துக்கொண்டவன். 58

எண்டிசை மேதினி ஏழ்பில மேனை
விண்டல மன்னதன் மேற்படும் எல்லை
அண்டம னைத்தும் ஓரங்கையில் வாரி
உண்டுமிழ் கின்றதொர் வன்மையும் உள்ளோன்.

எட்டுத் திக்குகள், இப்பூமி; பாதாள உலகம் ஏழு; ஏனைய விண்ணில் இருக்கும் உலகுகள் அதனினும் மேற்பட்ட எல்லையிலுள்ள அண்டங்கள் அனைத்தையும் தனது ஒரு அழகிய கையினில் வாரிக்கொண்டு; அவற்றை உண்டு பழையபடி உமிழ்கின்ற வன்மையும் உடையவன். 59

தூக்கொரு பால்வலி தூங்குற ஓர்பால்
மேக்குயர் கோலென மேதினிப் பாங்கர்
தேக்கெறி வேலைகள் சிந்தி விசும்பில்
தாக்குற வேநடை தந்திடு தாளான்.

அந்த அசுரன் தராசின் ஓர் தட்டில் பாரம்மிகுந்தபோது ஓர் தட்டு மேலெழ மற்றையது கீழ்போக இப்படியான நிலைபோன்று இப்பூமியில் அவன் கால் தூக்கி வைக்கும்போதே அவைகளால் திரைகள் மிகுந்து வீசிடும் கடல் சிந்தி வானில் தாக்கிடும்படி செய்து நடக்கின்ற காலினை உடையவன். 60

தண்ட மிதென்று தருக்கின் எடுத்தே
அண்ட கடாகம் அதன்புடை மோத
நுண்டுகள் ஆதலும் நொய்திது வென்றே
விண்டொடு மேருவை மீளவும் வைத்தோன்.

அந்த மகாமேருமலையை இது ஒரு தண்டாயுதமே எனத்தூக்கி எடுத்து அம்மலையால் அண்டகடாகத்தின் பக்கரினில் அடித்திடுதலும் அம்மலை நுண்ணியதுகளாதலும் என்னே! இது மிகவும் நொய்தானதாயிற்றே அடிப்ப உடைகின்றதே என்று வானைத் தொடுகின்ற மேருமலையை மீளவும் இருந்த இடத்தில் வைத்தவன். 61

மாசறு நேமி வடாது புலத்தின்
ஆசுரம் என்னும் அகன்பதி வாழ்வோன்
வீசிடின் எவ்வுல கத்தையும் வீக்கும்
பாசம் இரண்டு பரித்திடு கையான்.

குற்றமற்ற இப்பூமியின் வடதிசையில் பொருந்தியுள்ள ஆசுரம் என்னும் அகன்ற நகரிடத்து வாழ்பவன்; அத்துடன் அவன் எடுத்து வீசினால் எந்த உலகையும் சரி ஒருங்குசேரக்கட்டவல்ல பாசம் இரண்டினை தாங்கிடுகின்ற கையை உடையவன். 62

துங்கம தாகிய சூர்துணை யானோன்
அங்கவ னிற்பெரி தாற்றல் படைத்தோன்
நங்களி னங்களை நாளும் நலித்தோன்
சிங்கமு காசுர னாகிய தீயோன்.

மிகவும் மேம்பாடுடைய சூரபன்மன் தம்பியானவன், ஆனால் அந்த சூரபன்மனிலும் பெரிய ஆற்றல் உடையவன்; எங்களுடைய தேவ இனங்களை நாள்தோறும் நலிந்து துயருறுத்தியோன். சிங்கமுகாசுரன் என்னும் பெயருடைய தீயவன் ஒருவன். 63

அந்தமி லாவனி கக்கடல் சூழ
வெந்திற லோடு வியன்சமர் ஆற்ற
வந்தனன் மற்றவன் மன்னுயிர் மாற்றி
எந்தை அளித்தருள் எங்களை யென்றார்.

அவன் எண்ணரிய சேனையாகும் சமுத்திரம் சூழ்ந்திட; மிகு கொடிய திறமையுடன் பெருமையுடைய பெரும்போர் புரிந்திட வந்தனன். அந்தச் சிங்கமுகாசுரனின் மேலான உயிரை நீக்கி அவனைச் சங்காரம் செய்தருளி எந்தைபிரானே! எங்களையெல்லாம் காத்தருள் புரிவீராக என பிரார்த்தனை புரிந்தார்கள் அத்தேவர்கள். 64

அன்னதை ஓர்தலும் ஆறு முகேசன்
தன்னயல் நின்றிடு தாவறும் ஓதை
மன்னனை நோக்கிநம் வாலிய தேரை
முன்னிவண் உய்க்குதி யென்று மொழிந்தான்.

அவ்வாறானவற்றை உணர்ந்துகொள்ளலும் ஆறுமுகமுடைய எல்லார்க்கும் ஈசன் தனது அயலே நின்றிடுகின்ற தவறுதல் இலாத வாயுவின் அரசனை நோக்கியருளி வாயுதேவனே! நமது சிறப்பு மிகுந்ததேரை எமது முன்பு கொண்டுவந்து சேர்த்திடுவாயாக எனத் திருவாய் மலர்ந்தருளினார். 65

தீட்டிய வேற்படை செங்கை படைத்தோன்
மாட்டுற நின்ற வயம்புனை மொய்ம்பன்
கேட்டனன் எந்தை கெழீஇயின முன்போய்த்
தாட்டுணை வீழ்ந்திது சாற்றுதல் உற்றான்.

தீட்டிய கூர்மையுடைன் என்றுமே சிறந்திடும் வேற்படையை செங்கையில் கொண்டருளும் எம் கடவுள் பக்கராக நின்ற வெற்றிமாலைசூடிய தோள்கொண்ட வீரவாகுதேவர் எம்பிரானது அந்த திருவார்த்தையைக் கேட்டார். உடன் எம்பிரானது அற்புதம் விளைந்திடும் திருமுன்புசென்று அவரது திருப்பாதத்து அன்புடன் வீழ்ந்து வணங்கியவாறு இதனைச் சொல்கின்றார். 66

தந்நிகர் அற்ற சயம்புனை வீரர்
முன்னுறு தானைகள் மொய்த்திட யான்போய்
ஒன்னலன் ஆவியை உண்டிவண் மீள்வன்
என்னை விடுக்குதி எந்தையை யென்றான்.

அப்பனே தனக்கு நிகரற்ற வெற்றிமாலைசூடிய வீரர்களுடன் இங்கு முன்னுள்ள பூதப்படைகள் என்னை மொய்த்துவர யான்சென்று எம்பகைவன் சிங்கமுகனின் உயிரை உண்டு அவனைக்கொன்று இங்கு மீண்டு வருவேன் என்னைதேவரீர் போரிட விடுத்தருள்வீராக எனப் பணிவுடன் வேண்டினர். 67

ஆண்டகை மூரலோ டம்மொழி கேளா
மாண்டிட வந்திடு மாற்றலன் வெம்போர்
வேண்டினை நன்று விடுத்தனம் முன்நீ
ஈண்டுள தானையொ டேகுதி யென்ருன்.

யாவர்க்கும் எட்டொணுத ஆண்டகைமை உடைய ஆறுமுகப் பெருமான் வீரவாகு தேவரின் வேண்டுதலை புன்சிரிப்புடன் கேட்டருளி; இறந்திடும்படியாக எம்முடன் போரிட வந்திடுகின்ற பகைவனுகும் சிங்கமுகனுடன் செய்திடும் போரினை நீ வேண்டிக் கொள்கின்ருய். நல்லது உன்னை அவனுடன் போரிட விடுத்தனம் இங்குள்ள சேனைகளுடன் முன் நீ புறப்பட்டு சென்றிடுவாயாக என்றருள் புரிந்தார். 68

என்றலும் வீரன் எழுந்துகை கூப்பி
வென்றிகொள் சாரதர் மெய்க்கிளை சூழ
மன்றம கன்று மணிக்கடை நண்ணி
ஒன்றுதன் மாளிகை யூடு புகுந்தான்.

என்று எம்பிரான் மொழிந்தருளலும், எம்பிரான் பாதத்து வணங்கியவாறு கிடந்த வீரவாகுதேவர் எழுந்து கைகூப்பி வணக்கம் செய்து! வெற்றியினைப் பூண்டிடும் பூதப்படைகளும் உடன் தோன்றிய துணைவராகும் இலக்கத்தெட்டு வீரரும் சூழ்ந்திட பொன்னின் சபையை விடுத்து நீங்கி; இரத்தினத்தால் ஆய கடைக் கோபுர வாயிலை அடைந்து அப்பாற்சென்று ஒருமைப்பாட்டுடன் சிறந்த தமது மாளிகையூடு புகுந்தருளினர் வீரவாகுதேவர். 69

நேர்முக மான நிசாசரர் தம்மேல்
கூர்முக வாளி குணிப்பில கோடி
ஓர்முக மாயுல வாதுமிழ் நீரால்
கார்முக மாயதொர் கார்முகங் கொண்டான்

அங்குசென்ற வீரவாகுதேவர் நேர்முகமாகப் போரிட வந்திடும் அசுரர்கள்மேல் கூராகிய நுனிகளை உடைய அளவற்ற அம்புகள் கோடியை ஒரே வழியாக ஓய்வின்றி செலுத்தி நின்றிடும் தன்மையால் கருமேகம்போன்று விளங்கிடும் ஓர் வில்லினைக் கையில் எடுத்துக் கொண்டார். 70

போதுறழ் அங்குலி புட்டில்செ றித்தான்
கோதைய தொன்று கொடுங்கை பிணித்தான்
ஏதமில் சாலிகை யாக்கையின் இட்டான்
மேதகு தூணி வெரிந்நிடை யாத்தான்.

தாமரைப் பூவினைப்போன்று வனப்பும் மிருதுவும் உடைய தமதுகைவிரல்களில் உறையைப் போட்டார். பருத்தகையினில் போர்க்குரிய கையுறையை செறித்துக் கட்டினர். பழுதிலாத கவசத்தை மேனியில் அணிந்தார். மேம்பட்ட ஓர் அம்புக் கூட்டை பின்முதுகில் தூக்கிக்கட்டினர். 71

மிக்குறு தெய்வ வியன்படை முற்றும்
தொக்குற வேகொடு தும்பை தரித்துச்
செக்கரின் விஞ்சிய செய்யதொர் வையம்
புக்கனன் வல்லை புறங்கடை வந்தான்.

தம்மிடத்து மிகுதியாக உடைய தெய்வத்தன்மை பொருந்திய அற்புதப்படைகள் முற்றையும் ஒருமித்து தொகுதியாகவே எடுத்துக்கொண்டு, தும்பை மாலையைச் சூடி; செக்கரின் செவ்விய வனப்பிலும் சிறப்புடைய சிவந்ததொரு தேர்ஏறி விரைவுடன் பாசறை நகரின் வெளியிலுள்ள கடைவாய்தலில் வந்தார் வீரவாகு தேவர். 72

எண்மர் இலக்கர்கள் இச்செயல் காணு
வண்மை தரும்படை மாட்சிமை எய்தித்
திண்மை யுறுந்தம தேர்களி லேறி
அண்மினர் வீரனை ஆர்ப்பொடு சூழ்ந்தார்.

இச்செயலைக் கண்டுகொண்ட வீரவாகுதேவரின் உடன்பிறந்தோராகும் எண்மரும் இலக்கம் வீரரும் தாங்களும் வலியால் மிகுந்துள்ள பல படைகளை எடுத்தேந்தி போர்க்குரிய மாட்சிமையை அடைந்துகொண்டு திண்மை உற்ற தமது தேர்களில் ஏறி வீரவாகுதேவரை அணுகிச் சென்று மிக ஆரவாரிக்கின்ற ஓசையுடன் சூழ்ந்து கொண்டனர். 73

மேனிக ழாயிர வெள்ளம தாகுஞ்
சேனை யெழுந்து செறிந்து பிறங்கல்
வானுயர் தாரு வயப்படை பற்றித்
தானவர் கேசரி தன்புடை வந்த.

மேலான வீரமுடன் சிறந்துற்ற ஆயிரவெள்ளமாகும் பூதசேனை எழுந்து எங்கும் அணியணியாகப் பரந்து பெருமலைகளையும், வானுற வளர்ந்த மரங்களையும், வெற்றி தரும் பல படைகளையும் கையிற் பற்றிக்கொண்டு அசுரர்க்கெல்லாம் ஓர் சிங்கமான வீரவாகுதேவர் பக்கராக வந்தன. 74

எறிந்தன பல்லியம் ஈண்டிய தானை
செறிந்தன மாண்கொடி செற்றின பூழி
அறந்தலை நின்றவன் அன்னது நோக்கிப்
பறந்தலை ஒல்லை படர்ந்திட லுற்றான்.

வாத்தியம் முழங்கிடப் பெருஞ்சேனை புறப்பட்டு நடந்தது. எங்கும் மாண்பான இடபக்கொடிகள் சூழ்ந்தன. புழுதிகள் எங்கும் பரந்தெழுந்தடைந்தன. இச்சேனை புறப்பட்டசெயல் யாவற்றையும் தருமத்தையே தலையாகக்கொண்ட வீரவாகுதேவ கண்டுகொண்டு போர் நிகழ்ந்திடும் களத்தை நோக்கி விரைவாகச் சென்றிடலுற்றார். 75

ஆரும்வி யப்புறும் ஆயிர வெள்ளம்
பாரிடர் தானை படைக்கிறை யானோர்
சாருறு கேளிர்கள் தன்னொடு செல்ல
வீரன டைந்தனன் வெஞ்சமர் எல்லை.

ஆரும் பார்த்து வியந்திடும்படி அற்புதமான போரினைப் புரிகின்ற பூதங்கள் ஆயிரவெள்ளத்திற்கும் தலைமைபூண்ட பூதசேனாதிபதிகள் யாவரும் தங்களைச் சார்வுற்ற பூதங்களுடன் சென்று வீரவாகுதேவர் கொடியபோர் நடந்திடும் எல்லையை வந்து அடைந்து கொண்டார். 76

ஆனதொர் காலையில் ஆளரி வெய்யோன்
சேனையும் வந்து செறிந்தது பூதர்
தானையும் அங்கெதிர் சார்ந்தது கங்கை
வானதி சேர்தரும் வாரிதி யேபோல்.

அவ்வாருகிய நேரத்தில் சிங்கமுகாசுரனுடைய சேனையும்வந்து போர்நிலத்தைச் சேர்ந்தது. அவர்கட்கு எதிராக பூதசேனையும் சென்று எதிர்த்தது. பூதங்கள் அசுரரை எதிர்த்தோடிப்போகும் செயலை நோக்கினல்; மிகச் சிறந்த கங்காநதிசென்று சேர்கின்ற கடல்போன்று அக்காட்சி மலிந்தது. 77

கோடு புலம்பின கொக்கரை ஆர்த்த
மோடுகொள் பேரி முழங்கின பீலிக்
காடு தழங்கின கண்டை கலித்த
ஆடுப தாகைகள் ஆர்த்தன அன்றே.

போர்தொடங்கிட கொம்பு வாத்தியம் ஊதின; கொக்கரை வாத்தியம் ஆர்ப்பரித்தது; பெருத்த வடிவுடைய பேரிகைகள் முழங்கின; மயிற்பீலிகள் காடு செல்வதுபோல் இரைந்து காணப்படுவன; கண்டைகள் ஒலித்துக்கொண்டன. ஆடிக்கொண்ட கொடிகள் படபடத்தார்த்தன. 78

தேரொலி செய்தன திண்டிறல் மாவின்
தாரொலி செய்தன தந்தியின் ஈட்டம்
பேரொலி செய்த பெருங்கட லோடும்
காரொலி செய்திடு காட்சிய தென்ன.

தேர்கள் ஓசையுடன் ஓடுவன; திண்மை குன்ருத் திறலுடைய குதிரைகளின் கழுத்தில் அணிந்த மாலைகள் ஒலிசெய்தன; யானையின் கூட்டங்கள் பெரும் பிளிற்றோசையைச்செய்தன; இவ்வாருன ஓசைகள் யாவும் பெரும் கடலுடன் சேர்ந்து மேகங்களும் முழங்கி ஓசைசெய்திடும் காட்சிபோன்று இருந்தது. 79

## வேறு

அந்த வேலையின் முருகவேள் தானையோர் அணுகி
முந்து வெஞ்சமர் முயன்றனர் அதுகண்டு முனிந்து
சுந்த ரந்திகழ் சிங்கமா முகன்படைத் தொல்லோர்
தந்தி தேர்பரி யணியொடும் போர்செயச் சார்ந்தார்.

அவ்வாருன வேளையில் முருகப்பெருமான் சேனைகள் அணுகிச்சென்று முன்னமே கொடும்போரை முயன்று செய்திட்டனர். அதனைக்கண்டு மிகு கோபமடைந்து சுந்தரமாய்த் திகழ்கின்ற சிங்கமுகாசுரனுடைய முதிய படைவீரர், தேர் யானை குதிரை முதலிய அணிகளுடன் போரிடும்படி நேரிட்டு வந்தனர். 80

தண்டம் ஓச்சினர் கணிச்சிகள் ஓச்சினர் தடக்கைப்
பிண்டி பாலங்கள் வீசினர் தோமரம் பெய்தார்
கொண்ட லாமெனத் தனித்தனி வார்சிலை குனித்துத்
துண்ட வெங்கணை துரந்தனர் தானவத் தொகையோர்.

அவ்வாறு போரிடச் சேர்ந்து அங்கு தொகையாக நின்ற அசுரர்கள் தண்டாயுதத்தைச் செலுத்தினர்; கோடரிகளை வீசினுர்கள்; அகன்ற தங்கள் கைகளில் உள்ள பிண்டி பாலங்களை வீசினர்; தோமராயுதத்தால் எறிந்தார்கள்; மேகங்கள் மழையைச் சொரிவதுபோன்று தமது தமது வில்லைவளைத்து ஓய்வின்றி மிக்க கொடிய அம்புகளைச் செலுத்தினுர்கள். 81

விரைகள் வீசிய மலர்த்தரு வீசிய விண்டோய்
வரைகள் வீசிய தண்டெழு வீசிய மழுவின்
நிரைகள் வீசிய நேமியின் நிரந்தபல் வளனும்
திரைகள் வீசிய தாமெனப் பூதர்தஞ் சேனை.

அவ்வாறு படைகள் செலுத்திய அசுரத் தொகைமீது பூதங்களான சேனைகள் வாசம் வீசிடும் பூவுடைய மரங்களை எறிந்தார்கள். வானில் முட்டும்படி உயர்ந்த மலைகளைத் தூக்கி வீசினர். மழுவாயுதத்தை நிரையாகச் சென்றிடும்படி வீசினுர்கள். இப்படிப் பூதங்கள் ஓய்வின்றிப் படைசெலுத்துவதை நோக்கினல் கடலானது தன்னிடத்துள்ள பல பொருள்களையும் திரைகளாலே கரைமீது வீசிடும் தன்மையை ஒத்திருந்தது. 82

வரங்கள் சிந்தினர் வன்மைகள் சிந்தினர் வயத்தாள்
கரங்கள் சிந்தினர் புயமலை சிந்தினர் கலன்சேர்
உரங்கள் சிந்தினர் மணிமுடி சிந்தினர் உருளுஞ்
சிரங்கள் சிந்தினர் அவுணரும் பூதரிற் சிலரும்.

இப்படி வேகமுடன் போரிட்டநேரத்து தாங்கள்பெற்ற வரங்கள் சிந்திடப் பெற்றனர். வன்மைகள் சிந்திடப் பெற்றுர்கள். வீரம்மிக்க கால்கை சிந்திடப் பெற்றுர்கள். மலைபோன்ற தோள்கள் அறப்பெற்றுர்கள். ஆபரணம் அணிந்த மார்பு சிதறப்பெற்றுர்கள். தலைகள் அறுந்து உருண்டோடப் பெற்றுர்கள்; அங்குள்ள அசுரரும் பூதங்களில் சிலரும். 83

வருதி நீயெனத் தனித்தனி இகல்செயும் மறவோர்
கருதி யேயடுங் களத்தினில் அவருடல் காலும்
குருதி யோடியே எங்கணும் பரத்தலில் கொடுந்தேர்ப்
பரிதி யோடிய குடதிசை நிகர்த்தது படியே.

நீ என்னுடன் போரிடவா வென்று தனித்தனி வீரம்பேசி சோடியாக எதிர்த்து நின்று போர்செய்யும் கொடிய வீரர்கள் மனதில் வன்மம்கொண்டு நின்றே போர் புரிந்திடும் அப்போர்க்களத்திடை வெட்டுண்ட அவர்களது உடல் கக்கிடும் இரத்தம் எங்கும் பரந்தோடி நிற்றலால் அப்போர்க்களத்தை நோக்கினல் மேற்குப்புறத்து சென்று கொடியதேருடைய சூரியன் அத்தமனமான பின் மேற்குத்திக்கு முழுவதும் காணப்படும் செவ்வானம் போன்றிருந்தது. 84

கொலைசெ றிந்திடும் பூதரும் அவுணரும் கொடும்போர்
நிலைசெ றிந்திடு களத்திடை நீடுசெந்நீரின்
அலைசெ றிந்தவூன் செறிந்தன அடுகளே வரத்து
மலைசெ றிந்தன செறிந்தன கழுகுடன் மண்ணை.

கொலைசெய்வதே தம்செயலாகக்கொண்ட பூதங்களும் அசுரர்களும் கொடிய போரினைப் புரிந்திடற்கு நிலைகொண்டு கூடிநின்று போரிட்ட அப்போர்க்களத்து நெடிதே பரந்தோடும் இரத்த நீரின் பெருக்கான அலைகள் செறிந்தன. கொலையுண்ட பிணங்களின் மலைகள் செறிந்தன. அவைகளை உண்ணும்படி கழுகுகளுடன் பருந்துகளும் வந்து கூடிக்கொண்டன. 85

வேறு

வெற்புறழ் தகுவர் சேனை வெள்ளமுங் கணத்து ளாருந்
தற்பமொ டெதிர்ந்திவ் வாறு சமர்புரிந் திட்ட எல்லை
வற்புடன் அவுணன் தானை மள்ளர்வந் தடர்ப்ப மாய்ந்து
முற்படு கின்ற தூசிப் பூதர்கள் முரிய லுற்றார்.

மலையை ஒத்த கடினமான அசுரர்களது சேனைவெள்ளமும் பூதகணத்தவரும் இறுமாப்புடன் ஆளை ஆள் எதிர்த்திட்டு இந்த வகையாகப் போர்புரிந்திட்ட நேரத்து; மிகு வலியினல் அசுரர்களின் சேனுதிபதிகள் வந்து தாக்குதலும் வீரவாகு தேவரின் சேனையின் முன்னின்ற தூசிப்படையில் உள்ள பூதங்கள் அத்தாக்குதலை ஏற்க முடியாது பின்னிட்டோடினுர்கள். 86

செல்லுறழ் பகுவாய் வீரர் சிதைந்துழிப் பூதர் தம்முட்
கல்லுறழ் மொய்ம்பிற் சிங்கன் கனன்றொரு தண்ட மேந்திப்
பல்லுறு தலைகள் சிந்தப் படிமிசை வீட்டிப் பானாள்
அல்லுறு மதிபோல் நேரும் அவுணரை யடர்த்துச் சென்றான்.

இடியை ஒத்த அகன்ற வாயுடைய வீரர்களாகும் பூதங்கள் சிதைவுற்றோடிய காலத்தில் பூதங்களிலே கல்லை ஒத்த கடினமான வலியுடையவன்; சிங்கன் என்னும் பெயருடைய பூதசேனாதிபதி அதுகண்டு கோபமுற்று எழுந்து ஓர் தண்டாயுதத்தையும் ஏந்திச்சென்று; கடைவாய் பற்கள் விளங்கிடும் அசுரரது தலைகள் சிந்திச் சிதற அடித்து பூமியில் வீழ்த்தி; கொடிய இருளை நீக்கிடும் சந்திரனைப்போன்று; முன் எதிர்த்து வரும் அசுரரை அழித்துக்கொண்டு சென்றான். 87

அங்கவன் செல்லும் வேலை அவுணரில் ஒருவன் நேமி
சங்கொடு தரித்தோன் அன்னான் தசமுக னென்னும் பேரோன்
எங்குநீ போதி நில்லென் றெதிருறச் சென்று வாகைச்
செங்கைவார் சிலையைக் கோட்டித் திருந்துநாண் ஒலிசெய் திட்டான்.

சிங்கன் அப்படிச் செல்லுங்கால் அசுரரிலே ஒருவன் சச்கரமும் சங்கும் தரித்த நாராயணக்கடவுளை ஒத்த வீரமுடையவன்; பத்துத்தலைகொண்ட தசமுகன் என்னும் பேருடையவன் சிங்கனை எங்கடா போறாய் நில் என்று தனது செங்கையிலுள்ள ஒரு வில்லை வளைத்து எங்கும் ஒலித்திடுமாறு நாணோசை செய்தான். 88

வேறு

விட்டனன் மழையென விசிகம் ஆங்கவை
பட்டிடத் தண்டினாற் படியில் வீட்டியே
அட்டுபூந் தாரினான் அடியொன் றாலவன்
இட்டதோர் கவசமும் இறுத்து நீக்கவே.

வளைத்திட்ட வில்லில் நின்றும் அம்புகளை மழைபோன்று சொரிந்தான்; அந்த அம்புகள் படப்பட சிங்கன் தனது தண்டால் அடித்து நொருக்கி பூமியில் வீழ்த்திய பின்னர் தேன்சொரியும் பூமாலையணிந்த சிங்கன் ஓடிச்சென்று தனது தண்டின் ஓர் அடியால் தசமுகனது நெஞ்சில் அணிந்திட்ட கவசத்தை உடைத்து நீக்கிடுதலும், 89

கூற்றுறழ் தசமுகன் கொடியன் ஆவியை
மாற்றுவன் இவனென வலிதின் ஓர்கதை
ஆற்றலின் விடுத்தலும் அரியின் பேரினான்
ஏற்றனன் மார்புதண் டிற்று வீழ்ந்ததே.

அந்நேரத்து இயமனை ஒத்த தசமுகன் இதோ! இந்தக் கொடிய சிங்கனின் உயிரை இதுபொழுதே இங்கு மாற்றிடுவன் என்று மிகு வலியுடன் ஓர் கதாயுதத்தை மிகு ஆற்றலுடன் எடுத்து சுழற்றி எறிதலும் அத்தண்டை சிங்கன் என்னும் பூத சேனாதிபதி தன் நெஞ்சைக்கொடுத்து ஏற்றான். அந்தத்தண்டு அவன் நெஞ்சில்பட்டு உடைபட்டு வீழ்ந்தது. 90

வீண்டது நோக்கியே வீர வீரனும்
ஈண்டிவ னேகொலென் றெண்ணி யாமினிக்
காண்டரும் வல்லையேற் காத்தி யீதென
ஆண்டொரு கணிச்சியை அவுணன் ஓச்சினான்.

தண்டு பொடியாகி வீழ்ந்ததைத் தசமுகன் என்னும் அசுரன் பார்த்து; இவ்விடத்து வீரருள் வீரனவன் இந்தப் பூதத்தலைவன் போலும் என்று எண்ணி; இந்தப் பூதத்தலைவன் வலியை நாம் இனிக்காண்போம் பூதனே! இதை உன்னால் காக்க முடியுமெனின் காத்துக்கொள் என்று கூறி தசமுகன் பின்னர் ஓர் கணிச்சிப்படையைச் செலுத்தினான். 91

மாலொடு கடவுளர் மறுகத் தீயழற்
காலொடு போந்திடுங் கடுவின் வெம்மைபோல்
மேலுறு கணிச்சியை வீரன் செங்கையின்
பாலுறு தண்டினுற் படியில் வீட்டினுன்.

அந்தக் கணிச்சிப்படையானது அன்று பாற்கடல் கடைந்தநேரத்து நாராயணக் கடவுளுடன் ஏனைய தேவர்கள் அச்சத்தால் நிலைகுலைந்திட வேகமுடன் எழுந்த நஞ்சின் கொடுமைபோன்று தன்மேல் வருதலும் அதனை சிங்கன்நோக்கி தனது செங்கையின் பாலாகக் கொண்ட தண்டினுல் அடித்து வீழ்த்தினுன். 92

நீக்கினன் கணிச்சியை நெடிய தோர்கதை
போக்கினன் தன்னெடு போர்செய் கின்றவன்
தாக்கணங் கமர்சிலை தன்னைச் சின்னமே
ஆக்கினன் அவுணர்கள் அலக்கண் எய்தினுர்.

கணிச்சிப்படையை அடித்து சிங்கன் நீக்கிவிட்டு நெடியதொரு கதாயுதத்தை செலுத்தி; தன்னேடு போர்செய்கின்ற தசமுகன் கைப்பிடித்த தாக்கமான வீரம் மிகுந்த வில்லை உடைத்தெறிந்து சின்னுபின்னமாக்கலும் அதுகண்ட அசுரரெல்லாம் பெரும் கலக்கமடைந்தார்கள். 93

சீலமில் தசமுகன் செயிர்த்துக் காய்கனற்
கோலம தாகிய குந்தம் ஒன்றினை
ஆலம தெனவிட அரியின் பேரினுன்
மேலுற வருவதை விரைந்து நோக்கினுன்.

அதுவேளை சீலம்இல்லாத தசமுகன் என்பவன் கோபித்து; வேகின்ற நெருப்பின் கோலமாகிய குந்தாயுதம் ஒன்றினை நஞ்சுபோல் வேகமுடன் செல்லவிடுத்திடலும் அது தன்மேல் வருதலை சிங்கன் என்னும் பேருடையவன் விரைவுடன் பார்த்தான்; 94

பூங்கழல் புனைகழற் பூத நாயகன்
ஆங்கது காலைஓர் ஆழி மாப்படை
ஓங்கிய பரிதிபோல் உருட்டி னுனரோ
பாங்குறு சாரதர் பலரும் போற்றவே.

பார்த்திட்ட பூப்போலும் வீரக்கழல் அணிந்த பூதநாயகன் சிங்கன் அக்காலையில் ஓர் பெரும் சக்கரப்படையை மேலோங்கிய சூரியனின் ஒளிபோன்று பிரகாசித்திட சுழற்றி வீசினுன்; அதுகண்டு பக்கர்நின்ற பூதங்கள்பலரும் போற்றிசெய்திட. 95

விடுத்திடு கின்றதோர் வேலை யாழிபோய்ப்
படுத்தது தசமுகப் பதகன் தண்டமொன்
றெடுத்தது வீசலும் இமைப்பில் எய்தியே
அடற்புனை கழலினுன் ஆகத் துற்றதே.

பூத நாயகன் சிங்கன் விடுத்துள்ள நேரத்து சக்கரமானது சென்று தசமுகன் விடுத்துள்ள குந்தாயுதத்தை அழிவுசெய்தது. பின்னர் அது கண்ட அப்பாதகன் தசமுகன் ஓர்தண்டாயுதத்தை எடுத்து வீசலும்; அத்தண்டாயுதம் சென்று வீரம் கொண்ட கழலினை அணிந்த சிங்கன் என்னும் பூதநாயகனது நெஞ்சில்பட்டது. 96

ஆகமேல் அடைதலும் அரியின் பேரினுன்
சோகமேல் கொண்டுசெஞ் சோரி சோர்தர
மாகமேற் செம்புனல் மாரி கான்றிடு
மேகமே யாமென விளங்கி னுனரோ.

சிங்கனுடைய மார்புமேல் தசமுகன் விடுத்த தண்டுசென்று படுதலும் சிங்கன் உடனுக சோகம் மிகுந்திடப்பெற்று மார்பில் நின்றும் சிவந்த இரத்தம் வடிந்தோடிட; நிற்பவன் வான்மீது நின்ற ஓர் மேகம் சிவந்த நீரான மழையைச் சொரிந்திடுவதுபோன்று அங்கு தோன்றினுன். 97

பரந்திழி குருதிநீர்ப் பருப்ப தத்திடைப்
பிரிந்திடு நதியெனப் பெருக ஓடியே
அருந்திறல் தசமுக னுகத் தோர்கையால்
விரைந்தனன் புடைத்தலும் வீழ்ந்து பொன்றினுன்.

சிங்கனது மேனியில் நின்றும் பாய்ந்தோடிடும் இரத்தமானது ஓர் மலையினின்றும் பிரிந்து ஓடிடும் ஓர் ஆறுபோல் பெருகிடவும் அதைப்பரவாய்கொள்ளாது ஓடிச்சென்று தசமுகனது மேனியில் தனது ஒருகையால் அடித்திடுதலும்; அந்த ஒரு அடியுடன் தசமுகாசுரன் சாய்ந்து வீழ்ந்து இறந்தான். 98

ஐந்திரு தலையுடைய அவுணன் மாய்தலுந்
தந்திர அவுணர்தந் தானை யாவையுங்
கந்தடு தோளுடைக் கணங்கள் மேற்செலா
முந்துறு பேரமர் முயல்வ தாயினர்.

பத்துத்தலையுடைய தசமுகாசுரன் மாய்ந்து போதலும்; அதுகண்ட சிங்கமுகாசுரனது சேனைவீரர்கள் யாவரும்; தூணை ஒத்த வலியுடைய தோள்கொண்ட பூதசேனைமேல் போரிடச்சென்று; முன்போல மிக்க கடூரமான போரினைச் செய்வாராயினர். 99

அவ்வழி இலக்கரில் அநகன் என்பவன்
மைவழி சிந்தையன் மடித்த வாயினன்
கைவழி வில்லினன் கடியன் சேனையை
எவ்வழி போதிரென் றெதிர்ந்து தாக்கினுன்.

அவ்வேளை இலக்கம் வீரரில் அநகன் என்னும் பேருடையவன் கறுவியம் மிகுந்த மனத்தோனுய் மடித்திட்ட வாயினைக் கொண்டவனுய் கையில் பிடித்திட்ட வில்லில் மிக்க கடும்போர் புரியவல்லவன்; பூதசேனைமேல் போரிடப்போகும் அசுரசேனையை நோக்கி எந்த வழியால் எங்கு போகின்றீர்கள் நில்லுங்கள் எனக் கூறியவாறு அந்த சேனையை எதிர்த்து சென்று முற்பட்டுத் தாக்கினுன். 100

வெலற்கரும் வில்லுமிழ் வெங்கண் வாளியால்
அலைக்குந ராகியே அடல்செய் மள்ளர்தந்
தலைக்குவை சிந்தியே தரையில் வீட்டியே
கலக்கினன் திரைக்கடல் கடைந்த மாலென.

வெல்லற்கரிய தனது வில்லினுல் செலுத்தப்படும் கொடிய அம்பினுல்; முன்னர் பூதங்களை அலைத்து உலைய வைத்தவராய் போரிட்ட அசுரரின் தலைகளை அறுத்தறுத்து சிந்தி பூமியில் அவர்களை வீழ்த்தி; அசுரச்சேனையை கலக்கினுன் பாற்கடலைக் கடைந்த திருமாலைப் போன்று. 101

ஆடியல் தானையான் அநகன் என்பவன்
சாடினன் திரிதலுந் தகுவர் யாவரும்
ஓடினர் அன்னதை உருத்து நோக்கினுன்
பீடுறு துன்முகன் என்னும் பேரினுன்.

போர்வல்லமையுடைய பூத சேனுதிபதி அநகன் பல அசுரவீரரை இவ்வாறு கொன்று குவித்தவாறு திரிதலும்: அங்கு நின்ற அசுரர் யாவரும் பயந்து ஓடினுர்கள்; அதனை மிகு கோபாவேசமுடன் நோக்கினுன் பெருமைமிக்க துன்முகன் என்னும் அசுரசேனுதிபதியானவன். 102

வேறு

தன்முன் ஓடிய அவுணரை நோக்கிநீர் தளரேல்
மின்மி னிக்குலங் கதிரினை வெல்லுமோ வெகுளின்
என்முன் நிற்பரோ பூதர்கள் செருத்தொழில் இழந்தார்
நின்மின் நின்மினென் றுரைக்கவும் இறையுநின் றிலரால்.

தனது முன்பாக போர்க்களம் நில்லாது பின்னிட்டோடிய அசுரவீரரை எல்லாம் பார்த்து; நீங்கள் தளர்வடையவேண்டாம். ஏன் ஓடுகிறீர் மின்மினிப் பூச்சிகளின் குழுக்கள் ஒளியால் சூரியனை வெல்லுமா? நான் கோபமுற்றால் இந்தப் பூதத் தலைவர் என்முன் நிற்பரோ? அவர்கள் முன்னரே போர்செய்தலை இழந்து தோற்றோடினோர். ஓடவேண்டாம் நில்லுங்கள் என்று துன்முகன் பலசொல்லவும் கூட; ஓடிய அசுரர் ஓர் இறைப்பொழுதும் நில்லாது ஓடினார்கள். 103

தானை பட்டன நோக்கினன் துன்முகன் தழல்மேல்
ஆனெய் பட்டென முனிந்தனன் பூதர்கள் அந்தோ
சேனை பட்டதென் றலமரக் குனித்தனன் சிலையைச்
சோனை பட்டன வாமென வடிக்கணை சொரிந்தான்.

தனதுசேனை நில்லாது பயத்தால் ஓடி அழிவுற்ற தன்மையை துன்முகன் கண்டான்; நெருப்பின்மேல் பசுநெய்யைவிட்டதுபோன்று சுரீரென கோபமுற்றான். பூதங்கள் ஐயோ! எமது சேனை அழிவுற்றது என வில்லை வளைத்தான். அதனின்றும் சோனை வாரிமழை பொழிந்ததுபோன்று வடிக்கணைகளை ஓய்வின்றிச் சொரிந்தான். 104

சொரிந்த காலையிற் பூதரும் பேரமர் தொடங்கி
விரிந்த வெற்பொடு தருக்களும் படைகளும் விடுப்ப
எரிந்து போயின சிற்சில இற்றவுஞ் சிலவால்
நெரிந்து போயின சிற்சில எதிரெதிர் நெருக்க.

துன்முகன் அம்பைச்சொரிந்த நேரத்தில் பூதங்களும் விடாது பெரிய போரினைப் புரியத் தொடங்கி பெருத்த மலைகளுடன் மரங்களையும் பெரும் படைக்கலங்களையும் அள்ளிவீசிட துன்முகனது அம்புகள் எரிந்து போகின்றன சிற்சில, அழிவுற்றன சிற்சில; அதுவன்றி நெரிந்து அழிவுற்றன சிற்சில ஏனெனில் பூதங்கள் விடுத்த படைகள் எதிரிட்டு நெருக்கமாக தாக்குதலால். 105

ஈறு செய்தில கணைமழை இவரொடும் யானே
மாறு கொள்வதுந் தனிமையில் அரிதென வலியோன்
ஊறு சேர்தரு மாயையால் ஒவ்வொர்பூ தர்க்கும்
நூறு நூறுருக் கொண்டுதாக் குற்றனன் நொடிப்பில்.

யான்விடுத்த இந்த அம்புகள் இப்பூதங்களை முடிவுசெய்யவில்லை. அம்புகளே அழிவுற்றன. ஆதலின் இவரோடும் தனியாகநான் இங்கு நின்று மாறான போரினைப் புரிவதும் அரிதாகும் என்று துன்முகன் மனதில் எண்ணி அக்கொடியதொரு பொல்லாப்புடைய மாயவித்தையால் அங்குநிற்கும் ஒவ்வொரு பூதர்க்கும் நூறுநூறு தன்போன்ற உருவம்கொண்டு ஒரு நொடிப்பொழுதில் தாக்குற்றனன். 106

ஆய காலையில் துன்முகன் வடிவமும் அடருந்
தீயெ னக்கிளர் சாரத ரொடுசெருச் செய்யும்
ஏய கொற்றமும் நோக்கினன் விம்மினன் வெகுண்டான்
மாயை கொல்லென உன்னினன் வாகையங் கதிரோன்.

அவ்வாறான காலையில் துன்முகனது மாயவடிவமும் எவற்றையும் அடர்த்தெரிக்கும் நெருப்பினைப் போன்று துள்ளிஎழுந்து போரிடும் பூதங்களுடன் அவன் போரிடும் மேம்பாடான சிறப்பையும் பார்த்தான். மனம் வெதும்பினான்; மிகுகோபமுற்றான்; இது மாயையோ என மனதில் நினைவுகொண்டான் வீரமார்த்தாண்டன் என்னும் எம்பிரானது படைவீரன். 107

மாற்று கின்றதெப் படைக்கல மோவென மதியாத்
தேற்று கின்றதோர் போதகப் பெரும்படை செலுத்தக்
காற்றின் முன்னுறு பூளையின் உருவெலாங் கரப்பக்
கூற்ற மன்னதோர் துன்முகன் ஒருவனுய்க் கொதித்தான்.

இந்தத் துன்முகனுடைய மாயையை மாற்றுகின்றது எப்படைக் கலமாமோ என மனதில் சிந்தித்து; மாயையைத் தெளியவைத்திடும் ஞானப்படையாகும் பெரும் படையை எடுத்து விடுத்தலும் அதுவேளை அந்த ஞானப்படை முன்பு காற்றின்முன் புழுதிபோல அங்குற்ற துன்முகனது மாயமான உருவங்கள் அழிவுற அதுவேளை இயமனை ஒத்த துன்முகன் தன் மாயை அழிந்து தான் ஒருவனுகவே தனித்துநின்று கோபமிகுதியாக மனதில் பெரும் கொதிப்படைந்தான். 108

கொதித்த துன்முகன் தன்பெருஞ் சிலையினைக் கோட்டி
நுதித்த னிக்கணை ஆயிரம் ஒருதொடை நூக்க
மதித்து வீரன்றன் ஒருபெருஞ் சிலையினை வாங்கிக்
கதித்த நோன்கணை ஆயிரஞ் சிதறினன் கடிதில்.

கொதித்த துன்முகனனவன் தன்பெரும் வில்லைவளைத்து கூரிய நுனிஉடைய அம்புகள் ஆயிரத்தை ஒரே முறையில் செலுத்தியிட அதனை மட்டிட்டுக்கொண்ட வீர மார்த்தாண்டர் தனது ஒரு பெரு வில்லைத்தானும் வளைத்து மிகவும வேகமுடைய வலியிற் சிறந்த அம்புகள் ஆயிரத்தை விரைவாக விடுத்தார். 109

ஆயி ரஞ்சரத் தாலவன் விட்டகோல் அறுத்துத்
தீய வன்தனிச் சிலையையேழ் வாளியாற் சிந்தி
மேய சாலிகை தன்னையோர் பகழியால் வீட்டிக்
காயம் எங்கணும் அழுத்தினன் அளவைதீர் கணைகள்.

வீரமார்த்தாண்டர் ஆயிரம் அம்புகளைச் செலுத்தி துன்முகன் விடுத்த ஆயிரம் அம்புகளை அறுத்து நீக்கி, அதன்பின் ஏழு அம்புகளை வீரமாரத்தாண்டர் பின்னரும் விடுத்து தீயவனுன துன்முகனின் வில்லைத் துணிபடுத்தி; துன்முகன் அணிந்த கவசத்தை ஒரு அம்பால் அறுத்து அவன் உடல் எங்கணும் பட்டு அழுந்தும்படி அளவற்ற பல அம்புகளை பின்னரும் செலுத்தினுர். 110

## வேறு

அழுந்திடு வடிக்கணை யாகம் போழ்தலும்
எழுந்திடு குருதிநீர் இரைத்துச் சென்றிடக்
கொழுந்தழல் புரைவதோர் கொடிய துன்முகன்
விழுந்தனன் மயங்கினன் விளிந்து ளானென.

வீரமார்த்தாண்டர் செலுத்திட வந்த அம்புகள் மேனியில் தைத்திட்டு உடலினைப் பிளந்திடுதலும் அதனுல் எழுகின்ற இரத்த நீர் உடலம் முழுவதும் இரைந்து கொண்டு ஓடிட; நெருப்புச்சுடரை ஒத்ததொரு கொடியோனுன துன்முகன் விழுந்தான். மயக்கமுற்றுன், இறந்துள்ளார்போன்ருன். 111

ஊறிய குருதியன் உறுகண் எய்துவான்
தேறினன் ஒல்லையிற் செருவில் நேர்துமேல்
ஈறினி வந்திடும் இரிந்திட் டுய்வதே
ஆறென உன்னினன் அமருக் கஞ்சுவான்.

மேனியால் ஒய்வின்றி பெருகிடும் இரத்தமுடையவன்; பெரும் துயரம் அடைந்து கொள்கின்றவன் சிறிது மயக்கம் தெளிந்து; நான் விரைவுடன் இன்னமும் இப்போரில் செல்வேனுக இருந்தால் எனக்கு முடிவு இனி வந்திடும். இதனிலும் பார்க்க ஒருவாறு திரும்பி ஓடிப்போய் உய்ந்து கொள்வதே நமக்குற்ற நல்ல வழியாகும் என மனதில் தேறினுன். மீண்டும் போர்புரிந்திட பயம் கொண்டான். 112

சிந்தையின் வழிபடல் செய்து மாயையின்
மந்திரம் ஒன்றினை மரபின் உன்னுறு
எந்திரத் தேரினும் எழுந்து துன்முகன்
அந்தரத் தாற்றினுல் அருவில் போயினுன்.

ஆதலின் துன்முகன் அவ்விடம் வழிபாடு புரிந்து ஓர் மாயையின் மந்திரம் ஒன்றினை முறைப்படி மனதில் தியானித்து இயந்திரமயமான தேரினின்றும் மாயையால் ஒருவருக்கும் தெரியாது எழுந்து வானவழியாக துன்முகன் மறைந்து போயினுன். 113

ஆயின காலையில் அடல்வெம் பூதரில்
தீயினை முருக்குறுஞ் சீற்றத் தோர்சிலர்
மாயையின் வலியினன் வஞ்சன் வல்லையிற்
போயினன் பற்றுதும் போதுவீர் என்முர்.

இவ்வாறான காலையில் வலிமைமிகுந்த கொடிய பூதங்களில் நெருப்பையும் அழித்திட வல்ல அத்தகைய சீற்றமுடையோர் சிலர் ஓடிய துன்முகனை நோக்கி இவன் மாயையால் மிகுந்த வலியுடையவன்; வஞ்சகன் விரைவுடன் மறைந்து போயினுன்; அவனைத்தப்பவிடாது தொடர்ந்து பிடிப்போம் வாருங்கள் என்முர்கள். 114

ஆங்கது கேட்டிடும் ஆடல் வெய்யவன்
ஈங்கிது தவிருதிர் இகலுக் கஞ்சியே
நீங்கினன் ஒருவனை நெருக்கி ஆருயிர்
வாங்குதல் புகழதோ வலியின் பாலதோ.

அதனைக்கேட்டு நின்ற வீரமார்த்தாண்டர் பூதங்களே! நீங்கள் இச்செயலை விட்டிடுங்கள். ஏனெனில் போர்புரிதற்கு அச்சமுற்று நில்லாது ஓடிப்போகும் ஒருவனை நாம் தொடர்ந்தோடிப் போய்ப் பற்றிப்பிடித்து அவனது உயிரை நீக்கிடுதல் எமக்கு ஓர் புகழாகுமோ? அல்லது வீரத்தின் பாலானதோ? 115

ஓடினர் தம்மையும் உற்றுத் தாள்மலர்
சூடினர் தம்மையும் தொழுத கையராய்
வாடினர் தம்மையும் வலியி லோரையுஞ்
சாடினர் அல்லரோ நவைக்கட் டங்குவார்.

போர்க்களத்து பயத்தால் ஓடிப்போனுரையும்; எதிரியின் காலில் வீழ்ந்து வணக்கம் புரிந்து சரண்புகுந்தாரையும்! தொழுதகையராகி சோர்வுற்று நிற்பாரையும்; வலியிலாதோரையும் கொன்று விடுவாரல்லவோ இவ்வுலகில் பெரும் பிழைக்கு ஆளாகிவிடுபவர்.

போர்புரிதலின் தருமம் இங்கு ஓதப்படுகின்றது. பயந்தாரையும் வணங்குவாரையும் தொழுவாரையும் வலியிலாரையும் கொல்லல் பழியாகும். இதனுல் பின்னுல் பெரும் வசைமட்டுமன்றி துன்பமும் வரும் என எடுத்துக்காட்டினுர். 116

வீரரை அல்லரை வெகுள லீரெனப்
பேரடல் வெய்யவன் பேச அன்னது
காரிய மேயெனக் கருத்தில் உன்னியே
சாரதர் தொடர்ந்திடுந் தன்மை நீங்கினுர்.

வீரர் அல்லாதவரை நீங்கள் வெகுண்டு துன்புறுத்தாதீர் என்று பெரும் வலிமைமிக்க வீரமார்த்தாண்டன் அங்குபேச; அதுசரிதான் என்று அப்பூதங்கள் தமது மனதில் தெளிவுற்று துன்முகனை தொடர்கின்ற அச்செயலை விடுத்து நீங்கினுர்கள். 117

### வேறு

அந்நேர் காணா ஆளரி மாமுக அடல்வெய்யோன்
இன்னே நந்தந் தானைகள் எல்லாம் இரிவாகும்
பின்னே நிற்ற லாவதெ னென்னாப் பெயர்குற்றே
முன்னே சென்றான் பூதரை நோக்கி முனிகின்றான்.

அவையாவையும் நேரில் கண்டுகொண்ட ஆண்மை மிகுந்த சிங்கமுகாசுரன் என்னும் கொடிய போர்வீரன் இதோ இப்போது நம்முடைய சேனைகள் யாவும் ஒடுவன. நான் பின்னே நின்றால் நடந்திடும் செயல் யாவது என்று அவ்விடம்விடுத்து நீங்கி முன்னாக வந்தான். பூதங்களைநோக்கி கோபமுறுகின்றான். 118

நந்தா ஆற்றற் சிங்கமு கத்தோன் அவன்நம்முன்
வந்தான் யாமே மாற்றுதும் அன்னான் வலியென்னாக்
கொந்தார் தாருச் சூழலும் வெற்புங் கொண்டேகி
முந்தா நின்ற பூதர்கள் வெம்போர் முயல்கின்றார்.

குறைவிலாத ஆற்றலுடைய சிங்கமுகாசுரன் நமது முன்பாக வந்தான். நாமே அவன் வலியை இங்குவைத்தே நீக்குவோம் என்று மிக வளர்ந்தோங்கிய மரங்களின் தொகையையும் மலைகளையும் எடுத்துக்கொண்டு சென்று முன்னாக நின்ற பூதங்கள் ஆளை ஆள்முந்திமுந்தி கொடும் போர் புரிய எத்தனித்துப் பார்க்கின்றார்கள். 119

மட்டார் தொங்கற் சிங்கமு கன்மேல் மதிதோய்வான்
எட்டா நின்ற வெற்புள யாவும் எறிகின்றார்
விட்டார் தாருச் சூழல் கணிச்சி வீசுற்றார்
தொட்டார் சூலந் தண்டெழு நாஞ்சில் சொரிகின்றார்.

அப்பூதங்கள் தேன் சொரிந்திடும் மாலையணிந்த சிங்கமுகாசுரன்மேல் சந்திரனைத் தொடும்படி உயர்ந்து நின்ற மலைகள் யாவற்றையும் பிடுங்கி எறிகின்றார். அவன் மீது மரங்களின் தொகைகளை அள்ளி வீசுகின்றார் கைக்கோடரிகளை சுழற்றி எறிகின்றார். சூலப்படையால் சுழற்றி எறிகின்றார். தண்டாயுதம் எழுப்படை இவற்றையும் சொரிகின்றார்கள். 120

சொரியுங் காலைத் தீயெழ நோக்கிச் சுடர்வேலோன்
எரியுங் காலுங் கால வுயிர்ப்ப எதிர்செல்லாக்
கரியுந் தீயும் பூழிய தாகுங் ககனத்தே
திரியும் மீளும் மப்படை செய்யுஞ் செயலீதால்.

பூதங்கள் இப்படைகளை மிகு துரிதமுடன் சிங்கமுகன் மேல் சொரிகின்ற நேரத்தில் அவற்றை யெல்லாம் நெருப்புத்தோன்றிடும் கோபமுடன் பிரகாசமுடைய வேலைக்கைக்கொண்ட சிங்கமுகன் பார்த்து நெருப்பும் காற்றும் இரண்டும் உடன் தோன்றிட உடனே ஒருகால் மூச்சிட்டான். அம்மவோ! அதனால் அந்தமரங்களும் மலைகளும் யாவும் கரிகின்றன; தீய்கின்றன; புழுதியாகின்றன; வானில் சுழன்று திரிகின்றன; மீள்கின்றன; இவையே அந்தப் படைகள் செய்திடும் செயல்களாகின்றன. 121

அன்னோ அன்னோ நம்படை எல்லாம் அடல்வீரன்
முன்னே செல்லா தீய வுயிர்ப்பின் முடிவாமால்
பின்னே செய்வ தொன்றிலை யாம்பே ரமர்செய்வ
தென்னோ என்னோ யாரினு மேலான் இவனென்றார்.

அம்மவோ அம்மவோ நமது படைகள் எல்லாம் கொடிய வீரன் சிங்கமுகன் முன்னே செல்லாது அவனது தீயதான பெருமூச்சினால் பொடிந்து மடிவாகிப் போகின்றனவே! இப்படியாயின் யாம் பின்னும் பேரமர் செய்து என்ன பிரயோசனம்; என்னவாகும். இவனைப்பார்த்தால் இங்கு போரிடவந்த அசுரர் எல்லாரிலும் மேலானவன் என்றார்கள்; மலைகளாலும் மரங்களாலும் எறிந்து அலுத்து நின்ற பூதர்கள்; 122

என்றார் பூதர் சீற்றம் விளைத்தார் யாரும்போய்க்
குன்றாய் அங்க ணுற்றன யாவுங் குழுவுற்ற
வன்றா ருக்க ளானவும் மாண்கைக் கொடுதொட்டுச்
சென்றார் ஆர்த்தார் சீயமு கன்மேற் செலவுய்த்தார்.

என்று பூதங்கள் கூறினார்கள். மீண்டும் பெரும் கோபம்கொண்டார்கள், எல்லாருமாகப் போய்த் திரும்பவும் அங்கு மலையாக நின்ற அத்தனைகளையும் அவையுடன் குழுவாக நின்ற மரங்கள் அத்தனையையும் மாண்புடைய கைகளால் பிடுங்கி எடுத்துக்கொண்டு சிங்கமுகாசுரன்முன் சென்றார்கள். ஆர்ப்பரித்து கூச்சலிட்டனர்; அவைகளை எல்லாம் சிங்கமுகன்மேல் சென்றுபடும்படி விட்டெறிந்தார்கள். 123

வேறு

கைக்கொடு சாரத கணங்கள் ஆர்த்துடன்
உய்க்குறு வரையெலாம் ஒருங்கு சென்றிடாத்
திக்குள வரைப்பெலாஞ் செறிந்து ஞாயிறு
மெய்க்கதிர் வழங்குறும் விசும்பு தூர்த்தவே.

பூதங்கள் கையில் எடுத்துக்கொண்டு ஆரவாரிப்புடன் வீசிய மலைகளும் மரங்களும் எல்லாம் ஒருங்கு சென்று திக்குகளில் உள்ள இடங்கள் எங்கணும் செறிந்து கொண்டதால் அவைகள் சூரியபகவானுடைய ஒளிமிக்க கிரணங்கள் வழங்கப்படும் வானத்தில் அவனது ஒளியே மேல்தோன்றிடாதபடி மறைத்துக்கொண்டது. 124

கல்லகத் தொகுதிகள் ககனந் தூர்த்துழி
எல்லுடைச் செங்கதிர் இரவி மாய்ந்திட
ஒல்லெனத் திமிரம்வந் துறலும் நோக்கியே
அல்லெனக் குடம்பையுள் அடைவ புள்ளெலாம்.

மலைகளாய கற்கள் இவ்வண்ணம் வானில் மூடி மறைத்தநேரத்து பிரகாசமுடைய சிவந்த கிரணங்களை உடைய சூரியனின் ஒளி மாய்ந்திட, மிகுவிரைவாக இருள் வந்து கூடிக்கொள்ளலும் அதனைக்கண்டு இரவாகிவிட்டது போலும் என நினைந்து பறவைகள் தமது சேர்க்கையான கூடுகளில் சென்று சேர்கின்றன. 125

வெற்பின நிரைத்தலு மறைய வெய்யவன்
எற்படு முன்னரே இரவி ஓடினான்
அற்புதம் அற்புதம் அடைந்த தம்புயன்
கற்பமென் றறிஞருங் கலக்கம் எய்தினர்.

பூதங்கள் வீசிய மலைகள் வந்து நிரந்து கொள்ளலும் அதனால் சூரியதேவன் மறைய, அதுகண்ட முதிர்ந்த அறிவுடைய பெரியோர்கள், ஓகோ! வழமைபோல் இரவுவரவேண்டிய காலத்தின் முன்பே சூரியதேவன் மறைந்துள்ளான். ஆதலின் இது அற்புதம். அற்புதமான செயல் வந்துகொண்டது. இதற்கு காரணம் ஒருகால் பிரமதேவருடைய கற்பகாலம் திடீரென வந்துற்றதோ என எண்ணி அவர்கள் கலக்கம்கொண்டனர்.

கற்பகால முடிவில் முதலாவது சூரியன் ஒளிமங்கிவிடும் பின்னர் யாவும் அழியும் அதன்இயல்பை இங்கு ஆசிரியர் பேசுகின்றார். 126

போற்றலன் தன்மிசைப் பூதர் தூண்டிய
மாற்றரும் பதலைகள் மலிந்து வான்படர்
ஆற்றினை அடைத்தலும் அஞ்சி நின்றனன்
காற்றினும் விரைந்துசெல் கதிரின் பண்ணவன்.

நன்றி இலாதவனான சிங்கமுகாசுரன் மீது பூதங்கள் செலுத்திய விலக்கிட முடியாத மலைகள் எங்கும் செறிந்து வானவழியால் செல்கின்ற பாதையினை அடைத்தலும், அதனைக் கண்டு அச்சம்கொண்டு நின்றனன் காற்றிலும் பார்க்க விரைவாகச் செல்லக் கூடிய ஒளியின் கடவுளாகும் சூரிப்பகவான். 127

இன்றுகா றவுணரால் இடரு ழந்தனம்
அன்றியும் பூதரீண் டடுக்கல் வீசினர்
நின்றிடின் வருந்துதும் நிகழ்ச்சி தேரலாஞ்
சென்றிடல் துணிவெனத் தேவர் ஓடினர்.

இதனைக்கண்டுகொண்ட தேவர்கள் எல்லாரும் எண்ணினர்; இன்றுவரையும் இந்த அசுரரால் நாம் பெரிதும் இடர்ப்பட்டுள்ளோம் அது போதாதென்று பூதர்கள் இவ் விடத்து மலைகளை வீசினர்கள் நாங்கள் இங்கு நின்றால் வருத்தமடைய வேண்டும்; என்ன நடந்தது என்ற செய்தியை பின்னால் அறிந்து கொள்ளலாம்; இப்போது நாம் எங்காகுதல் ஓடிச்செல்வதுதான் நல்ல துணிபாகும் என்று தேவர்கள் யாவரும் மேல்நின்று இப்போரினை நோக்குதலை விடுத்து அப்பால் ஓடினர்கள். 128

செருவலி வீரர்கள் செலுத்தச் சேண்படர்
பருவரை யிடையிடை பயின்று சுற்றிய
கருமுகில் உண்டநீர் கான்று தம்வயின்
உருமிடி எங்கணும் உகுத்து வீழ்ந்தவே.

போர்வலிமிக்க பூதவீரர்கள் செலுத்திடலும் வானில் செல்கின்ற பெருமலைகள் அதன் இடையிடையே பழக்கத்தால் சூழ்ந்து கொண்ட கரிய முகில்கள் தாங்கள் உண்டுகொண்ட நீரைக்கக்கிவிட்டு தம்மிடத்துள்ள மிகு கொடிய இடிகளையும் சொரிந்துவிட்டு கீழே வீழ்ந்தன. 129

வெதிர்படு சிலம்பினும் வழுக்கி வீழ்ந்திடும்
அதிர்குரல் அரியினம் அண்டச் செற்றின
எதிருறு தகுவனை இனமென் றுன்னியே
முதிர்தரு காதலான் முன்னுற் றுலென.

எறியப்படும் மலைகளினின்றும் வழுக்கிவீழ்ந்திடுகின்ற அதிர்கின்ற பெருங்குரலுடைய சிங்கங்கள் யாவும் சிங்கமுகாசுரனை கிட்டியும் செல்கின்றன; இது எதுபோல் இருப்பதென்றால் தம்முன் எதிருற்ற சிங்கமுகாசுரனின் சிங்கமுகம்கண்டு அவனை தம் இனமென நாடி முன்செல்வதுபோன்றது. 130

மைம்மலை யிடைவிராய் வதிந்த மோட்டுடைக்
கைம்மலை அரற்றியே கவிழ்வ காசிபன்
செம்மலை அரியென நோக்கித் தேம்பியே
விம்மலை யெய்தியே வீழ்வ தென்னவே.

பூதங்களால் வீசப்பட்ட கருமையான மலைகள் இடத்து வாழ்ந்த கொம்புடைய யானைகள் மலைகளினின்றும் சத்தமிட்டவாறு பயத்துடன் கீழே வீழ்கின்றன. எது போலுமென்றால் காசிப முனிவன் புதல்வனை சிங்கமுகாசுரனை உண்மையில் சிங்கம் என நினைந்து ஏக்கமுற்று விம்மி அழுதுகொண்டு வீழ்வதை ஒத்திருப்பன. 131

பொற்றையின் மரங்களிற் பொதிந்த கேசரம்
வெற்றிகொள் அரிமுகன் தொடையின் மேவின
விட்டவர் தம்மை விட்டேதி லார்தமைப்
பற்றெடு கலந்திடு பரத்தை மாதர்போல்.

எறியப்பட்ட அம்மலைகளில் உள்ள மரங்களில் பூவினிற்றேனுண்ணும்படி தங்கியிருந்த வண்டினங்கள் தாம் இருந்த நிலைநீங்கி சிங்கமுகாசுரனுடைய நெஞ்சில் அணிந்துள்ள பூமாலைகளில் சென்று தங்கின எப்படியெனில் முன்னம் ஒருவனை மயக்கி பொன்பறித்து இன்புற்று சில நாள் அவனுடன் உடலுறவு கொண்டு இருந்து பின்னர் அவனைக் கைவிட்டு இன்னுமொரு பாவியுடன் பற்றாகக்கொண்டு அவனுடன் உடலுறவு கொள்ளும் பரத்தைப் பெண்களைப்போன்றிருந்தது. 132

எறிந்திடு வரைகள்தந் தம்மில் எற்றிடச்
செறிந்திடு தீங்கனல் சென்ற திக்கெலாம்
பொறிந்தன புகைந்தன பொரித லுற்றன
மறிந்தன உலந்தன மன்னு யிர்த்தொகை.

பூதங்கள் எறிந்திடுகின்ற மலைகள்யாவும் தம்மில் ஒன்றுடன் ஒன்று அடிபட அதனால் பறந்துகொண்டு பரக்கும் கொடிய நெருப்பானது செல்கின்ற திசைகள் எல்லாம் பொறிபடுகின்றன புகைகின்றன ஆங்காங்குள்ள மேலான உயிர்கள் பொரி கின்றன இறக்கின்றன வாடுகின்றன. 133

ஆயின பல்லியல் அடையப் பூதர்கள்
ஏயின குன்றமுந் தருவும் ஏகியே
சீயமா முகமுடைச் செல்வற் சேர்ந்தன
தூயவன் கயிலையைச் சூழ்ந்த கொண்டல்போல்.

இவ்வாறான பல இயல்புகள் நடைபெற்றிட பூதங்கள் எறிந்துள்ள மலைகளும் மரங்களும் சென்று சிங்கமுகமுடைய செல்வனை சேர்ந்து கொள்கின்றன. எப்படி யென்றால் தூயவரான சிவபிரானது கைலாய மலையைச் சூழ்ந்துள்ள மேகங்களைப் போன்று. 134

செடித்தலை எயினரில் திகழும் ஆயிரம்
முடித்தலை யான்மிசைப் பட்ட மொய்வரை
பொடித்தில இற்றில பூழி யாய்த்தில
படித்தலம் வீழ்ந்தன நொய்ய பான்மையால்.

செடியாகும் பரட்டை மயிருடன் திகழ்கின்ற வேடரைப் போன்று விளங்கிடும் ஆயிரம் முடியுடைய சிங்கத்தலையுடைய சிங்கமுகாசுரன் மீதுபட்ட இந்த மலைகள் யாவும் அவன் மேனியில்பட்டு உடைந்து பொடியாகவில்லை அல்லது அழியவில்லை அல்லது புழுதியாக எரிந்து போகவில்லை ஆனால் அவையாவும் இப்பூமியினிடத்து வீழ்ந்தன; நொய்த பொருள்பட்டு வீழ்தல்போன்று. 135

வேறு

துன்னற் பட்ட குன்றெவை யுஞ்சூர் துணையானோன்
மின்னற் பட்ட மெய்யிடை பட்டே வெற்பின்கட்
பன்னற் பட்ட தாமென வீழ்கின் றதுபாரா
இன்னற் பட்டார் பூதர்கள் வானோர் ஏங்குற்றார்.

எறியப்பட்ட பெருமலைகள் யாவும் சூரபன்மனின் துணைவனான சிங்கமுகாசுரனின் மின்னல்போல் ஒளிர்கின்றமேனியில்பட்டு; மலையினிடத்து பஞ்சுபட்டது போன்று கீழே வீழ்கின்றமையைக்கண்டு பூதங்கள்யாவும இதென்ன அநியாயம் என்று பெரும் இன்னல் அடைந்தார்கள். இதுகண்ட தேவர்கள்யாவரும் நிலமை இப்படியாயின் இனி என்னாகுமோ? என ஏங்குற்றார். 136

சீலம் புக்க பாரிடர் வெம்போர் செயல்கா ணூஉக்
கோலம் புக்க தேரிடை நின்றான் குப்புற்று
ஞாலம் புக்கான் பூதர்கள் தம்மை நலிதற்கோர்
ஆலம் புக்கா லென்ன நடந்தான் அடல்செய்வான்.

சிலமான நெறிநின்ற பெரும்பூதங்கள் இவ்வாறு மலைகளையும் மரங்களையும் தன் மேல் வீசிக் கொடும்போர் செய்கின்ற அச்செயலை சிங்கமுகன் கண்டு; கோலாகலமான தேரின்மீது நின்றவன் கீழே குதித்தான் பூமியில் வந்தான். போர்புரியும் பூதங்களை நலிவதற்கோர் ஆலகாலம் எனும் நஞ்சு பூமியில் வந்தது எனும்படியாக நடந்தான். பூதங்களை அழிவுசெய்திடத் தொடங்குவான். 137

பார்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மைப் பகைவிண்ணோர்
ஊர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மை உயர்பானுத்
தேர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மைத் திரைசேர்முந்
நீர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மை நெடிதோச்சும்.

சிங்கமுகாசுரன் சிற்சில பூதங்களை கையால் தூக்கி பூமியில் அடிப்பான். தங்களது பகைவரான தேவர்கள் ஊர்மேல் எறிந்தடிப்பான். சிற்சில பூதரை உயர்வுடைய சூரியனின் தேர்மேல் அடிப்பான் சிற்சிலபூதரை. சிற்சில பூதரை திரைகளை உடைய கடல்மீது தூக்கி வீசுவான். சிற்சிலபூதரை அள்ளி நெடும்தூரத்துப்போய் வீழ வீசுவான். 138

பற்ரு நிற்குஞ் சிலவரை மூரற் பகுவாயிற்
குற்ரு நிற்குஞ் சிலவரை வாரிக் குழுவோடுஞ்
சுற்ரு நிற்குஞ் சிலவரை அண்டச் சுவரின்கண்
எற்ரு நிற்குஞ் சிலவரை அள்ளி எறிகிற்கும்.

சிற்சில பூதரை கையால் பிடித்தெடுப்பான்; அவர்களை வலியுடைய பற்கள் கொண்ட வாயில் குற்றுவான். சிலபூதரைக் கையால் கூட்டாக வாரிச் சுழற்றிடுவான். சிற்சில பூதங்களை தூக்கி அண்டச் சுவர்மீது அடித்திடுவான்; சில பூதங்களை கையால் அள்ளி எறிவான். 139

புண்டரி கன்கட் சிலவரை வீசும் பொருசெங்கைத்
தண்டத ரன்கட் சிலவரை வீசுஞ் சதவேள்வி
அண்டம தன்கட் சிலவரை வீசும் அகிலஞ்சூழ்
எண்டிசை யின்கட் சிலவரை வீசும் இகல்பேசும்.

சில பூதங்களை அள்ளி எறியும்போது சில பூதங்களை பிரமதேவன் உலகில் எறிவான். போரிடும் சிவந்தகையில் தண்டாயுதமுடைய நாராயணப் பெருமான் உலகில் சிலரை வீசுவான். நூறுயாகம் செய்த இந்திரனுடைய உலகில் சிலரை அள்ளி வீசுவான். இப்பூமியைச் சூழ்ந்திடும் எட்டுத் திசையிலும் சிலரை அள்ளி வீசுவான். 140

மாலெரி வைப்பிற் பலர்தமை வீசும் வானத்திற்
காலெரி வைப்பிற் பலர்தமை வீசும் கரைதீர்ந்த
வேலைகள் முற்றும் பலர்தமை வீசும் வியன்மிக்க
ஞாலம் அனைத்தும் பலர்தமை வீசும் நனிதூர்க்கும்.

பெரிய அக்கினி பகவானின் உலகில் சில பூதரை அள்ளி வீசுவான். வானின் கண் உள்ள வாயுமண்டலங்களில் பல பூதரை வீசுவான். கரைகாணுத சமுத்திரம் முழுவதும் சென்று வீழும்படி பலரை அள்ளி வீசுவான். பெருமைமிக்க பூமிகள் அனைத்திலும் சென்று வீழுமாறு பல பூதரை அள்ளி வீசுவான். எங்கும் பூதத்தால் மறைப்பான். 141

சிங்கங் கொண்ட மாமுகன் வீசுஞ் செறிவாலே
துங்கங் கொண்ட பார்முதல் விண்ணின் துணையுந்தான்
எங்கும் பூத மாயின அம்மா இதுகொண்டோ
அங்கங் கெல்லாம் பூதம தென்ருர் அறிவுள்ளார்.

சிங்கத்தின் பெருமுகம்கொண்ட சிங்கமுகாசுரன் இப்படி அள்ளி எறிதலாலே எங்கும் சென்று வீழ்கின்ற பூதங்களின் பரப்பாலே, மேன்மைகொண்ட இப்பூமி முதல் வானில் உள்ள எல்லாவரையும் எங்கும் அவன் அள்ளி வீசிய பூதங்களாகவே காணப்பட்டன. ஆதலால் இந்தத் தன்மையைக் கொண்டுதானே அறிவாளிகள் யாவரும் அங்கங் கெல்லாம் பூதங்களாயின எனக் கூறலுற்ருர்.

அங்கங்கு காணப்படும் பலபொருளும் பஞ்சபூதங்களுடன் குறியும் குணமும் கூடியபடியால் தோற்றமாயது. ஆகவே எங்கும் பூதங்களின் இயல்புதான் யாவும் மென அறிஞர் நிச்சயித்திடும் உண்மைப்பொருள் சிங்கமுகன் அள்ளிவீசிய பூதங்களின் நிலையாலே இருப்பதோ என வேடிக்கையாகக் கூறினுர் ஆசிரியர் என்க. 142

மிதித்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை மிசையுந்திப்
பதத்திற் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைப் படிவத்தை
சிதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை செல்லென்ன
உதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை உலவுற்றே.

சிங்கமுகன் எங்கும் ஓடிஓடி சிற்சில பூதங்களை மிதித்துக் கொல்லுவான். காலினால் பந்துபோல் வானமேல் போகும்படி அடித்துக் கொல்லுவான். சிற்சில பூதங்களை பிடித்து உடலினைக் கிழித்துக்கொல்லுவான். சிற்சில பூதங்களை இடிஇடித்தாற் போல் உதைத்துக் கொல்லுவான். 143

வில்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி விரல்மேலால்
தள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி தாமுற்றக்
கிள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி கிளையோடு
மள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி அடுகிற்கும்.

சிங்கமுகன் சிற்சில பூதங்களின் தலையை கையால் பிடித்துப் பிடுங்கி எடுப்பான்; சிற்சில பூதங்களின் தலையை மேல் விரலாலே சும்மா தட்டி வீழ்த்திடுவான்; சில பூதங்களின் தலைகளை விரல் நகத்தாலே முழுவதும் கிள்ளி எடுப்பான். கூட்டாகப் பலருடைய தலையை சேரமுறுக்கி முறித்தெடுப்பான் இப்படிக் கொலைசெய்வான். 144

தாக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மைத் தடிகின்ற
ஊக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை யுருமொத்த
வாக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை மருளுற்ற
நோக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை நொடிதன்னில்.

சிங்கமுகன் ஒருநொடிப்பொழுதில் கையால் வீசித் தாக்கி சில பூதங்களைக் கொல்லுவான்; சில பூதங்களை மற்றையோரைக் கொல்கின்ற ஊக்கத்திலே அவர்கள் ஏங்கி இறந்திடும்படி செய்து கொல்லுவான். இடியேறுபோன்ற தனது வாக்கைக்கேட்டு பல பூதங்கள் இறந்து போகும்படி கொல்வான். மயங்கிடவைக்கும் பொல்லாத பார்வையாலே சிலபூதங்களைக் கொல்வான். 145

வாரா நிற்கும் பாரிட ராசியை வாரிப்பின்
சேரா நிற்கும் வாய்தொறும் ஈண்டச் சேர்த்திட்டே
ஆரா நிற்கும் ஆர்ந்தபி னுக அகன்மோட்டைத்
தூரா நிற்குந் தூர்த்தபின் ஆடல் தொழில்செய்யும்.

சிங்கமுகாசுரன் தனது கைகளால் பூதசேனையை கோலி வாரிக்கொண்டு பின்னராக அவற்றைத் தூக்கி வாய்க்குள் சேரும்படி நெருக்கி அடைத்து அப்படியே விழுங்குவான். அங்ஙனம் விழுங்கிவிழுங்கி தனது பெரிய வயிற்றை நிரப்புவான். நிரப்பியபிற்பாடு அங்கு நின்றும் கூத்தாடலான செயலைச் செய்திடுவான். 146

எழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மை எரிகூர்வாய்
மழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மை வயநாஞ்சில்
கொழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மைக் கூர்சூலக்
கழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மைக் கடிதோடி.

தனது இரண்டாயிரம் கைகளில் உள்ள பலவிதப் படைகளிலே விரைவாக ஓடி ஒரு சில பூதங்களை எழுவாயுதத்தாற் கொல்வான்; நெருப்பினைப்போன்று எரிகின்ற கூரிய வாயுடைய மழுவாயுதத்தாலே ஒரு சில பூதங்களைக் கொல்வான். வைரமுற்ற நாஞ்சில் படையாலும் கொழுவாயுதத்தாலும் ஒரு சில பூதங்களைக் கொல்வான்; கூரிய சூலப்படையாலும் கழுமுட்படையாலும் ஒருசில பூதங்களைக் கொன்றிடுவான். 147

கரத்திற் கொல்லுஞ் சிலவரை நோன்கார் முகமுய்க்குஞ்
சரத்திற் கொல்லுஞ் சிலவரை அம்பொற் றண்டத்தின்
உரத்திற் கொல்லுஞ் சிலவரை அங்கண் ஒசிக்கின்ற
மரத்திற் கொல்லுஞ் சிலவரை மண்மீ தினில்வீட்டும்.

சிங்கமுகாசுரன் தனது இரண்டபயிரம் கைகளிலே சில கைகளால் சிலபூதங்களை அடித்துக் கொல்வான். வலியுடைய வில்லில் நின்றும் செலுத்தும் அம்பால் சில பூதங்களைக் கொல்வான். அழகிய பொன்னுன தண்டாயுதத்தாற் சில பூதங்களைக் கொன்றிடுவான். அங்கு முறிக்கின்ற மரங்களாலே சில பூதங்களை அடித்துக் கொன்று பூமியில் வீழ்த்திடுவான். 148

தேர்மே லானே விண்ணுல கானே திசையானே
பார்மே லானே வார்கட லானே பதுமத்தோன்.
ஊர்மே லானே மேருவி னுனே உயர்பூதர்
போர்மே லானே தீயவன் என்றூர் புலவோர்கள்.

சிங்கமுகாசுரன் இப்படியாக ஓடி ஓடி இவ்வளவு பூதங்களையும் கொன்றிடும் போது அவனை நேராகக் காணமுடியாத அவ்வியல்பால் அவன் தேர்மேலாக நிற்பானே திசையில் போனுனே பூமியில் நிற்பானே பெருகும் கடல்மேல் நிற்பானே பிரமதேவனின் ஊர்மேலானே மேருமலையிலானே. எங்குதான் தீயவன் உயர்வுடைய பூதங்களுடன் போர்செய்கின்றுன் எனத் தேவர்கள் கூறினுர்கள். 149

அற்றூர் தாள்கள் கைகள் இழந்தார் அடுதிண்டோள்
இற்றூர் சென்னி சிந்தினர் துண்ட மிலரானுர்
பொற்றூர் மார்பம் விண்டனர் வீழ்ந்து புரள்கின்றூர்
செற்றூர் தம்மை அட்டிடு பூதத் திறல்வீரர்.

இப்படிச் சிங்கமுகன் செய்தலால் பூதங்கள் கால்களை இழந்தார் கைகளை இழந்தார் கடினமான தோள்களை இழந்தார்கள்; தலைகள் சிதறுண்டார்கள்; மூக்கு இல்லாமற் போகப்பெற்றூர். நெஞ்சு பிளக்கப்பெற்றனர். வீழ்ந்து வீழ்ந்து புரள்கின்றூர். இப்படியானோர் யார் எனில் பகைவர் எவரையும் முன்னர் அழிவு செய்கின்ற அத்துணை வலியுடைய பூதவீரர். 150

சொரியா நின்ற சோரியர் ஆற்றத் துயர்மேலோர்
மரியா நின்றூர் எண்ணில ரால்மற் றவர்தம்முட்
பிரியா நின்ற சென்னியர் பல்லோர் பெயர்வெய்தித்
திரியா நின்றூர் ஆடுறு கின்ற செயல்கொண்டார்.

வடிந்தோடும் இரத்தமுடையவராய் மிகவும் துயரத்தில் அழுந்தியவராய் இறந்து போனுர் எண்ணற்ற பல பூதர்கள். இறந்துற்ற இவர்களிலே தலைபிரிந்துபோன உடலுடன் அங்குநின்று மிகவும் வேகமாக இடம்விட்டு நீங்கி கவந்தமாக நின்று ஆடுகின்ற செயல் கொண்டார்கள் பல பூதங்கள். 151

கருவந் தெய்தும் ஆருயிர் முற்றுங் கவிழ்கின்ற
பருவந் தன்னில் தீயவன் உண்ணும் படியேபோற்
செருவந் துற்ற சீயமு கத்துத் திறல்மேலோன்
ஒருவன் தானே நின்றடு கின்றுன் உலவாதான்.

ஓர் தாயின் கருப்பையில் வந்து உதித்திடும் உயிர்முற்றும் அழிகின்ற காலத்தில் கொடிய அக்கினி பல அவ்வுயிர்களையும் அழிவுசெய்திடும் தன்மைபோன்று போர்க்களத்து வந்துசேர்ந்துகொண்ட சிங்கமுகன் ஒருவனே எல்லாப் பூதங்களையும்கொன்று குவித்து அச்செயலில் ஓய்வின்றி கெடுதலின்றி நிற்கின்றுன். 152

அந்நீ ராகிப் பூதரை வெய்யோன் அடுகாலைச்
செந்நீர் நீத்தம் ஆயிடை தோறுஞ் சென்றீண்டித்
தொன்னீர் வேலை புக்குவர் நீக்கித் துவராக்கி
முந்நீ ரென்னுந் தொன்மையை வேருய் முடிவித்த.

அந்நிலைமையாகிப் பூதங்களை கொடிய சிங்கமுகன் கொல்கின்ற காலத்தில் இறந்துற்ருர் உடலில் நின்றும் பெருகிடும் இரத்த நீரானது அவ்விடமெல்லாம் சென்று பரந்து ஓடி மிகமுந்திய கடல்நீரில் சென்று புகுந்து அங்குள்ள உவர்நீரை மாற்றி சிவந்த பவள நீராக்கி அதன் முந்நீர் என்னும் தன்மையை முற்றிலும் வேருக அமையும்படி முடிவு செய்தது. 153

ஆடா நின்ருன் இத்திறம் வெய்யோன் அளவில்லார்
வீடா நின்ருர் கண்டனர் வெம்பூ தர்க்கெல்லாங்
கேடா நின்ருன் இங்கிவ னென்னுக் கிளையோடும்
ஓடா நின்ருர் வானவ ரெல்லாம் உலைவுற்ருர்.

சிங்கமுகாசுரன் இத்திறம் போரிட்டு நின்ருன்; அளவு கடந்தோர் பூதர்கள் இறந்துகொண்டு நின்றனர்: இதனையெல்லாம் தேவர்கள் கண்டு இவன் கொடிய பூதங்களுக்கெல்லாம் கெடுதியாக நின்ருனே என்று தங்களது கூட்டத்துடன் பறந்தோடிப் போய்க்கொண்டிருந்தார்கள். ஓடுகின்றவர் இப்பக்கமோ அப்பக்கமோ ஒடி ஒளிப்பது எனப்பயத்தால் ஓடி ஓடி உலைவுற்ருர்கள். 154

துன்னு நின்ற தொன்மரம் வெற்பின் தொகைவீசி
முன்னு குற்ற பூதர்கள் யாரும் முடிவாகக்
கொன்னுர் சிங்க மாமுகன் அட்டே குலவுற்று
மின்னுர் செம்பொன் மேருவெ னுந்தேர் பிசைபுக்கான்.

வளர்ந்தோங்கிநின்ற பெருமரங்கள் மலைகளின் தொகைகள் இவற்றைவீசிக் கொண்டு முன்னுக நின்ற பூதங்கள்யாவும் முடிந்திடும்படி மேம்பாடுடைய சிங்கமுகாசுரன் கொன்றுவிட்டு; அங்கு உலவிவிட்டு அப்பால் மின்னலைக் கால்கின்ற செம்பொன்னுன மேருமலைதான் இதுவென்று சொல்லும்படி உயர்ந்துநின்ற தனது தேர்மேல் புகுந்து கொண்டான். 155

## வேறு

அவ்வேலை யன்னுன் அமர்செய்வினை யாடல் பாரா
மைவேலை போல்வான் அழற்கண்ணன் மனங்கனன்று
செவ்வே யெதிர்புக் கரிமாமுகற் சீறி வெய்யோய்
இவ்வேலை உன்னை முடிப்பன் இகல்முற்றி என்ருன்.

அவ்வாருகிய நேரத்து சிங்கமுகாசுரன் போர்செய்திடும் திறமையை நோக்கி கருமையான சமுத்திரம் போலும் வடிவுடைய அக்கினிக்கண்ணன் என்னும் பூதசேனுதிபதி மனம்மிகக் கறுத்து வெப்புற்று சிங்கமுகாசுரன் முன்பு செவ்வனே சென்று நின்று அவனை நோக்கி சீறி கொடியவனே! இவ்வேளையில் உன்னை யான் முடிப்பேன் இங்கு என் வீரமுதிர்வால் என்ருன். 156

என்றங்குரை செய்திடு பூதனை ஏந்தல் நோக்கி
ஒன்றுஞ்சிறி துன்னலை அச்சமும் முற்றி லாதாய்
நின்றிங்கிது கூறினை என்னின் நினக்கு நேரார்
நன்றுன்வலி என்றுந கைத்தனன் நாகர் அஞ்ச.

என்று இவ்வாறு உரைசெய்த பூதசேனுதிபதியை அசுரர் தலைவன் சிங்கமுகன் நோக்கி பூதனே! நீ இதைப்பேசிடும்போது சிறிதும் சிந்தியாது பேசுகின்ருய். நீ பயமும் முற்ருக இல்லாதவனுய் இங்கு என்முன் நின்று இதனைக் கூறுகின்ருய் என்ருல் இனி உனக்கு நேரான வீரர் ஆர் உளர்! நன்று உனது வலிமை என்று சிரித்தான். அவன் நிலை கண்டு தேவர்கள் அஞ்சிட. 157

அன்னான்நகை செய்தது காண்டலும் ஆழி நாப்பட்
கொன்னூர்தழ லென்னவெ குண்டனன் கூளி வேந்தன்
நின்னுடலை நீக்குவன் காணுதி நீயு மென்றோர்
மின்னார்கழு முட்படை ஆங்கவன் மீது விட்டான்.

அவ்வாறு சிங்கமுகன் இகழ்ந்து சிரித்ததைக் கண்டதும் பூதசேனாதிபதியானவன் சமுத்திரத்தின் நடுவே இருக்கின்ற மிகு உயர்வுள்ள வடமாமுகாக்கினி எனவே கொதித்து கோபமுற்றான். பின்னர் சிங்கமுகாசுரனை நோக்கி, சரி உனது போர் வீரத்தை நான் இதோ அகற்றுகின்றேன் அதனை நீ காண்பாயாக என்று கூறி மின்னுகின்ற சுடருடைய ஓர் சூலப்படையை சிங்கமுகாசுரன்மீது விடுத்தான். 158

கூற்றானவன் ஏவவ ரும்படைக் கொள்கை நோக்கி
மாற்றானவ னோர்படை யும்வழங் காது நின்றான்
தோற்றானென வானவர் ஆர்த்தனர் சூல மார்பின்
ஏற்றான்வரை மேற்படு கண்டகத் திற்ற தன்றே.

இயமனை ஒத்த வலியுடையோனான அக்கினிக்கண்ணன் என்னும் பூதத்தலைவன் செலுத்திடவரும் சூலப்படையின் கொள்கையை சிங்கமுகாசுரன்கண்டு அதற்கு மாறாக ஓர் படையும் செலுத்தாது நின்றான், அதுகண்ட தேவர் சிங்கமுகாசுரன் இதில் தோற்றான் என்று எல்லாரும் ஆர்ப்பரித்தனர். அதுவேளை சிங்கமுகாசுரன் அச்சூலத்தை தனது நெஞ்சைக்கொடுத்து ஏற்றலும் அவன் நெஞ்சில் அச்சூலம்பட்டு மலைமேற்படும் ஊசிபோன்று முறிந்து போயது. 159

உறுகின்றசூ லப்படை ஊற்றமும் ஓங்கல் மார்பத்
திறுகின்றதும் அங்கவன் நின்றதும் யாவும் நோக்கிப்
பெறுகின் றவரில் இவன்பெற்றது பேறதென்னா
மறுகின்ற நெஞ்சன் ஒருதண்டினை வல்லை உய்த்தான்.

நெஞ்சின்மீது வந்து படுகின்ற சூலப்படையின் வலியும் அப்படியான சூலமே சிங்கமுகாசுரன் நெஞ்சில்பட்டு அழிகின்றதும், அங்கு அவன் அசைவின்றி நிற்கும் தன்மையாவையும் அக்கினிக்கண்ணன் என்னும் பூதத்தலைவன் பார்த்து உலகில் ஈசன் அருளால் பெறுகின்ற பேற்றிலே இவன் பெற்றதுபோல் வேறுயார்பெற்றார் என எண்ணி வருத்திடும் நெஞ்சினை உடையனாய் பின்னும் ஓர் தண்டாயுதத்தைச் செலுத் தினான் பூதத்தலைவன். 160

வேறு

உய்த்தலும் அனையதண் டுருமுற் றாலென
அத்தலை அரிமுகத் தவுணன் சாரதி
மெய்த்தலை கோடலும் வெகுண்டு நோக்கியே
கைத்தல மிருந்ததோர் கதையை ஏவினான்.

பூதத்தலைவன் செலுத்தலும் அத்தண்டு இடி வீழ்ந்தாற்போன்று விரைந்து சென்று சிங்கமுகாசுரனின் தேர்ச்சாரதியின் அழிவிலாத தலையை அறுத்திடலும் அதனை சிங்கமுகன் வெகுண்டு பார்த்து தன்கையில் இருந்ததொரு தண்டாயுதத்தை பூதத்தலைவன் மேல்செலுத்தினான். 161

மாவலி சேர்தரு மடங்கல் மாமுகன்
ஏவிய வெங்கதை இமைப்பிற் பூதர்கள்
காவலன் அகலமேற் கலந்து தாக்கிற்றால்
ஓவென அனையனும் உளம்வ ருந்தவே.

பெரும்வலி சேர்ந்த சிங்கமுகாசுரன் செலுத்திய கொடிய கதாயுதம் ஓர் இமைப் பொழுதில் பூதங்களின் தலைவனான அக்கினிக்கண்ணன் மார்பில்பட்டுத்தாக்கியது. அது போது ஐயகோ என அலறி அப்பூதத்தலைவன் அக்கினிக்கண்ணன் வருந்திடும்படி யாக. 162

செயிரறத் திருத்திய செம்பொற் குன்றின்மேல்
வயிரமெய்ப் படையது வந்தற் றுதலும்
அயிருறப் புனைகலன் ஆகங் கீண்டிட
உயிரினுக் கவ்வழி யுலைவு மிக்கதே.

குறைபாடுகள் அற்றிடும்படி திருத்தப்பெற்ற சென்பொன்னுன ஓர் மலைமேல் வச்சிரமாகிய படையானது வந்துதாக்கியதுபோல இஃதும் ஆய்விடலும்; அதுவேளை அக்கினிக்கண்ணனுக்கு அவன் நெருக்கமுற அணிந்துகொண்ட மார்பு கிழிபட்டிட அவனது உயிருக்கு உலைவுமிகுந்துகொண்டது. 163

தாக்கிய வேலையில் தழலின் நாட்டத்தான்
மூக்கினின் மார்பினின் முழங்கு வாயினிற்
தேக்கிய குருதிநீர் சிந்து கின்றது
மேக்குயர் கனல்மழை விரித்த தாரைபோல்.

தண்டு தாக்கியநேரத்தில் அக்கினிக்கண்ணனது மூக்காலும் மார்பாலும் முழங்கி பேசும் வாயாலும் இரத்தநீர் கெம்பிச் சீறி வடிகின்றது எதுபோல் எனில் மிக உயர்வான நிலையில் நின்று நெருப்புமழைபெய்திடும் மேகம் சிந்திடும் தாரைகள் போலும். 164

மறந்தனன் தொல்லுணர் வெனினும் வன்றிறல்
துறந்திலன் வெவ்வழல் சொரியுங் கண்ணினன்
சிறந்திடும் ஊசலில் திரிந்த தன்னுயிர்
இறந்திலன் அவற்கொரு கூற்றம் இன்மையால்.

இந்நிலையாகிவிட அக்கினிக் கண்ணன் தனது முதிய நல்லுணர்ச்சிகளை மறந்தான் என்றாலும் தனது வலிமையான சாமர்த்தியத்தை நீங்கினன் இல்லை; அத்துடன் கொடிய நெருப்பே சொரிந்திடும் கண்ணுடையவனாய் நின்றதுடன் இறப்பதற்கு ஏற்ற நிலையில் உலைவுற்று திரிந்த தனது உயிர் இறக்கப்பெறவில்லை. ஏனென்றால் அவனுக்கு ஒரு இயமன் இல்லாமையால். 165

ஆரழன் முகத்தவன் அயர்வுற் றவ்வழிச்
சோர்வொடு நிற்றலுஞ் சூரன் பின்வரும்
வீரம துடையவன் வேறோர் பாகனைத்
தேரிடை நிறுவினன் சேறல் மேயினன்.

ஆதலின் அக்கினிக்கண்ணன் அயர்வுற்று அவ்வழி சோர்வுடன் நிற்றலும் சூரபன்மன் பின்னல் தோன்றிய வீரமதுடைய சிங்கமுகாசுரன் இறந்துபோன சாரதியை நீக்கி வேறோர் சாரதியை தேரில் நிறுத்திக்கொண்டு மீண்டும் போரிடச் செல்வானயினன். 166

## வேறு

மூண்டமர் இயற்றச் சீயமுகத்தவன் வரலும் நோக்கித்
தூண்டிய வெகுளி மேலோன் சுமாலியென் றுரைக்குந் தொல்லோன்
நீண்டிடு மேருவென்ன நிவந்ததோர் அடுக்கல் தன்னைக்
கீண்டரி முகன்மேற் செல்லக் கிளர்ந்தனன் வீசி ஆர்த்தான்.

மீளவும் போரினைத் தொடங்கிப் புரிவதற்கு சிங்கமுகாசுரன் வரலும் அதனைப் பார்த்து தணிவிலாத பெருங்கோபம் முண்டுகொண்டவன் சுமாலி என்றுசொல்லப் பெறும் மிகுமுன்னைய பூதசேனதிபதி நீண்ட மேருமலையை ஒப்பதென நீண்டதொரு மலையைப் பிடுங்கி அதனை சிங்கமுகாசுரன்மேல் செல்ல மிகுவேகமுடன் வீசி ஆரவாரித்தான். 167

மற்றவன் விடுத்த குன்றை வாளரி முகத்து வீரன்
பற்றினன் ஒருதன் கையால் பந்தென மீட்டும் உந்தப்
பொற்றட மார்பில் தாக்கப் புலம்பியே சுமாலி என்பான்
செற்றமும் தானு மாகச் செயலற்று நிலத்தன் ஆனுன்.

சுமாலி என்பவன் விடுத்த மலையை ஒளியுடைய சிங்கமுகத்து வீரனுன அசுரன் தனது ஒருகையால் பந்தைப் பிடிப்பது போன்று பற்றினுன். அதனைப் பிடித்து சுமாலிமேல் திரும்பவும் எறிந்தான். அம்மலைசென்று சுமாலியினுடைய பொன் போன்ற அழகிய மார்பில் தாக்குதலும் அவன் கதறிக்கொண்டு தனது கோபமும் தானுமாக செயல் அற்று நிலத்தில் வீழ்ந்தான். 168

நிலந்தனில் சுமாலி வீழ நெஞ்சினம் திருகி அங்கைத்
தலந்தனில் கதையொன் றேந்தித் தண்டியோய் அவுணன் தேரில்
கலந்தவன் உரத்தில் செல்லப் புடைத்தலும் காமந் தன்னில்
புலந்தவன் தனக்குக் காட்டும் உணர்வெனப் பொடித்த தன்றே.

நிலத்தினில் சுமாலி என்பவன் வீழ்தலும் அதுகண்டு கொடும்கோபம் பெருகி தண்டி என்னும் பூதந்தலைவன் தனது கையினில் தண்டு ஒன்று ஏந்திச்சென்று சிங்கமுகாசுரனது தேரில் பாய்ந்து அத்தண்டால் சிங்கமுகாசுரனது மார்பில் பட அடித்தலும்; அத்தண்டானது எப்படியாயிற்றென்றுல் காம உணர்வு மிகுந்து நிற்கின்ற ஒருவனுக்கு அது கூடாதுஎன எடுத்துக் காட்டும் எந்த ஒரு அறிவுரையும் நல்லெண்ணமும் தொழிற்படாது போதல்போன்று அத்தண்டும் பொடியாகிப்போனது. 169

பொடித்தலும் வயிரத் தண்டம் பூதரின் முதல்வன் பொங்கிக்
கொடித்தடந் தேர்மேல் நின்ற கோளரி முகத்தன் தன்மேல்
இடித்தெனக் கையால் எற்ற எரியெழ நகைத்துத் தன்னேர்
அடித்தலங் கொண்டு தள்ளி அமரர்கள் வெருவ ஆர்த்தான்.

வயிரமாகும் தண்டானது பொடிபட்டுப் போதலும் பூதங்களில் முதல்வனுன தண்டி மனம்பொங்கி கொடிகட்டிய பெருத்த தேர்மேல்நின்ற சிங்கமுகாசுரன் மார்பில் தனது ஒருகையால் இடிபோல் அடித்தலும் அதுகண்டு சிங்கமுகாசுரன் நெருப்பெனச் சிரித்து தனது ஒருகாலைக்கொண்டு தண்டியைத் தூக்கி வானத்தில் எறிந்து அதைக்கண்டுநின்ற தேவர்யாவரும் அஞ்சிடும்படியாக ஆரவாரஞ் செய்தான். 170

தாளினுல் உந்தி விட்ட தண்டிசேண் எழுந்து மெல்ல
மீளுவான் அடுவ னென்னும் வெகுளியான் உயிர்ப்பு வீங்கி
யாளிசேர் வதனத் தண்ணல் ஆடக வயிரக் குன்றத்
தோளின்மேல் குப்புற் றேதன் னடிகொடு துகைக்கல் உற்றுன்.

காலினுல் செலுத்திவிட்ட தண்டி வானமீதில் எழுந்து செல்ல திரும்பி வருபவன் இந்த சிங்கமுகனை எதுவிதத்தாலும கொல்வேன் என்னும் கோபமுடையவனுய் மூச்செடுத்துக்கொண்டு சிங்கமுகாசுரனுடைய தோளின்மேல் குதித்து தனது காலால் சிங்கமுகாசுரனுடைய தோளை உளக்கி துவைக்கல் உற்றுன். 171

ஆடிய தானை மன்னன் ஆயிரத் திரட்டி தோளும்
ஓடினன் துகைத்துத் தாளும் ஓய்ந்தனன் அவற்றை நோக்கி
நாடினன் திரியா நின்றுன் நாகநீள் குடுமிக் குன்றில்
கோடுயர் பொதும்பர் தன்னிற் பாய்ந்திடும் குரங்கு போல்வான்.

போர்புரிதலில் இயல்பான வலிமைகொண்ட சேனைகட்கு அரசன் சிங்கமுகாசுரனது இரண்டாயிரம் தோள்களிலும் ஓடிஓடி தண்டி உளக்கி துவைத்தலால் தன் காலே ஓய்ந்துபோயினுன். எந்தத்தோளை இனி உளக்குவது என்று பார்த்து நாடிக்கொண்டு தண்டிதிரிகின்றுன். அதை நோக்கினுல் பெரியதொரு மலையில்உள்ள நீண்ட குடுமியில் உள்ள உயர்ந்த மரங்கள் அடர்ந்த சோலையில் பாய்ந்திடுகின்ற குரங்கைப்போன்று காணப்பட்டான். 172

குரங்குளைக் குடுமிச் சூட்டுக் கோளரி முகத்து வெய்யோன்
கரங்களிற் பாயும் அங்கட் கலந்திடு படையிற் பாயுஞ்
சிரங்களிற் பாயும் மீளச் செவிதொறும் பாயும் பூந்தண்
மரங்களிற் பாய்ந்து செல்லும் மணிச்சிறை வண்டும் போன்றான்.

பிடரிமயிருடன் பொருந்திய முடியினை உடைய சிங்கமுகாசுரன் எனும் கொடியோனுடைய கைகளில் தண்டி பாய்வான். அக்கைகளில் பிடித்துள்ள படைகளில் பாய்வான். சிங்கமுகனுடைய சிரசில் பாய்வான். அங்குள்ள செவிகளில் எல்லாம் பாய்வான். இப்படிப் பூதத்தலைவன் பாய்ந்துசெல்லுங்கால் அவன் பூக்கள் மலர்ந்திருக்கும் சோலையில் தேன் உண்ணும்படி திரிகின்ற அழகிய மணிச்சிறகுடைய வண்டையும் போன்றான். 173

செறிந்திடு கரமுந் தோளுஞ் சென்னியும் பூதன் செல்வ
தறிந்திலன் சிறியன் போலும் அரிமுகத் தவுணன் நம்மேல்
எறிந்துல வுற்றுச் சூழும் ஈகொலென் றொருதன் கையால்
சொறிந்தனன் சிறிது பின்னர்த் தண்டியைத் துடைத்து விட்டான்.

சிங்கமுகாசுரனிடம் செறிந்துள்ள கையும் தோளும் சென்னியும் மேலாக பூதத்தலைவன் தண்டி ஓடிச்செல்வதனை உணர்ந்துகொள்வதற்கு ஓர் சிறியவனோ சிங்கமுகாசுரன்? இல்லை ஆதலின் எண்ணுவான் இது என்மேனிமேல் பட்டுப் பறந்தோடித் திரிகின்ற ஒரு ஈயாகுமோ? என்று தனது ஒரு கையால் தண்டி ஓடிடும் இடத்தை சொறிந்தான். பின்னர் தண்டி அகப்பட்ட உடன் அவனை ஈயை துடைத்தெறிவது போன்று துடைத்துத் தட்டிவிட்டான். 174

ஒருதனிக் கரத்தால் தீயோன் உருட்டினன் துடைப்பத் தண்டி
பெரிதுநொந் தாற்றல் போகிப் பின்றினன் பெயர்ந்து போனான்
தெரிதரு பூதர் அஞ்சிச் சிந்தினர் செயலொன் றில்லார்
அரிதுசெய் தவமே அல்லால் ஆற்றல்பெற் றிடுவ துண்டோ.

தீயவனான சிங்கமுகாசுரன் தனது ஒருகையால் தண்டியை ஈயென நினைத்து உருட்டி துடைப்ப தண்டி எனும் பூதத்தலைவன் பெரிதும் நொந்து ஆற்றல்போய் அவ்விடம் விட்டுப் பின்னிட்டுப் போயினான். இதனைத் தெரிந்துகொண்ட பூதங்கள் பயந்து சிதறி ஓடினர். அவர்கட்கு அங்கு வேறொரு செயலுமில்லாது போயினர். ஆதலின் இதன் நிலமையை நோக்கினால் அரிதாக முயன்று செய்கின்றதவமே அல்லாது பிறிதொன்று ஆற்றல் உடையதாக உண்டோ இல்லையே? 175

பூதர்கள் இரிவு நோக்கிப் பொருதிறல் இலக்கத் தெட்டு
மேதகு வீரர் யாரும் வெய்யதேர் கடாவிச் சென்று
தீதறு சிலைகள் வாங்கிச் சீயமா முகவற் சுற்றித்
தாதவிழ் மலர்பெய் தென்னச் சரமழை பொழிதல் உற்றார்.

பூதங்கள் பின்னிட்டோடியதை நோக்கி; போரிடுதலிலே திறமைமிக்க இலக்கத்தெட்டு மேலாயவீரர்யாவரும் கொடும் வேகமுடைய தங்கள் தேரைச் செலுத்திச் சென்று தங்களது தீதற்ற வில்லை வளைத்து சிங்கமுகாசுரனைச் சுற்றிநின்று மகரந்தப்பொடிகளுடன் தேன்சொரியும் பூக்களைப் பொழிவதுபோன்று சிங்கமுகன்மேல் அம்பாகிய மழையைச் சொரிந்தனர். 176

பொழிந்திடு பகழி யெல்லாம் புகுந்திடு சுவடின் றாகி
அழிந்ததும் இன்றி முன்போல் அவன்புடை வீழ நோக்கி
ஒழிந்ததெம் மாற்ற லென்னா உட்கினர் ஒருதன் தேரின்
இழிந்தனன் அவுணர் கோமான் இடிபடத் தெழித்துச் சென்றான்.

இலக்கத்தெட்டு வீரரும் அம்பினைப் பொழிந்திடுகின்ற காலையில் அந்த அம்புகள் எல்லாம் சிங்கமுகாசுரனை அடைந்தும் தாம் புகுந்துகொண்டமைக்கு ஏதும் ஓர் அடையாளமும் செய்யமுடியாது அழிந்ததும் அன்றி முன்விடுத்த அந்த அம்பு

கள் போன்று சிங்கமுகாசுரன் பக்கராக வீழ்தலும் அதனை நோக்கிய வீரர் எமது வலிமையாவும் அழிந்தது என்று உட்கினார்கள். அதுவேளை சிங்கமுகாசுரன் தனது ஒரு தேரினின்றும் கீழே குதித்தான். உரக்கச் சத்தமிட்டவாறு சென்றான். 177

எடுத்தனன் சிலவர் தேரை எறிந்தனன் ஒன்றோ டொன்றின்
அடித்தனன் சிலவர் தேரை அள்ளினன் அங்கை தன்னால்
ஒடித்தனன் சிலவர் தேரை உதைத்தனன் சிலவர் தேரைப்
பொடித்தனன் சிலவர் தேரைப் புதைத்தனன் சிலவர் தேரை.

சென்ற சிங்கமுகாசூரன் இலக்கம்வீரர்களைக்கிட்டி சிலருடைய தேரை கையால் எடுத்து தூர எறிந்தான் சிலருடைய தேரைதூக்கி ஒன்றோடொன்றை அடித்தான்; சிலருடைய தேரை கையால் தூக்கி முறித்தெறிந்தான். சிலருடைய தேரைக் காலால் உதைத்தான். சிலருடைய தேரைப் பொடியாக்கினான். சிலவருடைய தேரை உழக்கி பூமியின் கீழ்ப் புதைத்தான். 178

இத்திற மடங்கல் வீரன் அடுதலும் இலக்கத் தெண்மர்
தத்தம துயிரே தாங்கித் தனுவொடு படைகள் மானம்
மெய்த்திறல் சிந்திச் சாய்ந்தார் மேலவன் தேர்மேற் புக்கான்
அத்தலை நின்ற வீர வாகுமற் றதனைக் கண்டான்.

இத்திறமாக சிங்கமுகாசுரன் அழிவு செய்தலும் அதுவேளை இலக்கத்து எட்டுப்பேரும் தங்கள் தங்கள் உயிர் ஒன்றையும் தாங்கிக்கொண்டு தங்களது வில்லோடு படைகளையும்; மானத்துடன் உண்மையான வீரத்தையும் நீக்கி பின்னிட்டோடினார்கள். சிங்கமுகாசூரன் தன் தேர்மேல் திரும்பச் சென்று புகுந்துகொண்டான் இவையாவையும் அவ்விடம் நின்ற வீரவாகுதேவர் கண்டுகொண்டார். 179

ஆளரி அனைய வீரன் அதுகண்டு பூதர் தம்முட்
கோளரி முகத்து வெய்யோன் கொன்றதோர் பாதி உண்டால்
தாளுடை வில்லி னாருஞ் சமரிடத் தழிந்தார் இந்த
நாளினின் முடியும் போலும் நம்பெரும் படையு மென்றான்.

ஆண்டகைமைகொண்ட சிங்கத்தை ஒத்த வீரவாகுதேவர் அது கண்டு; இந்தப் பூதப்படைகளிலே சிங்கமுகாசூரனை கொடியவன் கொன்றவை சரிபாதியாகும். அது மட்டின்றி வலியுடைய வில்வன்மை உடைய இலக்கரும் போரிடத்துத் தோல்வியுற்று ஓடிப்போயினார்கள். இந்த நாளில் எமது பெரும்படையும் அழிந்திடும்போலும் என்றார். 180

அடல்பெறு புயத்து வள்ளல் ஆடக வரைபோ லுள்ள
கொடுமர மான தொன்றைக் கோட்டினன் சினமேற் கொண்டான்
விடமுறு தறுகட் கேது விரைந்தொரு பாங்கர் புக்கு
நடுவெலாங் கவரத் தோன்று நாகிளங் கதிரே போல.

வலிமை பெற்ற தோளுடைய வீரவாகுதேவர் பொன்மலைபோன்று உள்ள வில்லை வளைத்தார். கோபமேற்கொண்டார். அத்தன்மை எது போலாயிற்றென்றால் நஞ்சுடைய கொடிய கேதுவானவன் விரைவாக ஒருபக்கராகச்சென்று சூரியதேவனுடைய நடுப்பக்கத்தை மறைப்ப அந்நேரம் அச்சூரியன் எஞ்சிய பாகம் வட்டவடிவாகத் தோன்றிட அமைந்த கங்கண சூரியன் விரிக்கும் இளங்கதிர் போன்று அந்த வளைவுற்ற வில் அமைந்தது. 181

வாங்கிய சிலையிற் பூட்டி வடிக்கணை அகந்த கோடி
தூங்கலின் மழைகான் றென்ன உலப்புறான் சொரிந்து நிற்ப
ஆங்கெதிர் அடர்த்துப் போர்செய் அவுணர்தந் தலைகள் பாறத்
தாங்கிய படைகள் சிந்தித் தரைமிசைத் துணிந்து வீழ்ந்தார்.

வீரவாகுதேவர் வளைத்த தனது வில்லில் பூட்டி வடிக்கணைகள் அநந்த கோடியாயவற்றை விடாது மழை பெய்து நின்றால்போல் ஓய்வின்றி சொரிந்து நிற்ப அங்கு வீரவாகுதேவரை எதிர்த்து போரிட வந்த அசுரர்கள் தலை அறுந்து சரிந்திட; கைகளில் அசுரர் பிடித்த படைகளும் அழிந்து துணிபட்டு வீழ்ந்தார்கள். 182

பரித்தொகை முழுதும் பட்ட பாழியந் தேர்கள் பட்ட
ஒருத்தலும் பிடியும் பட்ட உலப்பிலா அவுணர் பட்டார்
பெருத்தன பிணத்தின் குன்றம் பிறங்கின பேய்கள் மொய்த்த
திரைத்தெழு சோரி நீந்தத் தெண்டிரை மடுத்த தம்மா.

குதிரைப்படைகள் முழுதும் அழிந்தன. பெரும் உருளைகளை உடைய தேர்கள் அழிந்தன. யானைப்படையாக வந்த ஆணும் பெண்ணுமான யானைகள் அழிந்தன. அளவிறந்த அசுரர் அழிந்தனர். இதனாலே போர்க்களமெல்லாம் பிணங்களின் மலையாக குவிபட்டன. அவைமேல் ஓடித்திரிந்த பேய்கள் மொய்த்தன அங்கு இறந்தார் களது இரத்தவெள்ளம் திரைகொண்டு தெள்ளிய சமுத்திரத்தோடியது. 184

தேரெனப் பட்ட வீரர் திறமெனப் பட்ட மாவின்
பேரெனப் பட்ட யானைப் பெருக்கெனப் பட்ட தம்முட்
பேரிடைப் படாத எல்லாம் பொருதிரைக் குருதி வாரி
வீரனுக் குதவி யாக வேலையுள் உய்த்த தன்றே.

அசுரர்களது தேரெனப்பட்டவையும்; வீரர் கூட்டமெனப் பட்டவையும்; பேருடைய குதிரைகள் எனப்பட்டவையும். யானையின் பெருங் கூட்டம் எனப்பட்டவையும்; ஆயவற்றுள் அப்போர்க்களத்தில் இறவாமல் தப்பிப்போக நிற்பாரை எல்லாம் வாரிக்கொண்டு இறந்தாரிடமிருந்து பெருகிய இரத்த வெள்ளமாகும் திரையுடைய கடல் வீரவாகு தேவருக்கு உதவிபுரிவதுபோன்று தெள்ளிய சமுத்திரத்து அவைகளைச் சேர்த்தது. 183

பேரியின் ஒலியும் தீய அவுணர்கள் பிடித்த வில்லின்
நாரியின் ஒலியும் சூழும் நாற்படை ஒலியும் மாண்ட
காரியின் ஒலியும் மோட்டுக் கணங்களின் ஒலியுஞ் செந்நீர்
வாரியின் ஒலியு மாகி அடுகளம் மலிந்த அன்றே.

பேரிகைகளது ஓசையும் தீய அசுரர்கள் கையில் பிடித்த வில்லின் ஓசையும் சூழ்ந்து வரும் தேர் குதிரை யானை காலாள் என்னும் நான்கு விதமான படைகளின் ஓசையும், மாட்சிமையுடைய வைரவர்களின் ஓசையும், பெரு வயறுகொண்ட பூதங்கள் பேய்களின் எக்களிப்போசையும், சிவந்த இரத்தாறு ஓடிடும் ஓசையுமாகி அப்போர்க்களம் நிறைவுற்றது. 185

மலைகளை அறுக்கும் வேலை வாள்களை அறுக்குஞ் செங்கைச்
சிலைகளை அறுக்கும் வெய்யோர் திண்டிறல் கொண்ட தோளின்
நிலைகளை அறுக்கும் மார்பின் நிரைகளை அறுக்குங் கோடி
தலைகளை அறுக்கும் அம்மா இளையவன் சரம தொன்றே.

எம்பிரானது இளையோரான வீரவாகுதேவரின் ஒரு அம்பு சென்று மலைகளை அறுக்கும். அசுரர்கையில் பிடித்தவேலை வாள்களை அறுக்கும். அசுரர் தங்கள் செங்கையில் பிடித்த விற்களை அறுக்கும். கொடிய அசுரர்கொண்ட பல திறமான தோள்களின் நிலைகளை அறுக்கும். அசுரரது மார்பின் வரிசைகளை அறுக்கும். கோடிக்கணக்கான அசுரர் தலைகளை அறுக்கும்.

காழுறும் அவுணர் சென்னி கரதல நெடுந்தோள் மார்பம்
வாழிய முருகன் தூதன் வாளிகள் வெளவி ஏகி
ஏழுள கடலும் நீங்கி எண்டிசைக் கிரிகள் தாவி
ஆழியங் கிரிபோழ்ந் தப்பால் அண்டமும் பிளந்து செல்லும்.

எஞ்ஞான்றும் வாழ்கின்ற முருகனுடைய தூதன் வீரவாகுதேவர் விடுகின்ற அம்புகள் கறுவியமுற்ற அசுரருடைய தலைகளை கைகளை நெடியதோளை மார்பை அறுத்துத் தூக்கிச் சென்று ஏழாகிய கடல்களையும் தாண்டி எட்டுத்திக்கு மலைகளையும் தாண்டிச் சென்று சக்கரவாள மலையையும் பிளந்து அப்பாலும் உள்ள அண்டங்களையும் பிளந்து செல்கின்றன. 187

கரண்டம தான செந்நீர் ஆற்றிடைக் கவிழ்ந்து மூழ்கித்
திரண்டவூன் வௌவி மீண்டு சிறகரை உதறு கின்ற
முரண்டகு வீரர் சென்னி மூளைபுக் களைந்து வாரிக்
குரண்டமீ தென்ன லான கருநிறக் கொடிக ளெல்லாம்.

நாரைகள் யாவும் சிவந்த இரத்தாற்றிடத்து கவிழ்ந்து மூழ்கி அங்கு திரண்ட ஊனினை எல்லாம் வாரி மீண்டு சென்று கரையில் தங்கி சிறகுகளை உதறி உலர்த்து கின்றன. சில கருநிறமுடைய காகங்கள் எல்லாம் வலிமை கொண்ட வீரருடைய தலைகளின் மூளைகளில் சென்று புகுந்து அவற்றில் அளைந்து அம்மூளைகளை வாரிக் கொண்டு வெளி வரும்போது வெண்ணிற மூளையால் தோய்வுற்று அக்காகம் யாவும் இவைகள் கொக்கென்று சொல்லும்படியாயின. 188

இவ்வகை அவுணர் தானை இறந்திட வீர வாகு
அவ்வயின் நின்று சென்றுங் கடுதலும் அதனைக் கண்டார்
தெவ்வரை முருக்கும் வைவேற் சீயமா முகத்தன் மைந்தர்
ஐவரை வெல்லும் ஆற்றல் ஐம்பதிற் றிருவர் என்பார்.

இவ்வகையாக அசுரர்சேனை இறந்திடும்படி வீரவாகு அவ்விடம் நின்று பல திக்கிலும் சென்று கொலை புரிதலும் அதனைக் கண்டனர் பகைவரை அழித்திடும் கூரிய வேலுடைய சிங்கமுகாசூரன் மைந்தர்கள். அவர்கள் பஞ்சராக்கதர் என்னும் வீரரை வெல்லும் அத்தகைய திறல் உடையோர். நூறுமைந்தர்கள் என்னும் தொகையுடையோர். நூறுபேர் அவர் என்று பிரபல்லியமாக பலரும் பேசும் சீருடையோர் என்க. 189

சினத்தினர் இதழைப் பல்லால் தின்றனர் நம்முன் வெம்போர்
வினைத்தொழில் இயற்று வானை வெய்தென அடுது மென்னு
இனத்தொடு தேர் கடாவி ஏகியே வீரன் தன்மேல்
தனித்தனி வார்விற் கோட்டிச் சரமழை சிதற லுற்றார்.

கோபத்தினால் மிகுந்து தமது இதழைப் பல்லால் கடித்துத் தின்று நம்முன் கொடிய போரின் செயல் புரிவானை விரைவாக நாம் கொன்றிடுவோம் என்று நூறு பேரும் ஒருங்காக தேரினைச் செலுத்தி வீரவாகுதேவர் முன் சென்று தனித்தனி தமது வில்லை வளைத்து அவர்மேல் அம்புமழையைச் சொரிந்தார்கள். 190

நூற்றுவர் ஒருங்கு நேர்ந்து நோன்றலைச் சிலைகள் வாங்கி
மேற்றிகழ் முகில்தீ்ான் றென்ன வீசிய விசிகந் தன்னை
ஆற்றல்சேர் வீரன் காணு அயிற்கணை அநந்த கோடி
காற்றெனத் துரந்து மாற்றிக் கடவுளர் புகழ ஆர்த்தான்.

நூறு பேரும் ஒருங்கே திரண்டு சென்று வலிமை கொண்ட நுனியுடையவில்லை வளைத்து மேல் நின்ற முகில்கள் மழைபெய்வது போன்று செலுத்திவிட்ட அம்புகளை ஆற்றலுடைய வீரவாகுதேவர் கண்டு தாமும் வேல்போலும் கூரிய அம்புகள் அநந்த கோடிகளை காற்று செல்வதுபோன்று வேகமுடன் செலுத்தி அந்த அம்புகளை அழித்து மாற்றி: தேவர்கள் யாவரும் புகழ்ந்திடும்படி ஆரவாரித்தனர். 191

தொலைவுறும் அவுணன் மைந்தர் துண்ணெனக் கனன்று பின்னுங்
கொலையுடை நெடுங்கூர் வாளி கோடிகோ டிகள்நின் றுய்ப்ப
வலியுடை வீர வாகு மற்றவை மாற்றி அன்னோர்
சிலையொடு தேர்கள் தம்மைச் செஞ்சரந் தூண்டி வீழ்த்தான்.

தொலைவுறும் சிங்கமுகனது பிள்ளைகள் நூறுபேரும் அதுகண்டவுடனே மிக கோப முற்று பின்னரும் கொலை செய்ய வல்ல கூரிய அம்புகள் கோடி கோடியானவற்றை அங்கு நின்றவாறே விடுத்து நிற்றலும், அவைகள் வரவர வலியுடைய வீரவாகு தேவர் அவைகளை அழித்து நீக்கி அவர்களது வில்லோடு தேர்கள் யாவற்றையும் சிவந்த ஒளியுடைய அம்புகளைச் செலுத்தி அறுத்துநீக்கினர். 192

தேரொடு சிலைகள் மாயச் சீயமா முகத்தன் மைந்தர்
வீரனை எதிர்ந்து வில்லால் வென்றிடல் அரிது போலுங்
கூருடை நுதிவாட் போரிற் கொல்லுதும் இவனை என்னாப்
பாரிடை வந்தோர் சூழ்ச்சி வகையினாற் பகர்த லுற்றார்.

தேருடன் அம்புகள் யாவும் அழிவுறலும் சிங்கமுகாசுரனுடைய பிள்ளைகள் யாவரும் நினைத்தனர் இந்த வீரவாகுதேவனை எதிர்த்து வில்லினால் வெல்வது அரிது போலும் ஆகையால் நாம் யாபேரும் கூரிய நுனியுடைய வாளால் செய்கின்ற போரினால் இவனைக் கொல்வோம் என்று பூமியில் நின்று கொண்டு ஓர் சூழ்ச்சியின் வகை நினைந்து இவற்றை சொல்லலுற்றார்கள். 193

காட்புடைச் சிலையின் விஞ்சை கற்றதே அன்றி எம்போல்
வாட்படை பயின்றி லாய்கொல் வல்லையேல் அப்போர் செய்யச்
சேட்படை யன்றி எம்முன் சேர்தியால் வீர என்னாத்
தோட்புடை கொட்டி ஆர்த்தார் கூற்றனுந் துளக்கம் எய்த.

வீரனாய வீரவாகுதேவனே! நீ வலியுடைய வில்வித்தையைக் கற்றதன்றி எம்மைப் போல் வாட்போர் புரிந்திட பயின்றுகொள்ளவில்லைப்போலும். அப்படி வாட்போர் செய்ய முடியுமானால் தூரத்தே நிற்பதை விடுத்து எம்முன்பு போரிடவருதியால் என்று தமது தோள்களைத்தட்டி ஆர்த்தனர் நூறுபேரும் இயமனுமே அது கண்டு திகில் அடைந்திட. 194

வன்றிறல் அவுணன் மைந்தர் உரையினை வள்ளல் கேளா
நன்றிது புகன்றீர் என்னா நகைசெய்து நாதன் தந்த
மின்றிகழ் சுடர்வாள் கொண்டு விரைந்துகீழ்த் தலத்திற் பாய்ந்து
சென்றனன் அதனை நோக்கித் தேவரும் இடுக்கண் செய்தார்.

வன்மையான திறல் கொண்ட சிங்கமுகாசுரன் மைந்தர்கள் நூறுபேரது வார்த்தைகளையும் அருள்வள்ளல் வீரவாகுதேவர் கேட்டு நீங்கள் நல்லது ஒன்றை இங்கு கூறினீர் என்று சிரித்துவிட்டு; சிவபிரான் தந்தருளிய மின்னல்காலும் சுடர் வாளை எடுத்துக்கொண்டு விரைவாக தேரினின்றும் கிழே பூமியில் குதித்து அவர் முன்பு வாளுடன் சென்றார். அந்நிலைகண்ட தேவர் யாவரும் என்ன நேருமோ என தம்மில் ஏக்கமுற்றனர். 195

வார்ந்திடு கழற்கால் வீரன் வாள்கொடு வரலும் நோக்கித்
தீர்ந்தனன் ஆவி இன்னே செகுக்கலாம் இவனை யென்னாக்
கூர்ந்திடு நாந்த கங்கள் தனித்தனி கொண்டு சென்று
நேர்ந்தனர் வளைந்து கொண்டார் மதியைச்சூழ் நிசியை ஒப்பார்.

வீரக்கழல் ஒலிக்கின்ற திருப்பாதமுடைய வீரவாகுதேவர் வாள் எடுத்துக்கொண்டு வரலும் அதனைக் கண்டு இவன் இனி உயிர் நீங்கினான் இப்போதே இவனைக் கொல்லலாம் என்று கூர்மை பொருந்திய தங்கள் தங்கள் வாளை தனித்தனி எடுத்துக் கொண்டு சென்று வீரவாகுதேவரை நூறு பேரும் எதிர்த்து சுற்றிவளைத்துக் கொண்டார்கள். இவர்களது செய்கையால் சந்திரனை சூழ்கின்ற இருள்போன்றிருந்தனர். 196

வளைந்தனர் வீரன் தோளின் மார்பினிற் கரத்தின் மொய்ம்பிற்
களந்தனிற் சென்னி தன்னிற் கருதினர் இலக்கம் நாடிக்
கிளர்ந்திடு நாந்த கத்தாற் கிட்டினர் எறித லோடும்
உளந்தளர் வில்லோன் மேனிக் குற்றில சிறிதும் ஊறு.

சிங்கமுகாசூரனது மைந்தர்கள் நூறுபேரும் வீரவாகுதேவரை சூழவளைத்துக் கொண்டு தாம் எடுத்திட்ட வாளினால் அவருடைய தோளில் மார்பில் கையில் கழுத்தில் தலையில் குறியாக நாடி கிட்டி வீசுதலோடும் அப்போதும் கூட உளம் தளர்விலாத வீரவாகுதேவர்க்கு அவர்களது செய்கையால் ஓர் சிறிதளவு காயமேனும் நிகழவில்லை. 197

ஊறிலாத் தன்மை நோக்கி உவனையாம் பற்றி மெல்லக்
கோறலே கரும மென்னக் குழுவொடும் அவனைப் புல்லச்
சீறினன் தன்வா ளோச்சிச் சிறிதுமெய் தெரியா வண்ணம்
நூறினன் கொல்லோ என்ன நூற்றுவர் தமையும் அட்டான்.

தங்களது வாளால் குறியாக வீசி வெட்டியபோதும் வீரவாகுதேவர்க்கு ஊறுபாடிலாத தன்மை கண்டு சரி உவனை நாம் மெல்லப்பிடித்துக் கொல்வதுதான் கருமமாகும் என்று நூறு அசுரமைந்தரும் கூட்டாக வந்து வீரவாகுதேவரை பற்றிப் பிடித்திட; அதுவேளை வீரவாகுதேவர் சீறினர் தனது வாளை வீசி வீசி மளமளவென தம்மைப் பற்றுவாரது மேனி சிறிதுமே தெரியாது போய்விட இப்படியும் வெட்டினரோ என்றிடும்படி நூறு பேரையும் கொன்ருர். 198

அட்டிடு கின்ற வீரன் அமரர்கள் வழுத்த மீண்டு
தட்டுடை நெடுந்தேர் புக்கான் தன்மனக் கினிய மைந்தர்
பட்டிடு தன்மை நோக்கிப் பாடுறும் அவுணர் கோமான்
மட்டறு துயரின் மூழ்கி மானத்தால் இரக்க முற்ருன்.

இவர்களைக் கொன்ற வீரவாகுதேவர்; தேவர்கள் துதித்திட மீண்டு பெரும் தட்டுடைய தனது தேரில் புகுந்துகொண்டார்; அதுவேளை தனது மனதிற்கு இனிய பிள்ளைகள் நூறுபேரும் கொலையுண்டமை கண்டு வேதனையுறும் சிங்கமுகாசுரன் அளவற்ற துயரத்தில் மூழ்கி மானம் சுடுதலாலே சகித்திட முடியாது கலங்கி இரக்கமுற்ருன். 199

கோளுண்ட அரிமான் துப்பில் குமரரை ஒருவன் கொண்ட
வாளுண்ட தென்று நெஞ்சம் வசையுண்டு வருந்தல் மன்னே
தாளுண்டு பரித்து நிற்கத் தலைகளுண் டெண்ணி லாத
தோளுண்டு கரங்க ளுண்டு சுமக்கலாம் போலு மன்றே.

இவ்வண்ணம் வேதனையுற்ற சிங்கமுகாசுரன் சொல்வான் கறுவியமுடைய சிங்கத்தை ஒத்த வலிமையுடைய என் மைந்தரை ஒருவனுகும் வீரவாகு கொன்று வீழ்த்திய வாள் ஒன்று இருக்கின்றதே; இனி சிங்கமுகாசுரனின் புகழ்போச்சே என வருகின்ற வசை உண்டு என்று என் நெஞ்சே நீ வருத்தமுருதே! எனெனில் எனது ஆயிரம் தலையையும் இரண்டாயிரம் கையையும் சேர்த்து சுமந்து நிற்கும் எனது இரண்டு கால்கள் உண்டு இந்த வசையைச் சுமக்கும். இத்துடன் இதை பங்கிட்டு இன்னும் சுமந்திட பல தலைகள் உண்டு கைகள் உண்டு தோள்கள் உண்டு ஆகையால் இந்த வசையை யாம் சுமக்கலாம் போலும். 200

என்னுடை மைந்தர் தம்மை யாவருங் காண ஈண்டென்
முன்னுற ஒருவ னேதான் முடித்துயிர் கொண்டு நிற்பான்
பின்னினி இதற்கு மேலும் பெற்றிடும் வசையொன் றுண்டோ
ஒன்னலர் தங்கட் கெல்லாம் ஒருநகை விளைத்தேன் அன்றே.

என்னுடைய பிள்ளைகளை யாவரும் காண இவ்விடம் எனது முன்னுக ஒரு வீரனு! தனியே கொன்றும் பின்னர் தன் உயிரையும் கொண்டு நிற்பது இதற்குப் பின்னரும் யாம் பெற்றிடும் வசை ஒன்றும் உண்டோ. எனது பகைவர்க்கு எல்லாம் நான் ஒரு சிரிப்பிற்கு இடம்வைத்தேன் அல்லவோ. 201

பொன்றினர் தம்மை உன்னிப் பொருமியே புன்கண் எய்தி
நின்றிடின் ஆவ துண்டோ நேரலர் தொகுதி எல்லாங்
கொன்றொரு கணத்தின் முன்னர்க் குழுவொடும் வாரி வாரித்
தின்றுதேக் கிட்டால் அன்றித் தீருமோ எனது சீற்றம்.

இறந்தாரை நான் நினைந்து ஏங்கி துன்பப்பட்டு இங்குநின்ருல்; அதனல் பயனுவது ஏதும் உண்டோ? இல்லை. எம்பகைவரின் கூட்டத்தை எல்லாம் ஒரு கணத்தின்முன் கொன்று கூட்டாக அவர்களை வாரித் தின்று தேக்கினல் அன்றி எனது கோபம் தீருமோ. 202

மேவல ராகும் இன்னோர் குழுவினை விரைவின் அட்டுத்
தாவறு சுடர்வேல் கொண்ட பாலகன் தனையும் வென்று
தேவர்கள் எனப்பேர் பெற்றோர் யாரையும் இன்றே செற்று
மூவுல கினையும் யானே முடிக்குவன் விரைவின் என்றான்.

பகைவராகின்ற இவர்களது கூட்டம் முழுவதையும் விரைவில் யான் அழித்து குற்றமற்றசுடர் ஒளியுடைய வேலினைக் கைக் கொண்ட அப்பாலகனையும் வென்று தேவர்கள் என்ற பேருடைய யாவரையும் இன்றே மாய்த்து மூன்று உலகினையும் யான் தனியே முடிப்பேன் என்றான் சிங்கமுகாசுரன். 203

என்னஇத் திறங்கள் பன்னி எரியுமெய் விதிர்ப்பச் சீறித்
தன்னுறு தடந்தேர் உய்க்குஞ் சாரதி தன்னை நோக்கிக்
கொன்னுனை அயில்வாட் செங்கைக் குமரர்தங் குழுவைக் கொன்றான்
முன்னுறக் கடவு கென்ன நன்றிது முதல்வ என்றான்.

என்று இன்னவாறு இச்செய்திகளைச் சொல்லி அக்கினியும் தனது உடல்நடுங் கிடும்படி சிங்கமுகன் சீறிக்கோபமுற்று; தனக்குற்ற பெருந்தேரினைச் செலுத்தும் சாரதியினை நோக்கி கொலைபுரியும் கூரிய வேலையும் வாளையும் சிவந்த கைக்கொண்டு நின்ற எனது மைந்தர்களின் கூட்டத்தை கொன்றான் வீரவாகு முன்பாக எமது தேரை வீடுவாய் என்ன; நன்று இது எமது தலைவனே நான் செய்வேன் எனச் சாரதி கூறினான். 204

பாகுநூல் உணர்ந்து வல்லோன் பரியினை எழுப்பிப் பண்ணி
மாகநீ டடந்தேர் தூண்ட அரிமுகன் வருத லோடும்
ஏகநா யகனும் மூர்த்தி ஏவலான் அதனை நோக்கி
ஓகையால் தனது மான்தேர் அதனொடும் ஒல்லை நேர்ந்தான்.

தேர்ப்பாகனுக்குரிய வித்தைகளை எடுத்தியம்பிடும் நூலை நன்குணர்ந்த சாரதி குதிரைகளை எழும்பச்செய்து வானில் நீண்ட பெரும்தேரினை செலுத்தி அத்தேர்மேல் சிங்கமுகன் வருதலோடும் ஏகநாயகனுகும் ஆறுமுகப்பெருமான் ஏவலாளரான வீர வாகுதேவர் அதுகண்டு தாமும் மனதில் பெருமகிழ்வுகொண்டு தனது குதிரை பூட் டிய தேருடன் விரைவாக சிங்கமுகனுடன் போரிட முன்வந்தார். 205

நேர்ந்திடு கின்ற காலை நிரைபடு விழிக டோறுஞ்
சார்ந்தழல் சிதற நோக்கித் தளைபடு தறுகட் சீயம்
ஆர்ந்திடு பகைகண் டென்ன ஆற்றவுஞ் சினமீக் கொண்டு
சேர்ந்திடு வானை நோக்கிச் சிங்கமா முகத்தன் சொல்வான்.

வீரவாகுதேவர் நேரிட்டு முன்னாக வந்தகாலையில் சிங்கமுகாசுரன் தனது ஆயி ரம் தலைகளிலுமுள்ள நிரையான கண்கள்தோறும் நெருப்புச் சிந்திச் சிதறும்படி நோக்கி, கூட்டில் அடைபட்ட கொடிய சிங்கம் தமது முன்பு தனக்கு அந்நிலையாக் கிய தன் பகையைக் கண்டால் எப்படியாகுமோ அதுபோல மிகவும் கோபம் மேலி டப்பெற்று அங்கு முன்வந்த வீரவாகுதேவரை நோக்கி இதனைச் சொல்கின்றான். 206

ஆதிதந் தருளும் மைந்தன் அறுமுகன் அவன்நீ அல்லை
ஏதிலா இலக்க ரென்றே இசைத்திடு வோர்கள் தம்முள்
நாதனோ எண்மர் தம்முள் ஒருவனோ நம்மூர் வந்த
தூதனோ இனையர் தம்முள் யாரைநீ சொல்லு கென்றான்.

ஆதியாகும் சிவபெருமான் தந்தருளும் ஆறுமுகமுடையவன் அவன் நீயல்ல. குற்ற மிலாத இலக்கம் வீரர்கள் என சொல்லப்படுவோர்களில் நீ ஒரு தலைவனோ? அல்லது எட்டுவீரர் எனப் பேசப்படுவாரில் ஒருவனோ? அல்லது நம் ஊரில் முன்பு தூதாக வந்த தூதனோ? இவர்களுள் நீயார் சொல்! எனக் கேட்டான் சிங்கமுகன். 207

அல்லுறழ் கண்டன் தந்த அறுமுகற் கடிய ஞனேன்
தொல்லேநும் மூதூர் அட்டுத் தூதனு மாகி மீண்டேன்
எல்லேயின் நுமரை யெல்லாம் ஈண்டொரு கணத்தின் அட்டு
வெல்லுவ தமைந்து நின்றேன் வீரவா கென்பேர் என்ருன்.

அதுகேட்ட வீரவாகுதேவர்; நான் நஞ்சு சிறந்திருக்கும் கண்டமுடைய சிவ பிரான் உலகுய்யத்தந்தருளிய ஆறுமுகமுடைய ஐயர் பெருமானுக்கு அடியனுவேன். முன்பு காலமிருந்தே நிலேபெற்றுள்ள உமது ஊரை அழித்துத் தூதனுமாகி வந்து திரும்பிப் போயவனுமானேன், இப்போது இங்குள்ள உமது அசுரகுலம் எல்லாவற் றையும் அழித்து ஒரு கணப்பொழுதில் வெல்லும்படி அமைந்து நின்றேன் வீரவாகு என்னது பேர் என்ருர். 208

வேறு

திண்டிறற் சேவகன் செப்பும் இம்மொழி
விண்டிடு செவிதொறும் விடம்பெய் தாலெனக்
கொண்டனன் வெகுண்டொரு கூற்றங் கூறினுன்
உண்டிடும் அசனிகள் உமிழ்ந்திட் டாலென.

திண்மையும் திறலும் உடைய எம்பிரான் ஏவலாளரான வீரவாகுதேவர் சொல் லிய இந்த வார்த்தைகளே சிங்கமுகாசுரன் தன்னுடைய பெரும் செவிகள்தோறும் நஞ் சினேவார்த்ததுபோன்று ஏற்றுக்கொண்டு வெகுண்டு ஒருவார்த்தை பதில் கூறினுன்; எப் படி இருப்பதென்ருல் உயிர்களே உண்ணும் இடிகள் ஒருங்கு கக்கியது போன்றது: 209

உறுபடை உழப்பினே உணர்கு ருததோர்
சிறுவரை வெல்வதுந் திருந்து மாநகர்
உறைதரும் எளியரை உடன்று கொல்வதும்
அறிகுறி ஈதுமோர் ஆண்மைப் பாலதோ.

ஓகோ! நல்ல வலியுற்ற படைகளே பிரயோகித்தலேச் செவ்வனே அறிந்திடாத சிறுவர்களே நீ வெற்றிகொள்வதும்; திருத்தமுற்ற பெரிய நகரத்து வாழ்கின்ற எளிய வலியிலாத சனங்களே ஒருங்குசேரக் கொல்வதும் நீ அறிந்துள்ளாய். அடே உனக்கு இது ஒரு ஆண்மை வீரம் என்பதற்கு சான்ருமோ? 210

நூற்றியற் குமரரை நொய்திற் கொன்றநின்
ஆற்றலேக் கெடுக்குவன் ஆவி வாங்கியே
கூற்றுவற் குண்டியாக் கொடுப்பன் மெய்யினேப்
பாற்றினுக் குதவுவன் பாலன் காணவே.

எனது நூறுபேர் எனப்பலரும் சிறந்து பேசப்பட்ட இயல்புடைய குமரரை விரை வாகக் கொன்ற நினது ஆற்றலே நான் கெடுப்பேன். உனது உயிரை வாங்கி இய மனுக்கு இரையாகக் கொடுப்பேன். உனது உடம்பினே பருந்துகள் பசிதீர உண்ணக் கொடுப்பேன். இதையெல்லாம் குழந்தை வடிவாகும் பாலன் காணும்படி செய் வேன். 211

உன்னுடை வன்மையும் உனது நாயகன்
தன்னுடை வன்மையுந் தானே வன்மையும்
பின்னுடை அமரர்கள் பெற்ற வன்மையும்
என்னுடை வன்மையால் இறையின் நீக்குவேன்.

உன்னுடைய வலிமையையும் உனது நாயகரான முருகனுடைய வலிமையையும் உமது பூத சேனேயின் வலிமையையும் உங்களே முன் ஏவி பின்னின்று பார்க்கின்ற தேவர்களது வலிமையையும் என்னுடைய வலிமையால் ஓர் இமைப்பொழுதில் நீக் குவேன்; 212

வானவர் சிறையினை மாற்ற உன்னியே
தானையொ டேகியென் றன்முன் எய்தினீர்
ஊனுயிர் வாழ்க்கையும் ஒல்லை தீர்திரால்
ஆனதொ ரூதியம் அழகி தாற்றவே.

தேவர்களது சிறையினை நீக்கிட நீர் நினைந்து சேனையோடு புறப்பட்டு என்முன் வந்து சேர்ந்துகொண்டீர். இனி உமது ஊன்பொருந்திய உடலுடன் கூடிவாழும் உயிர் வாழ்வையும் தீரப்போகிறீர். ஆகவே இந்த ஒரு பேறுபேறு உமக்கு மிகு நல்ல அழகாக நேர்ந்துகொண்டது. 213

மூண்டதொல் விதியினுன் முடிந்த மன்னுயிர்
ஈண்டுதம் மியாக்கையுள் மேவும் என்னினும்
ஈண்டெனை மாறுகொண் டிகல்செய் கின்றவர்
மாண்டிடும் ஆறலால் மற்றும் உய்வரோ.

முன்னர் மூண்டுகொண்ட பழைய விதியின் பிரகாரம் இறந்துபோனதொருஉயர்ந்த உயிர் திரும்பவும் அதன் உடலில் சேர்ந்து உயிர்பெற்றெழும் என்று கூடச்சொன்னாலும் இவ்விடம் என்னுடன் மாறுகொண்டு போர்புரிகின்றவர் நிச்சயமாக இறப்பதற்குரிய வழியன்றி தம்பிப்பிழைக்கவும் முடியுமோ? 214

என்பதை அரிமுகன் இயம்ப எம்பிரான்
நன்பெருந் தூதுவன் நகைசெய் தங்கையின்
மன்பெருஞ் சிலையினை வணங்கி வாளியோர்
ஒன்பதோ டொன்பதை உரத்தில் தூண்டினுன்.

என்பதான இந்த அகங்காரத்துடன்கூடிய கொடியவார்த்தையை சிங்கமுகாசுரன் எடுத்துக் கூற அதுகேட்ட எம்பிரான் ஆறுமுகப்பிரானின் நல்லதொருபெரும் தூதுவர் வீரவாகுதேவர்கேட்டு சிரித்தருளி தனது கையில் உடைய பெருமைமிக்க வில்லை வளைத்து பதினெட்டு அம்பினைத் தொடுத்து சிங்கமுகன்மார்பில் தைத்திடச் செலுத்தினுர். 215

விரைந்திடு செலவினுல் விசிகம் ஏவலான்
உரந்தனிற் படுதலும் ஒசிந்து வீழ்ந்தன
இரந்திடு தொழிலவர் இன்மை யாளர்போல்
கரந்தவர் இயற்கையைக் கருதி மீள்வபோல்.

விரைவாகச் சென்றுபட்டிடும் நிலையால் வீரவாகுவிடுத்திட்ட அம்புகள் சிங்கமுகாசுரன் மார்பில்படுதலும் அவைகள் முறிந்து வீழ்ந்தன. எப்படியெனில் இரக்கின்ற தொழிலுடையவர் பொருள்வைத்துக் கொண்டும் இல்லை என்கின்ற ஈயாத புல்லரின் இல்லத்துச் சென்று அவர் வஞ்சமாக இல்லை என்று சொல்லிடும் இயல்பைக் கண்டு மனம்கோணித் திரும்பிவருதல் போன்றிருந்தது. 216

முருகன தேவலால் முன்னம் விட்டிடு
பொருகணை அகலமேற் புகாது வீழ்தலும்
அரிகெழு முகமுடை அவுணர் நாயகன்
கரமிசை இருந்ததோர் கதையொன் றேவினுன்.

முருகப்பெருமானுடைய ஏவலாளன் வீரவாகுதேவர் முன்னம் முன்னமாக விட்டிட்ட பதினெட்டு போர் அம்புகளும் சிங்கமுகாசுரனது மார்பில் புகாது வீழ்தலும் அது கண்ட சிங்கமுகமுடைய அசுரன் தனது கையில் இருந்த தொரு தண்டாயுதத்தை எடுத்து வீரவாகுதேவர்மேல் வீசினுன், 217

ஏவிய தண்டினை ஏந்தல் ஈரிரு
தூவயில் வாளியால் துண்டஞ் செய்திடா
ஓவரும் பான்மையால் ஓராயி ரங்கணை
தேவரை அலைத்தவன் சிரத்தில் ஒச்சினான்.

சிங்கமுகாசுரன் செலுத்திய தண்டினை வீரவாகுதேவர் நான்கு கூரிய வேல் போலும் அம்பைவிடுத்து துண்டமாக்கி; ஓய்வின்றி சென்றிடும் பான்மையாக ஓர் ஆயிரம் அம்பினை தேவர்களை அலைவுறவைத்த சிங்கமுகன் தலைமேல் செலுத்தினார். 218

சிரம்படு கின்றதோர் செய்ய வாளிகள்
பரம்படு பலதுணி பட்டு வீழ்ந்தன
உரம்படு அவுணர்கள் உறைதற் கொத்தமுப்
புரம்படு கின்றதோர் பூழி யாமென.

சிங்கமுகாசுரனது தலையில் படுகின்ற செம்மையாகும் அம்புகள் மிக நுண்ணிய தான பல துணியாகப் பட்டு வீழ்ந்தன எதுபோலெனில் வலிமைகொண்ட அசுரர் கள் இருக்கின்றதற்கு ஏற்றதொரு முப்புரங்களும் சிவபிரான் சிரிப்பால் பொடி பட்டு போகின்ற புழுதிபோல. 219

பொன்றிகழ் வடிக்கணை பொடிப்ப இன்னுமுன்
நின்றமர் புரியுமோ நென்னல் தூதுவன்
நன்றென அரிமுகன் நகைத்துத் தன்கையின்
மின்றிகழ் சூலவேல் திரித்து வீசினான்.

பொன்போல் திகழ்ந்திடும் வடிக்கணைகள்யாவும் பொடிபட்டுப் போகவும் அது கண்டும் என்முன் நின்று இன்னமும் போர் செய்குமோ? நேற்று இங்கு வந்த தூது வன் வீரவாகு! என்று சிங்கமுகாசுரன் சிரித்து தனது கையில் இருந்திடும் மின் னல் கொண்ட ஓர் சூலாயுதத்தைச் சுழற்றி வீரவாகுதேவர்மேல் வீசினான். 220

காசினி எரிகிளர் காட்சித் தாலென
ஆசினி தனில்வரு சூலத் தாற்றலுந்
தேசுடை நிலைமையுந் திறலும் நோக்கியே
வீசினன் எதிருற விசிகம் ஆயிரம்.

பூமியில் நெருப்பு எழுந்து வீரவாகுதேவரை நோக்கி வரும் காட்சி போன்று வான்மீது வருகின்ற சூலப்படையின் திறத்தையும் அதனின் தேசுடைய நிலமை யையும் வலிமையும் கண்டு அச்சூலம் முன்பாக ஆயிரம் அம்புகளை துரிதமாக வீர வாகுதேவர் செலுத்தினார். 221

நெட்டிலைச் சூலவேல் நிமலற் கன்பினோன்
விட்டிடு பகழியை வீட்டி மேற்செலப்
பட்டது நோக்கினன் பரிந்து பின்னருந்
தொட்டனன் ஆயிரஞ் சுடர்கொள் வான்கணை.

நீண்ட இலைபோலும் சூலப்படையானது முருகப்பிரானிடம் அன்புடைய வீரவாகு தேவர் விட்டிடும் அம்புகள் யாவற்றையும் அழித்து மேலாக வந்திடுதலும், தனது அம்பு அழிந்தது தெரிந்து வீரவாகுதேவர் மனம் வருந்தி பின்னரும் ஆயிரம் சுடர் கொண்ட திறலான அம்புகளைச் செலுத்தினார். 222

ஏவிய எல்லையில் எதிரும் வாளியைத்
தூவுறு கொன்னுனைச் சூலஞ் சிந்தியே
மேவலர் பரவுறும் வீர வாகுமேல்
தேவரும் மருளுறக் கடிது சென்றதே.

வீரவாகுதேவர் செலுத்திய நேரத்தில் எதிர்த்துவரும் அவ்வம்புகளை ஊன் தோய்ந்த மிகு கூர்மையான நுனியுடைய சூலம் அழித்துவிட்டு பகைவர் பலரும் வணங்கிடும் வீரவாகுதேவர்மேல் தேவரும் கண்டு மருளடைய அச் சூலவேல் சென்றது. 223

இலக்கரும் நடுங்கினர் எண்மர் ஏங்கியே
கலக்கம தடைந்தனர் கணங்கள் யாவரும்
அலக்கணுற் றிரங்கினர் அமரர் இப்படை
விலக்கரி தேகொலென் றுயிர்த்து விம்மினர்.

இந்தச் சூலம் வீரவாகுதேவர்மேல் வருகின்ற அந்நிலையைக்கண்டு இலக்கம் வீரரும் நடுக்கமுற்றனர்; மற்றைய தம்பியர் எட்டுப்பேரும் ஏங்கியே கலக்கமடைந்தனர். பூதகணங்கள் யாவும் அலக்கமடைந்து துயர்கொண்டு அழுதனர். தேவர்களும் அதுகண்டு நிலமை இதுவாயின் இச் சூலப்படையை விலக்குவது அரிதாகுமே? என்று பெருமூச்சுவிடுத்து அழுதனர். 224

வேறு

கோள்கொண்ட பகழிகளின் கொலைகொண்டு நிலைகொண்ட
தோள்கொண்டு செல்லவருஞ் சூலத்தின் திறல்நோக்கி
நீள்கொண்டல் அன்னதொரு நீலமிடற் றவன்தந்த
வாள்கொண்டு குறைத்திட்டான் வலிகொண்ட தகலாதான்.

வைரம் கொண்டதாக விடுத்த அம்புகளினை அழிவுசெய்து பின்னர் வேகநிலை கொண்டு தனது தோள்மீது பாய்ந்து உருவிட நெருங்கி வருகின்ற சூலத்தின் திறலைக்கண்டு உடனே நீண்டதொரு மேகம் போலும் நீல நிறமான கண்டமுடைய கடவுள் சிவபெருமான் கொடுத்திட்ட வாளை எடுத்து அச்சூலத்தை வெட்டி வீழ்த்தினர் எக்காலமுமே தான் கொண்ட வலியால் நீங்கிடாத வீரவாகுதேவர். 225

சூலம்போய் இற்றிடலுந் துணைவர்களாய் உள்ளோரும்
ஞாலஞ்சேர் பூதர்களும் நனிமகிழ்வு சிறந்தனரால்
ஆலம்போந் தடர்த்திடலும் அமலனுண்டு தமைக்காத்த
காலம்போல் அமரரெலாந் துயரம்போய்க் களிசிறந்தார்.

சிங்கமுகாசுரனது சூலப்படை முரிந்து அழிந்து போயிடலும் வீரவாகுதேவரின் துணைவகளாயினோரும் பூமியில் நின்ற பூதங்களும் மிகவும் மகிழ்ச்சி சிறந்திடப் பெற்றார்கள். இதைக்கண்ணுற்ற தேவரெல்லாரும் முன்னர் ஆலகாலம் என்னும் நஞ்சு போய் தாக்குதலும் அதுவேளை சிவபிரான் அந்த நஞ்சை உண்டு தம்மைக்காத்திட்ட அந்த சிறந்ததொரு காலம் போன்று தாங்கள் கொண்ட துயரம் நீங்கி களிப்புற்றார்கள். 226

அக்காலை வெள்ளிமலை அளிக்குநந்தி கணத்திறைவன்
மெய்க்கால வடவையிலும் வெகுளியுறு பெற்றியனாய்
இக்காலை இவனுயிரை யானேஉண் குவனென்னா
மைக்காலன் றனைமுடித்த வள்ளல்தனிப் படைகொண்டான்.

அக்காலையில் வெள்ளிமயமான கைலைமலையைக் காவல்கொண்ட நந்தியெம்பெருமானின் கணங்கட்கு தலைவரான வீரவாகுதேவர் அழிவிலாத ஊழிக்காலத்து வரும் வடவாமுகாக்கினியிலும் போபமுற்ற தன்மை கொண்டவராய் இந்நேரமே இந்த சிங்கமுகனுடைய உயிரை யானே உண்பேன் என்று இருண்ட வடிவான இயமனை முடிவுசெய்த வள்ளலாகும் சிவபெருமானது தனியாகும் சிவப்படையைக் கைக்கொண்டார். 227

எந்திரித்த இருக்கைதனில் இருத்தியே கருவிகளான்
மந்திரத்தின் விதிமுறையின் மனப்படுபூ சனைஇயற்றி
அந்தரத்தில் இமையவர்க்கும் அரியயற்கும் வெலற்கரிய
சுந்தரத்தோள் அரிமுகனை அடுதியெனத் தொழுதுய்த்தான்.

இயந்திரமயமான இருப்பிடத்தில் எடுத்த சிவப்படையை வைத்து பூசனைக்கு உகந்த கருவிளாகும் மந்திரத்தின் படி உற்ற விதிமுறையால் மனதால் யாவும் நிரப்பிடும் பூசனையைப் புரிந்து அப்படையை வணங்கி அந்த உலகில் வாழும் தேவர்கட்கும் திருமால் பிரமனுக்கும் வெல்லற்கரிய சுந்தரமுடைய வீரத்தோள்கொண்ட சிங்கமுகனை நீ கொன்றிடுவாய் என விடுத்தார். 228

உய்ப்பதொரு படையழல்கான் றுலகம்வெருக் கொளவரலும்
எப்படையோ இஃதென்றுன் இமையவர்தம் படைவென்றுன்
துப்படையுஞ் செஞ்சடிலத் தோன்றல்படை எனத்தெரியா
அப்படையோ அடுவதென அண்டம்வெடி படநகைத்தான்.

வீரவாகுதேவர் செலுத்திய அப்படை நெருப்பினைக் கக்கியவாறு உலகம் அஞ்சும்படி வரலும் அதை நோக்கி இது எந்தப்படையாகுமோ? எனக் கூறினன் எல்லாத் தேவருடைய படையையும் வென்ற சிங்கமுகன். உடனே அது பவளம்போலும் செஞ்சடையுடைய சிவமூர்த்தியின் படையாகுமெனத் தெரிந்து ஓகோ! அந்தப் படையோ என்னைக் கொல்வது என அண்டங்கள் வெடிபடும்படி பெரும் கோபச் சிரிப்புக் கொண்டான். 229

அற்பட்ட புலனுடைய அரிமுகத்தன் தான்நோற்று
முற்பட்ட பகற்கொண்ட முக்கணுன் தனதுபடை
எற்பட்ட மணிக்கடகத் தொருகரத்தில் இருந்ததனைச்
சொற்பட்ட மந்திரத்தால் வழிபட்டுத் தூண்டினனுல்.

தெளிவிலாது இருள்கொண்ட மனமுடைய சிங்கமுகாசுரன் தான் தவம்செய்து முற் காலத்தில் சிவபிரானிடமிருந்து பெற்றுக்கொண்ட முக்கண்ணுடைய சிவபெருமானது படை, ஒளிதருகின்ற இரத்தினக் காப்பணிந்த ஒரு கரத்தில் இருந்தது; அதனை சொல்லப்பெறும் விதிமுறையாகும் மந்திரத்தால் தியானித்து வழிபட்டு தூண்டினுன் வீரவாகுதேவர் விடுத்திடும் சிவப்படைக்குமாருக. 230

தூண்டலுறு பரன்படையுந் தொல்லைவரும் அப்படையும்
ஈண்டியெதி ரெதிர்துன்னி இணைகொண்டோர் இருதலைவர்
காண்டகைய கேண்மையினுற் கடிதுவந்து கலந்தேபின்
மீண்டிடுவ தேபோல விடுத்தவர்பால் மேவினவால்.

சிங்கமுகாசுரன் தூண்ட வருகின்ற சிவப்படைக் கலமும்; வீரவாகுதேவர் முன் விடுத்திடவரும் சிவப்படைக்கலமும் இரண்டும் எதிருற்று வந்து நெருங்கி இணையான வலியுடைய இரு தலைவர்கள் ஒருவரை ஒருவர் காணவிரும்பும் நண்பினுல் விரைவாக வந்து சந்தித்துக் கூடி பின்னர் மீண்டிடுவதே போன்று அப்படைகள் இரண்டும் தம்மை விட்டவர் பாலாகப் போயச் சேர்ந்துகொண்டன. 231

வேறு

தன்படை மீடலுஞ் சயங்கொள் மொய்ம்பினுன்
துன்புடை மனத்தனுய்ச் சூரன் என்பவன்
பின்புடை யானெடு பேசப் பின்னெரு
முன்புடை யாரிலை என்று முன்னினுன்.

தனது மிகு வலியான சிவப்படைக்கலம் மீண்டு வருதலும் அதுகண்ட வீரவாகுதேவர் மிகு துயரம் கொண்ட மனமுடையோராய் இந்த சூரபன்மனுக்கு பின்னல் பிறந்த சிங்கமுகாசுரனுக்கு நிகராக ஒரு வீரன் முன்னுமில்லை பின்னுமில்லை என மனதில் எண்ணினர். 232

ஆற்றலிற் குறைவிலன் அழிவு றுதமர்
பேற்றினிற் குறைவிலன் பிறரை அட்டிடு
கூற்றினிற் குறைவிலன் கோடி கூற்றுவர்
ஏற்றெதிர் மலையினும் இமைப்பிற் கொல்வனால்.

இந்த சிங்கமுகன் ஆற்றலில் குறைவிலன். அழிவிலாது செய்திடும் தவத்தின் பேற்றினில் குறைவிலன்; பிறரை கொல்கின்ற கொடும் செயலில் குறைவிலன்; கோடி இயமன்கள் இவனுடன் திரண்டு எதிர்த்திட்டாலும் ஒரு இமைப்பில் அவர் களைக் கொல்வான். 233

அவன்பெரு முயற்சியே ஆற்றலாம் என்கோ
தவங்களின் வன்மையே வன்மைதான் என்கோ
சிவன்புரி வரமதே சீரிதால் என்கோ
எவன்பெரி தென்றியான் இசைக்க வல்லனே.

இவனது பெருமுயற்சியே இவனுடைய வலிமைக்குக் காரணம் என்பேனோ? அல்லது அவன் செய்திடும் தவங்களின் வலிதான் அவனது வலிமைக்குக் காரணம் என் பேனோ? அல்லது சிவபிரான் கொடுத்தருளிய வரம்தான் இவனிடம் சிறந்த சீராக உளது என்பேனோ? எதுதான் இவனின் சிறப்பிற்கு பெரிதானதென்று சொல் வேன். 234

விடலுறு பகழியான் மெய்யில் ஊறிலான்
அடலுறு படையினும் அழிவு பெற்றிலான்
கொடியதோர் அரிமுகன் குமரன் செங்கையிற்
படைகளின் அன்றியே படுகி லானரோ.

நான் விடுகின்ற எந்தவொரு வலியான படையாலும் இவன் மேனியில் ஊற டையான். அல்லது அடல்கொண்ட எப்படையாலும் அழிவு பெற்றிலான். ஆத லால் கொடிய சிங்கமுகாசுரன் குமரப்பெருமானது செங்கையில் உள்ள படைகளால் அன்றி இவன் இறந்திடமாட்டான். 235

தீயவன் ஆவியைச் சிந்தல் கூடுறு
தாயினும் வெஞ்சமர் ஆற்றி இங்கிவன்
சேயுயர் தேரினைப் படையைச் சேனையை
மாய்வுறு விப்பனால் வல்லையா னென்றான்.

தீயவனான சிங்கமுகன் உயிரை நான் நீக்கிட முடியாதென்றாலும் நான் கொடும் போரினை இவனுடன் புரிந்து இங்கு இவனுடைய மிகு உயர்ந்த தேரினை படைகளை சேனையை விரைவில் மாய்விப்பேன் எனக் கூறினார் வீரவாகுதேவர். 236

இத்திறம் இளையவன் இயம்பி ஏழிரு
பொத்திரம் தூண்டியே பொருவில் கேசரி
வத்திர முடையன் வையம் உந்துவான்
சித்திர நெடுந்தலை சிந்தி நீக்கினான்.

இத்திறமான வார்த்தைகளை வீரவாகுதேவர் கூறி பின்னர் பதினான்கு அம்புக ளைச் செலுத்தி நிகரற்ற சிங்கமுகமுடைய சிங்கமுகாசூரனது தேரைச் செலுத்திடும் சாரதியாகும் அசுரனின் பெரும் தலையை அறுத்து வீழ்த்தினார். 237

சாரதி தலையது தரையில் வீழுமுன்
சூரொடு தோன்றினான் சுளிந்தொர் தண்டினை
ஓரிமை ஒடுங்குமுன் உருமின் உய்த்தலும்
வார்கழல் இளையவன் மருமம் பாய்ந்ததே.

சூரபன்மனுடன் தோன்றிய சகோதரன் சிங்கமுகாசுரன்; தனது சாரதியின் தலை அறுபட்டு பூமியில் வீழுமுன்பு மிகுகோபமுற்று வீரவாகுதேவர்மேல் ஒரு தண்டாயுதத்தை ஓர் இமைப்பொழுது ஓடுங்குமுன்பே விடுத்தலும்; அத்தண்டு வாருடைய வீரக்கழல் அணிந்திட்ட வீரவாகுதேவரின் நெஞ்சில் திடிரெனபட்டது. 238

விடலரும் திறலுடை வீர வாகுவின்
தடமிகும் உரம்புகு தண்டஞ் சாளரத்
திடையிடை கதிர்வரும் எல்லை காணுறும்
பொடியென லாகியே புகையில் போயதே.

விடுதற்கரிய திறலுடைய வீரவாகுதேவரின் அகன்ற மார்பில் பட்டுக் கொண்ட தண்டானது; யன்னல் வழியாக இடைஇடையே சூரியனின் கதிர்வரும் எல்லையில் காணப்படுகின்ற துகள் என்னும் படியாகியே புகையாய் பொடிந்து பொயது, 239

தோட்டுணை வாகையான் சுளிந்து துண்ணென
ஓட்டுறு நெடுங்கணை உய்த்தொ ராயிரம்
மோட்டுடை விறலரி முகத்தன் ஏறிய
சேட்டுடை மணிநெடும் தேரை வீட்டினான்.

தோளே துணையாக உள்ள வீரவாகுதேவர் அந்நிலையில் போபமுற்று துண்ணென்று வேகமாகச் சென்றிடும் நெடிய அம்புகள் ஆயிரத்தைச் செலுத்தி முரட்டுக் குணமுடைய சிங்கமுகாசுரன் ஏறிய அழகுடைய மணிகள் கொண்ட தேரை அழித்தார். 240

தேரழிந் திடுதலும் ஆர்த்துச் சிங்கனை
ஆருயிர் கொள்ளுதும் அற்ற மீதெனுப்
பாரிடர் வரைகளும் படையும் வீசியே
சாருற வளைந்தனர் சமரின் முந்தினார்.

சிங்கமுகாசுரனது தேர் அழிந்து போதலும் அதுவேளை அதுகண்ட பூதங்கள் ஆரவாரித்து சிங்கமுகாசுரனின் அரிய உயிரை இப்பொழுதே நீக்குவோம் இது நல்ல தருணம் என்று பூதங்கள் மலைகளையும் படைகளையும் எடுத்து வீசி அவனைச் சூழ்ந்து வளைத்து நின்று படை வீசுதலில் மிகவும் முந்தினார்கள். 241

வெய்யவன் அங்கது வெகுண்டு நோக்கியே
செய்யதோர் மணிநெடுஞ் சேமத் தேர்புகா
ஐயிரு நூறுவில் லதனை ஆயிரம்
கையினில் எடுத்தனன் கடிதின் வாங்கினான்.

கொடிய சிங்கமுகாசுரன் அதனை வெகுண்டு நோக்கி செம்மையாய் விளங்கிடும் இன்னுமொரு இரத்தினத்தினால் அழகுறச் செய்த நெடியதொரு சேமத்தேரில் புகுந்து தனது ஆயிரம் கைகளில் ஆயிரம் வில்லை எடுத்தான். விரைவாக அவைகளை வளைத்தான். 242

கருமணி வரைபுரை காமர் வில்லெலாம்
அரவுறழ் குணங்கள்கொண் டவுணன் கையுற
திருமுடி பலவுடைக் கிரியிற் செல்லினம்
உருகெழு மின்னொடும் உறுவ போன்றவே.

கருமையான இரத்தின மலைபோன்ற அழகிய அந்த ஆயிரம் விற்களும் பாம்புகளை ஒத்த நாண்களை உடையனவாய் சிங்கமுகாசுரன் கையில் இருப்பது எப்படியெனில் சிறந்த பல முடிகளுடைய மலை மீது முகிற் கூட்டங்கள் இடிகொண்ட மின்னலோடும் படிந்திருப்பதை ஒத்தது. 243

பிடித்திடும் விற்களில் பிறங்கு நாணொலி
எடுத்தனன் எடுத்தலும் உயிர்கள் யாவையும்
துடித்தன அண்டமும் துளக்க முற்றன
முடித்தலை பனித்தனன் முளரித் தேவனும்.

சிங்கமுகாசுரன் கையில் பிடித்திடும் விற்களில் பேரோசையுடன் விளங்க நாணோசை செய்தான். அப்படி செய்தலும் அவ்வோசை கேட்டு அஞ்சி உயிர்கள் யாவும் துடித்தன. அண்டங்களும் நடுக்கமுற்றன. தாமரை மலரில் இருக்கும் கடவுள் பிரமனும் தனது முடியுடைய தலையை அசைத்தார். 244

வணக்கிய விற்களின் மடங்கல் மாமுகன்
கணக்கில வாகிய கடல்கள் வானெழீஇத்
தணக்கில பொழிந்தெனச் சரங்கள் சிந்தலும்
பிணக்குவை ஆயினர் பெயர்ந்த பூதர்கள்.

வளைத்துக்கொண்ட விற்களின்றும் சிங்கமுகாசுரன் கணக்கற்ற கடல்கள் வானில் எழுந்து குறைவின்றி பூமியில் மழையாகச் சொரிவது போன்று அம்புகளை பூதங்கள் மேல் சொரிதலும் படைகள் வீசிய பூதங்கள் யாவும் அறுபட்டு பிணக்குவியல்களாயினர். 245

தாள்களும் கரங்களும் தலையும் சிந்தினர்
கோளுறு தசையொடு குருதி சிந்தினர்
மூளைகள் சிந்தினர் முடியும் கால்பொரப்
பூளைகள் சிந்தின போலப் பூதர்கள்.

சிற்சில பூதங்கள் காலும் கையும் தலையும் சிந்திடப் பெற்றனர்; சிலவலியுடைய தசைகளுடன் இரத்தம் சிந்திடப்பெற்றனர். சிலர் மூளைகள் சிந்திடப் பெற்றனர். இவர்களுடைய இந்நிலைகளைநோக்கினுல் முடிவாகின்ற காலத்து வீசிடும் காற்று மோதி அடிப் புழுதிகள் சிந்தப்படுவன போன்றனர். 246

தருப்பயில் பாற்கடல் தனது சீகரம்
திரைப்பெருங் கரங்களால் சிந்தல் போன்றதால்
அரிப்பெரு முகத்தவன் ஆயி ரங்கையால்
துரப்புறு கணைகளைத் தூண்டு கின்றதே.

கற்பக விருட்சம் நிலைபெற்றிருக்கும் பாற்கடலானது தனது சிறு திவலைகளை திரை எனும் பெரும் கைகளால் சிந்துதல்போன்று விளங்கியது சிங்கங்களின் பெருமுகமுடைய சிங்கமுகாசுரன் ஆயிரம் கையாலும் வேகமுடன் செல்லும் அம்புகளை செலுத்திடும் செய்கை. 247

மண்டல நிரந்தன வானம் தூர்த்தன
எண்டிசை மறைத்தன கிரிகள் ஈண்டுவ
தெண்டிரை எங்கணும் செறிவ அப்புறத்
தண்டமும் போவன அவுணன் வாளிகள்.

சிங்கமுகாசுரன் செலுத்திடும் அம்புகள் வானமண்டலங்கள் எங்கும் சென்று நிரந்தன; வானினை நிறைப்பன; எட்டுத்திக்குகளையும் மறைத்தன; மலைகளில் நெருங்குவன. தெள்ளிய திரையுடைய கடல்களில் செறிவன; அப்பாலுள்ள அண்டமும் செல்வன வாகின்றன. 248

மருப்புயர் திசைக்கரி மருமம் பாய்வன
பருப்பதம் ஏழையும் பகிர்வ மேருவாம்
பொருப்பையும் போழ்வன புணரி தோறமர்
நெருப்பையும் தணிப்பன நீசன் வாளியே.

நீசனாகும் சிங்கமுகன் அம்புகள் உயர்ந்த கொம்பினையுடைய திக்குயானைகளின் உடலில் பாய்வன ஏழு எனச் சிறந்த மலைகளையும் பிளக்கின்றன. இதுவன்றி மேரு மலை முதலாகிய மலையையும் ஊடுருவுகின்றன. சமுத்திரம் தோறும் இருக்கின்ற நெருப்பையும் தணித்துவிடுவன. 249

மாறுபட் டவன்விடும் வாளி மாரியால்
ஈறுபட் டிடாததோ ருயிரும் யாக்கைகள்
கூறுபட் டிடாததோ ருயிரும் கொம்மென
ஊறுபட் டிடாததோ ருயிரும் இல்லையே.

நன்மைக்கும் தருமத்திற்கும் மாறுபட்ட சிங்கமுகாசுரன் விடும் அம்பின் மழையால் முடிவாகிப் போகாததொரு உயிரும்; உடலங்கள் கூறுபட்டிடாததோர் உயிரும்; விரைவாக ஊனம் அடையாத உயிரும் இவ்வுலகில் ஏதும் இல்லையே! 250

எண்படும் அரிமுகன் எடுத்த வில்லுமிழ்
புண்படு கணைமழை பொதிந்து போகுரு
விண்படு நெறியெலாம் விலக்கி மாற்றியே
ஒண்புவி ஆக்கிய துலகம் யாவையும்.

பலராலும் மதிக்கப்படும் சிங்கமுகாசுரன் எடுத்த விற்கள் உமிழ்கின்ற புண்ணுண்டாக்கிடும் அம்புகளாய மழை கூட்டாகச் சேர்ந்து சென்று வானில் உள்ள மார்க்கமெல்லாம் விலக்கி அதுவன்றியும் வான உலகம் யாவற்றையும் பூவுலகமெனும்படி செய்திடுகின்றன. 251

தாக்குறும் அரிமுகன் சரங்கள் பாரிடர்
யாக்கைகள் உருவியே எடுத்து நொய்தெனப்
போக்குறு கின்றன புலாலின் சூட்டினைக்
கோக்குறு சலாகையின் குழுவு போலவே.

யாவரெனினும் அடர்த்துத் தாக்குகின்ற சிங்கமுகாசுரன் விடுகின்ற அம்புகள் பூதங்களுடைய உடலை உருவித் தூக்கி எடுத்துச் சென்று விரைவாகப் போகின்றன. அவற்றின் இயல்பை நோக்கினுல் மிருகங்களின் புலாலின் வற்றலை கோத்துவைத்திருக்கும் இரும்புச் சலாகையின் தொகுதிகள் போன்றிருப்பது. 252

மெய்ந்நெறி யுணர்கிலார் வெறுக்கை பெற்றது
துன்னிய கிளைக்கொரு துன்ப மாதல்போல்
ஒன்னலன் விடுங்கணை உலப்பின் றோடலால்
தன்னுறு படைகளைத் தானுங் கொன்றவே.

உண்மையான நன்னெறியை உணராதவர் செல்வத்தைப் பெற்றுக்கொண்டால் அச்செல்வத்தை அவர் பிரயோகிக்குங்கால் தனது உற்ற உறவினருக்கு பெரும் தீங்கினை விளைவிக்க எத்தனித்தலால் அச்சுற்றத்தவருக்கே துன்பமாக மாறுகின்றதன்மை போல் சிங்கமுகாசுரன் விடுகின்ற அம்புகள் யாவும் எத்திசையிலும் ஓய்வின்றிச் செல்வதால் சிங்கமுகாசுரனுடைய அசுரப் படைகளையும் கொல்வன. 253

இந்த உண்மையை வாழ்க்கையின் அனுபவத்தில் நாம் காணலாம்.

தீந்தொழில் அரிமுகன் செறித்த வாளிகள்
வாய்ந்திடுஞ் சேணெறி மாற்றும் பான்மையால்
காய்ந்திடுஞ் செங்கதிர்க் கடவுள் மேற்றிசைப்
போந்திலன் மீண்டிலன் புலம்பி நின்றுளான்.

தீய தொழிலுடைய சிங்கமுகாசுரன் விடுத்த அம்புகள் யாவும் வாய்ப்புற்ற வானநெறிகளை எல்லாம் மாற்றி அமைத்திடும் பான்மையால் சுடுகின்ற செங்கதிர்களை உடைய சூரியக்கடவுளும் வழமைபோல் தான் சென்றிடும் மேற்குத்திசைக்கு போகவும் முடியவில்லை மீளவும் முடியவில்லை இதனுல் என் செய்வேன் எனப் புலம்பியவாறு நின்றான். 254

கொம்பொடு பேரியுங் குணிலும் ஏனைய
வெம்படை யாவையும் விரவி மேற்செலக்
கம்புளும் கரண்டமும் கனைந்து சுற்றிடச்
செம்புனல் கரும்புனல் அளக்கர் சென்றதே.

கொம்புவாத்தியமுடன் பேரிகையும் குணிலும் ஏனைய கொடிபடைகள் யாவும் நெருங்கி மேற்சென்றிட நீர்க்கோழியும் நாரைகளும் சத்தமிட்டு சுழன்று சென்றிட சிவந்த இரத்த நீரானது கருமைமிக்க நீருடைய சமுத்திரமேல் ஓடிச்சென்றது. 255

இத்திறம் அரிமுகன் இயற்றும் போரினை
மெய்த்திறன் மொய்ம்புடை வீரன் காணுறாச்
சித்திரத் தவனெதிர் சென்று வாங்கினன்
கைத்தலத் திருத்ததன் கடவுள் வில்லினை.

இத்திறம் சிங்கமுகாசுரன் செய்திடும் போரினை உண்மையான திறல் உடைய தோள்கொண்ட வீரவாகுதேவர் கண்ணுற்று சிறப்புடைய ஆயிரம் தலையுடனும் இரண்டாயிரம் கையுடனும் சிறந்ததொரு வடிவுடைய சிங்கமுகாசுரன் முன்பு சென்று தனது கையில் உள்ள தெய்வத்தன்மை பொருந்திய வில்லை வளைத்தார். 256

வாக்கிய சிலைதனில் வறிது நாணொலி
ஆக்கினன் ஆக்கலும் மலைந்த தண்டமும்
தீக்கிளர் குஞ்சியர் செருச்செய் தானவர்
ஏக்கம தடைந்தனர் இரிந்து போயினர்.

வளைத்திட்ட வில்லில் நின்றும் விரைவாகச் சிறிது நாணோசை செய்தார். அவ்வணம் செய்தலும் அகில அண்டங்களும் அலைவுற்றன; நெருப்பு சுடர்விடுவது போன்ற சடையுடையவராய் அங்கு நின்று போரிட்ட அசுரர் யாவரும் ஏக்கமடைந்தனர்; அங்கு நில்லாது ஓடிப்போயினர். 257

மாக்களின் இருந்தவர் மதங்கொள் வெங்கரி
மேக்குற வைகினோர் தேரின் மேவினோர்
தாக்குறு படைகளுஞ் சயமுஞ் சிந்தியே
யாக்கைகள் நடுக்குற யாரும் வீழ்ந்தனர்.

இதுவன்றி குதிரையில் இருந்தவரும்; மதங்கொண்ட யானைகளின் மேலாக இருந்தவரும்; தேரில் மேவி இருந்தவரும்; ஆகிய எல்லா அசுரரும் தாக்கிடும்படி கையில் பிடித்த படைகளையும் சிதறிட வீசிவிட்டு வீரமும் அழிவுற்று உடலங்கள் நடுக்குற யாவரும் வீழ்ந்தார்கள். 258

வேறு

அவ்வ ழிப்பட நாணொலி உறுத்தியே அடலோன்
கைவ ழிப்படு சிலையினில் கணைமழை சிதறித்
தெய்வ ழிப்படு சீயமா முகத்தவன் செலுத்தும்
எவ்வ ழிப்படும் பகழியும் அறுத்தனன் இமைப்பில்.

அவ்வழிப்பட நாணோசை செய்திட்டு வலிமை மிக்க வீரவாகுதேவர் கையினில் பிடித்த வில்லில் நின்றும் அம்புகளைத் தொடுத்துச் செலுத்தி பகைமையின் வழியை பெருக்கி நிற்கும் சிங்கமுகாசூரன் செலுத்திடும் எவ்வழியாலோ எத்திசையாலோ சென்றிடுகின்ற அம்புகள் யாவற்றையும் ஓர்இமைப்பொழுதில் அறுத்துத்தள்ளினர் 259

பிரமர் எண்ணிலர் பயந்திடும் உயிர்களைப் பின்னாள்
ஒருவ னாகிய கண்ணுதல் தொலேக்குமா றெப்பச்
செருவ லாளனும் இளையவன் பகழிகள் சிதறி
அரியின் மாமுகன் விடுகணைத் தொகையெலாம் அறுத்தான்.

எத்தனேயோ எணணற்ற பிரமர்கள் படைக்கின்ற உயிர்களை பின்னாளில் ஒருவ னாகிய நெற்றிக் கண்ணுடைய உருத்திர மூர்த்தி அழிக்கின்ற தன்மை போன்று ஒத்திட போர் வல்லவரான வீரவாகுதேவர் அம்புகள் பலவற்றைச் செலுத்தி பல பெரும் சிங்கத்தலையுடைய சிங்கமுகாசூரன் விடுத்திட்ட அம்புகளின் தொகை யாவற்றையும் அறுத்துத் தள்ளினார். 260

மிக்க நேமியிற் புவனியின் அகவிரு விசும்பில்
திக்கின் மேருவின் வரைகளில் தீயவன் பகழி
புக்க புக்கதோர் இடங்களில் தன்கணை பூட்டி
அக்க ணந்தனில் அவன்விடு வாளிகள் அறுத்தான்.

மிகுந்துள்ள கடலில் பூமியில் அகன்ற பெரிய வானில் திக்கில் மேரு மலையில் இன்னும் பல மலைகளில் தீயவனும் சிங்கமுகாசுரனின் அம்புகள் சென்ற சென்ற இடங்களில் எங்கும தனது அம்புகளை வீரவாகுதேவர் விடுத்து அக்கணமே அங்கங்குள்ள அவனது அம்பினை அறுத்து நீக்கினார். 261

புறத்த ராமென மன்னுயிர்க் கின்னலே புரியும்
திறத்தன் வாளியை மைந்தனின் றட்டது தேவர்
குறித்து நோக்கியே சூர்முதற் கிளையெலாம் குமரன்
அறுத்த நாள்வரு மகிழ்ச்சியைக் கிடைத்துநின் றார்த்தார்,

தன்போல் மன்னுயிரையும் நேசியாது புறத்தார் இவர் என எண்ணி மேலான அரிய உயிர்கட்கு இன்னலே நித்தலும் புரியும் செயலுடைய சிங்கமுகனின் அம்பினை சிவபிரான் மைந்தர் வீரவாகுதேவர் நின்று அழித்ததை அங்கு நின்று குறிப்பாகக் கண்டு கொண்டதேவர்கள் யாவரும் அசுரர்கிளை யாவற்றையும் எம்பிரான் குமரன் அறுத்து நீக்குகின்ற நாளில் அவர்கள் அடைந்திடும் மகிழ்ச்சி இப்பொழுதே கிடைத்ததுபோன்று நின்று மகிழ்வுற்று ஆர்த்தனர். 262

அகழி யார்கலி நொச்சிசூழ் முதுநகர் அடர்த்தோன்
திகழி யானைகள் வெருவரும் அரிமுகத் திறலோன்
பகழி யாவையும் அட்டதோ அங்கவன் படைத்த
புகழி யாவையும் அட்டதன் றேவெனப் புகன்றார்.

சமுத்திரமே அகழிக்கிடங்காக அமைந்திட பெருமதில் சூழ்ந்துள்ள வீரமகேந்திர புர நகரை அன்று அழித்துள்ள வீரவாகுதேவர்; திகழ்ந்து விளங்கும் பெரு யானைகளும் கண்டு நடுங்கிட வருகின்ற சிங்கமுகமுடைய திறல் உடைய அசுரன் விடுத்த அம்புகளை அளித்தது மட்டுமல்ல; அவன் இது காறும் பெற்று நின்ற புகழ்கள் யாவற்றையும் அழித்திட்டார் எனக் கூறினார்கள் அத் தேவர்கள். 263

அள்ளல் செற்றிய அளக்கர்சூழ் ஆசுரத் தரசன்
தள்ளல் உற்றிடு பகழியைத் தனதுகைச் சரத்தால்
வள்ளல் அத்துணை அறுத்தனன் அகற்றமற் றதனைக்
கள்ள லேத்ததார் அரிமுக மேலையோன் கண்டான்.

சேறு நிரம்பிய சமுத்திரம் சூழ்ந்த ஆசுரம் என்னும் நகரத்தில் வாழ்கின்ற அரசன் சிங்கமுகாசூரன் செலுத்தியிட்ட அம்புகளை தனது கையில் உள்ள அம்பால் வீரவாகுதேவர் அறுத்து அகற்றிட அதனைக் தேன்துளிகள் துளித்திடும் மாலையணிந்த சிங்கமுகாசுரன் என்னும் பெரியோன் கண்டு கொண்டான். 264

வில்லெ டுத்தது நின்பொருட் டாகுமால் விரைவின்
மல்லெ டுத்துநின் மொய்ம்பினைக் கரங்களை மார்பைப்
பல்லெ டுத்திடு தலையினை நாசியைப் பதத்தைச்
சொல்லெ டுத்திடு நாவினைச் சரங்களால் துணிக்கேன்.

சிங்கமுகாசுரன் கண்டு கொண்டு வீரவாகுதேவரை நோக்கி சொல்வான்; யான் வில் எடுத்தது நினது பொருட்டாலாகும். ஆதலின் விரைவில் நினது மலைபோன்ற தோளை கைகளை மார்பை பல் கொண்ட தலையை மூக்கினை காலினை சொல்வருகின்ற நாக்கினை எனது அம்பினுல் துணித்திடுவேன். 265

திரண்ட கையுளேன் சிலைத்தொழில் காட்டுறு செருவில்
இரண்டு கையுடை நீகொலாம் என்முனம் ஏற்பாய்
முரண்ட விச்சிலை தொட்டனின் கையினை முடித்துக்
கரண்டம் உண்ணிய புரிகுவன் முந்துநீ காண.

திரண்ட ஆயிரம் கையுடையேன் வில்லின் தொழிலின் வலிமையைக் காட்டு கின்ற இப்போரில் இரண்டுகையுடைய நீயா என்முன் எதிரிட்டு நிற்பாய். இதோ வலி கொண்ட நின் வில்வினைத் தொட்ட உனது கையினை அறுத்து ஊன்விரும்பும் நாரைகள் உண்ணுமாறு கொடுத்திடுவேன். என் முன்பே நீ நின்று இதைக் கண்டு கொள்ளுமாறு. 266

எமரி ருக்குறு மகேந்திர நகர்தனில் ஈண்டுஞ்
சமர கத்தினில் என்பெருந் தானைகள் தம்மில்
குமரர் தங்களிற் கொற்றமாக் கொண்டன முற்றும்
உமிழு விக்குவன் உன்னுயிர் தன்னையான் உண்பேன்.

எமது அசுரர் இருக்கின்ற வீரமகேந்திர நகரிடத்து நெருங்கிவரும் போரினிலே வந்த என்பெரும் சேனைகளுடனே பிள்ளைகளுடன் நீ செய்த போரில் அவர்களைக் கொன்று வெற்றி கொண்டனவாகிய வீரம் அத்தனையையும் இங்கே நீ கக்கிடும்படி செய்விப்பேன். அத்துடன் உனது உயிரையும் யான்உண்பேன் என்றான் சிங்கமுகன். 267

என்னும் மாற்றங்கள் அரிமுகன் இசைத்தலும் ஏந்தல்
பன்னு கின்றதென் பற்பல நினக்குள படையைத்
துன்னு தானைகள் யாவையுஞ் செற்றுனைத் துரப்பேன்
என்னு டைச்சிலை வன்மையைப் பார்த்தியா லென்றான்.

என்னும் இந்த வார்த்தைகளை சிங்கமுகாசூரன் சொல்லலும் எம் தலைவர் வீர வாகுதேவர் கேட்டு சிங்கமுகனே இங்கு நாம் இதற்குப் பலவற்றைச் சொல்லியாவ தென்ன? உனக்குள்ள படைகளாக நெருங்கி வந்த சேனைகள் யாவற்றையும் அழித்து உன்னையும் ஓடிடச் செய்வேன். என்னுடைய வில் வன்மையை நீ பார்த்துக் கொள் வாய் என்றார். 268

சொற்ற மாத்திரத் தவுணனு ரழல்விழி தூண்டக்
கொற்ற வெஞ்சிலை பத்துநா றொருதலை குனித்துப்
பொற்றை ஈர்ங்கணை ஆயிரத் தாயிரம் பூட்டி
வெற்றி மொய்ம்புடை ஒருவன்மேற் சென்றிட விடுத்தான்.

வீரவாகுதேவர் சொல்லிய மாத்திரத்தில் அசுரனுகிய சிங்கன் கண்களின் நெருப்புமிழ மிகு மேன்மையான விற்கள் ஆயிரத்தையும் ஒரு தலையாக வளைத்து மலைகளையும் துணிக்கவல்ல அம்புகள் ஆயிரம் ஆயிரமாகப் பூட்டி வெற்றிமிக்க தோளுடைய வீரவாகுதேவர் மேல் விடுத்தான். 269

சீற்றம் மிக்கநம் இளையவன் சிலையெனக் கொண்ட
கூற்றை வாங்கியே பத்துநூ றுயிரங் கொடுங்கோல்
ஆற்றல் மிக்கன தூண்டியே மேலவை அறுத்து
வீற்றும் ஆயிரம் ஆயிரம் பகழிகள் விட்டான்.

அது கண்டு கோபம்மேற்கொண்ட எம் வீரவாகுதேவர் தனது கையில் வில் என்று பிடித்த இயமன் போன்றதை வளைத்து பத்து நூறுயிரமாகும் கொடிய அம்புகள் வலிமிகுந்தவற்றைச் செலுத்தி மேலான சிங்கமுகமுடைய அசுரனது அம்புகளை அறுத்து மேலும் ஆயிரம் ஆயிரம் அம்புகளை விடுத்தார். 270

நம்பி தொட்டிடு கணையினை மகேந்திர நகரோன்
தம்பி பத்துநூ றுயிரங் கணைகளாற் சாய்த்து
வெம்பி ஆயிர கோடிவெவ் வாளிகள் விடுப்ப
எம்பி ராற்கிளை யோனும்அக் கணையினை எய்தான்.

எமது தலைவர் வீரவாகுதேவர் விடுத்திட்ட அம்புகளை வீரமகேந்திரபுர நகருக்குத் தலைவனுன சூரன் தம்பி சிங்கமுகாசுரன் பத்து இலக்கம் அம்பினை விடுத்து அறுத்து மீண்டும் மனம் வெகுண்டு ஆயிரகோடி கொடிய அம்புகளை விடுப்ப அதுகண்டு எம் பிரானுக்கு இளையோரான வீரவாகுதேவரும் அத்தொகைப்பட்ட அம்புகளை விடுத்தார். 271

குராவ ணிந்திடு குமரனுக் கிளையவன் கொடுங்கோல்
பராவ லன்விடு பகழியைப் பாரிடைப் படுத்தக்
கராச லங்களை யடுமுகன் அதற்குமுன் கணைகள்
இராயி ரந்தொடுத் தண்ணறன் சிலையினை இறுத்தான்.

குரவமலரை அணிந்திடுகின்ற குமரமூர்த்திக்கு இளையோராகும் வீரவாகுதேவர் இவ்வாறு கொடுங்கோலுடைப் பாதகன் சிங்கமுகன் விடுகின்ற அம்பினை பூமியில் சிந்திடச் செய்து விடலும்; அதுவேளை யானைகளைக் கொல்கின்ற சிங்கமுகமுடைய அசுரன் அதற்கு முன்பே இரண்டாயிரம் அம்புகளைச் செலுத்தி எம்பிரான் வீரவாகு தேவர் பிடித்த வில்லினை அறுத்தான். 272

மாறில் வெஞ்சிலை இற்றுழி இளையதோர் வள்ளல்
வேறொர் கார்முகம் வாங்குமுன் அகலத்தில் வெய்யோன்
நூறு கோடி புங்கவங்களை அழுத்தலும் நொய்தின்
ஆறு கோடியொத் திழிந்தன அகலிருங் குருதி.

மாறுபாடிலாத கொடிய வில் முறிந்திடலும் எம்பிரான் முருகனுக்கு இளையோரான வீரவாகுதேவர் வேறொரு வில்லை எடுக்குமுன்பு கொடிய சிங்கமுகன் அவரது மார்பில் நூறுகோடி அம்புகளை தைத்திடவைத்தலும் அதுவேளை மிகுவிரைவாக வீரவாகுதேவர் மார்பில் நின்றும் கோடிக்கணக்கான ஆறுகள் போன்று பெரும் இரத்த நீர் வீரவாகுதேவர் நெஞ்சில் நின்றும் வடிந்தது. 273

குருதி யாகத்தின் இழிந்திடத் தன்சிலை குனித்துப்
பரிதி ஒண்கதிர் என்னநூ றுயிரம் பகழி
கருதி விட்டிடக் கருதலன் அங்கது காணு
இருது நாண்முகி லாமென அவைதொடுத் திறுத்தான்.

உடலின் நின்றும் இரத்தம் பெருகி வடிந்திடவும் வீரவாகுதேவர் எடுத்த வில்லை வளைத்து சூரியனின் பிரகாசமிக்க ஒளிக்கதிர்கள் இவை என்னும்படி நூறுயிரம் அம்புகளை குறிப்பால் நினைந்து விடுதலும் சிங்கமுகாசுரன் அதுகண்டு மாரிக்கால நாளின் முகில் மழைசொரிவது போன்று தானும் அத்தொகைய அம்பினைவிடுத்து அறுத்தான்; 274

அல்லி னோர்மதி எழுந்தென அவுணருள் உதித்த
மல்லல் வாலிய அரிமுகன் தொடுகணை மாரி
ஒல்லென் வாளியான் மாற்றியா யிரங்கணை உந்திச்
சில்லி ஆழிகள் அறுத்தவன் தேரினைச் சிதைத்தான்.

இராக்காலத்து ஓர் சந்திரன் உதயமானாற்போன்று அறியாமை மிகுந்த அசுரரிலே சிறிது வாலிய அறிவுடைமை கொண்ட சிங்கமுகாசுரன் விடுகின்ற அம்பு மழையினை வீரவாகுதேவர் விறுக்கெனத் தானும் அம்பினை விடுத்து மாற்றிப் பின்னரும் ஆயிரம் அம்புகளைச் செலுத்தி சிங்கமுகாசுரன் பெரும் தேர்ச்சில்லுகளை அறுத்துத் தேரினை அழித்தார். 275

ஏறுதேரழிந் திடுதலும் அரிமுகன் இமைப்பின்
மாறொர் வையமேற் பாய்ந்தனன் வார்சிலை வளைப்ப
ஆறு மாமுகற் கிளையவன் கணைகளால் அவுணன்
நூறு பத்தெனுஞ் சிலையையும் அறுத்தனன் நொடிப்பில்.

தான் ஏறிய தேர் அழிந்திடுதலும் சிங்கமுகாசுரன் ஓர் இமைப்பில் வேறொரு தேர்மிசைப் பாய்ந்து கொண்டு தனது வார்கொண்ட பெருவில்லை வளைத்திடலும், அதுவேளை ஆறுமுகமுடைய பெருமானுக்கு இளையவராகும் வீரவாகுதேவர் தனது வில்லில் நின்றும் விடுத்த அம்புகளாலே சிங்கமுகாசுரனுடைய கையில் கொண்ட ஆயிரம் வில்லையும் நொடிப்பொழுதில் அறுததனர். 276

வில்லி ழந்தனன் மானமும் இழந்தனன் வீரச்
சொல்லி ழந்தனன் பெருமிதம் இழந்தனன் தொல்சீர்
எல்லி ழந்தனன் பெருமையும் இழந்தனன் இலங்கும்
பல்லி லிழந்திடு விடவரா ஒத்தனன் பதகன்.

இப்படியாகப் பாதகனான சிங்கமுகன் வில்லை இழந்தான். மானமும் இழந்தான். முன்பேசிய வீரச்சொல்லை இழந்தான். பெருமிதம் இழந்தான். தனது மிகு முதுமையான ஒளியுடைய சீரை இழந்தான். பெருமைகள் அத்தனையையும் இழந்தான். அவனைப்பார்த்தால் இலங்கிடும் தனது பற்களை இழந்த நஞ்சுப்பாம்பு போன்றனன் சிங்கமுகன். 277

ஏதி லானொருங் காயிரஞ் சிலைகளும் இழந்து
மாது யர்ப்படு நிலைமையை நோக்கியே மறங்கொள்
பூதர் ஆர்த்தனர் அமரர்கள் ஆர்த்தனர் புரைதீர்
வேதர் ஆர்த்தனர் முகுந்தரும் ஆர்த்தனர் விண்மேல்.

பகைவனான சிங்கமுகன் ஒழுங்காக ஆயிரம் விற்களையும் இழந்து பெரும் துயரப்படுகின்ற நிலமையை நோக்கி மறங்கொண்ட பூதங்கள் யாவும் ஆர்த்தன; தேவர்கள் யாவரும் ஆர்த்தனர். குறை தீர்ந்த பிரமதேவர் ஆர்த்தார். அதுவன்றி விஷ்ணு மூர்த்திகளும் ஆர்த்தனர். எல்லாரும் வானமேல் நின்ற வண்ணமாக ஆர்த்தனர். 278

ஆயி ரஞ்சிலை ஒருதலை துணிந்ததும் அமரர்
நாய கன்தனக் கடியவன் விற்றொழில் நலனும்
மாய னாதியர் இகழ்ச்சியும் பூதர் தம் வலியுங்
காயு நெஞ்சுடை மடங்கல்மா முகத்தவன் கண்டான்.

ஆயிரம் வில்லும் ஒரே முறையாக முரிபட்டதும் தேவர்கட்கு நாயகரான முருகப்பெருமானின் அடியவர் வீரவாகுதேவரது விற்றொழிலின் பலமுடைய கைவன்மையையும்; திருமால்பிரமன் ஆதியான தேவர்களது இகழ்ச்சியையும் பூதங்களது வலியையும் கோபத்தால் எரிகின்ற நெஞ்சுடைய சிங்கமுகாசுரன் நோக்கினான். 279

தேவர் ஆர்ப்பையும் இந்திரர் ஆர்ப்பையுந் திசையின்
காவ லாளர்தம் ஆர்ப்பையும் எமையடக் கருதும்
மூவர் ஆர்ப்பையுஞ் சாரதர் ஆர்ப்பையும் முனிவோர்
ஏவர் ஆர்ப்பையுந் துன்பினுக் குதவுவன் என்ருன்.

சரிசரி இனி இந்தத் தேவரது ஆர்ப்பையும், இந்திராதியர்களது ஆரவாரிப்பையும் திசையின் காவலாளர்களது ஆரவாரிப்பையும், எமைக்கொல்லக் கருதிய பிரமா விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவரது ஆரவாரிப்பையும் பூதங்களது ஆரவாரிப்பையும் முனிவோர் எல்லோருடைய ஆரவாரிப்பு மகிழ்ச்சியையும் அவர்கட்கே மாறி அவர்கள்பால் மீண்டும் துன்பத்திற்கு இரையாகும்படி கொடுப்பேன் என்ருன் சிங்க முகன். 280

வேறு

தீயா ருக்கோ ரெல்லைய தானுன் திறல்மேலான்
தூயா ருக்கே இன்னல்பு ரிந்தான் தொலைகில்லான்
தாயாய் முந்தே தம்மை அளித்தாள் தருகின்ற
மாயா பாசந் தன்னையெ டுத்தான் மறமிக்கான்.

இவ்வாறு கூறிய தீயவர்கட்கு எல்லாம் எல்லையான அத்துணைக் கொடியோன்; வலியாலும் மேலாயவன்; தூய்மையான வாழ்வுடையோருக்கே தெரிந்து இன்னல் புரிந்தவன்: எக்காலமும் தொலைவிலாதவன சிங்கமுகன் தன்னைத் தாயாகி முன்னர் பெற்றெடுத்த மாயவள் தருகின்ற மாயபாசக் கயிற்றைக் கையில் எடுத்தான்; இச்செயலில் இரக்கமற்ற கொடுமைமிகுந்துள்ள அவன். 281

ஒட்டிப் போர்செய் மாற்றலர் தம்மை யொருபாலாற்
கட்டிக் கொள்ளா ஆருயிர் உண்டு கடிதேகிக்
கிட்டித் தொல்லை ஞாயிறு தோன்றுங் கிரியுய்த்து
விட்டுப் பேரா தாண்டுறை கென்னு வீசுற்ருன்.

அம்மாய பாசத்தை சிங்கமுகன் நோக்கி நம்முடன் நெருங்கிப் பந்தயம்வைத்து போர்செய்கின்ற பகைவர்யாரையும் ஒரு பாலாக நீ கட்டிக் கொண்டு அவர்களது உயிரை உண்டு விரைவாகச் சென்று சூரியதேவன் தோன்றும் உதயமலையை அடைந்து அவர்கள் உடலை அங்குபோட்டு அவர்களை விட்டுப் பேராது அங்கு நீ உறைவாயாக எனக்கூறி அப்பாசத்தை வீசுதலுற்ருன் சிங்கமுகன். 282

மறியா நிற்குந் தெண்டிரை ஏழும் வந்தொன் ருய்ச்
செறியா நிற்குங் கொல்லிது என்னத் திசைசூழ்போய்
எறியா நிற்கும் பாசமி ருட்கோ ரிடமாகிப்
பொறியா நிற்குந் தீயழல் சிந்திப் புகுந்தன்றே.

அப்பாசமானது உடன் வெளிக்கொண்டு திரைகளை அலைத்து வீசிடும் கருங்கடல் முற்றும் ஒருங்கே வந்துற்றது இப்படியோ! என இருண்டு திசை எங்கும் சூழ்ந்து போய் பரக்கின்ற அப்பாசம் இருளுக்கோர் இடமாகி செறிந்து இடை இடை பொறிகளாகி விளங்கிடும் நெருப்பையும் கக்கியவாறு வந்துகொண்டது. 283

சேணு டுற்ருேர் யாரும் இரிந்தார் செருவாற்றல்
பூணு நிற்கும் பூதரும் யாரும் பொருமுற்ருர்
ஆணு யுற்ருேர் யாரினும் மேலோன் அதுதன்னைக்
காணு ஈதோர் மாயைகொல் என்றே கருதுற்ருன்.

இப்பாசம் இவ்வண்ணம் வருதலும் வான்நாடுள்ள தேவர் முழுப்பேரும் ஓடினர்கள். போர்புரியச் சூழ்கின்ற வலிபூண்டு நிற்கும் பூதங்களும் மற்றைய வீரரும் ஏங்கிப் பொருமினர்கள், அதுபோது எல்லார்க்கும் தலைவனுக நிற்கும் ஆண்டகைமையுடைய வீரவாகுதேவர் இப்பாச இயல்பைக்கண்டு ஈதொரு மாயையாகுமோ என மனதில் எண்ணினர், 284

ஆர்ப்பாய் உற்ற தெண்டிரை கொல்லோ அஃதன்றேல்
போர்ப்பான் வந்த பாயிருள் கொல்லோ புயம்வீக்கி
ஈர்ப்பான் உற்ற நாணது கொல்லோ யாதேனுந்
தீர்ப்பேன் வல்லே என்று நினைந்தான் திறல்வாகு.

இது என்னே? ஆர்ப்பரித்து இரைந்துவரும் தெள்ளிய சமுத்திரமோ, அஃதிலாதிருந்தால் எல்லாவற்றையும் மூடிடும்படி வந்ததொரு கொடியஇருளோ. அல்லது எமது தோள்களை கட்டி ஈர்த்துச் செல்லும்படிவந்த நாணோ? யாதாயிருந்தாலும் இதை நான் முடிப்பேன் என்று நினைத்தார் திறலுடைய வீரவாகு. 285

ஆற்றான் மற்றிவ் வாறுதெ ரிந்தே அதுதீர்ப்பான்
மாற்று கின்ற தொல்படை தன்னை வாங்காமுன்
கூற்றாய் நின்றோன் வீசிய பாசங் குழுவோடுங்
காற்றாய் வந்திங் கியாவரை யுங்கட் டியதன்றே.

ஆற்றலினால் மிகுந்த வீரவாகுதேவர் மற்று இந்தப் பாசத்தின் வரவாற்றைத் தெரிந்து அதைத்தீர்த்திடும்படியாக எப்படையைப் பிரயோகித்து மாற்றலாமென நினைந்து அப்படையை எடுக்குமுன்பே, அங்கு இயமன்போன்று நின்ற சிங்கமுகாசுரன் வீசிய பாசமானது காற்றைப்போல்வந்து எல்லோரையும் சேரக்கட்டிக்கொண்டது. 286

பல்லோ ராகிப் போர்புரி பூதப் படையோரும்
வில்லோ ராகும் எண்மரும் ஏனை விறலோருந்
தொல்லோர் கூறும் ஆடல்கொள் மொய்ம்பின் துணையோனும்
எல்லோர் தாமும் வீக்குறு பாசத் திடையுற்றார்.

பலராகி அங்குநின்று போரிட்ட பூதப்படையோரும், வில்லாண்மையுடையோரான எட்டுப் பேரும், மற்றும் வலியுடைய இலக்கம் வீரரும், முன்னைப் பெரியோர் புகழ்ந்து கூறும் வீரத்தோள்கள் துணையாக உடைய வீரவாகுதேவரும் எல்லோர் தாமும் செலுத்தப்பட்ட பாசத்தின் இடையில் அகப்பட்டுக் கொண்டார்கள். 287

மேற்றான் எய்தி வீக்கிய பாசம் மிடல்வீரர்
மாற்றா நிற்பர் தொல்லுணர் வோடு மலிவாரேல்
ஆற்றா ரென்னச் செய்குவன் யானென் றவர்புந்தி
தேற்றா வண்ணஞ் செய்துள தம்மா சிறுபோழ்தின்.

எல்லோருடைய மேனிமேலும் சென்று கட்டிக்கொண்ட பாசமானது இந்த வலியுடைய வீரர் தாங்கள் என்னை உணர்ந்து கொள்வதற்குரிய முன்னைய உணர்வோடும் எனது வலியை நீக்கிடுவார் இருந்தால். ஆதலின் இவர்கள் உணர்விலாராகச் செய்வேன் என்று சிறுநேரத்தில் அவர்கள் மனம் தெளிவுகொள்ளாதபடி மயக்கியது. 288

## வேறு

தொன்னிலை உணர்வு மாழ்கித் தொல்வலி சிந்திச் சோரும்
அன்னவர் தொகையை எல்லாம் அந்தர நெறிக்கொண் டேகி
மின்னென அளக்கர் வாவி மேருமால் வரைபோல் நின்ற
பொன்னவிர் உதய மென்னும் பொருப்பிடைப் புகுந்த தன்றே.

மாயபாசமானது அவ்வண்ணமே தமது முன்னைய உணர்வு மாறி அழிந்து முதிய வலி எல்லாம் சிந்திடப்பெற்று சோர்வுறுகின்ற அவர்களின் தொகையாவற்றையும் வானமார்க்கமாகத் தூக்கிக்கொண்டு மின்னல்போல் சென்று கடல்யாவையும் கடந்து, அப்பால் மேருமலைபோல் அங்குநின்ற பொன்போலும் ஒளியுடைய உதயமலை என்னும் மலையிடத்துச் சேர்ந்துகொண்டது. 289

கதிபடர் கின்ற காலிற் கருத்தினிற் கடிதின் ஏகித்
துதியுறு திருவின் கேள்வன் துயில்புரி கடலில் துஞ்சும்
உதயமால் வரையின் எய்தி உயிர்ப்பிலா துறங்கு கின்ற
மதவலி வீரர் தம்மை வைத்துடன் இருந்த தன்றே.

வேகமுடன் செல்லும் காற்றைப்போல் மனவேகத்தைப்போல் பாசம் விரைவாக இவைகளைக் கொண்டுசென்று, யாவராலும் வணங்கப்படும இலக்குமிதேவியின் நாயகரான நாராயணப் பெருமான் யோகநித்திரை செய்யும் பாற்கடலில் இருக்கும் உதயம் என்னும் பெருமலையை அடைந்து, அங்கு மூச்சின்றி மயங்கி உறங்குகின்ற மதம்கொண்ட வலியுடைய வீரவாகுதேவர் முதல் வீரர்கள் யாவரையும் பூதங்களையும் வைத்துக்கொண்டு நீங்கிடாது உடன் இருந்தது. 290

விழுமிய பூதர் யாரும் வீரரும் விளிந்து வெய்யோன்
எழுதரும் உதயம் புக்கா ரென்பது தெரிந்து நோக்கித்
குழுவொடு பொருது ளாரைக் கொன்றுயிர் குடித்தேன் வல்லே
அழகிதென் னுற்றல் என்ருன் அமரரை அலக்கண் கண்டான்.

உயர்ந்த ஒழுக்கமுடைய பூதங்கள் யாவரும் இலக்கத்தெட்டு வீரரும் வீரவாகு தேவரும் அழிவாகி சூரியபகவான் உதிக்கின்ற உதயமலையிற் புகுந்தார் என்பதை அறிந்து கண்டுகொண்டு ஓகோ! கூட்டாக வந்து என்னுடன் போரிட்டாரைக் கொன்று நான் அவர்களது உயிரைக் குடித்துவிட்டேன். மிகுசுலபமாக இதைப் புரிந்த எனது ஆற்றல் மிகுநன்ருயது என்ருன்; எல்லாத் தேவரையுமே அலக்கண் படவைத்த சிங்கமுகாசுரன். 291

ஓடினுன் கொல்லோ போர்க்கென் னுற்றதும் இலேயோ எங்குந்
தேடினேன் காண்கி லேனுல் யாண்டையான் சிறுவன் அம்மா
சாடினுன் சாடி னுனென் றுரைப்பது சழக்கோ தம்பி
வீடினுன் அல்ல னேவென் றண்டங்கள் வெடிக்க ஆர்த்தான்.

சரி அப்படியாயின் இனி அந்த சிறுவனுகும் முருகன் இதுகண்டு ஓடிவிட்டனனே? அல்லது அவன்போருக்கு என வந்ததும் இலேயோ! எங்கும் சிறுவனைத் தேடினேன் யான், காணவில்லை. எவ்விடந்தான் அந்தக்குமரன் போயினுன். இது காலவரையும் வென்ருன் வென்ருன் எனக் கூறியது தப்போ? தம்பி வீரவாகு போய்விட்டான் அல்லவோ என்று அண்டங்கள் வெடிபடும்படி சிங்கமுகன் சிரித்தான். 292

கேசரி முகன்இவ் வாறு கிளத்தினன் ஆர்க்கும் எல்லைத்
தூசியின் முந்து போன தூதுவன் ஒருவன் நண்ணி
ஆசறு பூத வெள்ளம் ஆயிரத் தோடு செவ்வேள்
பாசறை இருந்தான் யானும் பார்த்தனன் வந்தேன் என்ருன்.

சிங்கமுகமுடைய அசுரன் இவ்வாறு பேசிக்கொண்டு ஆரவாரம் செய்திடும் காலேயில், தூசிப்படையில் முன்போன ஒரு தூதுவன் சிங்கமுகன் முன்னர் வந்து குற்றமற்ற பூதச் சேனைகள் ஆயிரம்வெள்ளம் என்னும் தொகையுடன் செம்மையாகும் திருச்கோலமுடைய ஆறுமுகக் கடவுள் பாசறையில் இருந்தான். நானும் அதனை பார்த்துக்கொண்டு இங்கு வந்தேன் என்ருன். 293

ஒற்றன துரையைக் கேளா ஒள்ளெயி றிலங்க நக்குப்
புற்றுறை அரவ மென்னப் புதல்வன்எற் பொருவான் அஞ்சி
மற்றவண் உறைந்தான் கொல்லோ வல்லேயில் யானே ஏகி
இற்றையோர் கணத்தில் அன்னுன் இருஞ்சமர் முடிப்ப னென்ருன்.

தூதுவனுடைய வார்த்தையை சிங்கமுகாசுரன் கேட்டு தனது பிரகாசமுடைய பற்கள் பளிச்சிடும்படி சிரித்து ஓகோ! புற்றினுள் இருந்திடும் பாம்பினைப்போன்று சிவகுமரன் என்னுடன் போர்புரிதற்கு அஞ்சி மற்று அங்கு இருக்கின்ருன் போலும்; சரி வலிதாக நான் அங்குசென்று இன்றைக்கு ஓர் கணப்பொழுதின் முன்னர் அவன் மேற்கொண்ட பெரும்போரை முடிவாக்கிவைப்பேன் என்ருன். 294

என்றனன் படரும் எல்லை இன்னதோர் நிகழ்ச்சி யாவும்
ஒன்றற நோக்கி வானோர் உயங்கினர் ஓட லுற்றார்
சென்றனன் அதனை நாடிக் காலெனுந் திறலின் வெய்யோன்
குன்றெறி நுதிவேல் அண்ணல் குரைகழல் பணிந்து சொல்வான்.

என்று இன்னவாறு சிங்கமுகன் கூறி எழுந்துசென்றிடும் நேரத்தில் இன்னதான தொரு நிகழ்ச்சிகள் யாவற்றையும் ஒன்றும் தவறாது நோக்கி தேவர்கள் பதைபதைத் தனா. ஓடத்தொடங்கினர். அதனை எல்லாம் உடன்கண்டுகொண்ட வாயுபகவான் என்னும் கொடியதிறல் உடையவனும் சென்றுகிரவுஞ்ச மலையை பொடிசெய்திட்ட கூரிய வேல்கொண்ட குமரப்பெருமானின் ஒலிக்கின்ற சிலம்புகள் அணிந்த பாதகமலங்களைப் பணிந்து முன்னின்று சொல்கின்றான். 295

அத்தகேள் பூதர் ரோடும் அடுபடைத் தலைவர் ஏகி
மெய்த்திறற் பெரும்போ ராற்ற வெகுண்டரி முகத்து வெய்யோன்
கைத்தலத் திருந்த சூழ்ச்சிக் கயிற்றினால் நமரை யெல்லாம்
எய்த்திட வீக்கி வெய்யோன் உதயத்தில் இட்டா னென்றான்.

எமது ஐயனே கேட்பீராக! இங்குள்ள பூதங்களோடும் கொலைசெயும் படைகள் பற்றிய வீரத்தலைவர்கள் யாரும்சென்று அசைவற்ற திறமையான பெரும் போரினைப்புரிந்திட, அதுவேளை கொடிய சிங்கமுகாசுரன் வெகுண்டு தனது கையிடத்து இருந்த வஞ்சனையான பாசக்கயிற்றால் எமது மக்களை எல்லாம் அவர்கள் களைத்து சோர்வுறும்படி கட்டி சூரியபகவானது உதயமலையிடத்து போட்டனன் என்றான். 296

ஆண்டகை வரம்பு சான்ற அறுமுக னவன்சொற் கேளா
யாண்டுளான் யாண்டு ளான்அவ் வரிமுகத் தவுணன் என்னத்
தூண்டிடு கொடித்தேர் மேலோன் சூழ்தரு படையின் சீரான்
மாண்டிடு பொறியால் இங்ஙன் வருகுவான் போலு மென்றான்.

ஆண்டகைமைக்கு தாமே வரம்பு எனும்படி நின்ற ஆறுமுகமுடைய கடவுள் வாயு தேவனின் வாக்கினைக் கேட்டு எங்குளான் எங்குளான் அந்த சிங்கமுகமுடைய அசுரன் என்னலும், அதுவேளை வேகமுடன் தூண்டிவரப்படும் கொடிகட்டியதேர் மேலாயவனாய் தன்னைப் புறஞ் சூழவரும் பெரும்படையின் சிறப்பையும் உடையனாய் அவன் தான் இறந்திடவேண்டும் என்னும் எண்ணத்தால் எம் பெருமானே! இங்குநோக்கி வருவான்போலும் என்றனன் வாயுதேவன். 297

என்னலும் நகைத்துச் செவ்வேள் அரியணை இருக்கை நீங்கிப்
பன்மணி குயின்ற செம்பொற் பாதுகை சரணஞ் சேர்த்திப்
பொன்னவிர் கழல்க ளார்ப்பப் புறங்கடை காறும் போந்து
தன்னயல் வந்த காலைத் தருதிநந் தேரை யென்றான்.

என்று வாயுதேவன் கூறலும், அதுகேட்டருளிய ஆறுமுகக் கடவுள் புன்னகை செய்து; தாம் அமர்ந்தருளிய சிம்மாசனத்தின் இருக்கையை விடுத்து எழுந்து: பல இரத்தினங்கள் பதிந்துள்ள செம்பொன்னிலான பாதுகைமீது தமதுபாதங்களை வைத்தருளி பொன்போல் மிளிரும் வீரக்கழல்கள் ஒலித்திட பாசறைத்தலத்தின் வெளி வாயில்தோறும் வந்து தனது அயலில் வந்த வாயுதேவனை நோக்கி இவ்விடத்து தந்திடுதி நமதுதேரை என்று திருவாய் மலர்ந்தருளினார். 298

ஆறுமா முகத்து வள்ளல் அருள்பணி தலைக்கொண் டேகி
மாறிலா முதல்வன் தந்த வையம தழைத்து வெங்கால்
தாறுசேர் கோலும் நாணுந் தாங்கினன் கடாவி உய்ப்ப
ஏறினான் அதன்மேல் ஐயன் இமையவர் யாரும் ஆர்த்தார்.

ஆறு பெருமுகமுடைய எம்மருள் வள்ளலின் அருள் நிறைந்த பணியை வாயு தேவன் கேட்டு தலைமேற்கொண்டுசென்று மாறிலாது எக்காலமே உள்ள ஈசன் சிவம் தந்த தேரை அழைத்து; கொடிய வேகமுடைய வாயுதேவன் அதன்மீது சாரதியாக

அமர்ந்து முன்கொண்ட சவுக்கினையும் கடிவாளங்களையும் கைப்பிடித்துத் தேரினைச் செலுத்திவந்து எமதுபெருமான் திருமுன் சேர்த்தலும், அதன்மேல் எமது ஆறுமுக முடைய ஐயன் ஏறினன். ஏறியபோது தேவர்கள் எல்லாரும் அரகரா சண்முகவா என ஆர்ப்பரித்துச் சூழ்ந்துகொண்டனர். 299

இந்திரன் கவரி சாய்ப்ப இமையவர் வட்டம் வீசச்
சந்திரன் தபனன் என்போர் தண்ணிழற் கவிப்புத் தாங்க
அந்தகன் உடைவாள் பற்ற இயக்கர்கோன் அடைப்பை கொள்ளச்
சிந்துநீர் அரசன் செம்பொற் படியகம் ஏந்தச் சென்றான்.

அதுவேளை இந்திரதேவன் வெண்சாமரை வீச தேவர்கள் ஆலவட்டம்வீச சந்திரன் சூரியன் என்பவர் குளிர்ச்சி நிறைந்த குடையைப் பிடிப்ப இயமன் உடைவாள் ஏந்திட இயக்கர்அரசன் குபேரன் காளாஞ்சியை ஏந்த சமுத்திர அரசன் வருணதேவன் செம்பொன்னாலான பூந்தட்டு ஏந்திட எம்பிரான் ஆறுமுகன் சென்றருள்கின்றார். 300

நாயகன் குமரன் போர்மேல் நடப்பது தெரிந்து பூதர்
ஆயிர வெள்ளத் தோரும் ஆர்கலி நாண ஆர்த்துக்
காயெரி உமிழுஞ் சூலங் கணிச்சிதண் டெழுவு நாஞ்சில்
மீயுயர் பழுவங் குன்றங் கொண்டனர் விரைந்து சூழ்ந்தார்.

எமது நாயகன் குமரன் போர் மேலாகிப் புறப்பட்டு சென்றருள்வதை அங்கு தங்கிய பூதங்கள் ஆயிரம் வெள்ளம் எனும் தொகையுடையோரும், இரைகின்ற சமுத்திரமும் நாணி வெட்கிடும்படி அத்துணையாக அரகரா என ஆர்ப்பரித்து எழுந்து எரிகின்ற நெருப்பு உமிழ்ந்திடும் சூலம் கணிச்சி தண்டு எழு நாஞ்சில் மிகவுயர்ந்த பெருமரம் மலை இவையாவற்றையும் கைக்கொண்டார்கள். எல்லோரும் வந்து எம்பிரான் ஆறுமுகனைச் சூழ்ந்து கொண்டனர். 301

அடித்தனர் பறைகள் சங்கம் ஆர்த்தனர் ஐயன் சீர்த்தி
படித்தனர் பாங்கர் எங்கும் பன்மணிக் கவிகை வட்டம்
பிடித்தனர் தமது வீரம் பேசினர் மூரி யேற்றுக்
கொடித்தொகை அநந்த கோடி கொண்டனர் குணிப்பில் பூதர்.

போர்முரசமுடன் பலவகைப்பட்ட மேளங்களையும் அடித்தார்கள். சங்குகளை ஊதி பேரிரைச்சல் எடுத்தார்கள் எம்பிரான் சீர்களை எடுத்துப் பாடினார்கள்; பக்கமாக எங்கும் பலமுத்துக்குடைகளை இரத்தினக் குடைகளைப் பிடித்தனர். தத்தமது வீரச்செயல்களைப் பேசினார்கள். வலிமைகொண்ட ஏறியினை உடைய இடபக்கொடிகள் அநந்தகோடியை கையில் பிடித்து ஏந்தி வந்தனர் அளவற்ற பூதர்கள். 302

மூவர்கள் முதல்வன் வந்தான் முக்கணன் குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தான்
ஏவருந் தெரிதல் தேற்றா திருந்திடும் ஒருவன் வந்தான்
தேவர்கள் தேவன் வந்தான் என்றன சின்ன மெல்லாம்.

பிரமா விஷ்ணு உருத்திரன் எனும் மும்மூர்த்திகட்கும் தலைவன் ஆறுமுகன் வந்தான். மூன்று கண்ணுடைய சிவபிரான் குமரன் வந்தான். பகைவர்க்கு ஓர் சிங்கம் போன்ற பெருமான் வந்தான். (பகையை ஒழிப்பவன் எனக்கொள்க). அருளாய வேற்படைக்கு வீரன் வந்தான். (இருளையும் மருளையும் நீக்கவல்லது வேல் அதைச் செலுத்தவல்லோன் அவன் ஒருவனே;) எவர்தானும் அளந்து அறிய முடியாதபடி அன்றும் இன்றும் என்றும் இருந்திடும் ஒருவனாய கடவுள் ஆறுமுகன்வந்தான். உலகை வாழ்வுறவைக்கும் தேவர்கட்கு எல்லாம் தேவனாய செல்வன் இதோ வந்தான் என்று இசைத்தன அங்கு உள்ள சின்னங்களாய காளம் தாரை முதலிய எல்லாம்; 303

ஆசறு பூதர் சூழ அமரர்வாழ்த் தெடுப்ப ஐயன்
பாசறைக் களத்தை நீங்கிப் பறந்தலை நிலத்தின் எல்லை
வீசுறு மருத்து மின்னும் வெள்குற நொடிப்பிற் செல்லக்
கேசரி முகத்தி னுனுங் கிளர்படை யோடு நேர்ந்தான்.

இவ்வாறு திரு ஓலக்கமுடன் குற்றமற்ற பூதங்கள் சூழ்ந்திட; தேவர்கள் வாழ்த் தெடுப்ப எமது ஆறுமுக ஐயன் பாசறைத் தலத்தை நீக்கி போர்க்களமாய நிலத்தின் எல்லையை அடைந்திடற்கு வேகமுடன் வீசிடும் காற்றும் மின்னலும் தமது துரித வேகம் குறைபட்டு வெட்குற எம்பிரான் நொடிப்பொழுதில் அங்கு சென்றிடலும்; சிங்க முகமுடைய கன்ம ரூபியான அசுரனும் வேகமுடன் வரும் தனது பெரும் படையோடும் எம்பிரானை எதரிட்டு வந்தான். 304

பருப்புறும் எழுவும் வான்றோய் பழுவமும் பரசுந் தண்டு
நெருப்புமிழ் சூல வேலும் நேமியுங் கொழுவுங் குன்றும்
பொருப்புறழ் பூதர் வீசிப் பொருக்கென அவுணர் தம்மை
மருப்புயர் களிற்றை மாவை வையத்தை அடுத லுற்றார்.

சிங்கமுகாசுரன் உடன் வந்த அசுரப் படைகள் முன்னுக நேர்ந்தபோது அவர் மீது பருத்து விளங்கிய எழுவாயுதத்தையும்; வானைத்தொடும் உயர்ந்த பெரும் மரத்தையும் மழுவாயுதத்தையும்; தண்டாயுதத்தையும் நெருப்பை உமிழும் சூல வேலினையும் சக்கரத்தையும் கொழுப்படையையும் மலையையும்; மலையை ஒத்த முரடும் பருமையும் கொண்ட பூதங்கள் எடுத்து வீசி விறுவிறென அங்கு வந்த அசுரரை உயர்ந்த கொம்பினை உடைய யானையை குதிரையை தேர்களை எல்லாம் அழித்திடலுற்றனர். 305

குந்தமும் மழுவுந் தண்டுங் குலிசமும் எழுவுங் கோலும்
முந்திய கழுமுள் வேலும் முசலமுங் கொழுவுஞ் சங்கும்
எந்திரக் கவண்வீழ் கல்லும் எஃகமும் பிறவு மெல்லாஞ்
சிந்திநின் றவுணர் பூதப் படையினைச் செறுத்த லுற்றார்.

அதுபோது படைகளை வீசிய பூதங்கள் மீது குந்தாயுதத்தையும் மழுவாயுதத்தையும் தண்டாயுதத்தையும் குலிசாயுதத்தையும் எழுவாயுதத்தையும் அம்பினையும் முன்தொட்டே பெரும் படையான கழுமுள்படையையும் வேலையும் முசலப் படையையும் தொழுப்படையையும் சங்கும், இயந்திரத்தால் வீசப்படும் கல்லும் சூலமும் இன்னும் பிற ஆயுதங்களையும் அசுரர்கள் செலுத்தி நின்று பூதப்படையினை அழிவு செய்திடலுற்றார். 306

இருதிறப் படைகள் தம்மில் இத்திறம் பொருத வெல்லைக்
குருதிவந் தலைப்ப மார்பு சென்னிதோள் குறைந்து வேறாய்த்
தரையிடை மறிந்தார் பல்லோர் சங்கரன் விடுத்த மூரல்
விரிகனல் சிதறிப் பற்ற வெந்துவீழ் புரம தேபோல்.

அசுரரும் பூதங்களுமாய இருதிறத்துப் படைகளும் தம்மில் இவ்வாறு போர்புரிந்த காலையில்; இரத்தம் சீறிடும்படி பலர் தங்கள் தலை தோள் அறுபட்டு உடலம் வேறாகி பூமியிடை வீழ்ந்து இறந்தார்கள். இவர்கள் வீழ்ச்சி எப்படி இருப்பதென்றால் சிவபிரான் விடுத்த புன்சிரிப்பில் தோன்றிய நெருப்பு சென்று பற்ற வெந்து வீழ்கின்ற புரம்போல் இருந்தன. 307

கண்டனன் அனைய செய்கை கனல்பொழி பரிதிக் கண்ணன்
மண்டமர் புரியா நிற்கும் மாற்றலர் தம்மைவாரி
உண்டனன் எனது சீற்றம் ஒழிக்குவன் ஒல்லை யென்னு
அண்டமும் திசையும் தானே ஆகவோர் வடிவம் கொண்டான்.

அந்தச் செய்கையை கோபத்தால் நெருப்புப் பொழிந்திடச் சுழல்கின்ற கண் கொண்ட சிங்கமுகாசுரன் கண்டான். என்னுடன் கொடும்போரினைப் புரிந்து நிற்கும் என் பகைவரது தொகையை எல்லாம் என்கையால் வாரி உண்டு எனது கோபத் தைத் தணிப்பேன் என்று விரைவில் அதற்காகவேண்டி அண்டமும் திசையும்தான் ஒரு வனே ஆகிடும்படி அத்தகைய பெரியதொரு வடிவம் கொண்டான். 308

ஆயிர முடியின் மௌலி அண்டத்தின் முகட்டை நக்கப்
பாயிருங் கரங்கள் அண்டப் பாங்கரை அலைப்பப் பாருட்
போயின பதங்கள் அண்டத் தடியினைப் பூழை செய்ய
மாயையால் இனைய வாறோர் வடிவுகொண் டார்த்து வந்தான்.

அவனுடைய ஆயிரம் தலையில் உள்ள முடிகள் அண்டத்தின் முகட்டை முட்டிக் கொள்ள; பெரிய அவனது கைகள் அண்டங்களின் பக்கங்களை அலைத்திட; பூமியில் கீழாகப் போயின அவனது காலின் கீழுள்ள அண்டங்களை துளை செய்ய இவ் வாறாக மாயையின் வலியால் ஓர்பெரிய வடிவம் கொண்டு ஆரவாரித்து வந் தான் சிங்கமுகன். 309

வந்திடு சீற்றத் துப்பின் மடங்கலின் தோற்றம் நோக்கித்
அந்தகன் அசைந்து நின்றான் ஆதவன் இரிய லானான்
இந்திரன் துளக்க முற்றான் எரிபதை பதைத்துச் சோர்ந்தான்
சிந்தையின் மருட்கை உற்றார் திசைமுகன் முதலாம் தேவர்.

கோபம் பெருகிவரும் நிலையால் மேலோங்கிய வடிவு கொண்ட சிங்கமுகாசுர னின் வடிவைக்கண்டு இயமன் அசைந்துபோய் நின்றான். சூரியன் தன் இடம் விட்டு ஓட்டமெடுத்தான். இந்திரன் நடுக்கம் கொண்டான். அக்கினி பதை பதைத்துச்சோர்ந்தான். மனசிலே மயக்கமும் கவலையும் கொண்டனர் பிரமதேவர் முதலாய கடவுளர்கள். 310

வேறு

அன்னதொர் எல்லையில் ஆளி முகத்தோன்
முன்னுறு பூதம் முழங்கொலி நீத்தம்
என்னதும் அங்கை இராயிரம் ஓச்சி
உன்னுமுன் வாரினன் உண்டல் பயின்றான்.

அவ்வாறாக அனைவரும் அச்சமுற்ற எல்லையில் சிங்கமுகாசுரன் முன்பு நின்று முழங்கி ஒலித்து ஆர்ப்பரித்திடும் பூதங்களாய வெள்ளம் எல்லாவற்றையும் இப் பெரு வடிவத்தின் இரண்டாயிரம் கையையும் செலுத்தி நினைக்குமுன்பே வாரி வாரி அவைகளை வாயில் இட்டு உண்பதைப் பழக்கிக் கொண்டான். முன் ஒரு போதும் இப்படிப் பூதங்களை வாரி உண்ணவில்லை. ஆனால் இன்று செய்தலாலே உண்பதற்கும் முதன் முதல் பயின்றான் போலும். 311

ஈட்டுறு பூதரி ருங்குழு வத்தை
மோட்டுறு சிங்கமு கன்கர முற்றும்
நீட்டினன் அள்ளுதல் நேமிகள் மாறாய்
மாட்டுறு கொண்டல்கள் வாருவ போலும்.

நெருக்கமாக வந்த பூதங்களின் பெரும் கூட்டத்தை முரடாகும் பெருவடிவு டைய சிங்கமுகாசுரன் தன்கைகளை முற்றிலும் நீட்டி அள்ளுதல், முகில்கள் சமுத் திரத்தை உண்பதை விடுத்து சமுத்திரம் முகில்களை உண்டிட மாறாக வாரிக்கொள் ளல் போன்றது. 312

ஆயிர கோடியொ ரங்கையி னுகப்
போயின பாணிகள் பூதரை அள்ளச்
சீய முகங்கெழு செம்மல் அகன்பேழ்
வாய்களில் இட்டு விழுங்கினன் மன்னோ.

சிங்கமுகன் பூதங்களை அள்ளுங்கால் ஆயிரகோடி பூதங்கள் ஒவ்வொரு அழகிய கையினாலும் அள்ளிட அள்ளிட அவன் கைகளில் போயின. அவ்வாறு போகின்ற அத்தனை கோடி பூதங்களையும் சிங்கமுகாசுரன் அகன்ற பெரிய ஆயிரம் வாய்களில் இட்டு விழுங்குகிறான். இச் செயல் பெரிதொரு அற்புதமாயது. 313

மீனம தாக வியன்படை அங்கைக்
கானுறு குன்று கறித்திற ளுக
வானபல் பூதரை யட்டிடு சாலைப்
போனக மாமிசைந் தான்புகை வாயான்.

கோபத்தினால் புகைவரும் வாயையுடைய சிங்கமுகாசுரன் அப்பூதங்களைவாயில் இட்டு உண்ணுங்கால் பூதங்களின் அழகிய கைகளில் பற்றிய மலைகளே பொரிக் கறியாகவும் இன்னும் வேறு கறிகளாகவும் அப்பூதங்கள் உடலத்தை சமையல் அறையில் சமைத்த சோறாகவும் அமையவிழுங்கி உண்டான் போலும். 314

அண்டமொ ராயிர மாங்கொரு பாங்கர்
விண்டுவெவ் வேறு விளங்குவ போலுங்
கண்டகன் வெய்யக ணங்களை எல்லாம்
உண்டிடு கின்ற உலப்பில பேழ்வாய்.

கொடியவனான சிங்கமுகாசுரன் கொடிய பூதங்களை எல்லாம் எடுத்து ஓய்வின்றி உண்டிடுகின்ற ஆயிரம் அகன்ற வாய்களை நோக்கினால் ஓராயிரம் அண்டங்கள் அவைகளின் ஒரு பக்கத்திலே அங்கு வெடிபட்டுப் பிளந்து வேறுவேறாக விளங்குவது போன்றது. 315

செப்பரும் வென்றிகொள் சீயமு கத்தோன்
கைப்புகு பூதக ணத்தினர் யாரும்
அப்பெரு வாய்களின் ஆற்றுறு மாக்கள்
உப்பிடை சென்றென உற்றனர் அன்றே.

சொல்லற்கரிய வெற்றியினைக் கொள்ளும் சிங்கமுகாசுரனது கையில் அகப்பட்டுக் கொண்ட பூதகணத்தர் யாவரும் அவனது அந்தப் பெரிய வாய்களின் இடத்தே போயிடுகின்ற தன்மை ஆற்றினிடத்தே அகப்பட்டுள்ள மிருகம் அள்ளுண்டு ஆற்றுடன் கடலில்சென்று சேர்ந்திடும் தன்மையை ஒத்தது. 316

தானவன் அங்கை தனிற்படு பூதர்
மேனிகழ் வாய்தொறு மேவரு பான்மை
ஊனமில் விண்ணவர் ஊர்தொறும் இம்பர்
மானவ ரியாரும் வழிக்கொளல் போலும்.

சிங்கமுகாசுரனுடைய அழகிய கைகளிடத்து அகப்பட்ட பூதங்கள் மிக உயர நின்ற அவன்வாய் தோறும் போய்க்கொண்டிருப்பது எப்படியெனில் குறைவிலாத தேவர்களின் ஊர் தோறும் இவ்வுலகில் வாழ்கின்ற மனிதர் எழுந்து போதல் போன்றது. 317

மண்ணிது அன்றெனின் வானவர் வைகும்
விண்ணிது அன்றெனின் வெவ்வசு ரேசர்
நண்ணுல கீதென நாடினர் தீயோன்
கண்ணகல் வாயது கண்டிடு பூதர்.

தீயவனான சிங்கமுகாசுரனின் வாய்க்குள் சேர்ந்து கொண்ட பூதங்கள் அவன் வாயை நோக்கி இது மண்ணுலகமோ? அதுவன்றெனின் தேவர்கள் இருக்கும் விண்ணுலகமோ? அதுவும் அல்லதென்றால் கொடிய அசுரத்தலைவர் வாழ்ந்திருக்கும் உலகமோ என அதனை நாடியே ஐயமுடன் பார்க்கின்றனர். 318

வாய்க்கொளும் எல்லை மடங்கல் முகத்தோன்
மூக்குடன் அஞ்செவி மூலமும் வல்லே.
நோக்கினர் இங்கிது நூழைகொல் என்னு
ஊக்கொடு சிற்சில ரோடினர் போனுர்.

சிங்கமுகாசுரன் பூதங்களை வாயில் போட்டுக் கொள்ளும் நேரத்து அப்பூதங்கள் அவனது வாய்க்குள்ளால்போகும் போது அவனுடைய மூக்குடன் அழகிய காது இவற்றின் மூல இடங்களையும் அக்கறையுடன் நோக்கினராய் இங்கு நாம் வந்த இடத்தின் வெளியேற உற்ற வாயிலோ இவைஎன்று சிற்சில பூதங்கள் மிகு ஊக்கத்துடன் அவ்வழியால் ஓடினுர்கள். 319

அந்தமில் சீயன் அகன்பெரு வாய்போய்க்
கந்தரம் நீங்கினர் நெஞ்சு கடந்தார்
உந்திபு குந்தனர் ஒண்புவி யுள்ளோர்
சிந்துறு கீழ்நிலை சென்றுறு மாபோல்.

முடிவிலாத வலியுடைய சிங்கமுகாசுரனின் அகன்ற பெரிய வாயினில் அவர்கள் சென்று கழுத்தையும் கடந்தனர். நெஞ்சையும் கடந்தனர். அப்பால் அவன் வயிற்றினுள் போய்க் கொண்டார். இத்தன்மை இப்பூமியில் உள்ள மனிதர் சமுத்திரத்தின் உள்ளகீழான நிலைகளில் மெதுவாகச் சென்று அடைவது போன்றிருந்தது. 320

சீயமு கங்கெழு செம்மலு யிர்ப்பிற்
போயினர் உந்திபுகுந்தவர் சில்லோர்
ஆயிரம் யோசனை அந்தரம் மீண்டு
மேயினர் அங்கவன் மீண்டவு யிர்ப்பால்.

சிங்கமுகம் கொண்ட அசுரத்தலைவன் மூச்சு எடுத்திடும்போது வயிற்றுள் போயின பூதங்களில் சிலர் அவன் சுவாசத்தால் மேல் இழுபட்டு வானில் ஆயிரம் யோசனை தூரம் சென்றும், பின் அவன் மறு சுவாசத்தால் திரும்பி அத்தூரம் கடந்து மீண்டும் வயிற்றை அடைந்து கொள்கின்றனர். 321

வெவ்விட மென்ன விளங்கசு ரேசன்
துவ்விட வேயக டுற்றிடு தொல்லோர்
அவ்விடம் யாவினும் ஆதியை உன்னற்
கிவ்விட மேயினி தென்றனர் சில்லோர்.

கொடிய நஞ்சு எனும்படி விளங்கிடும் அசுரர் தலைவன் சிங்கமுகன் விளுங்கிடுதலும் அவன் வயிற்றினுள் சேர்ந்துகொண்ட தொன்மையுடைய பூதங்கள் அந்த இடத்தைப் பார்த்திடும்போது அமைதியாக இருந்ததால் சரி ஆதியான பெருமானை நாம் தியானித்து தவம் செய்வதற்கு ஏற்றதொரு இனிய இடமாயுள்ளதே இது என்றனர் சில பூதங்கள். 322

## வேறு

களித்தவன் மடியுறு கணவ ராயிடைக்
கிளைத்தனர் கைகளிற் படையிற் கீறினர்
துளைத்தனர் கெடாமையில் தொல்லை வன்மைபோய்
இளைத்தனர் ஒருசிலர் யாது செய்வரால்.

மிகவும் களிப்புடன் நின்ற சிங்கமுகனது வயிற்றினில் புகுந்த பூதங்கள் அதனின்றும் வெளிவர அவன் வயிற்றைக் கைகளால் பிய்த்தார்கள்: படைகளால் கிழித்தார்கள். துளைத்துப் பார்த்தார்கள் எவ்வகையாலும் அவனது வயிறு கெடாதிருக்கக் கண்டு தமது முன்னைய வலிகளும் கெட்டுக் களைத்து இளைத்துநின்றனர் ஒரு சில பூதங்கள்; பாவம் அவைகள் பின் யாதுதான் செய்வார்கள்? 323

ஆயிரம் வெள்ளமாம் ஆடற் பூதரை
வாயிடைப் பெய்துதன் அகட்டில் வைத்துள
சீயமா முகத்தவன் செயலைப் பற்பகல்
ஓய்வற மொழியினும் ஒழிதற் பாலதோ.

எம்பெருமானுடன் சேனையாகவந்த ஆயிரம் வெள்ளம் என்னும் போர்ச் செயலுடைய பூதங்களை வாரிவாரி வாயில் போட்டு விழுங்கி வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கும் சிங்கமுகாசுரனது செயலைப் பலநாட்களாக நாம ஓய்வின்றி எடுத்து ஓதினாலும் அவை ஒழிந்திட முடியுமோ? 324

இத்திறம் நிகழ்ந்திட ஈண்டு பாரிடர்
பத்துநூ றெனப்படும் பரவை நீத்தமுங்
கைத்தலம் வாரினன் கயவன் மோட்டினுள்
வைத்தலுங் கண்டனர் வானு ளோரெலாம்.

இத்திறமான செயல்கள் நிகழ்ந்திட இங்குள்ள பூதங்கள் ஆயிரம் வெள்ளம் எனப்படும் சமுத்திரம் போன்ற பூத சேனைகளையும், வஞ்சகனான சிங்கமுகன் கையால் வாரி வாரி வயிற்றினுள் வைத்ததைக் கண்டனர் வானில் நின்ற தேவர்கள் யாவரும். 325

எண்கெழு பூதரை நுங்கி னான்இனி
மண்கெழு பொருளெலாம் வாரி நுங்குமால்
விண்கெழு நம்மையும் விரைவிற் பற்றியே
உண்குவன் எனமருண் டும்ப ரோடினார்.

எண்ணில் மிகுந்த பூதங்களை இச் சிங்கமுகன் விழுங்கினான்; இனி மண்ணில் நிலவிடும் பொருள் எல்லாவற்றையும் அள்ளி விழுங்குவான். இத்துடன் அமையாது இவன் விண்ணில் நின்ற எம்மையும் விரைவில் பிடித்து உண்டிடுவான் எனப் பயந்து அத்தேவர்கள் எல்லோரும் ஓடினார்கள். 326

நேடிய ஒற்றுவர் நின்றி லார்விரைந்
தோடினர் அவுணர்கோன் உபயத் தாழ்மலர்
சூடினர் சென்னியில் தொழுத கையினர்.
மாடுறு பலசன மகிழக் கூறுவார்.

இச்செயலை நோக்கிய அசுர தூதுவர் அங்கு நின்றிடாது விரைவாக மகிழ்வாய் ஓடினார்கள். ஓடிச்சென்று அசுரர் மன்னவனை சூரபன்பனது அழகிய மலர் போன்ற இரு திருவடிகளில் தாழ்ந்து தலைமீது அவை தங்கிட வணங்கினார்கள். கைகளைக் கூப்பித் தொழுதவராய் சூரபன்மனை பக்கராக நின்ற அசுரராகும் பரிசனரும் மகிழுமாறு கூறுகின்றார்கள். 327

ஏதமில் அரிமுகத் திளவல் கந்தவேள்
தூதனைப் பிறர் தமைத் தொலைவில் பூதரில்
பாதியை நாண்வலைப் படுத்து வீட்டியே
ஆதவன் எழுகிரி யகத்தர் ஆக்கினான்.

ஏதம் ஒன்றும் இலாத சிங்கமுகமுடைய உமது நம்பி முருகப் பெருமானது தூதனை பிறர் தங்களை தொலைவிலாத பூதசேனைகளில் பாதியான ஆயிரம் வெள்ளத்தைத் தனது பாசக்கயிற்றினால் கட்டிக் கொன்று சூரியன் எழுகின்ற உதய மலையின் உள்ளே அவர்களை இட்டான். 328

ஈங்கிது வினவியே ஈசன் தன்மகன்
தாங்கிய வேலொடு சமரின் ஏற்றிட
ஓங்குமோர் வடிவுகொண் டுனது பின்னவன்
ஆங்கெதிர் பூதரை அள்ளி நுங்கினான்.

இதனைக் கேட்டு ஈசன் சிவனின் திருக்குமரன் திருக்கரத்தில் தாங்கிய வேலு டன் போர்க்களம் வந்து போர் செய்திடும்படி ஏற்றிட. அதுவேளை உமது தம்பி பெரியதொரு வடிவுகொண்டு அவனை எதிர்த்து வந்த பூதங்களை எல்லாம் அள்ளி விழுங்கினான். 329

இவ்வரை நிகழ்ந்தன இனைய இத்துணை
மைவரு மிடற்றினன் மதலை யோடுபோர்க்
கவ்வையை இயற்றிடுங் கன்னல் ஒன்றினில்
தெவ்வர்கள் இலரெனச் செய்து மீளுமால்.

இவ்வகையாக இச்செயல்கள் நிகழ்ந்தன. இத்துணை நேரத்தில் அவர் கருமை வந்த கண்டமுடைய கடவுள் சிவபிரான் மைந்தர் ஆறுமுகனுடன் போரினை அக் கறையுடன் புரிந்திடுவார். நாம் நினைக்கின்றோம். இனி ஒரு நாழிகைப் பொழு தில் பகைவர் என்பவர் இங்கு இனி இல்லை எனச் செய்திட்டு உமது தம்பிமீண் டும் வருவார் எனக் கூறினார்கள் அத்தூதுவர்கள். 330

என்னலும் அரியணை இகந்து போய்த்தழீஇ
நன்னய மொலிபல நவின்று தூதுவர்
உன்னினர் விழைந்தசீர் உதவி மன்னவன்
தன்னுழை ஒருவனை நோக்கிச் சாற்றுவான்.

என்று தூதுவர்கள் கூறக் கேட்டவுடனாக சிங்காசனத்தினின்றும் சூரபன்மன் இறங்கி அத்தூதுவர்பால் சென்று அன்பினால் தழுவி, நல்ல நயமுடைய வார்த்தை களை அவர்கட்குச் சொல்லி இத்தகைய மகிழ்ச்சி உரையை எனக்கு அன்பாகச் சொல்ல வந்த உங்கட்கு வேண்டியதெல்லாம் தருவேன் என அவர்கட்கு அவரவர் விரும்பிய பொருளெலாம் கொடுத்தபின் தனது பக்கராகநின்ற ஒரு தூதுவனை நோக்கிச் சூரபன்மன் சொல்வான். 331

கந்தனொ டரிமுகன் கனன்று போர்செய்வான்
முந்துள தானையின் முடியும் பற்பல
இந்தநன் னகருறை படைகள் யாவையும்
உந்துதி ஆயிடை ஒல்லைநீ யென்றான்.

தூதுவனே! கந்தசுவாமியொடும் சிங்கமுகாசுரன் கோபமுடன் போர்செய்திடு தற்கு முன், அவனுடன் சென்ற சேனைகள் பற்பல அழிந்து போய்விடும். ஆதலின் இந்த நல்ல வீரமகேந்திரபுரத்து உறைகின்ற எனது படைகள் யாவற்றையும் அவ் விடத்துப் போரிடப்போகுமாறு நீ உடனே செலுத்திடுவாய் எனக் கட்டளையிட் டான். 332

சாற்றிய வுரைகொடு தாழ்ந்து கம்மியன்
காற்றென ஏகியே கறங்கு தானையுட்
போற்றலன் அமரிடைப் போமின் போமினென்
றேற்றுரி முரசினை எறிவித் தானரோ.

சூரபன்மன் சொல்லிய கட்டளை வார்த்தையை அத்தூதுவன் ஏற்றுக்கொண்டு, சூரபன்மனை தாழ்ந்து வணங்கி, அங்கு நின்றும் காற்றைப்போல் வேகமுடன் சென்று இரைகின்ற சேனையுட்புகுந்து அவர்களை நோக்கி எம்பகைவருடன் செய்திடும் போரிடை நீர் போமின் போமின் என்று இடபத்தின் தோலால் ஆக்கிய முரசப் பறையை அறைவித்தான். 333

பணையொலி கேட்டலும் பதியுள் வைகிய
இணையறு தானைகள் வெள்ளம் யாவையும்
மணிகெழு வகுப்புடன் ஆர்த்துச் சென்றுசூர்த்
துணையவன் அமர்புரி சூழல் புக்கவே.

முரசப்பறையின் ஓசைகேட்டலும், அப்பதியுள் தங்கியிருந்த இணையற்ற வலியுடைய சேனைகளின் வெள்ளங்கள் யாவும் அணிகொண்ட வகுப்புடன் வரிசையாக ஆரவாரித்துச் சென்றனவாய். சூரபன்மன் தம்பி சிங்கமுகாசுரன் போரிட்டு நிற்கும் அப்பகுதியை அடைந்துகொண்டன. 334

அம்புதி யாமென அணிகஞ் சென்றுழித்
தும்பையஞ் சிகழிகைச் சூரன் என்பவன்
எம்பிதன் போர்வலி காண்பன் யானெனுச்
செம்பொனந் தவிசினுந் தீர்ந்து போயினுன்.

கடல்புரண்டு செல்வதுபோன்று சேனைகள் சென்றநேரத்து, தும்பை மலரின் மாலையைச் சிரசில் சூடிக்கொண்ட சூரபன்மன் என்பவன் எனது தம்பியின் போர் வலிமையைக் காண்பன்யான் என்று, செம்பொன்மயமான சிம்மாசனத்தில் நின்றும் கீழிறங்கிப் போயினுன். 335

தன்பெரு மந்திர நடுவண் தங்கிய
கொன்பெருஞ் சிகரியாம் மேருக் குன்றின்மேல்
இன்புறு திருவொடும் ஏறி னுனரோ
பொன்புனை இதயமேல் இரவி புக்கென.

தனது பெரிய அரசசபையில் சென்று, அங்கு அச்சபையின் நடுவில் தங்கியிருக்கின்ற மிகப்பெரியதொரு மேருமலைபோன்ற கோபுரம்மீது பெருகுகின்ற இன்பத்திருவுடன் ஏறினுன். அவன் அப்பொற்கோபுரத்து ஏறுதல், பொன்னுலான அலங்காரமுடைய மேருமலைபோல் சூரியன் புக்கதுபோன்றிருந்தது. 336

தாதவிழ் தார்முடித் தம்பி கொண்டதோர்
மேதகு வடிவமுந் தமியன் வேளுறப்
பூதர்கள் உண்டியாய்ப் போன தன்மையுங்
காதலின் அவுணர்கோன் கண்ணின் நோக்கினுன்.

அக்கோபுரத்தின் உச்சிமீது ஏறிக்கொண்ட அசுரர்தலைவன் சூரபன்மன்; மகரந்தப்பொடிகள் சிந்திடும் பூமாலையணிந்த முடியுடைய தம்பி சிங்கமுகாசுரன் கொண்டதொரு பெருவடிவமும், முருகப்பெருமான் படைத்துணையின்றி தனியனுக நின்றிட, பூதங்கள் உணவாகிப்போனதொரு தன்மையையும் காதலுடன் தன் கண்ணுல் நோக்கினுன். 337

வருமித மென்றுமன் னுயிர்கட் கல்லல்செய்
கருமித வழிக்கொரு கனலில் தோன்றினுன்
பெருமிதம் விம்மிதம் பெரிதும் எய்தினுன்
உருமித மாமென நகைக்கும் ஓதையான்.

தனக்கு இதம்வரும் என்று மேலான நல்ல உயிர்கட்கு எஞ்ஞான்றுமே அல்லல் செய்திடும் கொடியதொரு பாவ வழிக்கு ஓர் நஞ்சை ஒத்துத் தோன்றிய சூரபன்மன் தம்பியின் கொடும் செயலைக்கண்டு பெருமிதமும் விம்மிதமும் பெரிதும் அடைந்தான், இடியின் ஓசைபோன்று சிரிக்கின்ற சத்தமுடையவனுய்.

மூர்க்கரை மூர்க்கர் உகப்பர் எனும் முதுமொழிக்கிணங்க பாவச் செயல்களுக்காகப் பிறவி எடுத்தோர் பாவச் செயல்களை தாம்மேற்கொள்ளும்போதோ, அன்றி பிறர் மேற்கொண்டிடும்போதோ அதுகண்டு மகிழ்வர். நன்னெறி செய்திடுதல் அத்தகையோர்க்கு அருவருப்புடையதாக இருப்பது இயல்பாக உளது; இந்த உண்மையை நாம் சூரனுடைய வாழ்க்கையில் கண்கூடாகக் காணலாம். 338

இங்கிவன் நின்றிட இதற்கு முன்னரே
சங்கையில் பாரிடத் தானை முற்றவுஞ்
சிங்கமா முகத்தவன் நுகருஞ் செவ்வியின்
அங்குறும் அறுமுகன் அதனை நோக்கினுன்.

இங்கு இச்சூரபன்மன் கோபுரமேல் ஏறிய பிரகாரம் இப்படி மகிழ்வால் நின்றிட; இதற்குக் குறைகள் இலாத பூதங்களாய சேனைகள் முழுவதையும் சிங்கமுகாசுரன் உண்டுகொள்ளும் செவ்விய நிலையினை அங்குவந்து சேர்ந்தருளிய ஆறுமுகமுடைய பெருமான் அதனை நோக்கியருளினர். 339

ஒருத்தனை யாகியே உலகெ லாமடும்
நிருத்தன தருள்மகன் நேர லாரொடுஞ்
செருத்தொழில் புரிவதோர் சிறிய ஆடலைக்
கருத்திடை உன்னினன் கணிப்பில் ஆற்றலான்.

தான் ஒருவனுகியே உலகம் எல்லாவற்றையும் சங்கரித்திடும் நடமாடும் பெருமான் சிவமூர்த்தி தந்தருளிய அருள் நிறைந்த ஆறுமுகமுடைய பெருமான் பகைவரான அசுரருடன் போர்த்தொழில் செய்வதொரு சிறிய திருவிளையாடலை தமது கருத்திடை நினைந்தருளினர், கணித்திடமுடியாத பேராற்றல்கொண்ட அப்பெருமான். 340

## வேறு

செய்ய தாமரை வனங்களுஞ் செங்கதிர்த் தொகையும்
ஐய சேயொளி ஈன்றிருந் தென்னஆ றிரண்டு
கையும் மூவிரு முகங்களும் உடையவன் காலோன்
வையம் உந்திட அடுதொழில் இயற்றுவான் வந்தான்.

செம்மையாகச் சிவந்த தாமரைப்பூவான வனங்களும், சிவந்த கிரணங்களை உடைய சூரியர்களின் தொகையும் இணைந்து அற்புதமான செவ்வொளியினைத் தோற்றுவித்துளது எனும்படியான பன்னிரண்டு கைகளும் ஆறுமுகங்களும் உடையவன்; வாயுதேவன் தேரைச்செலுத்திட சங்காரத் தொழிலைப் புரியுமாறு சிங்கமுகாசுரன்முன்பு வந்தருளினர். 341

## வேறு

வந்திடு கின்ற காலை வயப்பெரும் பூதர் யாரும்
அந்தமுற் றதனை யோரா அடுகரி பரிதேர் செற்ற
வெந்திறல் அவுணர் கோன்றன் மேதகு படைஞர் முற்றுங்
கந்தவேள் தன்னைச் சூழ்ந்தார் கனலிசூழ் கடலே யென்ன

எம்பிரான் போர்க்களத்து வந்துள்ள காலையில் அங்கு அவர்முன்வந்த வெற்றியுடைய பூதங்கள்யாவும் முடிவாகியதை உணர்ந்துகொண்டு கொலைசெய்யும் யானை குதிரை தேர் எனக் கோபமிகுந்த கொடும் திறலுடைய அசுரர் தலைவன் சிங்கமுகாசுரனுடைய மேன்மையான படைகள் எல்லாம் முருகப்பெருமானை வந்து சூழ்ந்நார்கள், சூரியனைச் சூழ்ந்திடும் கடல்போன்று: 342

சூழ்தரும் அவுண வீரர் தொலைவில்தம் படைகள் முற்றும்
ஊழ்தரும் உருமிற் பெய்ய உலகுடை முதல்வன் காணக்
காழ்தரு மேரு அன்ன கார்முகம் ஒன்று வாங்கி
வீழ்தரும்அருவி போலும் வியன்குணத் தோதை கொண்டான்.

எம்பிரான் ஆறுமுகனைச் சூழ்ந்துகொண்ட அசுரவீரர் யாவரும் தொலைவற்ற தமது படைகள் முழுவதையும் ஊழின் முறையாக வந்திடும் இடியேறு போல் செலுத்திட அதனை எல்லா உலகமும் தனதாக உடைய ஆறுமுகப்பெருமான் கண்டருளி பெருமை தரும் மேருமலைபோன்ற வில் ஒன்றை எடுத்து வளைத்து மலையினின்றும் வீழ்கின்ற ஆறுபோன்று மிக்கதொரு நாணின் ஓசையைச் செய்தார். 343

ஆயிர கோடி ஞாலத் தண்டங்கள் வெடித்த மற்றைப்
பாயிரும் புனலின் அண்டப் பத்திகள் பகிர்ந்த பாங்கர்
தீயழல் அண்டங் கீண்ட செறிமருத் தண்டம் விண்ட
மீயுயர் வெளிமு தண்டம் வெய்தென உடைந்த அன்றே.

அந்த நாண் ஓசையின் அதிர்ச்சியால் ஆயிரம்கோடி பூமண்டலங்கள் வெடித்தன; மற்றைய பெரும் நீராகும் அண்டங்களின் வரிசைகள் வெடித்தன. அதன் பக்கராக உள்ள நெருப்பின் அழல்கொண்ட அண்டங்கள் பிளந்தன. எங்கும் செறிகின்ற வாயுவின் அண்டங்கள் கிழிபட்டன. மிக உயர்ந்த ஆகாயத்துள்ள முதிய அண்டங்கள் யாவும் இலேசாக உடைபட்டன. 344

அப்பெரு நாணின் ஓதை அரிமுகன் தானை மள்ளர்
செப்புறு கேள்வி யாற்றுஞ் செவிப்புலம் புகுத லோடுங்
கைப்படை சிந்தி வீழ்ந்தார் கவிழ்ந்தன களிறு மாவும்
ஒப்பில்சீர் ருருளித் தேர்கள் ஒல்லென உடைந்த அன்றே.

அந்தப்பெரிய நாணின் ஓசையானது சிங்கமுகாசுரனின் சேனைத்தலைவர்களின் செப்புற அமைந்த கேள்வி செய்யும் காதுகளில் புகுதலோடும், அவர்கள் திடுக்கிட்டு அஞ்சிக் கையில் உள்ள படைக்கலமும் சிந்தி வீழ்ந்தார்கள். யானையும் குதிரையும் ஒப்பற்ற சீருடைய தேரும் விரைவாக அங்கு உடைபட்டன. 345

மூரிவிற் கொண்ட நாணின் முழக்கினை வினவி யற்றால்
பாரிடைக் கவிழ்ந்த தானைப் பரப்பையும் நோக்கி நின்றான்
ஆரிதைப் புரியும் நீரார் அரன்மகன் இவனும் முன்னம்
தாரகற் கடந்தான் என்கை சரதமே போலு மென்றான்.

எம்பிரானது வலியுடைய வரிவில்லின் நாணின் முழக்கத்தைக்கேட்டு அதனால் பூமியில் கவிழ்ந்து வீழ்ந்த சேனையின் பரப்பையும், சிங்கமுகாசுரன் நோக்கி நின்றானாய் அற்புதமெய்தி யார்தான் இப்படி வில்லோசையால் எம்சேனையை கீழ்வீழ்த்தி செய்யவல்லார். இவன்தான் சிவபிரான் திருக்குமாரனாகும். இவன் முன்னர் தாரகாசூரனை வெற்றிகொண்டான் என்பது உண்மையாகும் என்றான். 346

வாலுளை அலங்குநெற்றி மடங்கலோன் இனைய கூறிப்
பாலகன் வன்மை யானே படுத்தனன் மீள்வ னென்னாக்
காலுடை நெடுந்தே ரோடுங் கையனோர் கணத்தின் நேர்ந்து
வேலுடை அண்ணல் தன்னை நோக்கினன் விளம்ப லுற்றான்.

வெண்ணிறமுடைய பிடரிமயிர் சிலிர்த்த கையும் நெற்றியை உடைய சிங்கமுகாசுரன் இந்தவார்த்தையைக்கூறி இந்தப்பாலகனுடைய வலியை நானே அழித்துவிட்டு மீண்டுசெல்வேனென்று பெரும் சில்லுடைய நெடுந்தேர்ஒன்றின்மேல் ஏறி ஒருகணப்பொழுதில் வந்து வேலுடைய ஆறுமுகப்பிரானை நோக்கி சொல்லலுறுகின்றான். 347

கண்ணுதல் முதல்வன் மைந்த கழறுவன் ஒன்று கேண்மோ
எண்ணலர் வலியை மாற்றல் இறையவர் கடனே அற்றால்
விண்ணவர் தமைத்தண் டித்தோம் அவர்க்குளும் அல்லை வேறோர்
நண்ணலன் எமருக் கில்லை நடந்ததென் னமருக் கென்றான்.

நெற்றிக்கண்ணுடைய முதல்வனின் மைந்தனே யான் உனக்கு ஒன்று சொல்வேன் கேட்டுக்கொள்க. பகைவருடைய வலியை அடக்குதல் அரசரது கடன். அந்த விதியின் பிரகாரம் தேவர்களை நாம் தண்டித்தோம். நீயோ அத்தேவர் கூட்டத்தில் ஒருவன் அல்ல. அதுவன்றி நீர் எமது குலத்திற்கு ஒரு பகை உடையவனும் அல்ல. அப்படி இருப்ப எம்முடன் போரிடும்படி வந்தது எக்காரணமாகும் சொல்லிடுவாய் என்றான் சிங்கமுகன். 348

உறைதரும் அளியன் தன்னை வலியவன் ஒறுக்கின் நாடி
முறைகெழு தண்ட மாற்றி அண்டங்கள் முழுவ துக்கும்
இறையினைப் புரிதும் அற்றால் நீவிர்கள் இமையோர்க் கிட்ட
சிறையினை அகற்ற வந்தேஞ் செருவுமத் திறத்துக் கென்றான்.

அப்போது எம்பிரான் கூறியருள்கின்றார். சிங்கமுகாசுரனே இதைக்கேள்! இவ்வுலகில் வாழ்கின்ற வலியற்றவரை ஓர் வலியுடையவன் துன்புறுத்தினால் அவற்றை நாடி துயர்புரிந்தார்க்கு முறைப்படி செய்திடவேண்டிய தண்டனையை செய்து, அண்டங்கள் முழுவதற்கும் யாம் அரசினைப்புரிகின்றோம்: ஆனதினால் நீங்கள் தேவர்க்கு இட்ட சிறையினை நீக்கி அகற்றும்படி இவ்விடம் வந்துள்ளோம். போர்புரிதலும் அத்திறத்திற்காகவேண்டியே நிகழ்த்தப்படுகிறது என்றார் எமது கடவுள் முருகன்; 349

எங்கள்நா யகமா யுள்ள இறையவன் இனைய கூறச்
சிங்கமா முகத்து வீரன் உருமிடி திளைத்த தொப்ப
அங்கையோ டங்கை தாக்கி அண்டமுங் குலுங்க நக்குப்
பொங்குவெஞ் சீற்ற மேலான் இங்கிவை புகலல் உற்றான்.

எங்களது நாயகமாக உள்ள இறையவன் ஆறுமுகப்பிரான் இவ்வாறு எடுத்துக் கூறுதலும் அதுகேட்ட சிங்கத்தின் பெருமுகமுடையவீரன் இடிவீழ்ந்துற்றதற்கொப்ப தனது அழகிய கைகளோடு கையை அடித்து அண்டங்களும் குலுங்கச் சிரித்து பொங்கிஎழும் கோபம்மேற்கொண்டு இங்கு இவற்றை எடுத்துக் கூறுவான். 350

ஈங்கெமர் தமையும் வென்றாய் இமையவர் சிறையும் இன்றே
நீங்கினர் ஆவர் நீயும் நீக்குதி போலும் போலும்
நாங்களும் அளியர் தாமே நன்றுநின் சூழ்வே ஆற்றல்
ஓங்கிய துனது மாட்டே உண்மையீ தன்றி யுண்டோ.

இங்கு எமது மக்கள் யாவரையும் நீ வென்றுவிட்டாய். தேவர்கள் தமது சிறையும் இங்கு நீங்குவாராகப்போகின்றார். நீயும் நீக்கிடத்தான் போகின்றாய் போலும். நாங்களும் எளிய மனுசராானோம். நல்லது உனது எண்ணமும் சூழ்ச்சியும் போதும். இப்போது ஆற்றல் உன்பக்கந்தான் ஓங்கியுள்ளது. இதுவே உண்மையன்றி வேறுண்டோ? 351

இந்திர குமரன் தன்னை இமையவர் குழுவை வாரி
வெந்தளை மூழ்கு வித்து வீட்டிய சிறையை நீக்கல்
சந்திர மௌலி அண்ணல் தன்னினும் முடியா தென்றால்
மைந்தன்நீ ஒருவன் கொல்லோ முடித்திட வல்லை மன்னே.

இந்திரகுமாரன் சயந்தனை தேவர்கூட்டத்தை நாம்ஒருங்கு பிடித்துக்கொடியவிலங்கில் இட்டு சிறையிடத்து வைத்திருக்கும் அச்சிறையை நீக்குதல் இளம்பிறையணிந்த முடியுடைய கடவுள் சிவபிரானுக்கும் முடியாதென்றால்; மைந்தனே நீ ஒருவன் மட்டும் அந்த இயலாத ஒருகருமத்தை முடித்திட வல்லமை உடையாயோ! 352

கண்ணுதல் உனக்குத் தந்த காமரு சுடர்வேல் ஆற்றல்
எண்ணலன் மறலி யாகி இகழ்ந்துபோர் இயற்றி ஞனை
உண்ணிகழ் ஆவி கொண்டாய் ஓடினுல் உய்தி ஈண்டு
நண்ணிய தன்மை எங்கள் நல்வினை தந்த தன்றே.

கண்ணுதற் கடவுள் சிவன் உனக்குத் தந்த அழகிய சுடர்வேலின் ஆற்றலை எண்ணாதவன் தாரகன்; அவன் அவ்வேலுக்கு மாறாக இகழ்ச்சியுடன் போரிட்டபடியால் அவன் உடலில் உள்ள உயிரை நீ வாங்கிக்கொண்டாய்: அத்துடன் நீ தப்பி ஓடி இருந்தால் உய்ந்திருப்பாய். ஆனால் இங்கு நீ வந்ததன்மை நாங்கள் செய்துள்ள நல்வினைதான் உன்னை இங்கு வந்திடும்படி தந்துள்ளது; 353

கடம்பமர் கண்ணி யாய்கேள் கடவுள்வேல் கொண்ட ஆற்றல்
திடம்படு நினது வன்மை யாவையுந் தெரிதந் துள்ளேன்
தடம்படு குவவுத் திண்டோள் தாரகன் போல ஞாட்பின்
மடம்படு கின்ற தில்லை வல்லைபோர் புரிதி மாதோ.

கடம்பமலரின் கண்ணிகள் அணிந்திட்ட கடவுளே நீ கேள்! கடவுள் வேல் கொண்ட ஆற்றலும் அதனால் திடம்கொண்ட உனது வலிமையாவற்றையும் நான் தெரிந்து கொண்டுள்ளேன். விசாலித்த பெரும் தோளுடைய அத்தாரகாசூரனைப் போல போர்க்களத்து நான் மடைத்தனமாக நடந்துகொள்ள மாட்டேன், அப்படி நடப்பதில்லை. விரைவாகப் போர் புரிவாயாக! 354

பொருதிறல் வயவர் யாரும் பூதரிற் பலரும் மாய்ந்தே
எரிகதிர் உதயம் புக்கார் ஏனையோர் நீயுங் காண
விரைவில்என் அகடு சேர்ந்து விளிந்தனர் தமியன் நின்றாய்
செருவினை இழைத்தும் என்னும் ஊக்கமே சீரி தம்மா.

போர் புரியும் திறலுடைய வீரர்யாவரும் பூதரிற் பலரும் மாய்ந்துபோய் சுடுகின்ற கதிர்உடைய சூரியதேவன் உதயமாகி வந்திடும் உதயமலையில் புகுந்துகொண்டார்கள். மற்றையோர்கள் நீயும்காண விரைவாக என் வயிற்றில் சேர்ந்து இறந்து போனார்கள். நீ தனியனே ஒருவனாகி நிற்கின்றாய். அப்படியாக இத்தனை துணையோடும் போரிடவந்த நீ அவர்களை இழந்தும் இன்னும் என்முன் நீ நின்று போரிடுவேன் என்னும் ஊக்கம் நன்றாயிருக்கின்றது. 355

தாதவிழ் தருவின் நீழற் சயந்தனை அமரர் தம்மைத்
தீதுறு சிறையின் நீக்கச் சென்றநீ துணைவ ரோடு
பூதர்தந் தொகையை வாளா போக்கினை தமியன் நின்றாய்
ஊதியம் இதன்மேல் உண்டோ உனக்கிது கிடைத்த தன்றே.

மகரந்தப் பொடிகமழும் கற்பகப் பூஞ்சோலையின் நீழலில் வாழ்ந்திடும் இந்திர குமாரன் சயந்தனை தேவர்கள் தம்மை எல்லாம் தீமை உற்ற அச்சிறையின் நின்று நீக்குதற்கு வந்த நீ, உனது துணைவருடன் சேனையாகும் பூதத்தொகை அத்தனையையும் போக்கிவிட்டு தனியாக நிற்கின்றாய். நீ மேற்கொண்ட செயலுக்கு உற்றதொரு பெறுபேறு இதன்மேல் உண்டோ! உனக்குக் கையுடன் இது கிடைத்ததல்லவோ? 356

முனைகெழு சமரின் வந்து முடிந்தனர் முடிவி லாதார்
இனைவொடு புறந்தந் தேகி இரிந்துளார் தொகையும் அஃதே
அனையதை உணராய் கொல்லோ அமர்குறித் தீண்டு வந்தாய்
கனவினும் விடுவ துண்டோ கடவுளர் சிறையை என்றான்.

ஊக்கம் கொண்டுபோரிட வந்து முடிவாகிப் போயினார்கள் அளவற்ற பேர்கள், இதையன்றி அச்சத்துடன் புறுமுதுகிட்டோடினோர் தொகையும் அவ்வண்ணமே. அவற்றை எல்லாம் நீ உணரமாட்டாயோ? போர்புரிந்திட எண்ணி நீ இங்கு வந்தாய். கனவிலும் தேவர் சிறையை விடுவதுண்டோ? அதுமுடியாது என்றான் சிங்கமுகாசுரன். 357

என்றசொல் இறுக்கு முன்னம் இராறுதோ ளுடைய வள்ளல்
நன்றிவன் கொண்ட தென்னா நகைசெய்து சிலையிற் பூட்டி
ஒன்றொரு வயிர வாளி ஒல்லெனத் துரப்பத் தீயோன்
பொன்றிகழ் மருமம் புக்குப் புறத்துரீஇப் போய தன்றே.

என்ற சொல்லைக் கூறிமுடிப்பதற்குமுன்பே பன்னிரண்டு தோளுடைய அருள் வள்ளல் ஆறுமுகப்பெருமான் நன்று இச்சிங்கன் கொண்ட எண்ணம் என்று புன் சிரிப்புக் கொண்டருளி தமது திருக்கரத்தில் எடுத்த வில்லில் ஒரே ஒரு வயிரமான அம்பினைப் பூட்டி விருக்கெனச் செலுத்திட அந்த அம்பானது தீயவனான சிங்கமுகாசுரனுடைய பொன்னகத் திகழ்ந்திடும் உடலில் தைத்து உருவிக்கொண்டு வெளியே போனது. 358

அருவிய ஞக முள்ளான் அகன்பொரு விழிகட் கூருய்
அருவிய ஞக மன்ன அரிமுகன் ஐயன் செங்கோல்
அருவிய ஞக மூழ்க அலக்கணுற் றிழியுஞ் செந்நீர்
அருவிய ஞக நின்ருன் அமரர்மற் றதுகண் டார்த்தார்.

அரிதான பெரிய தேவ உலகத்து அரசனுகும் இந்திரனின் அகன்ற பெரும் கண்கட்கு அச்சம் விளைவிக்கும்படி நீண்டிருக்கும் பெரும் மலைபோலும் வடிவுகொண்ட சிங்கமுகாசுரன் பெருமையால் நிலவிய பேருடலினிடத்து ஐயனுடைய அம்புபட்டு ருவி மூழ்கிப்போதலும், அதனுல் அவன் அலக்கணுற்று மேனியில் நின்றும் வடிந்திடும் இரத்தம் அருவிபோல வடிந்திட நின்ருன். தேவர்கள் மற்று இந்தச்செயலைக் கண்டு மகிழ்ந்து ஆர்ப்பரித்தனர். 359

கற்றையங் கதிர்வேல் அண்ணல் காமரு பகழி பாய
மற்றவன் புறனும் மார்பும் வாயில்க ளாத லோடு
மற்றது நோக்கித் தீயோன் அகட்டுறை கணங்கள் முற்றும்
புற்றெழு சிதலை யென்ன அந்நெறி துருவிப் போந்த.

அழகிய சோதியாகும் ஒளிக்கற்றைகளை விரித்திடும் வேலேந்திய பெருமானது அழகால் நிறைந்த அம்புகள் பாய்ந்திட சிங்கமுகாசுரனது நெஞ்சும் முதுகும் இரண்டு பாலும் பெரிய வாயில்களாக அமைந்திடுதலும் அதைக்கண்ட தீயவனுன சிங்கமுகனது வயிற்றினில் உள்ள பூதகணங்கள்யாவும் கறையான் புற்றினின்றும் வெளிவருகின்ற ஈய்க்கள் போன்று அந்தவாயில்கள் ஊடாக வெளிவந்தன. 360

உய்குறு கணத்தின் தானை உந்தியை ஒருவி வாளி
செய்குறு வாயில் நீங்கித் தெழிப்பொடு புறத்திற் போக
மைகிளர் புந்தி வெய்யோன் மற்றது கண்டு சீறிக்
கைகொடு நெறியை மாற்றிக் கந்தன்மேல் ஒருதண் டுய்த்தான்.

முன்னர் சிங்கமுகாசுரன் விழுங்கி வயிற்றில் வைத்திருந்த பூதசேனையானது வயிற்றை விடுத்து அம்புகள் செய்திட்ட வாயிலைக் கடந்து நீங்கி உரக்கச் சத்தமிட்டுக் கொண்டு வெளியே போதலும் இருள் பொலியும் மனமுடைய தீயவனுன சிங்கமுகாசுரன் அதனைக்கண்டு சீற்றம் அடைந்து தனது கையால் அம்புசெய்த வாயிலை அடைத்துப் பிடித்துக்கொண்டு முருகப் பெருமான்மேல் ஓர் தண்டாயுதத்தை செலுத்திஞன். 361

அண்டம்விண் டதுகொல் என்ன அணிமணித் தொகுதி ஆர்ப்பத்
தண்டம்வந் திடுத லோடுந் தன்னிகர் இல்லா அண்ணல்
கண்டனன் இமைப்பில் நான்கு கணைதொடக் கதையைச் சிந்தி
ஒண்டிறற் சூரன் பின்னேன் நெற்றிபுக் கொளித்த அன்றே.

அண்டங்கள் வெடித்துற்றதால் வரும் ஓசையோ என அழகிய மணிகள் ஆர்த்திடும்படி அத்தண்டானது அங்கு வந்திடுதலோடும் அதனை தனக்கு நிகரிலாத ஆறு முகப்பெருமான் கண்டார். கண்டதும் நான்கு அம்பினைவிடுத்தலும் அவை அந்தத் தண்டாயுதத்தைச் சிந்தியதோடு அப்பாலும் போய் சிங்சமுகாசூரனுடைய நெற்றியில் புகுந்து ஊடுருவிப்போயது. 362

ஒளித்திடு கின்ற காலை உருகெழு மடங்கற் பேரோன்
களித்திடல் ஒருவி மேலைக் கடுஞ்சினக் கோட்புச் சிந்தித்
தெளித்திடும் உணர்வும் இன்றிச் செய்யகோல் செலுத்து மன்ன
அளித்திட லொழிந்த காலத் துலகம்போல் அழுங்கி நின்ருன்.

அந்த நான்கு அம்புகளும் சிங்கமுகாசுரனுடைய நெற்றியில் புகுந்து அப்பால் போயநேரம் சீற்றங்கொண்ட சிங்கமுகன் என்னும் பேருடையோன் மனம்களித்து திற்றலை நீங்கி முன்கொண்ட கடியகோபமான அழல் நீங்கிடப்பெற்று தெளிவுகொள்ளும் உணர்ச்சியும் இல்லாது அவ்விடத்து; செம்மையாகும் செங்கோலைச் செலுத்திட அரசன் இல்லாதுபோனதொரு காலத்து பாவியின் அரசாட்சிக்கு உட்பட்ட உலகம்போன்று வருத்தமுடையோனுய் நின்ருன். 363

### வேறு

பேர்ந்திடும் உணர்வொடும் பிரிவில் துன்பொடும்
சேர்ந்திடும் அரிமுகத் தீயன் நின்றுழி
வார்ந்திடு குருதிதோய் வாயில் மூடுகை
சோர்ந்தன அருள்வரத் தொலைந்த மாயைபோல்.

அம்புகள் நெற்றியை பிளந்துருவிப் போதலால் நீங்கிவிட்ட நல் உணர்வோடும் பிரித்து நீக்கமுடியாத துன்பத்துடனும் சோர்வுற்று சிங்கமுகமுடைய தீய அசுரன் நின்ற நேரத்து, முன்னர் வடிகின்ற இரத்தம் தோயும் வயிற்றில் உற்ற வாயிலை மூடுகின்ற கைகளும் சோர்ந்தன. எப்படியெனில் திருவருள் கைகூடிடச் தொலைந்து போகும் மாயையின் விருத்திகள்போல்.

நம்பொருள் நம்மக்கள் என அதில் இச்சைவைத்து அழுந்திடும் எண்ணம்யாவும் ஈசன் அருள் கைகூடும் பொழுது நீங்கி அப்பால் எதனிலும் மேலானது பெறற்கரிய ஈசன் திருவருளே என கழலடியே கைதொழுகின்றதும் அடியவர்களைப் பேணுகின்றதுமான மனஉறுதிகள் தென்படும்; அதனாலே அருள்வரத் தொலையும் மாயை என்றார். 364

அறந்தவிர்ந் தொழுகினோன் ஆகந் தன்னிடைத்
திறந்திடு நெறிகளால் சிறையின் வைப்பொரீஇப்
பறந்திடு புள்ளெனப் படர்ந்து கந்தவேள்
புறந்தனில் வந்தன பூதம் யாவுமே.

தருமத்தை தவிர்ந்து ஒழுகிவந்த சிங்கமுகாசுரன் உடல் தன்னிடத்து திறக்கப்பட்ட வாயில்களால்; கூட்டின் வைப்பிடத்தை விடுத்து பறந்துபோய் விடுகின்ற பட்சிகள் எனும்படி பூதங்கள் பறந்துசென்று பழமைபோல் முருகப் பெருமான் புறத்தில் வந்து யாவும் சேர்வுற்றன. 365

அன்றரி முகத்தவன் அலைத்து நுங்கின
கொன்றன எறித்தன கூளி யாவையும்
வென்றிகொள் வேற்படை விமலன் ஆணையால்
துன்றிவந் தடைந்தன தொன்மை கூடியே.

அன்று சிங்கமுகாசுரன் அலைத்து பிடித்து விழுங்கின பூதமும்; கொன்றிட்ட பூதமும்: அள்ளி எறிந்தபூதமும்; வெற்றிதரும் வேற்படை ஏந்திய முருகப் பெருமான் ஆணையால் துயர் நீங்கி வலியுற்று வழமைபோல் அங்குவந்து கூடிக்கொண்டன. 366

### வேறு

அன்னதொரு காலை அறுமா முகக்கடவுள்
தன்னிகரி லாத தனக்கிளையோர் தங்களையும்
துன்னலுறு பூதத் தொகையோர்கள் யாவரையும்
உன்னியவர் தம்பால் ஒருகோல் தொடுத்தனனே.

அன்னதொரு காலையில் தனக்கு வேறொருவர் நிகர் இன்றி தானே தானாகி தனக்குள்ளும் தானாகிய ஆறுபெருமுகமுடைய கடவுள் தனது இளையோர்களாகும் அவர்களையும் அவருடனாக உதயமலைமீது பாசத்தால் கட்டிப் போடப்பட்ட ஏனைய பூதத்தொகையோர்கள் எல்லோரையும் மீட்டருளும்படி நினைந்து அவர்கள்பால் ஓர் அம்பினை விடுத்தருளினர். 367

உந்தும் பகழி உததி பலகடந்து
முந்துங் கதிருதயம் முன்னுற்று மொய்ம்பர்தமைப்
பந்தம் கொடுசூழ்ந்த பாசவலை சிந்திடலுங்
கந்தன் தனதருளாற் கண்டுயில்வார் போலெழுந்தார்.

எம்பிரான் செலுத்திடும் அந்த அம்பு சமுத்திரங்கள் பலவற்றைக் கடந்து எல்லாவற்றிற்கும் மூன்னுள்ள சூரியபகவானின் உதய இடமான மலையை முன்னிட்டு அடைந்து அங்கு பாசமாம் பற்றினல் பந்திக்கப்பட்டு சூழ்ந்திருந்த பாசவலையை அழித்திடலும், அப்போது பாசமாகும்பற்றறுத்து பாரிக்கும் குருபரன் முருகன் அருளால் யாவரும் நித்திரை விட்டெழுவார் போன்று எழுந்தனர். 368

பாசத் தளையிற் படுவார் அதுநீங்கி
மாசற்ற நல்லுணர்வு வந்தெய்த உய்ந்தனராய்ப்
பேசற் கரியஇன்பம் பெற்றோர்கள் தாமாகி
ஈசற் கினியான் இணையடிகள் வாழ்த்தெடுத்தார்.

சிங்கமுகாசுரனது பாசமான தளையிற்பட்டுள்ளாராகும் வீரவாகுதேவர் அனைவரும் அந்த பாசத்தின் பற்று அறுபட்டு நீங்கி மாசில்லாத நல்லுணர்வு வந்து அடைந்திடப்பெற்றிடலும், அதனல் உய்ந்திடப்பெற்று பேசுதற்கரியபேரின்பம் பெற்றோர்களாய் எம் ஈசன் சிவனுக்கு இனிய குமரனின் இணையார்ந்த திருவடிகளை அன்புடன் வாழ்த்தெடுத்தார்கள். 369

ஆங்கதுகா லத்தில் அறுமுகவேள் உய்த்தகணை
பூங்கமலத் தோனுதவு புட்பகத்தின் மாட்சியதாய்த்
தீங்கிலிள மைந்தர்தமைச் சேனை யொடுமுகந்து
தாங்கி விசும்பின் தலைக்கொண்டு சென்றதுவே.

அவ்வாறான அந்தக் காலத்து ஆறுமுகப்பெருமான் செலுத்திய அந்த அம்பு பூவில் உற்ற கடவுள் பிரமதேவன் படைத்துள்ளதொரு புட்பக விமானம் போன்று மாட்சிமை உடைய வடிவம்கொண்டு; அங்கு எம்பிரானை வாழ்த்து எடுத்தவாறு நின்ற தீங்கில்லாத இளையமைந்தராகும் வீரவாகுதேவர்முதல் யாவரையும் அவர்களுடைய பூதசேனையுடன் தூக்கிச் சுமந்து தாங்கிக்கொண்டு வானத்தின் வழியாகத் தலைக்கொண்டு வந்தருளியது. 370

என்று திகழ்வெற்பை இகந்தேழ் கடல்நீங்கிச்
சென்று கடிது செருநிலத்திற் சேனையொடு
நின்ற குமரன் நெடுந்தாள் முனமுய்த்துத்
துன்று கணைபொதிந்த தூணியிடைப் புக்கதுவே.

என்றும் ஒளியுடன்திகழும் உதயமலையைக் கடந்து ஏழ்பெரும் கடலையும் நீங்கி விரைவாகச் சென்று போர்நிலத்தில் சேனையொடும் நின்ற குமரப்பெருமான் நெடிய அருட்பேறுடைய திருவடிமலர்முன்னாக அவர்களை விடுத்து சிறந்துற்ற அம்பு பழைமைபோல நெருக்கமான அம்புகள் பொதிந்து வைத்திருந்த அம்புக் கூட்டில் புகுந்துகொண்டது. 371

அந்த அமையத்தில் அடல்வீர மொய்ம்பினனும்
இந்திரனும் போற்றும் இலக்கருடன் எண்மர்களும்
அந்தமி லாப்பூத அனிகங் களும்அளியால்
கந்தன் இணையடிகள் கைதொழுது தாழ்ந்தனரே.

அந்தநேரத்தில் வலிமையுடைய வீரவாகுதேவரும் இந்திரனும் வணங்கிடும் இலக்கம் வீரருடன் மற்றைய எட்டுப்பேரும் முடிவு என்பதில்லாத பூதங்களும் ஆனந்த மிகுதியால் எம்பெருமான் கந்தன் இணையடிகளை கைதொழுது தாழ்ந்தார்கள். 372

நீக்கம் பெறுதுயிர்க்குள் நின்றானைத் தொல்வறிஞன்
ஆக்கம் பெற்றென்ன அடிவணங்கிப் போற்றுதலும்
வீக்குங் கனைகழற்கால் வீரர் தமைநோக்கித்
தேக்குங் கருணையினல் ஈதொன்று செப்பினனல்.

நீக்கம் இல்லாது உயிர்க்குள் உயிராக நின்றானை தரிசித்து; நெடுங்காலமாக வறுமையை அநுபவித்தோன் செல்வத்தை அடைந்தாற்போன்று மலர்ந்து எம்பிரான் திருவடிவணங்கி போற்றுதலும், அதுவேளை வீரக்கழல் அணிந்த பாதமுடைய வீரர் தங்களை குமரமூர்த்தி நோக்கியருளி தேக்குகின்ற கருணையால் இது ஒரு திருவார்த்தை செப்பியருளினார். 373

தொக்கீர் அவுணன் தொடுமாயச் சூழ்வலையில்
புக்கீர் புலந்தீர் புலன் அழிந்தீர் யாப்புறவும்
தக்கீர் உதயந் தனிற்புகுந்தீர் இவ்வாறு
மிக்கீரும் நொந்தீர்கள் போலும் மிகவென்றான்.

நீங்கள் யாவரும் சிங்கமுகாசுரன் விடுத்த மாயச் சூழ்ச்சியாகும் பெருவலையில் புகுந்தீர். வாடினீர் நல்லறிவும் அழிந்தீர். அவனால் கட்டுப்படவும் ஆயினீர். உதய மலையிடத்துப் புகுந்தீர். இவ்வாறு நீரெல்லாம் மிகவும் நொந்துபோனீர்கள் போலும் என்று கூறியருளினார். 374

முந்தை உணர்வு முடிந்தாலென் னருயிர்போய்
அந்த நிரயத் தழுந்தி அயர்ந்தாலென்
வெந்துயரம் மூழ்கி வினைப்பிறவி புக்காலென்
எந்தை அருளுண்டேல் எமக்கென் குறையென்றார்.

ஆறுமுகவா! எம்முடைய முன்னைய உணர்வு முடிந்தாலென்ன அல்லது எம்மரிய உயிர் போகப்பட்டு அந்த நரகத்து அழுந்திநாம் அயர்வுற்றாலென்ன. கொடிதாக நாம் அனுபவிக்கும் கொடும் துயரம் மூழ்கி வினையாகும் பிறவியில் புகுந்தாலென்ன; எந்தைபிரானே உமது அருள் உண்டானால் எமக்கு என்ன குறை என்றார்கள். 375

ஆங்காகும் எல்லை அருமறையுந் தேறரிய
ஓங்கார மூலத் துணர்வாய் உறைபகவன்
நீங்கா நெறியான் நிறைபே ரருள் புரியப்
பாங்காக நின்ற பரிசனர்கள் போற்றினரே.

ஆங்கு அவ்வாறாகும் எல்லையில் அரிய வேதங்களும் இவ்வண்ணத்தன் இவன் என இன்னமும் தேறி அறிந்திட அரியவராய் ஓங்காரத்தின் மூலத்து விளங்கிடும் எல்லாம் அறிகின்ற உணர்வாய் உறைகின்ற எம் பகவன் ஆறுமுகன் எக்காலமும் நீங்கிடாத வழியாக நிறைகின்ற தமது பேரருளைக் கொடுத்தருளுதலும் அதனைப் பெற்று உய்ந்து பக்கராக நின்ற பரிசனர்கள் யாவரும் எம்பிரானைப் போற்றி செய்தனர். 376

### வேறு

அன்னதொ ரமைதியில் அண்ணல் வார்சிலை
துன்னுறு நாணொலி கேட்டுச் சோர்வுறு
முன்னுற வீழ்படை முதல்வன் ஆடலை
உன்னுறு செய்கையால் எழுந்த ஒல்லையில்.

அவ்வாறாகும் நன்நிலை யாவரும் அடைந்திட்ட மிக சாந்தமாய நேரத்தில் எம்பெருமானின் வார்கொண்ட வில்லின் நின்றும் எழுந்த நாணோசையைக் கேட்டுச் சோர்வுற்று எம்பிரான் முன்னராக வீழ்ந்த அசுரப் படைகள்; யாவர்க்கும் முதல்வனாகும் ஆறுமுகப்பெருமான் போர் புரிதற்கு உற்ற திருவிளையாடலை நினைந்தருளிய செய்கையால் மிகுவிரைவாக அச்சேனைகள் எழுந்து கொண்டன. 377

ஈங்கிவன் ஒருமகன் எமையெ லாஞ்சிலை
தூங்கிய நாணினால் தொலைக்குங் கொல்லெனாத்
தாங்கிய படையுடைத் தகுவர் தானைகள்
தீங்கனல் பரந்தெனச் சினங்கொண் டார்த்தவே.

எழுந்த சேனைகள் யாவும் எம்பிரானைக் கண்ணுற்று இங்கு இவன் தனி ஒரு குமரனாகியவன் எம்மையெலாம் தனது வில்லால் எழுப்பிய நாணோசையால் தொலைத்திட முடியுமோ என்று கைகளில் பல படைகளையும் பிடித்து நின்ற அந்த அசுரர் யாவரும் கொடிய நெருப்பு எரிந்தெழுந்து பரவுதல் போன்று கோபம் கொண்டு ஆர்த்தனர். 378

ஆழிமால் கடல்புரை அவுண மாப்படை
காழுலாம் பலபடைக் கலமுஞ் சிந்தியே
ஊழிநாள் எல்லையின் உலகெ லாமடுங்
கேழிலான் மதலையைக் கிளர்ந்து சூழ்ந்தவே.

பெரும் புறவாழிச் சமுத்திரத்தை ஒத்த அசுரராகும் பெரும் படை வைரம் நிலவிய பல படைகளை எல்லாம் எடுத்துச் சிந்தியே ஊழிநாளின் முடிவில் உலகம் யாவையும் சங்கரிக்கின்ற கெடுதல் இலாத சிவபெருமான் குமரனை மிகு ஆரவாரக் கிளர்ச்சியுடன் சூழ்ந்து கொண்டன. 379

சுற்றிய வேலையின் முறுவல் தோன்றிட
நெற்றியங் கண்ணுடை நிமலன் மாமகன்
கொற்றவெஞ் சிலையினைக் குனித்துப் பூட்டியே
செற்றிய கணைமழை சிதறி னனரோ.

எம்பிரானை அப்படைகள் வளைந்து கொண்ட நேரத்தில் புன்சிரிப்பு பூத்தலர்ந்திட நெற்றிக் கண்ணுடைய நின்மலன் சிவபிரானது அருட்பெரு திருக்குமரன் தாம் எடுத்த கொற்றமுடைய கொடியவில்லை வளைத்து அதனில் அம்பினைத் தொடுத்துப் பூட்டியே எங்கும் செறிந்து அழித்திடும் அம்புகளாகும் மழையைச் சொரிந்தார். 380

அங்கியின் வடிவின ஆலம் போல்வன
கங்குலை நிகர்ப்பன காலற் கொப்பன
பொங்கிய வெஞ்சினப் புயங்கம் நேர்வன
செங்கதிர் மலைவன செம்மல் வாளியே.

எம்பெருமானது அந்த அம்புகள் அங்கினியின் வடிவமுடையன; நஞ்சினைப் போல்வன; இரவைப் போன்று ஒத்த இருள் வடிவின; இயமனுக்கு ஒப்பன; பொங்கிடும் கொடிய சினமுடைய பாம்புகள் போல்வன; சூரிய தேவனையும் மாறிட்டு மலைவன. 381

மின்னினுஞ் சுடரின் உருமின் வெய்யன
பொன்னுறழ் நிறத்தன மணியின் பொற்பின
மன்னிய வானவில் மாறு கொள்வன
பன்னிறம் படைத்தன பகவன் வாளியே.

மின்னலினும் ஒளியுடையன; இடியிலும் கொடியன; பொன்விளங்கும் நிறமுடையன; இரத்தினங்களைப் போன்று அழகில் நிறைந்தன. வானில் நிலவிய வானவில்லையும் மாறாக எதிர்ப்பன. பல நிறங்களைக் கொண்டன எம் பகவானது அந்த அம்புகள். 382

வேறு

சூலம் போல்வன தோமரம் போல்வன சுடர்வாய்
ஆலம் போல்வன நாந்தகம் போல்வன அடல்வேற்
கோலம் போல்வன கழுமுளும் போல்வன குலிச
சாலம் போல்வன ஆறுமா முகன்விடு சரங்கள்.

சூலப்படையைப் போல்வன; தோமரத்தைப் போல்வன; ஒளியுடைய வாய் கொண்ட ஆலப்படை போல்வன; வாளினைப் போல்வன; கொலையுடைய வேல் போல் கோலம் உடையன; கழுமுட் படையையும் போல்வன; குலிசப்படையைப் போல்வன, ஆறுமுகப்பிரான் விடுத்திடும் அம்புகள். 383

அறத்தை நல்கலின் அந்தணன் போல்வன அகிலத்
திறத்தை அன்பொடு போற்றலிற் செங்கண்மால் போல்வ
ஒறுத்து மன்னுயிர் உண்குறும் அவுணரை ஒருங்கே
இறுத்தல் செய்திடுந் தன்மையால் ஈசனே போல்வ.

உலகில் தருமத்தை நிலைபெற வைத்தலால் பிரமதேவனைப்போல்வன; உலகத்தை அன்புடன் காத்திடுதலால் செங்கண்ணுடைய நாராயணப் பெருமானை நிகர்ப்பன. உலகினை அழித்து அதில் வாழ்ந்திடும் மேலான உயிர்கட்கு நான் தோன்றி இன்னலைப் புரிகின்ற அசுரரை ஒருங்கே அழித்திடும் தன்மையால் ஈசன் சிவனைப் போல்வன. 384

காற்றிற் செவ்விதிற் செல்வன கறங்குவ கடுங்கட்
கூற்றிற் கொப்பன மனத்தினுங் கடியன கொடுந்தீ
நூற்றுக் கோடிகள் அணுகினும் விசையினல் நொய்தின்
மாற்றத் தக்கன குமரவேள் விடுத்திடும் வாளி.

குமரப்பெருமான் விடுத்திடும் அம்புகள் காற்றைப்போல் செல்வன; சுழல்வன கொடிய கண்ணுடைய இயமனுக்கு ஒப்பன; மனத்திலும் வேகமுடையன; கொடிய அக்கினி நூற்றுக்கோடிகள் வந்து சூழ்வுறினும் தம் விசையால் அந்த அக்கினியை இலேசாக அவித்திட வல்லன. 385

ஒன்று தொட்டிடிற் கோடியாம் ஒல்லையில் அவையுந்
துன்று கோடிமேற் கோடியாம் மேலுமத் தொகையே
அன்றி யாரதற் கெண்கொடுத் துரைப்பவர் அநந்தம்
என்று சொல்வதே முருகவேள் தொடுங்கணைக் கிலக்கம்.

ஒரு அம்பு விடுத்தால் அந்த ஒன்று கோடியாகப் பெருகும். அந்தக் கோடியும் உடனே மேலும் மேலும்கோடியாகப் பெருகிடும். இப்படியே இவைகள் இதன் மேலும் கோடியாகப் பெருகிக் கொள்வதன்றி அந்த ஒரு அம்பு எத்தனை கோடியானதெனயார் அதற்குக் கணக்குக் கொடுத்து எடுத்து உரைப்பவர். அஃது முடியாதே! அநந்தம் என்று சொல்வது தான் முருகப்பெருமான் தொடுக்கின்ற அந்த அம்புகட்கு இலக்கமான எண்ணும். 386

கார்பி ளந்திடும் அளக்கரை உண்டிடுங் கதிரோன்
தேர்பி ளந்திடும் வடவையை விழுங்குறுந் தேவர்
ஊர்பி ளந்திடும் மேருவைப் பிளந்திடும் உலவாப்
பார்பி ளந்திடும் ஞானநா யகன்விடும் பகழி.

ஞான நாயகன் சண்முகப்பெருமான் விடுத்திடும் அம்புகள் முகிலினைப் பிளந்திடும்; சமுத்திரங்களை உண்டிடும்; சூரிய தேவனின் தேரைப் பிளந்திடும்; வடவாமுகாக்கினியை விழுங்குறும்; தேவர்கள் உலகினைப் பிளந்திடும்; மேருமலையைப் பிளந்திடும்; அழிவிலாத பூமியைப் பிளந்திடும். 387

வரைகி ழிப்பதும் புவியினைப் பிளப்பதும் வரம்பில்
திரை கடற்குடித் திடுவதும் பிறவுமோர் சிறப்போ
அரிய வாயிர கோடியண் டங்களசம் அனைத்தும்
உருவி நிற்கில பின்னரும் ஓடுமென் றுரைக்கின்.

இப்படியாக எமது ஐயனின் அம்புகள் மலை கிழிப்பதும் பூமியைப் பிளப்பதும் அளவற்ற திரையுடைய கடலைக் குடித்திடுவதும் இன்னும் பிறவினையும் செய்தலை ஓர் சிறப்பு என்று நாம் சொல்வோமோ இல்லை அவைகள் இவை புரிந்து அப்பாலும் சென்று அரிய ஆயிர கோடியாகும் அண்டங்கள் அனைத்தையும் சென்று உருவியும் நில்லாது பின்னரும் அண்டவெளியையும் நோக்கி ஓடுமென்று சொல்லப்பெற்றுல்? 388

தொடுநெ டுங்கணை இவ்வகை செறிதலுஞ் சூழ்வார்
அடிது ணிந்தன கைத்தலந் துணிந்தன அணிதோள்
முடிது ணிந்தன உரந்துணி வுற்றன முகில்தோய்
கொடிது ணிந்தன இரதமுந் துணிந்தன குலைந்தே.

எம்பிரான் தொட்டிடும் நெடிய அம்புகள் இவ்வகை எங்கும் செறிதலும் எம் பிரானைச் சூழ்வாராகிய அசுரர்கள் கால் துணிந்தன கைத்தலம் துணிந்தன அழ கிய தோள் துணிந்தன முடிகள் துணிந்தன. நெஞ்சு துணிவுற்றன முகிலினை முட் டிய கொடிகள் துணிவுற்றன தேர்களும் நிலைகுலைந்து துணிபட்டு வீழ்ந்தன. 389

கரைகள் பட்டென அவுணர்கள் பட்டனர் கடலின்
நிரைகள் பட்டெனக் களிறுகள் பட்டன நிரந்த
திரைகள் பட்டெனப் புரவிகள் பட்டன செறிந்த
வரைகள் பட்டெனப் பட்டன அளவைதீர் மான்தேர்.

கடலின் கரைகள் அழிந்தன போன்று அசுரர்கள் அழிந்தனர்; கடலின் நிரை கள் அழிந்தன போன்று அங்குள்ள யானைகள் அழிந்தன. கடலில் நிரந்த திரை கள் அழிந்தன போன்று குதிரைகள் அழிவுற்றன சிறந்த மலைகள் அழிந்தன போன்று அளவு கடந்தபெரிய தேர்கள் பட்டன. 390

ஒப்புக் கொண்டிடா மேலையோன் ஒன்றை ஒன்றுக்குந்
துப்புக் கொண்டிடும் அற்புதம் உணர்ந்தவன் தொன்னுள்
வைப்புக் கொண்டபா ரண்டங்கள் முழுவதும் வரம்பில்
அப்புக் கொண்டதோ ரண்டமே ஆக்கிய அதனுல்.

தனக்கு வேருெருவர் ஒப்பிட்டுச் சொல்லமுடியாத முன்னைப் பொருட்கும் முன் னவராகும் முதல்வன் ஆறுமுகன் ஒன்றை இன்னுமொன்றுக்கும் செயல் கொண்டி டும் அற்புதத்தை உணர்ந்தவன். அதனுல் போலும் முன்நாளின் வைப்பாக இடங் கொண்ட பெரிய பூமிமுதல் அண்டங்கள் முழுவதையும் தாம் விடுகின்ற அம்பின் செறிவால் அம்பினுல் விளங்கக் கொண்டதொரு அண்டங்கள் எனும்படி ஆக்கிய தன்மையாக விளங்கவைத்தனன். 391

செப்பு றத்தகும் விம்மித மன்றிது தேவர்
எப்பு றத்தருங் காண்கிலார் எம்பிரான் கணைகள்
ஒப்பு றத்தரும் அண்டத்தின் தொகையெலாம் உரீஇப்போய்
அப்பு றத்தினில் இடுவன அவுணர்தந் தலைகள்.

எம்மால் சொல்லத்தகும் அற்புதம் அல்ல இது. எத்திசையிலும் இதனை நின்று நோக்கிய தேவரும் காண்கிலார்கள். எதுவெனில் எம்பிரானது அம்புகள் ஒப்பாக ஒன்றுடன் ஒன்று உற்று விளங்கிடும் அண்டங்களின் தொகைகள் யாவற்றையும் உருவிப்போய் அசுரருடைய தலைகளை அறுத்துத் தூக்கிச் சென்று அண்டங்களின் அப் பாலும் இடுகின்றன.

தேவர்கள் கண்ணுல்கண்டு நிற்பவும் அவர்க்கும் தெரியாதபடி எம்பிரான் அம் புகள் அசுரர் தலைகளை அறுத்தெடுத்துச் சென்று அண்டமெலாம் உருவிப்போய் அப்பாலுள்ள இடங்களில் இடுவன என்றுல் கண்டவரும் காணமுடியாது செய்தலால் இது சொல்லிடக் கூடிய அற்புதம் அல்ல என்றுர். 392

மூரி யண்டலர் யாக்கைகள் எடுத்துடன் முடிகிப்
பாரி யண்டங்கள் ஆயிர கோடியும் பகிர்ந்து
வாரி யண்டங்கள் இடையிடை சிந்திமற் றவற்றைச்
சோரி யண்டங்கள் ஆக்குவ அண்ணல்தொல் கணைகள்.

எமது சண்முகப் பெருமான் விடுத்த தொன்மையாகும் அம்புகள் வலிமைமிகுந்த பகை அசுரரின் உடல்களை எடுத்து உடன் வேகமுற்று பூமிமுதல் அண்டங்கள் ஆயிர கோடியும் பிளந்து அங்குள்ள நீர்மயமான அண்டங்களில் சென்று இடையிடை அத்தலைகளை அங்கு சிந்தி அதனால் நீரினால் ஆய அண்டங்களை இரத்தமாக்கும் அண்டங்களாக்குவன. 393

ஒண்டு ளிப்படு குருதியும் அவுணர்கள் உரமுங்
கண்ட துண்டமுஞ் சென்னியுந் தோள்களுங் கரமும்
முண்ட மாங்கரி பரிகளும் விளிந்ததேர் முற்றும்
அண்டம் எங்கணுஞ் செறிந்தன அட்டிய திறம்போல்.

ஒளியான துளிகளாகும் இரத்தம் வடியும் அசுர்களது மார்பும்: உடற்குறைகளும்; தலைகளும் தோள்களும் கைகளும் அங்கம் அழிவுற்று முண்டமாகிய யானை குதிரைகளும் அழிவுற்ற தேர்களும் ஆயமுழுவதும் அண்டங்கள் யாவற்றிலும் செறிந்து கிடந்தன. அவற்றைப் பரப்பி வைத்ததன்மைபோன்று 394

புள்ளு லாவுவேல் அறுமுகன் பகழிபோர் புரிந்த
மள்ளர் மாப்படை அலைப்பதோ அரிதுவல் விரைவால்
அள்ளல் வாரிசூழ் ஆயிர கோடியண் டத்தின்
உள்ள தானவர் தம்மையும் முடிவுசெய் துலவும்.

ஊன் தோய்தலால் பறவைகள வட்டமிடும் வெற்றி வேலினைக் கைக்கொண்டருளிய ஆறுமுகப் பெருமான் விடுத்த அம்புகள் அங்கு போர்புரியவந்த அசுரர்களது வீரப்படையை அலைப்பதோ அரிது ஏனெனில் இது மட்டன்றி அங்கு அம்புகள் மேற்கொண்ட கொடும் வேகத்தால் சேறுகொண்ட சமுத்திரம் சூழ்ந்த ஆயிரம் கோடி அண்டத்தினுள்ள அசுரர்களது தொகைகளையும் முடிவு செய்து ஆங்காங்கு உலாவிநிற்பன. 395

குமர நாயகன் தொடுசரம் நிரத்தலுங் குளிர்ந்த
கமல மாமலர் முகைபொரு முகத்தினர் கரத்தர்
தமர நேமிகொள் புகழ்ச்சியர் வணங்குறு தலையர்
அமரர் யாவரும் வானிடைப் பிழைத்துநின் றார்த்தார்.

குமரநாயகன் தொடுத்துவிட்ட அம்புகள் நிரையாக வந்து சேர்தலும் அது கண்ட தேவர்கள் யாரும் குளிர்ந்த பெரும் தாமரை மலர் போலும் புன்னகை கொண்ட முகமுடையயவர் குவித்தகையுடயவர் ஒலித்திடும் கடல்போல் புகழ்ச்சிகளை பாடியவர்; வணக்கமுறும் தலையர்; இவ்வண்ணமாக வானில் இத்தேவரெலாம் உய்ந்திடப்பெற்று நின்று ஆரவாரித்தனர். 396

கங்க முற்றன கொடிபிற வுற்றன கவந்த
சங்க முற்றன குணங்களும் உற்றன தகுவர்
அங்கம் இற்றன கரிபரி இரதமிற் றனவால்
சிங்க மாமுகன் ஒருவனும் நின்றனன் செருவில்.

ஊன்களை தின்னும் பொருட்டாக கழுகள் உற்றன. காகங்கள் நெருங்கின உடற்குறைகளின் கூட்டங்கள் நிரந்தன. பேய்கள் மொய்த்தன. அசுரரின் அங்கங்கள் அறுபட்டு வீழ்ந்தன. யானை குதிரை தேர் முதலியவை எல்லாம் அழிபட்டனவாயின. சிங்கமுகாசுரன் ஒருவன் மட்டுமே அப்போர்க்களத்து தப்பி நின்றான். 397

மீயு யர்ந்துசூழ் அண்டத்தின் அளவெலாம் விரவ
மாய வன்மையிற் கொண்டிடு பெருந்தகை வடிவந்
தூயன் வாளிகள் பட்டுணர் வழிதலால் தொலைந்து
சீய மாமுகன் தொன்மைபோல் நின்றனன் தேர்மேல்.

மிக உயர்ந்திட்டு சூழவிளங்கிடும் அண்டங்களின் பரப்பெலாம் செறிந்திட மாயத் தின்வலியால் பெருந்தகையான சிங்கமுகாசுரன் கொண்ட அவனது பெரிய வடிவமும், தூயவராகும் முருகப்பெருமான் விடுத்திடு அம்புகள் பட்டு மாயம் கொண்ட அவனது உணர்வுகள் அழிதலால் அவன் பெருவடிவு சுருங்கி; சிங்கமுகாசுரன் பழமைபோல தேர் மேலாக நின்றான். 398

நின்ற தீயவன் தானுறும் அயர்ச்சியை நீங்கிச்
சென்ற தன்படை யாவையுங் கண்டிலன் சிறுவன்
கொன்று வீட்டின னென்பது தெரிந்துளங் கொதியா
ஒன்று போலவோ ராயிரஞ் சிலைகள்கொண் டுற்றான்.

அங்கு நின்ற தீயவன் சிங்கமுகாசுரன் தான்கொண்ட அயர்ச்சியை நீங்கி உணர்வு கொண்டு பார்த்தபோது தனது படைகள் யாவற்றையும் காணாது ஐயகோ! என் படைகள் யாவற்றையும் இச் சிறுவன் கொன்றுளான் என்பதைத் தெரிந்து உணர்ந்து உள்ளங்கொதித்து ஒன்று போலாக விளங்கிடுகின்ற ஆயிரம் விற்களை தனது கையில் எடுத்துக்கொண்டு போரிட நின்றான் சிங்கமுகாசுரன். 399

அலைவ ளைந்தபாற் கடல்மிசைப் பத்துநூ றம்பொன்
மலைவ ளைந்தமர் தன்மைபோன் மன்னன்மாட் டன்றித்
தலைவ ளைந்திடா அரிமுகன் தனதுகைத் தலத்தால்
சிலைவ ளைந்திடக் குனித்தனன் சுடுசரந் தெரிந்தான்.

அலைகொண்ட பாற்கடல் மீதாக ஆயிரம் அழகிய பொன்மலை வளைந்திருக்கும் தன்மை போன்று; சூரமன்மன் மாட்டல்லாது வேறு எவர்பாலும் தனது தலையை வளைத்திடாத சிங்கமுகாசுரன் தனது கைகளால் அந்த விற்கள் வளையும்படி வளைத்தான். வளைத்து அவ் விற்களில் சுடுகின்ற அம்பினை தெரிந்து எடுத்துத் தொடுத்தான். 400

## வேறு

சீய மாமுகன் செஞ்சிலை பூட்டிநூ
றாயி ரப்பத் தடுசரம் ஏவலும்
நாய கன்னது கண்டு நகைப்புறா
ஒய்வில் வாளியொ ராயிரந் தூண்டினான்.

சிங்கமுகாசுரன் தனது செவ்விய வில்லில் பூட்டி பதினாயிரம் கொலை செய்கின்ற அம்பினை செலுத்தலும் குமரநாயகன் அது கண்டு நகை செய்து அதற்கு மாறாக தாமும் ஒய்வின்றிச் சென்றிடும் ஆயிரம் அம்புகளைச் செலுத்தினார். 401

ஆற்றல் மேதகும் ஆயிரம் வாளியால்
மாற்ற லன்கணை மாரி விலக்கியே
சாற்று தற்கரி தாகிய தன்மையான்
வீற்றும் ஆயிரம் வெங்கணை யுந்தினான்.

ஆற்றல் மிகுந்து கொண்ட ஆயிரம் அம்பினாலும் பகைவன் சிங்கமுகாசூரனுடைய அம்பின் மழையை விலக்கி சொல்லற்கரிய தன்மையாம் பொருளாய் நிறைகின்ற ஆறுமுகப்பெருமான் பின்னரும் ஆயிரம் கொடுங்கணைகளைச் செலுத்தினார். 402

உந்து கோலையோ ராயிரம் வாளியாற்
சிந்தி யேதிறற் சிங்கமு காசுரன்
ஐந்து நூற்றிரண் டாயிரம் வெங்கணை
எந்தை மேல்வர ஏவினன் என்பவே.

எம்பிரான் செலுத்திய ஆயிரம் அம்பினையும் சிங்கமுகாசூரன் ஆயிரம் அம்பினை விடுத்து அறுத்து அவற்றை விலக்கிய பின் எந்தை பெருமான் மேல் வந்திட பின்னர் பத்து இலக்கம் கொடுங்கணைகளைச் செலுத்தினான் எனச் சொல்லப் பெறும். 403

பதகன் வாளிகள் பத்திலக் கத்தையும்
நுதிகொள் வெங்கணை நூறுபத் தாயிரங்
கதுமெ னத்தொடுத் தேமறை காண்கிலா
அதிர்த ருங்கழல் அண்ணல் அகற்றினான்.

பாதகனை சிங்கமுகாசுரன் விடுத்த அம்புகள் பத்து இலக்கத்தையும் கூரிய நுனிகொண்ட கணைகள் பத்து இலக்கத்தை விரைவுடன் எடுத்துத் தாமும் தொடுத்து விடுத்து வேதமும் காணமுடியாத அதிர்தரும் சிலம்புடைய கடவுள் ஆறுமுகப்பிரான் அகற்றியருளினார். 404

திருத்த குந்திறற் சீய முகத்தினான்
உருத்து வாளியொ ராயிரந் தூண்டுறுப்
பரத்தின் மேற்படு பண்ணவன் தேர்விடு
மருத்தின் மார்புற வல்லை அழுத்தினான்.

திருத்தமுடன் சிறந்துற்ற சிங்கமுகாசூரன் அது கண்டு சீற்றமுற்று ஆயிரம் அம்புகளை ஒரே தடவையில் விடுத்து மேலாய பொருள்கட்கெல்லாம் மேம்பட்ட ஆறுமுகப்பெருமான் தேரினை செலுத்துகின்ற சாரதி வாயுதேவனின் மார்பில் பட்டு ருவும்படி விரைவாகச் செலுத்தினான். 405

ஆர ழற்சினத் தாளரி மாமுகன்
கூரு கைக்கணை நெஞ்சு குளித்திட
மாரு தப்பெய ரோன்வலி சிந்திடாச்
சோரி மிக்கெழத் துன்புற எய்தினான்.

ஆர்ந்து எரிகின்ற கோபமுடைய சிங்கமுகமுடைய அசுரன் விடுத்த கூருடைய ஆயிரம்அம்புகளும் வாயுபகவானின் நெஞ்சில் பட்டுருவிட வாயு என்னும் பேருடைய சாரதியானவன் தனது வலிநீங்கி மார்பால் இரத்தம் மிகுந்து சீறி எழுந்திட மிகுதுன் புற்று வேதனை கொண்டான். 406

பாகு பட்ட பருவரல் நோக்கியே
வாகை அண்ணல் வரிசிலை கால்வளைஇ
ஏக நூறு பகழிதொட் டெண்ணலன்
சேகை மாண்கொடித் தேரினை வீட்டினான்.

தனது தேர்ச்சாரதி பட்ட துயரத்தை வெற்றிமாலை சூடிய ஆறுமுகப்பெருமான் பார்த்தருளி தமது வில்லின் காலினை வளைத்து ஒரே முறையாக நூறு அம்புகளைத் தொடுத்து விடுத்து பகைவனாய சிங்கமுகனது சிவந்த மாட்சிமை உடைய சிங்கக் கொடிகட்டிய தேரை அழித்திட்டார். 407

தேர ழிந்திடத் தீயரின் தீயவன்
ஊர ழிந்த உடுபதி போன்றுளான்
கார ழிந்திடக் கல்லென ஆர்ப்புறுப்
பாரி ழிந்தனன் பல்கணை வீசினான்.

தேரானது அழிந்திடலும் தீயவரிற் தீயவனான சிங்கமுகாசுரன் தனது ஊர்தி அழிந்திட்ட சந்திரதேவனைப் போன்று தவித்து மேகங்களும் அஞ்சிச் சிதைவுற சத்த மிட்டு ஆர்த்து பூமியில் குதித்து நின்று பல அம்புகளையும் மறுபடியும் வீசினான்; 408

வீசு கின்ற வியன்கணை யாவையும்
மாசில் காட்சியன் வாளியின் மாற்றிடா
ஆசில் வெஞ்சரம் ஆயிரந் தூண்டியே
நீசன் விற்களை நீள்நிலஞ் சேர்த்தினான்.

சிங்கமுகாசுரன் வீசுகின்ற மேலான வைரித்த அம்புகள் யாவற்றையும் மாசில்லாத காட்சிப் பொருளாய் நின்றருளும் சண்முகப்பெருமான் தமது அம்புகளால் அழித்து நீக்கி பின்னர் குறைவிலாத கொடிய அம்புகள் ஆயிரத்தைச் செலுத்தி நீசனாகும் சிங்கமுகாசுரனுடைய கையில்கொண்ட விற்களையும் அறுத்து நீண்ட போர்க் களத்து வீழ்த்தினார். 409

அண்டலன் கொண்ட ஆயிரஞ் சாபமுந்
துண்ட மாகித் தொலைந்து நிலம்புக
விண்டு நான்முகத் தோனும் விண்ணோர்களுங்
கண்டு நின்று கரமெடுத் தார்த்தனர்.

சிங்கமுகாசுரன் கொண்ட ஆயிரம் விற்களும் துண்டமாக்கப்பட்டு தொலைவுற்று நிலத்தில் வீழ்ந்திட அதுகண்டு விஷ்ணுமூர்த்தியும், நான்குமுகக் கடவுளும், தேவர்களும் தங்கள் கைகளை எடுத்து மகிழ்வால் வீசி ஆர்ப்பரித்தார்த்தனர். 410

கோலு மிழ்ந்த குனிசிலைக் கூட்டறக்
கால வெவ்வழல் என்னக் கனன்றுளான்
சூல மொன்று துளக்கினன் வீசினான்
ஆல காலம் அளக்கர்உய்த் தாலென.

அம்புகளை உமிழ்கின்ற வளைந்த விற்கள் ஆயிரமும் கூட்டாக அறுபட்டிடலும் ஊழிக்கால கொடிய நெருப்பெனும்படி சினம்கொண்ட சிங்கமுகாசுரன் சூலப்படை ஒன்றை எடுத்துச் சுழற்றி வீசினான்: அது ஆலகாலம் என்னும் நஞ்சினை சமுத்திரம் செலுத்தியதுபோன்றிருந்தது. 411

துன்ன லன்விடு சூலத்தை ஏழிரு
கொன்னு னைக்கணை தூண்டிக் குறைத்திடாப்
பின்னும் ஆயிரம் பேரழற் புங்கவ
மின்னெ னத்துரந் தான்அடல் வேலினான்.

பகைவனான சிங்கமுகாசுரன் விட்டசூலப்படையை பதினான்கு உயர்வாகும் கூர்மையுடைய அம்பினை எம்பிரான் விடுத்து அறுத்து நீக்கிப் பின்னர் ஆயிரம் பெரு நெருப்பைப்போன்ற கொடிய அம்புகளை மின்னல்போல் விறுக்கெனச் செலுத்தினார் வலிகொண்ட வேலினைக் கைக்கொண்ட கடவுள்: 412

கொண்ட வேற்கைக் குமரன் சரங்களைக்
கண்டு தீயன் கனன்று கரந்தனில்
தண்டம் ஒன்றில் தரைபடச் சிந்தியே
அண்டம் விண்டிட ஆர்த்தனன் ஏகினான்.

வேலினைக் கைக்கொண்ட குமரப்பெருமான் விடுத்த அம்புகளைத் தீயவனான சிங்கமுகன் கண்டு கோபமுற்று கையில்கொண்ட தண்டாயுதம் ஒன்றால் அந்த அம்புகளை அடித்து நிலத்தில் வீழ்த்தி அண்டங்களும் வெடிபடும்படி ஆரவாரித்து எம்பிரான்முன் வந்தான்; 413

விடுத்த வாளி பொடித்ததும் வெவ்வியோன்
பிடித்த தண்டொடு பேர்வதுங் காண்குரு
வடித்த ஏழ்கணை தூண்டினன் வன்கதை
எடுத்த கையை இருநிலஞ் சேர்த்தினன்.

தாம்விடுத்த அம்புகள் பொடிபட்டதும் கொடிய சிங்கமுகாசுரன் கையில் பிடித்த தண்டுடன் முன்னாக வருதலையும் கண்ணுற்று வடித்தெடுத்த வலியுடைய ஏழு அம்புகளை எம்பிரான் குமரன் செலுத்தி சிங்கமுகாசுரனது தண்டினைப் பிடித்தகையை அறுத்து பெரிய நிலத்தில்போட்டார். 414

சேர்த்து முன்னுறத் தீயவன் தோளினும்
பேர்த்தும் ஆங்கொர் பெருங்கை புறப்படப்
பார்த்த லம்புகு தண்டினைப் பற்றியே
ஆர்த்து வீசினன் ஆதியந் தேவன்மேல்.

பூமியின்மீது கையை அறுத்துச் சேர்த்துவிடலும் தீயவனான சிங்கமுகாசுரனது கை அறுபட்ட தோளில் நின்றும் மீண்டும் அவ்விடத்து ஒரு பெரியகை புறப்படுதலும் சிங்கமுகன் பூமியில் அறுபட்ட கையுடன் வீழ்ந்த தண்டினை மீளவும் எடுத்து ஆரவாரிப்புடன் ஆதியம் தேவனாகும் குமரப் பெருமான்மேல் வீசினான். 415

ஒட்ட லன்தொட உற்றதண் டத்தின்மேல்
நெட்ட ழற்கு நிகர்கணை ஆயிரம்
விட்ட றுத்தனன் மேல்வரு பாந்தளை
அட்டி டுங்கதிர் ஆதவன் என்னவே.

பகைவன் சிங்கமுகன் வீசிடவந்துற்ற நெடிய தண்டாயுதத்தின் மீது எம்பிரான் நீண்டநெருப்புச் சுடருக்கு நிகரான அம்புகள் ஆயிரத்தை விடுத்து அத்தண்டாயுதத்தை அறுத்துத் தள்ளினார். எதுபோல் எனில் சூரியபகவான் தன்மீதுவரும்பகையாய பாம்பினை உடன் தனது சுடராய கிரணங்களால் அழித்திடும் தன்மைபோன்று. 416

அண்டர் நாயகன் ஆயிரம் வாளியால்
தண்டம் வீழத் தடிதலும் மாற்றலன்
கண்டு சீறிக் கடுந்திறல் கூற்றிடைப்
பண்டை நாட்கொண்ட பாசத்தை வீசினான்.

தேவர்கட்கு நாயகரான ஆறுமுகப்பிரான் ஆயிரம் அம்புகளால் தனது தண்டாயுதம் வீழ்ந்திடும்படி அழித்திடலும் அதனை சிங்கமுகாசுரன் கண்டு சீறி நீக்க முடியாத வலியுடைய இயமனிடத்தில் முன் நாளில் பறித்தெடுத்த பாசத்தை எம்பிரான் மீது வீசினான். 417

சுற்று பாசத் தொடர்ச்சியை நோக்கிவேள்
செற்றொ ராயிரந் தீக்கணை தூண்டலும்
வற்றல் மாண்கொடி வன்னியின் தீச்சுடர்
உற்ற தாமென ஒண்பொடி யாயதே.

சிங்கமுகாசுரன் விடுத்திடத் தம்மைச் சுற்றி வருகின்ற அப்பாசத்தின் தொடர்பை எம்பிரான் நோக்கி அதன்மீது கடிந்து ஓர் ஆயிரம் தீயாகும் அம்பினைச் செலுத்தலும்; அதுபோது அப்பாசமானது காய்ந்து உலர்ந்த மரக் கொடிகளின் கற்றைகள் நெருப்பின் கொடிய சுடர்பட்டால் எப்படி உடன் சாம்பராகுமோ அதுபோன்று பாசமும் எரிந்து பொடியாகிப் போனது. 418

**வேறு**

நாணற் றதுகண் டனன்நா ணுறுவான்
ஏனுற் றிடுசே யையிரா யிரமாம்
பாணித் தொகையைக் கொடுபற் றிடுவான்
பேணிச் சினமோ டுபெயர்ந் தனனே.

தனதுபாசம் அற்றது கண்டு நாணமுற்ற சிங்கமுகாசுரன் நாணம் அடைபவ ணுய் இன்பமே வடிவாய்நிறைகின்ற குழந்தையான ஈசனே தனது இரண்டாயிரம் கைகளின் தொகையைக் கொண்டு பிடித்திடும்படி மனதில் எண்ணிக் கோபத்துடன் எழுந்துவந்தான். 419

சிங்கத் திறலோன் வருசெய் கைதனே
எங்கட் கிறைநோக் கியிரா யிரமாம்
வெங்கட் கணேயா யினவிட் டவுணன்
அங்கைத் தொகையா வுமறுத் தனனே.

சிங்கமுகாசுரன் வருகின்ற அச்செய்கையினே எங்கட்கு இறைவனுகும் குமரமூர்த்தி கண்டருளி இரண்டாயிரம் கொடியதான அம்பினே விடுத்து சிங்கமுகாசுரனுடைய இரண்டாயிரம் கையுமாகிய அத்தொகை யாவற்றையும் அறுத்தருளினர். 420

கொற்றங் கெழுவுற் றகுகன் கணேயால்
செற்றந் திகழ்ஆ ளரியசெய் யகரம்
அற்றம் புவிவீ ழுமுன்அங் கைநிரை
முற்றும் புதிதா கமுளேத் தனவே.

கொற்றம் மிகுந்துற்ற குமரப்பெருமான் அம்பினுல் கோபம் மிகுந்து திகழும் சிம்கமுகாசுரனது செம்மையான கைகள் அறுபட்டு பூமிமீது வீழ்வதன்முன்பே அவ னுடைய அழகிய கைகள் முற்றும் புதிதாக முளேத்தன. 421

அற்றுப் புவிவீழ் தருமங் கைகளே
மற்றத் துணைவந் தெழுமாண் கைகளால்
பற்றிச் செலஅன் னதுபார்த் தனனுல்
நெற்றிக் கண்அளித் திடுநீள் சுடரோன்.

அறுபட்டு பூமிமீது வீழ்கின்ற அழகிய கைகளே மற்று புதிதாகத் தன்னிடம் முளேத்தெழுந்த மாண்புடைய கைகளால் சிங்கமுகன் பற்றி எடுத்துக்கொண்டு எம்பிரான் முன்சென்றிட, அதை பார்த்தருளினர் சிவபெருமான் நெற்றிக்கண் தந்தரு ளிய நீண்ட சுடரொளியாய் நின்ற ஆறுமுகப்பெருமான். 422

ஓரா யிரம்வா ளிகளுய்த் தவுணன்
ஓரா யிரநீண் முடியொல் லேயரு
ஈரா யிரம்வெஞ் சரமே வியவன்
ஈரா யிரமொய்ம் பும்இறுத் தனனுல்.

எம்பிரான் உடன் ஓராயிரம் அம்புகளே விடுத்து சிங்கமுகாசுரனுடைய ஓராயிரம் தலேகளேயும் விரைவில் அறுத்து வீழ்த்தி பின்னர் இரண்டாயிரம் கொடிய அம்பினே எம்பிரான் செலுத்தி சிங்கமுகாசுரனுடைய இரண்டாயிரம் கைகளேயும் அறுத்து வீழ்த்தினர். 423

அன்பற் றவன்மொய்ம் புகளற் றனகண்
டின்புற் றனர்வா னவர்ஈண் டிவைகள்
முன்புற் றதுபோ லமுளேத் தெழலுந்
துன்புற் றனர்யாக் கைதுளங் குறுவாா்.

அன்பற்ற சிங்கமுகாசுரன் தோள்கள் அறுபட்டதைக் கண்டு வானில் நின்ற தேவர்கள் இன்புற்றனர்; ஆனல் அத்தோள்கள் வளர்ந்து மீண்டும் முளேத்து முன் புற்றதுபோல ஆகிவிடலும் அதுகண்டு துன்பமடைந்தனர்; அதுவன்றி இப்படி நிலமை ஆகிவிட்டால் என்னுகுமோ எனும் அச்சத்தால் உடலம் நடுங்குவாராயினர். 424

கண்டான் இதுவிண் ணவர்காண் பரியோன்
பண்டா லவனத் திடைபா ணிசிரந்
தண்டா தழல்கொய் திடுதன் மையினுல்
உண்டா கியவா றெனவுன் னினனே.

இதனைக்கண்டருளினர் தேவரும் காண்பரிய தேவாதிதேவன் ஆறுமுகப்பெருமான். அவர் இந்த சிங்கமுகாசுரன் தனது கைகள் தலையாயவற்றை தவறின்றி அன்று ஆலவனத்தில் இவன் தவம் செய்தபோது யாக நெருப்பில் கொய்து இட்டதன் மையால் இது இங்கு உண்டாகியவாறு என நினைந்தருளினர். 425

உன்னும் பொழுதத் தினில்உம் பரெலாம்
என்னிங் கிவன்மாய் வதெனத் தளர
முன்னம் பெயர்சிங் கமுகன் முனியாச்
செந்நின் றிஃதோர் மொழிசெப் பினனுல்.

எம்பிரான் திருவுள்ளத்து இவ்வண்ணம் நினையும்பொழுது தேவர்களெல்லாம் அது கண்டு மனம் தளர்ந்து இந்த சிங்கமுகன் எப்படி இனி மாய்ந்திடப் போகின்றான் என்று வேதனையுறலும்; முன்னுகவந்த சிங்கமுகாசுரன் முனிவுகொண்டு எம்பிரான்முன் செம்மையாக நின்று இந்த ஒருவார்த்தையை சொல்கின்றான்; 426

உளைக்குங் கணைதள் ளியுகம் பலநீ
கிளைக்குந் தலைமொய்ம் புகெடுத் திடினும்
முளைக்கின் றதலான் முடிவுற் றிடுமோ
இளைக்கின் றனைநீ கொல்எனைப் பொருவாய்.

கூர்மையாகும் அம்புகள் பலவற்றைச் செலுத்தி பலயுககாலம் வரையும் என் னிடம் கிளைத்தெழும் தலைகளை தோள்களை அறுத்தாலும் அவைமுளைக்கின்றதல்லால் அவைகள் முடிவுற்றிடுமோ? நீதான் இப்போதே அறுத்தறுத்து இளைக்கின்றாய். நீயா என்னைவென்று கொள்ளப்போவாய். 427

மொய்யுந் துதவத் தியல்முன் னலைநின்
ஐயன் தருமாற் றல்அறிந் திலைபோர்
செய்யும் படிவந் தனைசேய் ஒருநீ
உய்யும் படியன் றுனதூக் கமுமே.

எமது வலியுடைய தவத்தின் இயல்பை நினைந்தாயில்லை; அல்லது உனது ஐயன் சிவபிரான் தந்தருளிய வரத்தின் ஆற்றலை நீ அறிந்திலை; இவைகளை அறியாது நீ போர் செய்யும்படி வந்தனை. ஒரு குழந்தையான நீ உய்யும்படியான கருத்தன்று உனது இந்த எண்ணமும் உனது செயலும் 428

மாண்டே வர்தமைப் புரிவன் சிறைபோய்
ஆண்டே வருகின் றதுமாற் றலுளேன்
ஈண்டே அழிகின் றதுமில் லையிவண்
மீண்டே குதிநின் னுயிர்விட் டனனுல்.

மாட்சிமையுடைய தேவர்தமை வைத்திருக்கும் கொடிய சிறையானது நீக்கப் பட்டு அவ்விடம் திரும்பி அவர்கள் வருகின்றதும் மிகுவலிமையுடையேனுகிய யான் இவ்விடம் அழிந்து போவதுமான இரண்டும் நடைபெருத கருமம். இப்போது நான் சொல்வதைக்கேட்டு நீ மீண்டு போய்விடு. உனது உயிரை தப்பிப்போய்விட நான் விட்டனன் என்றான் சிங்கமுகாசுரன். 429

### வேறு

என்னலும் அதனை ஓரா எம்பிரான் குமரன் சொல்வான்
உன்னுயிர் இழைத்த எல்லை யொழிந்தது கூற்றும் வந்து
பின்னுற நின்ருன் என்நீ பிதற்றுதி உணர்வி லாதாய்
முன்னொரு கணத்தில் நின்னை முடிக்குவன் காண்டி யென்ருன்.

என்னலும் அதனைக் கேட்டுணர்ந்த எம்பிரான் குமரன் சொல்வார்; சிங்கமுகனே உனது உயிருக்கு இழைக்கப்பட்ட எல்லையானகாலமும் நேர்ந்து கொண்டது. இயமனும் வந்து உன் பின்ருக நின்றுகொண்டான். என்ன நீ பிதற்றிக் கொள்கின்ருய் உணர்வில்லாதவனே! ஒரு கணப்பொழுதின்முன் உன்னை முடிப்பேன் எனக் கூறியருளினர். 430

படைப்பவன் குரவன் ஈது பகர்தலும் அவுணர் கோமான்
இடிப்பென ஆர்த்துக் குன்றம் இராயிரம் பறித்து வீச
நொடிப்பினில் அவற்றை வாளி நூற்றின்நுண் துகள தாக்கித்
தடப்பெரு மருமம் மூழ்கச் சரங்களா யிரத்தை உய்த்தான்.

படைக்கின்ற கடவுள் பிரமனுக்குக் குருவாக உற்றகுமரன் இதனைச் சொல்லலும், அதனை அசுரர்தலைவன் சிங்கமுகன்கேட்டு இடிபோல் ஆர்த்துச் சத்தமிட்டு இரண்டாயிரம் மலைகளைப் பிடுங்கி வீசிடலும், அதுபோது எம்பிரான் அம்மலைகளை நூறு அம்புவிடுத்து நொடிப்பொழுதில் பொடியாக்கி அழித்து சிங்கமுகாசுரனது பெரிய உடலில் மூழ்கிடுமாறு ஆயிரம் அம்பினை விடுத்தார். 431

மாயிரு நெடுங்கண் வாளி மார்பத்தை அகழ்ந்து துன்னக்
காயெரி கலுழுங் கண்ணுன் கைகளால் அளவை தீர்ந்த
பாயிருங் குன்ற நாடிப் பறித்தலும் கண்டு செவ்வேள்
ஆயிரங் கணைதொட் டன்னுன் அணிமுடித் தொகையை வீழ்த்தான்.

மிகப்பெரிய நுனியினையுடைய அம்புகள் சிங்கமுகாசுரனுடைய நெஞ்சைப் பிளந்து அப்பால் போயிட சுடுகின்ற நெருப்பினைப்போன்ற கண்ணுடைய சிங்கமுகாசுரன் தனது கைகளால் அளவுகடந்த பெருமலைகள் யாவற்லையும் பிடுங்குதலும் அதுகண்டு முருகப் பெருமான் ஆயிரம் அம்பினை விடுத்து அவனது அழகிய முடியணிந்த தலைகளை அறுத்து வீழ்த்தினர். 432

அறுத்திடு தலைகள் வீழ ஆயிரஞ் சென்னி வல்லே
மறித்தும்வந் தெழுத லோடு மடங்கல்மா முகத்தன் முன்னம்
பறித்திடு குன்றம் வீசிப் பருவலித் தடந்தோள் கொட்டி
எறித்தரு கதிரும் விண்ணோர் யாவரும் உட்க ஆர்த்தான்.

எம்பிரான் அறுத்திட்ட தலைகள் வீழ்தலும் அதுவேளை ஆயிரம் தலைகளும் மீண்டும் வந்து முளைத்துக்கொள்ளலும் சிங்கமுகாசுரன் முன்னர் பிடுங்கிய மலைகளைவீசி பருத்த வலியுடைய பெருந்தோளைத் தட்டி எறித்திடும் கதிருடைய சூரிய தேவனும், தேவர்கள் யாவரும் உட்கிடும்படி ஆர்ப்பரித்தான். 433

ஆர்த்திடு காலைச் செவ்வேள் ஆயிரத் திரட்டி கொண்ட
கூர்த்திடு பகழி தூண்டிக் குன்றங்கள் செற்று வெய்யோன்
தார்த்தட மொய்ம்பு முற்றுந் தள்ளினன் தள்ளு முன்னர்ப்
பேர்த்தும்வந் தெழுந்த அம்மா தவத்தினும் பெரிதொன் றுண்டோ.

சிங்கமுகாசுரன் ஆர்த்திடுகின்ற காலையில் முருகப்பெருமான் இரண்டாயிரமாகும் கூரிய அம்புகளைத்தூண்டி அவன் விடுத்த மலைகள் யாவற்றையும் அறுத்து, கொடிய வணுகிய சிங்கமுகனுடைய மாலையணிந்த பெருந்தோள்களை அறுத்துத் தள்ளினர். அப்படி அறுப்பதன்முன்பே அவனது தோள்கள் மீண்டும்வந்து கூடி எழுந்து கொண்டது. ஆதலால் முனிவர்களே தவத்திலும் பார்க்கப் பெரிதானபொருள் வேறுண்டோ? அதனை இதைக்கொண்டு உணர்வீர்களாக என்று பின்னரும் சூதமுனிவர் சொல்கின்ருர்; 434

அத்திறங் காணு ஈதோ ராடலா உன்னி நூற்றுப்
பத்துடன் எட்டின் காறும் பரஞ்சுடர் உருவாய் நின்முன்
மொய்த்திடு பகழி மாரி முறைமுறை துரந்து மொய்ம்பன்
கைத்தலஞ் சென்னி முற்றுங் கண்டதுண் டங்கள் செய்தான்.

அத்தன்மையை எம்பிரான் கண்டருளி இதனை ஓர் திருவிளையாட்டாக நினைந்தருளி ஆயிரத்தெட்டு அண்டங்கள்தோறும் உன்னற்கரிய பரஞ்சுடர் உருவாகநின்ற ஆறுமுகக் கடவுள் உண்மையாகும் திறலுடைய அம்பாகிய மழையை முறைமுறை செலுத்தி வலியுடையோனன சிங்கமுகனது கைத்தலங்கள் தலைகள் முழுவதையும் கண்டதுண்டமாக வெட்டி எறிந்தார். 435

திசைகளிற் போகும் நேமித் திறங்களிற் போகும் வெற்பின்
மிசைகளிற் போகும் பாரின் மீதினிற் போகும் மாந்தர்
நசைகளிற் போகும் விண்ணோர் நாட்டிடைப் போகுஞ் சிங்கன்
இசைகளிற் போகும் எங்கும் இற்றிடு சிரமுங் கையும்.

முளைக்க முளைக்க எம்பிரான் வெட்டித் தள்ளிடும் சிங்கமுகனது தலைகளும் கைகளும் திக்குகளில் போகும், சமுத்திரங்கள் வெவ்வேறானவற்றில் போகும், மலைகள்மேல்போகும், பூமியின் மீதில்போகும், மனிதர்களின் விருப்பினில் போகும். தேவர்கள் நாட்டிடைப்போகும். சிங்கமுகாசுரனது புகழ்நிலவிய இடமெல்லாம் அவைகள் போகும். 436

அகரம தாதி யான எழுத்தெலா மாகிப் பின்னர்
மகரமு மான மேலோன் வடிக்கணை துணித்து வீசுஞ்
சிகரமுந் துகர முற்றுஞ் சேணிடைச் சென்று மாயோன்
நகரமுந் தாவி அண்ட கோளகை நண்ணு கின்ற.

''அ''என்னும்படி எந்தஎழுத்திற்கும் முதலெழுத்துப்போல்எவற்றிற்கும் முன்னுகி எவற்றுடனும்கூடி நின்றுனும் பின்னர் திருவிளையாடலாக மகர மீனுகவும் திருவுருக்கொண்ட மேலாய கடவுள் ஆறுமுகன்விடுத்த வடிக்கணைகள் துணித்து வீசுகின்ற சிங்கமுகனுடைய தலையும் கைகளும் அங்கங்கள் முற்றும் வானிடை அம்புகளால் தூக்கிச் செல்லப்பெற்று நாராயணப்பெருமானின் வைகுந்த உலகையும் கடந்து அப்பால் அண்டகோளகையாகும் எல்லைப்பொருளினையுமே சென்று அடைகின்றன. 437

தூவுடை நெடுவேல் அண்ணல் சுடர்க்கணை துணித்து வீச
மேவலன் தனது சென்னி மெல்லிதழ் அதுக்கி விண்மேல்
ஆவலங் கொட்டிச் செல்ல அச்சமுற் றங்கண் நின்ற
தேவர்கள் மயக்கம் எய்தித் திருநில வரைப்பின் வீழ்ந்தார்.

மாலையணிந்த சுடர்கொண்ட வேற்படைக்கு அதிபரான அண்ணல் ஆறுமுகப்பிரான் விடுத்தருளும் சோதிவடிவான அம்புகள் துணித்து வீசுதலும் சிங்கமுகாசுரனுடைய தலைகள் மென்மையான தமது சொண்டுகளை பற்களால் அதுக்கிக்கொண்டு வான்மேல் ஆவென்று இரைந்துகொண்டு செல்லுதலும் அவ்வான்மேல் நின்ற தேவர்கள் கண்டு அஞ்சி மயக்கமுற்று திருவுடைய நிலத்தில் வீழ்ந்தார்கள். 438

வஞ்சரை வஞ்சஞ் செய்யும் வள்ளலார் குமரன் தொட்ட
செஞ்சரம் அநந்த கோடி சென்றுசென் றறுத்து விட்ட
எஞ்சலில் அவுணன் மொய்ம்புந் தலைகளும் யாண்டுஞ் சிந்தி
விஞ்சையர் அமர்தற் கொத்த வரைகளின் மேவ லுற்ற.

வஞ்சகர்களை தனது அருளுடைமைக்கு ஆளாக்காது வஞ்சம் செய்திடும் வள்ளலாகும் குமரநாயகன் தொடுத்துவிடுத்த சிவந்த அம்புகள் அனந்தகோடியாய் சென்று சென்று அறுத்தறுத்து வீழ்த்திட சிங்கமுகாசுரனின் தோள்களும் தலைகளும் எவ்விடமும் சிந்திடப்பெற்று விஞ்சையர்கள் வந்து தங்கி அமர்ந்திருத்தற்கொத்த பெருமலைகளாக அமைந்து விளங்கிடுவன. 439

தூயவன் விடுத்த வாளி துணித்திடும் ஒவ்வோர் சென்னி
வாயினை அடுபோர் தன்னில் வந்தசில் கணங்கள் நோக்கி
ஆயிர கோடி கொண்ட களேவரம் அதற்குள் இட்டு
மாயிருஞ் சிகர மாட மற்றிதென் றுற்ற வன்றே.

தூயவராகும் முருகப்பெருமான் விடுத்த அம்புகள் துணித்திடுகின்ற ஒவ்வொரு தலையினிலும் ஆவென்ற வாயினை கொலைநிகழும் போர்க்களத்து வந்த சிலபேய்கள் பார்த்து ஆயிரம்கோடிகொண்ட பிணங்களை அவ்வாய்க்குள் போட்டு அதனைநோக்கி நாம் வாழ்வதற்கு இது ஓர் பெரிய மாடமாயிற்றென்று அதற்குள் தங்குவன. 440

பாடுறு சிரத்தில் ஒன்று பதைத்துவாய் பகிர அங்கண்
ஆடுறும் அலகை கோடி அகன்பிணக் குவைகள் உய்த்து
மாடமீ தென்று புக்கு மற்றது கடிதின் மூட
ஓடியுள் ளலைந்த தக்கன் வேள்வியில் உற்று ளார்போல்.

அறுபட்டு வீழும் சிங்கமுகனது தலையில் ஒன்று பதைத்துத் துடித்து வாயை ஆவென்று திறப்ப அங்கு நின்று கூத்தாடிய பேய்கள் கோடிக்கணக்கான பருத்த அசுரரது பிணக்குவியலைப் போட்டு இது நல்ல மாடம் என எண்ணி அதற்குள் புகுந்திட, அத்தலையின் திறந்த வாய்விரைவாக மூடிட அப்போது அப்பேய்கள் பயந்து ஓடித்திரிந்து அலைந்து உள்ளால் அவதியுறுகின்றன; எதுபோல் என்றால் தக்கனது யாகத்தில் அகப்பட்டுக்கொண்ட தேவர்களைப் போன்று.

தக்கன் யாகத்தில் சென்றிருந்த தேவர்களை நாற்புறமும் வெளிக்கொள்ள முடியாதவாறு காவல்வைத்தே வீரபத்திரதேவர் உள்நின்றோரை அடிக்கத் தொடங்க அவர்கள் வெளியே ஓடமுடியாதபடி உள்ளே ஓடி ஓடி அலைந்தவர். அதுபோன்று இப்பேய்களும் உள்நின்றும் வெளிவரமுடியாது வாய்மூடிட ஓடி உலைவுற்றன. 441

மன்புரி அவுணர் தோன்றல் வாய்பொதி சென்னி புக்குத்
துன்புறும் அலகை துண்டஞ் செவிநெறி துருவிப் போன
முன்பொரு முனிவன் இல்லை முயங்குவான் உறையுள் புக்கோன்
இன்பொடு வன்மை சிந்தி நூழையால் இரிந்த வாபோல்.

எவர்க்கும் மன்னனாக ஆண்ட அசுரர் தலைவன் சிங்கமுகன் வாய்மூடிய தலையுள் புகுந்து வெளிவரமுடியாது துன்புற்றபேய்கள் ஒருவாறு அத்தலையின் மூக்குக்குள்ளாலும் செவித்துவாரத்தாலும் நுழைந்துகொண்டு வெளிவந்தன. இதை நோக்குகின்றபோது முன்னாளில் கௌதம முனிவன் பத்தினியான அகலிகையை முனிவர் இல்லாதநேரம் வஞ்சனையால் சென்று அவளுடன் உடலுறவு கொள்ளப்போய் முனிவருடைய ஆச்சிரமத்திற்கு உள்ளே பிரவேசித்த இந்திரன் அங்கு அகலிகையுடன் உடலுறவு கொள்ள ஆயத்தமாதலும் அதுநேரம் முனிவர் வரக்கண்டு அஞ்சித் தனது இன்பமும் விட்டு வன்மையும் கெட்டு யன்னலூடாக பூனையாகப் பாய்ந்தோடியதை ஒத்திருந்தது. 442

ஒன்னலன் தனது மொய்ம்பும் உருகெழு சிரமும் வீழ்ந்து
பன்னெடுங் கிரிக ளாக அவற்றிடைப் பலசூர்ப் பேயுந்
துன்னுறு கொடியுஞ் சூழ்வ தொல்லையிற் பொறிகள் நீங்க
முன்னவள் பதாகை யோடு முறையில்வந் துற்றவாபோல்.

பகைவனான சிங்கமுகாசுரனது தோளும் சினம்கொண்ட தலையும் எம்பிரான் அம்பால் அறுபட்டு வீழ்ந்து பல பெருமலைகளாயிட அவற்றிடையாக அச்சம் விளைத்திடும் பேயும் நெருங்கிவரும் காகங்களும் சூழ்ந்துகொள்வன; எப்படியெனில் மிகு தொன்மைவாய்ந்த இலக்குமி நீங்கிட அவளுக்கு மூத்தவளாய தனது கொடியுடன் அங்கு வந்திருத்தலை ஒத்தது. 443

அரண்டருங் கழலான் இவ்வா றறுத்தலும் அவுணர் கோமான்
முரண்டகு சிரமுந் தோளும் பின்னரும் முளைப்ப நோக்கித்
திரண்டபல் கணைக ளோச்சிச் சென்னியில் ஒன்றுங் கையில்
இரண்டுமே நிறுவிப் பின்னர் யாவையும் தடிந்தான் அன்றே.

எமக்கு எஞ்ஞான்றும் காப்பினைத் தரும் சேவடியுடைய ஆறுமுகப்பிரான் இவ்வாறு சிங்கமுகாசுரனை அறுத்தலும் அசுரர்கட்கு இறையோனுகும் அவனின் முரண்கொண்ட தலையும் தோளும் பின்னரும் முளைத்திடலும் அதனைக்கண்டு எம்பிரான் பின்னர் திரண்டதான பல அம்புகளைச் செலுத்தி சிங்கமுகாசுரனின் தலையில் ஒன்றையும் கையில் இரண்டையுமே நிற்கவைத்து ஏனைய யாவற்றையும் அறுத்தார். 444

நீளுறு பதலை சிந்தி நின்றமர் இயற்று கின்ற
கோளரி முகத்து வீரன் குறைந்திடு முடியு மிற்ற
தோள்களும் முன்ன ரேபோல் தோன்றிடப் புகுதும் எல்லை
ஆளுடை முதல்வ னுகும் அறுமுகன் அதனைக் கண்டான்.

நீண்டபெரிய மலைகளைச் சிந்தி அங்குநின்று போர்புரிகின்ற சிங்கமுகமுடைய வீரனது வெட்டுண்ட தலைகளும் அறுபட்ட தோள்களும் முன்னமேபோல் முளைத்திடத் தொடங்கும் நேரத்து எம்மை ஆளுடைய முதல்வனுகும் ஆறுகப்பிரான் அதனைக் கண்டார். 445

நாற்றிசை முகத்தி னுனும் நாகரும் பிறரும் உட்கச்
சீற்றம துளன்போல் ஐயன் சிறிதவண் உரப்ப லோடும்
மாற்றல னுகி நின்ற மடங்கல்மா முகத்தன் தன்பால்
தோற்றிடு சிரமுந் தோளுந் துளங்கிமீண் டொளித்த அன்றே.

நான்கு திசையிலும் முகமுடைய பிரமதேவரும் மற்றைய தேவரும் பிறரும் திடுக்கிட்டு உட்கிடும்படியாக தாம் கோபமுடையார்போல் சிறிதே எம் ஐயன் உரப்பினுர்; அவ்வண்ணம் செய்தலோடும் அங்கு பகைவனுகிநின்ற சிங்கமுகாசுரன் தன்னிடத்து மீண்டும்தோன்ற எத்தனித்த தலையும் தோளும் நடுங்கியவாறு முளையாது திரும்ப ஒளித்துக்கொண்டது. 446

ஐயன துங்கா ரத்தால் அரிமுகன் சிரமும் மொய்ம்பும்
மெய்யிடை யொடுங்கிற் றம்மா மேவினுர் தம்மை நோக்கி
மையறு கருந்தா தன்ன வன்புறக் கமடஞ் சென்னி
ஒய்யென யாக்கை தன்னில் ஒளித்திடுந் தன்மை யேபோல்.

எமது ஐயன் ஆறுமுகனின் உங்காரத்தொனியால் சிங்கமுகனுடைய தலையும் தோளும் மீண்டும் அவன் மேனியிடத்து ஒடுங்கிக்கொண்டது. அம்மவோ இந்த ஒரு அற்புதத்தை நோக்கினுல், குற்றமற்ற கரிய தாதுபோலும் வலிமையான புற ஓட்டினை உடைய ஆமை தம்மை அடைந்து கொள்வாரைக் கண்டவுடன் அதனுடைய தலையையும் கால்களையும் விரைவாக உடம்பினில் ஒளித்திடும் தன்மையைப் போன்றது. 447

குன்றினை எறிந்த வைவேற் குமரவேள் கணையால் இற்ற
தன்றலை பாணி தோன்றுத் தன்மையை அவுணன் பாரா
ஒன்றற முந்து பன்னுண் உணர்ந்திடு விஞ்சை முற்றும்
மன்றிடை அயர்த்தோ னென்ன மானமுற் றழுங்கி நின்றுன்.

கிரவுஞ்சமலையை பிளவுசெய்த கூரிய வேலினைக் கைக்கொண்டருளும் குமரமூர்த்தியின் அம்பினால் அறுந்துபோய தனது தலையும் கையும் தோன்றிடாததன்மையை சிங்கமுகாசுரன் பார்த்தபோது அவன்; ஒன்றையேனும் தப்பவிடாது முன்னர் பல நாளாகக் கற்றுணர்ந்து கொண்ட வித்தைகள் முழுவதையும், ஓர் சபையிடத்து அரங்கேறும்போது ஒருவன் மறந்துபோய் அவதியுற்று நிற்பான்போன்று; மானத்தினால் வேதனைப்பட்டு இரங்கியவாறு நின்றான். 448

அங்கது கண்டு செவ்வேள் அருள்புரி கின்றான் நந்தம்
வெங்கணை பலவுஞ் சென்று வீட்டிய தலையும் உன்றன்
செங்கையுந் தோன்றிற் றில்லை எழுகெனச் செப்பு கைய
இங்குநீ பட்ட பின்கொல் முளைத்திட இருந்த தென்றான்.

அத்தன்மையை முருகப்பெருமான் கண்டருளி அவனிடம் அருள் புரிந்து இதனைச் சொல்லிடுகின்றார்; சிங்கமுகனே நமது கொடிய பல அம்புகளும் சென்று அறுத்து வீழ்த்திய உனதுதலையும் உன்னுடைய செங்கையும் இப்பொழுது தோன்றவில்லை. நீ அவற்றை முளைத்து எழுக எனச்சொல்! ஐயனே நீ இங்கு இறந்தபின்போ அவைகள் முளைத்திடும்படி இருந்தன என வேடிக்கையாகக் கேட்டருளினார். 449

சிங்கன்பால் அருளுடைமை அவனைச் சங்கரித்தலே

இருதலை அயில்வேல் அண்ணல் இற்றன சிரந்தோள் என்றே
கருதலை என்பே ராற்றல் கடவுளர் யாருந் தேர்வர்
ஒருதலை இருகை கொண்டே உலகெலாந் தொலைப்பன் என்னாப்
பொருதலை உன்னி யாங்கோர் பொருப்பினைப் பறித்து விட்டான்.

அதுகேட்ட சிங்கமுகன் எம்பிரானைநோக்கி சொல்கின்றான். இருபாலும் தலையுடைய வேல் ஏந்திய கடவுளே கேள்! எனது தோள்கள் தலைகள் அறுந்துபோயின என்று அதைப் பெரிதாய் கருதிடாதே. எனது பெரும் ஆற்றலை உங்கு வானமேல் நின்ற கடவுளர் யாவரும் அறிவார்கள். ஒருதலையும் இருகையும் கொண்டே யான் இந்த உலகம் யாவையும் தொலைப்பேன் எனக்கூறி மீண்டும் போரிட எண்ணி அங்கு ஒருபெரிய மலையை இப்போதுள்ள இருகைகளாலும் பறித்து எம்பிரான்மீது எறிந்தான். 450

விட்டிடு பிறங்கல் தன்னை விரிஞ்சனுக் காசான் காணூஉ
நெட்டிலை வாளி ஒன்றால் நீறுசெய் திடுத லோடும்
பட்டது தெரிந்து மாய்வோன் அமரிடைப் பாணி யோடும்
இட்டிடு தண்டம் ஒன்றை எடுத்துநின் றிதனைச் சொற்றான்.

சிங்கமுகாசுரன் வீசிய மலையை பிரமதேவர்க்குக் குருவாக வந்த குமரன் கண்டருளி நீண்ட இலைபோலும் அம்பொன்றால் அந்த மலையைப் பொடியாக்கிவிடலோடும் அம்மலை பொடியானதை அறிந்து இறந்திடுவோனாகிய சிங்கமுகன் முன்னர் போரிடத்து கையுடன் அறுபட்டு வீழ்ந்து கிடந்த ஒரு தண்டாயுதத்தை எடுத்து எம்பிரான் முன்னின்று இதனைச் சொல்கின்றான். 451

வேலினால் எறியு மாறும் வெஞ்சிலை வளைய வாங்கிக்
கோலினால் விடுத்த தொன்றைக் குறைத்திடு மாறும் அல்லால்
பாலநீ படைகள் வேறு பயின்றதொன் றிலைகொல் என்னா
மூலகா ரணமாய் நின்ற முதல்வன்மேற் கதையைத் தொட்டான்.

வேலினால் வீசிக் கொல்கின்ற செயலையும், கொடிய வில்லை வளைத்து அம்பினைச் செலுத்தி அதனால் நான் விடுப்பதை அறுப்பதும் அறிந்ததல்லால் குழந்தையே நீ வேறுபோர் ஒன்றினை; பயின்றது இல்லைப்போலும் எனக்கூறி எல்லாப்பொருட்கும் மூலகாரணமாய் நின்ற முதல்வனுகும் குமரன்மேல் அக்கதையை வீசினான். 452

வெஞ்சின அவுணன் சொற்ற தன்மையும் விடுத்த தண்டுஞ்
செஞ்சுடர் மேனி வள்ளல் சிந்தையின் மதித்து நோக்கிக்
கஞ்சம தனைய வோர்கைக் காமரு குலிசந் தன்னை
வஞ்சகன் உயிருண் டொல்லை வருகென விடுத்தான் மன்னே.

கொடுஞ்சினமுடைய சிங்கமுகாசுரன் சொன்ன தன்மையையும், அவன் விடுத்த தண்டாயுதத்தையும், செவ்வொளியாகித் திகழ்கின்ற சுடர் மேனியுடைய ஆறுமுகப்பெருமான் மனதில் மதித்துக் கண்டு தாமரைமலரை ஒத்த செவ்விய ஓர் கையில் அழகுடன் பொருந்திய குலிசப்படையை நோக்கியருளி நீ சென்று வஞ்சகனுகும் சிங்கமுகனைக்கொன்று உயிரினை உண்டு விரைவாக வந்திடுதி என அக்குலிசாயுதத்தை விடுத்தருளினுர். 453

விடுத்திடு குலிச மேகி விரைந்தெதிர் தண்டந் தன்னைப்
பொடித்தது போலும் மென்னப் பூழிசெய் தடுக்கல் செல்லும்
இடித்தொகை யென்ன மார்பத் தெய்தியே அவுணன் ஆவி
குடித்தது புறத்துச் செந்நீர் கொப்பளித் தேகிற் றன்றே.

எம்பிரான் குமரன் செலுத்திய குலிசப் படைசென்று விரைவாக எதிர்த்து வரும் சிங்கமுகாசுரனுடைய தண்டாயுதத்தை பொடியாக்கியதுபோலும் புழுதியாய் பறந்திடச்செய்து மலைமேல் சென்றிடும் இடியேற்றின் தொகைபோன்றது இது என்னும்படி சென்று சிங்கமுகாசுரன் மார்பில் ஊடுருவி தாக்கி அசுரனுடைய உயிரைக் குடித்துச் சென்றது. அதுபோது புறமுதுகால் இரத்தநீர் கொப்பளித்துச் சென்றது. 454

**வேறு**

தூண்டா விடுகுலிசந் துண்ணென்ற கல்மார்பங்
கீண்டாவி கொண்டு கிழித்துவெரிந் சென்றிடலும்
வீண்டான் பதைபதைத்தான் வீழ்குருதி நீரலைப்ப
மாண்டான் கிடந்தான் மடங்கல்முக வெய்யோனே.

எம்பிரான் அருளால் கற்பித்து விடுத்திட்ட குலிசப்படைசென்று துண்ணென சிங்கமுகாசுரனின் அகன்ற மார்பைக் கிழித்து உயிரினை உண்டு அவன் உடலையும் பிளவுபடுத்திப் பின்முதுகால் சென்றிடலும் வீழ்ந்தான்; பதைபதைத்தான் மேனியால் வடியும் இரத்தநீர் கொப்பளித்தலைத்திட மாண்டுகிடந்தான் அந்தச் சிங்கமுகமுடைய கொடியோன். 455

அங்கப் பொழுதில் அடற்குலிசம் வான்போகிக்
கங்கைப் புனல்ஆழ்ந்து காமருபூந் தாதாடிச்
சங்கத் தவர்க்குள் தலையாந் தமிழ்ப்புலவன்
செங்கைக் குள்வந்து சிறப்புற் றிருந்துளதால்.

அங்கு அந்தநேரத்தில் அடல்கொண்ட குலிசப்படை வானில்சென்று அங்குள்ள கங்கையாற்றின் நீரில் ஆழ்ந்து நீராடி அதன்பின் அழகிய தேவவிருட்சங்களின் மலர்களது மகரந்தப்பொடியாலும் தோய்வுற்று புனிதமாகி தமிழ் சங்கமாக அமர்ந்த புலவர்க்குள் தலைவனுன தமிழ்ப்புலவன் குமரப்பெருமானின் செங்கைக்குள் திரும்பி வந்து சிறப்புற்று வீற்றிருந்தருளியது. 456

பார்த்தார்இந் நீர்மைதனைப் பங்கயத்த ஞதிவிண்ணேர்
ஆர்த்தார் முறுவலித்தார் ஆடினுர் பாடிமலர்
தூர்த்தார் மகிழ்ந்தார் தொழுதார்எங் கோன்புடையில்
போர்த்தார் வணக்கம் புரிந்தார் புகழ்ந்திட்டார்.

சிங்கமுகாசுரன் குலிசப்படையால் சங்கரிக்கப்பட்ட விதத்தை பார்த்தார்கள் பிரமன் முதல் ஆதியான எல்லாத் தேவரும். ஆரவாரங் கொண்டார்கள். மகிழ் வால் உருக்கொண்டார்கள்; ஆடினார்கள் பாடினார்கள்; பாடிப்பாடி மலர்களை அள் ளிச் சொரிந்தார்கள். மகிழ்ந்தார்கள்; எம்பிரானைத் தொழுதார்கள் எங்கள் அரசன் குமரன் பாங்கரில் சூழ்ந்து வளைந்தார்கள் வணக்கம் புரிந்தார்கள் புகழ்ந்திட்டார் கள். 457

என்னு யகன்அவ் விமையோர்கள் எல்லோர்க்குந்
தன்னு ரருள்செய்து சாரதவெள் ளத்தினெடும்
மின்னார் புகர்அயில்வேல் வீரரொடு மீண்டனனால்
பொன்னு டெனவே புனைந்தபொலன் பாசறையில்.

எனது நாயகன் குமரன் தேவர்களது மகிழ்வை நோக்கி அத்தேவர்கள் எல் லார்க்கும் எக்காலமும் கெடுதலிலாது நிலவுகின்ற சிறந்த பேரருளைக் கொடுத்து அங்குள்ள பூதகணங்களுடன் மின்னுகின்ற சுடர் ஒளியுடைய கூரிய வேற்படையைக் கைக்கொண்ட வீரர்களுடன் போர்க்களம் விடுத்து மீண்டருளிச் சென்றார் தேவஉல கம் எனும்படி சித்திரப்பாடுடன் அலங்கரிக்கப்பெற்ற நவரெத்தினங்களினாலாய பாச றைத்தலத்தில். 458

பாசறையின் கண்ணேகிப் பாரிடத்தோர் சூழ்போத
வாசவனும் நான்முகனும் மற்றோரும் பாங்காகக்
கேசரிகள் தாங்குங் கிளர்செம்பொற் பீடிகைமேல்
ஈச னெனவே இனிதருள்செய் துற்றனனே.

பாசறையின் கண்சென்று பூதகணங்கள் புறத்தேசூழ்ந்துவர இந்திரனும் நான்கு முகமுடைய பிரமனும் பக்கராகவந்திட ஆதியாகும் சபையை அடைந்து அங்கு சிங் கங்கள் சுமந்து தாங்கிடும் ஒளிகிளர்ந்திடும் செம்பொற் சிம்மாசனத்தின்மேல் ஈசன் சிவன்போன்று இனிது அருள் புரிந்தவராய் விற்றிருந்தருளினார். 459

வெற்றிநெடு வேலோன் வியன்பா சறையிருப்ப
மற்றவனெ டாடி மடங்கல் முகத்தவுணன்
செற்று கொடியுண்ணச் செருநிலத்தின் மாய்ந்ததனை
ஒற்றர்தெரி குற்றே மகேந்திரத்தில் ஓடினரால்.

வெற்றியுடைய நெடிய வேற்படையைக் கைக்கொண்ட ஆறுமுகக் கடவுள் அற் புதம் நிறைந்த பாசறைத் தலத்து இருத்தலும் அங்கு எம்பிரானுடன் போர்புரிந்த சிங்கமுகமுடைய அசுரன் அவனது உடலத்தை காகங்கள் பிய்த்து உண்ணும்படி போர்நிலத்தில் வீழ்ந்து இறந்ததனை தூதுவர் கண்டுகொண்டு தமது வீரமகேந்திர நகருக்கு ஓடிச்சென்றார்கள். 460

ஆடல் இளையோன் அவண்வீழ்ந் ததுநோக்கி
வீடினனோ மான்றனனோ என்றைய மேல்கொண்டு
நீடு சிகரியிடை நின்றோன் பதங்கள்முடி
சூடி ஆவலித்துத் தொழுதிதனைச் சொல்லினரால்.

போர்வல்ல தம்பியான சிங்கமுகன் அவ்விடத்து வீழ்ந்த அதனை நீண்ட கோபுரத் தின் உச்சியில் நின்றும் போரினைப்பார்த்து நின்ற சூரபன்மன் கண்டு; என் தம்பி வீழ்ந்து இறந்தானோ? அல்லது மயங்கினானோ எதுவாயிருக்கும்என எண்ணி சந்தேகம் மேற்கொண்டுநின்றவன் காலில் அத் தூதுவர் தாழ்ந்து தங்கள் முடிமேல்சூடி ஐயோ! எனக் கதறித் தொழுது இதனைச் சொன்னார்கள். 461

குன்றம் பிளந்த குமரேசன் வச்சிரத்தால்
உன்றம்பி ஆவி ஒழிந்தான் அவன்மிசையைப்
பொன்றுங் கணத்தோர் பொருப்புற்றார் எல்லோருஞ்
சென்றுய்ந் தனரீது திண்ணமெனச் செப்பினரே.

கிரவுஞ்சமலையைப் பிளந்த குழந்தை வடிவான ஈசன் குமரனின் வச்சிரப்படையால் உனது தம்பி தன் உயிர் நீங்கினான். அவன் விழுங்க இறந்த பூதகணங்களும், உதய மலையிடத்து போடப்பட்டார்களுமாய வீரர் யாவரும் உய்தியடைந்து அக்குமரனுடன் மீண்டும் வந்து கூடிக்கொண்டனர். இது திண்ணம் என்று சொல்லிக்கொண்டனர். 462

வேயுற் றவர்சொல் வினவியுரோ மங்களெலாந்
தீயப் பொறிதுரப்பச் செங்கட் புனல்பெருக
வாயிற் புகைசெல்ல வாடிப் பதைபதைத்து
நோயுற்று வெங்கனலை நுங்கினர்போல் வீழ்ந்தனனே.

தூதரானவர் மிகு சோர்வுடன் சொல்லிய வார்த்தையை சூரபன்மன் கேட்டு உரோமங்கள் எல்லாம் தீய்ந்து பொறி பறந்திடச் சிவந்த கண்ணால் நீர் பெருக வாயால் புகைவந்திட வாடிப் பதைபதைத்து வேதனைகொண்டு கொடிய நெருப்பினை விழுங்கினான் போன்று மயங்கி கோபுரத்துநின்று கீழே வீழ்ந்தான். 463

வண்ணச் சிகரம் வழுவுற்றுக் கீழ்த்தலத்திற்
கண்ணிற் பொழிந்த கடலினிடை வீழ்ந்தனனால்
ஒண்ணுற்ற காஞ்சி உமையவள் கோட் டத்தினின்றுந்
தண்ணுற்ற நேமித் தடத்திடையே வீழ்பவர்போல்.

வண்ணங்கள் சிறந்த கோபுரத்தினின்றும் வழுவுற்று கீழ்த்தலத்தில் தன்கண்ணினின்றும் பொழிந்திட்ட கண்ணிர்க்கடலில் வீழ்ந்தான் சூரபன்மன். இது எதுபோல் இருப்பதென்றால் பெருமையுற்ற காஞ்சிநகரில் உமையம்மையார் கோவிலாகும் காம கோட்டத்தின் மேல்மாடியில் நின்றும் உலகாணி என்னும் தீர்த்தத்தில் தலைகீழும் கால்மேலுமாக அமையுமாறு வீழ்வதை ஒத்து இருந்தது.

காமாட்சி அம்பாள் கோவிலாகும் காமகோட்டத்தில் உள்ள உலகாணி என்னும் திர்த்தத்தில் கோவிலின்மேல் மாடியில் நின்றும் தலைகீழாகவும் கால்மேலாகவும் பாய்வது முன்னுள்ள ஓர் வழக்கம். இதனைக் கருமாறிப் பாய்தல் என்பார்கள். 464

மங்கு லெனவீழ்ந்து மறிந்து நிலமிசையே
அங்கை புடைத்திட் டலமந்து தொல்வலியுந்
துங்க விறலும் நலனுந் தொலைவெய்தப்
பொங்கு துயர்க்கடலின் மூழ்கிப் புலம்புறுவான்.

மேகம் வழுக்கி வீழ்வது போன்று சூரபன்மன் வீழ்ந்து மயங்கி நிலத்தின்மீது தனது அழகிய கையை அடித்துக்கொண்டு அலமந்து முன்னுள்ள வலியும் மேலான திறலும் யாவும் தொலைவாக ஓயாது பொங்கி எழும் துன்பக் கடலுள் மூழ்கிப் புலம்புகின்றான். 465

என்னையோ என்றன் இளவலோ தாரகற்கு
முன்னையோ சிங்க முகத்தவவோ தானவர்கள்
அன்னையோ என்ன அருள்புரியும் ஆண்ட கையோ
உன்னையோ தூதர் விளிந்தனையென் றோதியதே.

என் ஐயாவோ எந்தனது இளையோனே! தாரகனுக்கு மூத்தவனே சிங்கமுகத்தவனே அசுரர்களின் அன்னையோ நீ என்னும்படி எம்குலத்தார்க்கு பரிந்து அருள்புரியும் ஆண்டகையோ! இத்தகைய உன்னையோடா தூதர்கள் இறந்தாய் எனச் சொன்னார்கள். 466

அன்று மகவான் முதலாம் அமரர்தமை
வென்று தமியேற்கு விசயந் தனையளித்தாய்
இன்று சமரில் இளம்பா லகன் ஒருவன்
கொன் றனனே உன்னுயிரைக் கூற்றவனுங் கொண்டானே.

அன்று இந்திரன் முதலாய தேவர்கள் யாவரையும் வென்று தமியேனுக்கு வெற்றியை நீ கொடுத்தாய். ஆனல் அத்தகைய வீரனுகும் உன்னை இன்று போரில் ஓர் இளம் பாலகன் ஒருவன்கொன்றனனே. உனது உயிரை இயமனும் எடுத்துக்கொண்டானே? 467

உண்டுபோர் என்னின் உளங்களிக்கும் உன்னுயிரைக்
கொண்டுபோ ஞன்இன்று கூற்றனென வேகேட்கில்
தண்டுழாய் மாலுஞ் சதுர்முகனும் இந்திரனும்
பண்டுபோல் தத்தம் பதியாளப் போகாரோ.

போர் உண்டு எனக் கேட்டமாத்திரத்தில் உள்ளம் களிப்புறுகின்ற உனது உயிரையும் கொண்டுபோஞன் இயமன் எனக்கேள்விப்பட்டால் நமக்கு இது வாய்த்துவிட்டது என்று; குளிர்ந்த துளசிமாலையணிந்த நாராயணக் கடவுளும் பிரமதேவனும் இந்திரனும் முன்போல தத்தமது பதிகளை ஆண்டிடும்படி போகாரோ? 468

பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய இளையோனே இப்பிறப்பில்
உன்னை இனிப்பெறுவ துண்டோ உரையாயே.

இவ்வுலகில் எமது வாழ்க்கைக்கு வேண்டிய பொன்னை நிலத்தினை பிள்ளைகளை அழகிய பெண்களை இவையன்றி நாம் விரும்பியவாறு வேறு வேறு பொருட்களை எல்லாம் இலேசாகப் பெற்றுவிட முடியும். ஆனல் என்னையே தஞ்சமாகப் பிரியாது வாழ்ந்திருந்த என் தம்பீ சிங்கமுகவா! இந்தப் பிறப்பில் உன்னை நான் இனிப் பெறுமாறு உளதோ அதை நீ சொல்வாயே!

பெறற்கரியது உத்தமமான ஓர் சகோதரன் என்பதை இப்பாடல் எடுத்துக்காட்டுகிறது. 469

அண்டார் தமக்கோர் அரியே அரிமுகனே
விண்டான் அடைந்தாய் எனவே விளம்புகின்ருர்
தண்டார் அகலத்துத் தாரகனை மக்களுடன்
கண்டாயோ யானிங் குறுதுயரங் காணுதாய்.

பகைவர் தமக்கெல்லாம் ஓர் சிங்கமே! என் சிங்கமுகனே! ஐயோ விண் தான் நீ சென்று விட்டாய் என இவர்கள் சொல்லுகின்ருர். அப்பா என் தம்பீ நீ அங்கு குளிர்ந்த மாலையணிந்த மார்புடைய தாரகாசூரனை, மற்றெனது மக்களுடன் கண்டாயோ? நான்படும் துயரம் நீ காணுயோ என அழுதான் சூரபன்மன். 470
நீ அவரைக் கண்டாயோ நான் உன்னைக்காணேனே.

உண்டிக் கடனும் ஒருவயிற்ருேர் செய்கடனும்
எண்டிக்கும் போற்றியிட இன்றுகழித் தேகினைநீ
அண்டத் தவரை அலைத்துவரும் உன்திறலைக்
கண்டுற் றிடவே கடனற்றேன் தீயேனே.

ஒருவரிடம் பெற்றுண்ட உணவிற்காகச் செய்யவேண்டிய கடனும் ஒருதாய் வயிற்றில் உடன் பிறந்தமைக்காகச் செய்ய வேண்டிய கடனும், எட்டுத்திக்கில் உள்ளார் யாவரும் போற்றுதல் புரியும்படி இன்று அக் கடன்களை நீ முடித்துக்கொண்டு சென்றுவிட்டாய். ஐயயோ நானே எனில் தேவர்களை எல்லாம் அலைத்தோட்டவைத்து வருகின்ற உனது திறமையைக் கண்டு கொண்டிடவே நான் கடனில்லாமல் போனேன் என்றழுதான்.
நீ உன் கடன் முடித்தாய் நான் உனைக்காணும் கடனற்றேன்

தந்தை தாயருக்கு மைந்தர்கள் செய்யவேண்டிய கடமைகள் போன்று, உடன் இறந்தார்க்கும் செய்திடும் கடமைகள் சில உண்டு. அவ்வாறன்றி பகை முதலிய பிற்ருல் பங்கப்பட்டால் அது இருமைக்கும் தீதாகும் என்கின்றதொரு உண்மை வப்பாடலால் தெளியப்பெறும். 471

உற்ற துணைநீ யென்னுயிர்நீ உணர்ச்சியும்நீ
சுற்றமும்நீ தாதையும்நீ என்னிளைய தோன்றலும்நீ
நற்றவமும் நீயென்று நான்நினைந்தேன் நீயதனைச்
சற்றும் நினையாமல் தனித்திருக்கக் கற்றாயோ.

எனக்கு உற்ற துணை நீயாவாய். எனது நல்லுணர்வும் நீயாவாய். என் சுற்றமும் நீயாவாய், என் தந்தையும் நீயாவாய்; என் இளைய தோன்றலும் நீயாவாய். நான் செய்த நல்ல தவமும் நீயென்று நான் நினைத்தேன். ஆனால் நீ மட்டும் சற்றும் அதனை நினையாமல் என்னைப் பிரிந்து தனித்திருக்கக் கற்றிட்டாயே! 472

பொற்றைக் கயலிருந்த பூட்கைமுகன் துஞ்சியபின்
ஒற்றைப் புயம்போய் உளந்தளர்ந்து வைகினன்யான்
இற்றைப் பகல்நீ இறந்தாய் அரிமுகனே
மற்றைப் புயமும் இழந்தேன் வறியேனே.

மாயமாகும் கிரவுஞ்சமலைக்கு அயலாகத் தங்கியிருந்த யானைமுகமுடைய தாரகன் இறந்த பின்பு எனது ஒற்றைக்கை போயது போன்று உள்ளத்தளர்ச்சியுடன் நான் இருந்தேன். இன்று பகல் என் சிங்கமுகவா நீயும் இறந்தாய். ஐயனே! வறியேன் எனது மற்றைக் கையும் இழந்தேனடா! 473

என்னத் தனதண்டம் எங்குஞ் செவிடுபடத்
தன்னத் தனியோன் அரற்றுமொலி தாங்கேளா
நன்னத் தவனும் நளினத் தினிலுதித்த
அன்னத் தவனும் மகத்தவனும் ஆர்த்தனரே.

என்று இவ்வாறு தனது அண்டங்கள் எங்கும் செவிடுபடும்படி தன்னந்தனியாக சூரபன்மன் மக்கள் சுற்றம் யாவும் இழந்திருந்து அழுகின்ற பேரோசையை; நல்ல பாஞ்சன்யம் எனும் சங்குடைய நாராயணரும் அவரின் உந்தித் தாமரையில் உதித்த அன்னப்பறவை வாகனமுடைய பிரமதேவரும் ஆயிரம் யாகத்தின் பேறுடைய இந்திரனும் கேள்வியுற்று அப்பாடா! எத்தனை பேரை அழவைத்தாய் நீ இப்போது அழுகின்றனையோ என பல வார்த்தைகள் சொல்லி ஆர்த்து நின்றனர். 474

இத்தன்மை மன்னன் இரங்கித் தெளிந்தெழுந்தே
உத்துங்க மிக்க ஒருதன் தவிசேறி
நித்தன் குமரனுடன் நேர்போய்ச் சமர்இயற்றச்
சித்தந் தனிலே நினைந்துசினஞ் செய்தனனே.

இன்னதன்மையாக அவுணருக்கரசன் சூரபன்மன் இரங்கி அழுது புலம்பி நின்று பின்னர் தெளிந்து எழுந்து மேன்மை மிகுந்த அரண்மனையில் உள்ள தனது ஒரு சிங்காசனத்தில் ஏறி இருந்து நித்தியப்பொருளாய் விளங்கிடும் சிவபெருமான் திருக்குமரனுடன் நேராகச் சென்று போர்புரிந்திடுதற்கு தனது சித்தத்தில் நினைந்து பெரும் சினம் கொண்டான்.

கவலை நீங்கிப் போரிடச் செல்ல உந்துவது சினம் ஆதலின் சினம் செய்தனன் என்றார். 475

சிங்கமுகாசுரன் வதைப்படலம் முற்றிற்று

**ஆகத்திரு விருத்தம் 2397**

1726

## சூரபன்மன் வதைப்படலம்

கொற்ற வேற்படை பரித்திடும் ஆயிரம் கோடி
ஒற்றர் தங்களை நோக்கியே சூரனும் உரவோன்
மற்றென் ஆட்சியாம் அண்டங்கள் எங்கணும் வைகிச்
சுற்று தானையைத் தம்மினே கடிதெனச் சொன்னன்.

இவ்வாறு சினம் கொண்டு சிம்மாசனத்து இருந்த சூரபன்மன் என்னும் மிகு உரங்கொண்டோன்; கொற்றம் மிகுந்த வேற்படைகளைத் தாங்கிடும் ஆயிரகோடி தூதுவர்கள் அயலில் நின்றூர்களைப் பார்த்து. தூதுவர்களே! நீங்கள் உடன் சென்று மற்று எனது ஆட்சிக்கு உட்பட்ட ஆயிரத்தெட்டு அண்டங்கள் எல்லாவற்றிலும் தங்கியிருந்து சூழ்ந்து காவல் கொண்டுள்ள அசுரச் சேனைகளை இங்கு அழைத்து வந்து தாருங்கள் என்றான்.

இந்த ஆறுநாள்வரையும் நடந்திட்டபோர் ஓரண்டத்துடன் நின்ற அசுரச்சேனை யுடனே நடந்தது. இப்போது தனது தம்பிமார் மைந்தர்கள் சேனாதிபதிகள் மந்திரிகள் யாவும் அழிக்கப்பெற்று தனியனாகச்சூரன் நின்றான். இனிஅவன் போரிடப் போத லுக்குத் துணையாகத் தனது ஆட்சிக்கு உட்பட்ட எல்லா அண்டங்களின் சேனைகளையும் இங்கு கொண்டு வரும்படி கூறினான். 1

சொன்ன காலையின் நன்றென வணங்கியே தூதர்
பன்ன ருங்கதி கொண்டனர் விண்டனர் படர்ந்து
பொன்னின் மேதகும் அண்டங்கள் இடைதொறும் புகுந்து
மன்னர் மன்னவன் தன்பணி முறையினை வகுத்தார்.

சூரபன்மன் இதனைச் சொன்ன காலையில் தூதுவர் நன்று என்று வணக்கம் புரிந்து சொல்லற்கரிய மிகு வேகங்கொண்டு புறப்பட்டு அந்தரமார்க்கமாகப் பறந்து பொன்னினால் சிறந்து மேம்பட்ட அவனுடைய அண்டங்களின் இடைகள் தோறும் அங்கங்கு புகுந்து அரசர்க்கரசனாகும் சூரபன்மன் அச்சேனைகட்கு இட்ட பணியின் முறைகளை எடுத்து வகுத்துக் கூறினார்கள். 2

வகுத்த காலையில் ஆண்டுறை அவுணமன் னவர்கள்
தொகுத்த நாற்பெருந் தானையங் கடலொடுந் துவன்றி
மிகுத்த அண்டத்தின் புடைதொறும் புடைதொறும் மேனாட்
பகுத்து வைத்திடும் வாயிலின் நெறிகளாற் படர்ந்தார்.

தூதுவர்கள் சூரபன்மன் கட்டளையை வகுத்த நேரத்தில் அவ்விடத்து வாழ் கின்ற அசுரமன்னர்கள் யாவரும் அது கேட்டவுடன் தங்களிடத்துள்ள தேர் குதிரை யானை காலாள் என்னும் நான்குவிதமாக அணிவகுத்திருந்த பெரும் சேனையாகும் கடலுடன் கூடி மிகுந்துள்ள அந்த அந்த அண்டங்களின் பக்கந்தோறும் பக்கந் தோறும் அந்த அண்டங்களில் நின்றும் வெளிச் செல்வதற்கு வகுத்து வைத்த வாயில்களூடாகப் புறப்பட்டு வந்தார்கள்.

சேனைகள் தாமிருந்த அண்டங்களிலிருந்து சூரனுடைய அண்டத்திற்கு வருவ தற்கு அதற்கென வகுக்கப்பெற்ற வாயில் ஊடாகவே வந்தன. 3

முந்தை அண்டத்தின் நெறிதனில் முழங்கிருஞ் சேனை
வந்து வந்திவட் செறிவன விதியொடு மாறாய்ச்
சுந்த ரங்கெழு மாயன்இவ் வுலகுயிர் துய்ப்ப
உந்தி யின்வழி அங்கவை தோன்றுமா றெப்ப.

முன்னமே தோன்றிய அந்த அண்டங்களின் வாயிலால் முழங்கி வருகின்ற அப் பெரும் சேனையானது வந்து வந்து சூரனுடைய இப் பூமியை அடைந்து செறிந்து கொள்வது எப்படி இருப்பதெனில், முன்னொரு காலத்து பிரமனுடன் மாறுகி சுந்தர வடிவங் கொண்ட நாராயணக் கடவுள் இந்த உலகம் உயிர் யாவற்றையும் தாம் உண்டு பின்னர் தமது வயிற்றின் கொப்பூழ் வழியாக அந்த உலகுகளையும் உயிர்களையும் முறைப்படி தோற்றுவித்திருந்த தன்மையைப் போன்றது. 4

பூதம் யாவையும் உயிர்களும் புவனமுள் ளனவும்
பேதம் நீங்கிய சுருதியா கமங்களும் பிறவும்
ஆதி காலத்தின் அநாதியாம் எம்பிரான் அளப்பில்
பாத பங்கயத் துதிப்பவும் போன்றன பகரின்.

இது மட்டன்றி இந்தச் சேனைகள் அந்த அண்டங்களில் நின்றும் வாயிலூடாக எழுந்து வருகின்ற காட்சி; பூதங்கள் யாவும் உயிர்களும் புவனங்கள் அனைத்தும் பேதம் நீங்கி ஒன்றே தெய்வம் சிவன் என ஓதிப்புகழும் வேதம் ஆகமங்களும் பிறவும் எல்லாம் ஆதிகாலத்தில் அதற்கும் முற்பட்ட எமது ஈசன் சிவனுடைய பாத தாமரையில் நின்றும் உதித்துக்கொள்வதையும் போன்றது எனவும் சொல்லலாம்.

ஈசனுடைய ஒன்றாகிய பாதகமலத்திருந்து பலவாக இவைகள் யாவும் வெளிவருதல் போன்று அந்த அந்த அண்டங்களின் வாயிலில் நின்றும் சேனைகள் முழங்கி எழுந்து பல கோடியாக வெளியில் வந்தன. 5

இனைய தன்மையால் அண்டத்தின் நெறிதனில் ஏகும்
வனைக ருங்கழல் அவுணர்தம் படையிவண் வரலுங்
கனலி தன்சுடர் மறைந்தன நடுங்கினன் கனலும்
அனிலன் தானுமெய் வியர்த்தனன் நெருக்கமுற் றயர்வான்.

இவ்வாறான தன்மையால் அந்த அந்த அண்டங்களில் உள்ள வழிகளால் வந்திடும் அழகுடைய வீரக் கழல் அணிந்த அசுரச் சேனை இப்பூமியின் அண்டத்தில் வரலும்; அவற்றின் செறிவால் சூரிய தேவனின் சுடர் ஒளிமறைந்தது; அக்கினி தேவன் இச்சேனைத் தொகுதியின் நெருக்கம் கண்டு நடுங்கினான். வாயுதேவன் தானும் அச்சத்தால் மேனி வியர்த்தனன், சேனையின் நெருக்கத்தால் நெருக்குப்பட்டு என்செய்வது என அயர்ந்தான்.

உலகினை சேமமுறவைக்கும் சூரியன் அக்கினி வாயு எனும் கடவுளர் அச்சேனையின் செறிவால் ஒளியிழந்து நெருக்கப்பட்டு வியர்த்துஅயர்வுற்றனர். 6

ஆர்த்த ஓசையால் அகிலமுந் துளங்கிய அவுணர்
கார்த்த மெய்யொளி கதுவலால் இருண்டன ககனந்
தூர்த்த பூழியால் ஆழிகள் வறந்தன துணைத்தாள்
பேர்த்து வைத்திடு தன்மையால் அண்டமும் பிளந்த.

இச்சேனை ஆரவாரிக்கும் ஓசையால் அகில உலகமும் நடுங்கியது. அசுரருடைய கறுத்த மேனியின் கருமை ஒளி பரந்து எங்கும் செறிதலால், வானம் எல்லாம் இருண்டன. அங்கு சொரிந்திடும் புழுதியால் சமுத்திரங்கள் வற்றின. அவர்களது துணையான பாதங்களை அணியில் நடப்பதற்கு எடுத்துவைத்து நடந்திடும் தன்மையால் அண்டங்களும் பிளந்தன. 7

கூடும் இப்பெருந் தானையை நோக்கிமெய் குலைவுற்
றோடு தற்கிடம் இன்றிநின் றிரங்கினர் உம்பர்
வீடி னானென வாசவன் மருண்டனன் விதியும்
நீடு மாயனும் முடிவதென் னோவென நினைந்தார்.

ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் நின்று இந்த ஒரு அண்டத்தில் கூடுகின்ற இப் பெரும் சேனையைக் கண்டு அஞ்சி மேனி நடுக்கமுற்று ஓடுதற்கும் இடம் இல்லாமல் எங்கே போவது என தேவரெல்லாம் அழுதனர். இந்திரன் ஏக்கத்தால் இறந்தான் போன்று மயங்கினான்; படைக்கின்ற பிரமதேவரும் காக்கின்ற நீண்டவடிவுடைய நாராயணமூர்த்தியும் நிலை இப்படியாயின் முடிவு என்னோ என்று நினைவு கொண்டார்கள். 8

பூத லந்தனில் அம்பர நெறிதனில் புடைசூழ்
மாதி ரங்களில் அளக்கரில் வரைகளில் வழியில்
பாத லங்களில் பிறவினில் அவுணர்தம் படைகள்
ஏதும் வெள்ளிடை இன்றியே சென்றன ஈண்டி.

பூமியின் இடத்திலும் வான வெளியில் உள்ள அந்தர மார்க்கங்களிலும் உலகினை மருங்காகச் சூழ்ந்த திக்கிலும் சமுத்திரங்களிலும் மலைகளிலும் வழியிலும் பாதாள உலகிலும் பிற இடங்களிலும் எங்கும் அசுரருடைய படைகள் ஏதும் ஒரு வெளியிடம் இலாது எங்கும் நெருங்கிச் சென்றன. 9

மலர யன்பதம் மால்பதம் முனிவர்கள் வைகும்
உலகம் வாசவன் தொன்னகர் ஏனையோர் உறையுள்
அலரி யாதியர் செல்கதி பிலங்களில் அனிகம்
பலவும் நின்றன செல்லிடம் பெறுதபான் மையினுல்.

தாமரை மலரில் இருக்கும் பிரமதேவர் உலகம், முனிவர்கள் இருக்கும் உலகம், இந்திரனுடைய தொன்மையுடைய தேவ உலகம், ஏனைய தேவர்கள் இருக்கின்ற இருப்பிடங்கள், சூரியன் ஆதியோர் சென்றிடும் மண்டலவைப்புகள் பாதள உலகின் வெளிகள் எங்கும் அசுரச் சேனையாகி பலவாகி நின்றன. ஏனெனில் இங்கு சூரபன்மனுடைய வீரமகேந்திரபுரத்திற்கு இடம் ஏதும் பெறமுடியாத தன்மையால் முன் வந்த அசுரர் வீரமகேந்திரத்தை நெருக்கமாக நிறைத்து நிற்றலால் பின்வந்துளோர் இடம் பெருது பல இடமும் நின்றுர்கள். 10

மாறி லாதன தொல்லையண் டங்களின் வந்த
வீறி லாததோர் தூசிகள் படர்ந்திடும் எல்லை
நூறு கோடியோ சனைஎன் றறிஞர்கள் னுவன்றுர்
வேறு பின்வருந் தானையின் பெருமையார் விதிப்பார்.

மாறுபாடிலாதனவாகும் தொன்மை உடைய ஆயிரத்தெட்டு அண்டங்களில் நின்றும் வந்த முடிவிலாததோர் தூசிப்படைகள் படர்ந்திடும் எல்லையானது நூறு கோடி யோசனைப் பரப்புடையது என்று அதனை அறிவால் அறிந்திடும் அறிஞர்கள் சொன்னுர்கள். ஆதலால் இதின் வேருக பின்னுல் வந்துகொண்டிருக்கும் சேனையின் அளவை எல்லையை யார் அறுதியிட்டுக்கூறிட முடியும்? அது முடியாது. 11

குறுமை யாமுயிர் வாழ்க்கையர் கொண்டதொல் வளம்போற்
சிறுமை யோவிது விரித்திட அவுணர்கோன் சேனை
அறிஞர் கூறிய பெருந்தொகை தன்னினும் அடங்கா
பிறிது மற்றிதற் குவமையும் ஒன்றில பேசின்.

முனிவர்களே! கேளுங்கள் நாம் இந்த விடயத்தை; குறுகிய கால எல்லைக்குள் வாழ்க்கை நடத்திடுதற்காக இவ்வுலகில் பிறவி எடுத்துள்ள மனிதர்கள் பெற்றுள்ள வளம் போல (ஓர் தேசத்தின் அல்லது உலகின் பல சேனைகளின் (திரட்சிபோல) என எண்ணி கணக்கிட இது சிறுமையுடையதோ? இல்லை. இதனை நன்கு அறிகின்ற அறிஞர்கள் கூறிய நூறு கோடி எனும் பெரும் தொன்மையாகும் கணக்கிலும் இது அடங்காது. இதனுடைய கணக்கு வழக்கிற்கு பிறிதாக ஓர் கணக்கோ பொருளோ இல்லை உவமையாக எடுத்து நாம் பேசப் போனுல்

அறிஞர்கள் என்பது அறிவினுல் உலகபந்தங்களை வென்று அப்பாலாய் அறிவிற்கும் அறிவாய் நின்றருளும் ஈசன் அருட் தன்மையை உணர்ந்தோர்களாவர். அவர்கள் தான் இப்படியாக அசுரருடைய வியாபகத்தை நன்கு அறிய முடியும், ஆனதினுல் அறிஞர்கள் இச்சேனையின் பரப்பை அருளால் உணர்ந்து கூறினர் என்க. 12

அஞ்சு பட்டிடு பூதங்கள் பல்லுரு வமைந்து
நெஞ்சு பட்டிடும் உயிர்கொடு நேருமேல் நிகரும்.
மஞ்சு பட்டிடு பொருப்பெலாஞ் சூறைமுன் மயங்கும்
பஞ்சு பட்டிட நடந்திடு தூசிமுற் படையே.

மண் நீர் நெருப்பு காற்று வானம் எனும் ஐந்து பொருளாகும் பூதங்களும் பலவடிவாக உருவம் அமைந்து தத்தமது நெஞ்சினிடம் பட்டிருக்கும் உயிர் கொண்டு போரிட முன்நேர்ந்து வந்தால் ஒப்பாக இருக்கும்: மேகங்கள் படிதலுறும் பெருமலை கள் யாவும் சூறுவளிக் காற்றின்முன் பஞ்சு பட்டபாடுபோல் சுழரும்படி நடந் திடுகின்ற முன்னால் வந்திடும் தூசிப்படையாயது.

சூரபன்மனுடைய இந்த அண்டங்களின் நின்று வந்த சேனைகளின் முற்படையா னது உலகில் பல வற்றிலும் உள்ள ஐந்து பூதங்களும் பல வடிவாகி உயிர் பெற்று வந்தால் அதற்கு ஒப்பான வலியுடைதாகும் என்க.

உலகிலுள்ள ஐந்து பூதங்களின் வலியில் அடங்கியதுதான் ஏனைய எப் பொரு ளின் வலி. ஆனால் இந்த அசுரசேனையின் தூசிப்படை (பற்படை) யின்வலி இந்த ஐந்து பூதங்களின் வலிக்கு நிகரானமையின் அந்த அசுரப்படையின் வலி எத்துணை யானது எனக்கூறினர். 13

அந்த மின்றியே அகன்புவி கொண்டஅண் டத்தில்
வந்தி டுந்திறற் படைகளின் பெருமையார் வகுப்பார்
முந்து தூசிகள் மகேந்திரப் பெருநகர் மூடி
இந்த வண்டத்தின் இடமெலாம் நிறைத்தன இமைப்பில்.

முடிவு என்பது இன்றி அகன்ற பூமி முதற் கொண்ட பல அண்டத்தில் நின்றும் வந்தி டுகின்ற திறமை மிக்க அசுரப்படைகளின் பெருமையை யார் வகுத்துக் கூறுவார். ஏனென்றால் எல்லா அண்டங்களில் நின்றும் முன்னாகப் புறப்பட்டுவருகின்ற தூசிப் படையானது இந்த பூமியில் உள்ள வீரமகேந்திரபுர மெனும் பெருநகரினை மொய்த்து மூடி இந்த அண்டங்களின் இடங்கள் வெளிகள் எல்லாவற்றையும் ஓர் இமைப் பொழுதில் நிறைத்துக்கொண்டன. 14

ஆன காலையில் ஒற்றர்போய்ச் சூரனை யடைந்து
பானல் மெல்லடி கைதொழு தையநீ படைத்த
சேனை வந்தயல் நின்றன தூசிமுற் சென்று
வானு லாவுபேர் அண்டத்தை நெருக்கின மன்னோ.

அவ்வாறான காலையில் தூதுவர்போய் சூரபன்மனை அடைந்து பால் போலும் நன்மையுடைய மிருதுவான பாதங்களை கை தொழுது முன்னின்று ஐயனே! நீர் வகுத்து வைத்த சேனையானது கட்டளைப்படி வந்து அயலாக இங்கு நின்றன. அந்த சேனைகளின் முற்படையானது சென்று வானில் உலவிடுகின்ற பெரிய அண்டங்களை நெருக்கி மறைத்துக்கொண்டது என்று வியந்து கூறினர்கள். 15

என்னும் எல்லையில் நன்றென அவுணர்கோன் எழுந்து
தன்ன தாகிய உறையுள்போய்த் தடம்புன லாடித்
துன்னும் ஐவகை உணவுடன் அறுசுவை தொடர்ந்த
அன்னம் உண்டனன் நஞ்சுகொல் மருந்துகொல் அதுவே.

என்று தூதுவர் சொன்ன எல்லையில் நன்று என்று அசுரர்க்கு அரசன் சூர பன்மன் எழுந்து தன்னுடைய அரண்மனை இருப்பிடத்தில் சென்று நன்கு டைய பெரு நீரில் மூழ்கி எழுந்து பின்னர் பெருக்கமுடன் கூடிய; கடித்தும் பருகி யும் விழுங்கியும் நக்கியும் சுவைத்தும் ஐந்து வகையாக உண்ணும்படி அமைந்த பல வகை உணவுகளையும் உவர்ப்பு கைப்பு கார்ப்பு தித்திப்பு துவர்ப்பு புளிப்பு என்ப தான ஆறு சுவையுடைய கறிகள் தொடர்ந்த அன்னத்தை உண்டான். அந்த உணவு நஞ்சாயதோ அல்லது அமுதாயதோ என்று சொல்லொணாதபடி உண்டான்.

நஞ்சு என்றபோது ஆர்வமிகுதியால் உண்டானே அல்லது அமுதமென்றபோது அள வாக உண்டானே என்றும் இன்னமும் எம்பெருமானுடன் போர் புரியும்போது அவன் செய்யத்தகாதவற்றைச் செய்துகொள்வதற்கு உண்ட உணவு நஞ்சாயதோ அல்லது காண்டற்கரிய கடவுளை கண்ணாரக் காண்டலால் அந்த உணவு அமுதமாயதோ எது என்பதை அறியுமாறு கூறினர் ஆசிரியர். 16

நீற ணிந்தனன் நெற்றிமெய்ந் நிறைவிரை களபச்
சேற ணிந்தனன் பூந்தொடை பங்கியிற் செறித்தான்
மாறில் பொற்சுடர்க் கலையுடன் அணிகலன் மாற்றி
வேறு வேறுநன் கினியன புனைந்தனன் விரைவில்.

திருநீற்றை நெற்றிமீது அணிந்தனன், மேனி முழுவதும் வாசச் சாந்தை நிறைய அணிந்தான். அழகிய பூமாலையை குடுமியில் சூடினான். மாறில்லாத பொன்னினால் சிறந்த பட்டாடையை அணிந்தான். தான் அணிந்திருந்த ஆபரண நகைகளை மாற்றி மனதிற் கினியதான வேறு வேறு நல்ல உடைகளை எடுத்து விரைவில் அணிந்தான். 17

ஈசன் மாப்படை ஏனையோர் பெரும்படை யாவும்
மாசில் ஆயிர கோடிதேர் செலுத்தியே அவையுங்
கேச ரித்திறல் யானமுங் கேடில்பொற் றேரும்
பாச னத்திறல் அவுணர்கொண் டேகுவான் பணிந்தான்.

சிவபிரான் கொடுத்தருளிய பெரும்படை மற்றைய கடவுளர்களின் பெரும்படை யாவும் பொருந்திய மாசில்லாத ஆயிரகோடி தேரினை செலுத்திக் கொண்டு அத் தேர்களும்; அவற்றுடன் திறமையுடைய சிங்கவாகனமும் கேடில்லாத பொன்னினு லான தேரையும் திறலுடைய தனது பரிசனத்தவர் கொண்டு வருமாறு பணித்தான் 18

ஆங்க வெல்லையிற் சூரபன் மாவெனும் அவுணன்
பாங்கர் வந்திடு வலவர்தந் தொகையினைப் பாரா
ஓங்கு மோர்தடந் தேரினைக் கொணர்திரென் றுரைப்பப்
பூங்க ழற்றுணை வணங்கியே நன்றெனப் போனார்.

அவ்வாறான எல்லையில் சூரபன்மன் என்னும் அசுரன் பக்கராக வந்திடுகின்ற சாரதிகளின் தொகையினைப் பார்த்து என்னுடைய மேலோங்கியதேரினைக்கொண்டு வருவீரென்று கூறிட உடனே அச்சாரதிகள் சூரபன்மனது மலர்போன்ற திருவடிகளில் தாழ்ந்து வணங்கி நன்று என்று கூறிவிட்டுப் போயினார்கள். 19

வாட்டு கேசரி எழுபதி னாயிரம் வயமாக்
கூட்டம் அங்கனே ரெழுபதி னாயிரங் கூளி
ஈட்டி மாகிய தெழுபதி னாயிரம் ஈர்ப்பப்
பூட்டி நன்குறப் பண்ணினர் ஆங்கொரு பொலன்தேர்.

அவ்வாறு சென்ற தூதுவர்கள் சொடூரமுடைய சிங்கங்கள் எழுபதினாயிரமும்; வீரக்குதிரைகளின் கூட்டம் அவ்விடத்து எழுபதினாயிரமும்; பூதங்களின் கூட்டம் எழுபதினாயிரமும் ஆகிய இவைகளை ஓர் பொன்தேரை இழுக்கும்படி பூட்டி அங்கு ஓர் அழகால் நிரம்பிய தேர் ஒன்றினை நன்குடையதாக ஆயத்தம் செய்தனர் 20

மண்ட லத்தினும் ஆன்றபேர் இடத்தது மருங்கில்
தெண்டி ரைக்கட லாமென ஆர்ப்பது செறிந்த
அண்ட மாயிர கோடியுந் தன்னிடத் தாற்றிக்
கொண்டு நின்றிடும் வலியது மடங்கலங் கொடித்தேர்.

அத்தேரானது இப்பூமி மண்டலத்திலும் அகன்ற பெரிய இடமாக விசாலமுடையது. இப்பூமியின் பக்கராக உள்ள தெள்ளிய திரைக்கடல் இரைவது போன்ற இரைச்சலைக் கொண்டது. அண்டங்களாக எங்கும் செறிந்த ஆயிரகோடி அண்டங்களையும் தன்னிடத்து வைத்துக்கொண்டு விளங்கி நின்றிடும் பெரும் வலியதான சிங்கக்கொடி கட்டிய அப் பொற்தேரானது. 21

முடியும் எல்லையில் எழுதரு மருத்தினும் உந்திக்
கடிது செல்வது சென்றிடு விசையினல் ககுபத்
தடநெ டுங்கிரி அலமரத் தபனருங் குளிர
வடவை யங்கிகள் விளிந்திடப் புரிவதம் மான்தேர்.

அத்தேரோ உலகம் முடிவுறுகின்ற எல்லையில் எழுகின்ற காற்றிலும் பார்க்க வேகமுடன் விரைவில் செல்வது. சென்றிடுகின்ற விசையினல் திக்கில் உள்ள நீண்ட பெரு மலைகளும் சுழன்றிட வாயுவும் குளிர்ந்திட வடவாமுகாக்கினிகள் அவிந்து அழிந்துபோம்படி செய்வது. 22

ஏழு நேமியும் இடைப்படு தீபமும் யாவுஞ்
சூழு கின்றபேர் அடுக்கலும் ஒன்றிய தொடர்பின்
கேழில் பன்மணி ஓவியப் பத்திகள் கெழுவும்
ஆழி தாங்கிய அண்டமொத் திலங்கிய தகன்தேர்.

ஏழுகடல்களும் அக் கடல்களுக்கு இடையில் பொருந்திய எழுவகைத் தீவுகளும் இவையாவும் சூழ்கின்ற பெரிய மேருமலையும் யாவும் ஒன்றித்துக் கொண்டதெனும் தொடர்பினல் குறைவிலாத பல சித்திர வரிசைகளை உடையதாய் உருக்கொண்டு பெரும் சில்லினைத் தாங்கிடும் ஓர் அண்டத்தை ஒத்தது அந்தச் சூரனது தேர். 23

தொழுத குந்திறல் அவுணர்கோன் வேள்வியில் துஞ்சி
எழுவ தாகிய எல்லையில் தோன்றிய தெதிர்ந்தார்
குழுவி ரிந்திடத் துரப்பது நான்முகக் குரிசில்
அழியும் நாளினும் அழிந்திடா திருப்பதவ் வகன்தேர்.

இந்த அகன்ற தேரானது யாவரும் வணங்கிடும் தகுதி கொண்ட திறல் உடைய சூரபன்மன் அன்று செய்த யாகாக் கினியில் வீழ்ந்து இறந்து பின்னர் அவன் உயிர் பெற்றெழுவதாகிய எல்லையில் தோன்றியது. இதனை எதிர்த்துப் போரிடுவார் தமது கூட்டம் நில்லாது ஓடிடும்படி கலைத்து விடுவது. நான்கு முகமுடைய கடவுள் பிரமன் இறந்திடும் நாளிலும் தான் அழிந்திடாது என்றும் நிலைபெற்றிருப்பது. 24

கண்ண கன்படை அளப்பில பரித்தது கரமர்
விண்ண வர்க்குள வலியெலாங் கொண்டது மேனுள்
அண்ணல் நல்கிய இந்திர ஞாலமும் அனைய
தெண்ணின் மேற்படு மியாணர்பெற் றுடையதவ் விரதம்.

கூர்மையுடன் அகன்ற பெரும் படைகள் அளவற்றதை அத்தேர் கொண்டது. அழகிய தேவர்கட்குள்ள வலியெலாம் கொண்டது. முன்னுள் சிவபிரான் கொடுத்தருளிய தேரானது இந்திரஞாலத்தையும் ஒத்தது. இவ்வளவு எனக் கணக்கிடமுடியாத அற்புதங்களைச் சித்திகளைக் கொண்டது அந்தத் தேர். 25

அனைய தாகிய தேரினை வலவர்கொண் டணைந்து
தினக ரன்தனை வெகுண்டவன் தாதைமுன் செலுத்தத்
துனைய மற்றதில் இவர்ந்தனன் இவர்தலுந் தொழுது
புனைதி வாகையென் றவுணர்கள் பூமழை பொழிந்தார்.

அவ்வாறுகிய தேரினை சாரதிகள் கொண்டு வந்து சூரியனை வெகுண்டு சிறை வைத்த பானுகோபனது தந்தை சூரபன்மன் முன்னர் விடுத்திட அதனில் மிகு விரைவாக ஏறினன். அவ்வாறு சூரபன்மன் தேர்மேல் ஏறுதலும் அரசே இன்று நீர் வெற்றி மாலை சூடுவீராக என்று அசுரர்கள் அவன் மீது பூவினலாயமழையைச் சொரிந்தார்கள். 26

பொழிந்த காலையில் வலவர்கள் அங்கதிற் புக்குக்
கழிந்த சீர்த்தியான் ஆணையால் தேரினைக் கடவத்
தழிந்த ழீமெனப் பல்லியம் இயம்பின சகங்கள்
அழிந்த நாளெழு கடலென அவுணர்கள் ஆர்த்தார்.

பூமழையைப் பொழிந்த நேரத்தில் சாரதிகள் அத் தேரில் புகுந்து புகழ் நீங்கிடப் பெற்ற சூரபன்மனது ஆணைப்படி தேரினைச் செலுத்தியிட; அந்நேரம் தழீம் தழீம் என ஓசை படும்படி வாத்தியங்கள் முழக்கம் செய்தன. அங்குள்ள அசுரர் யாவரும் உலகங்கள் அழிகின்ற காலத்து எழுகின்ற கடலின் இரைச்சல் போன்று பெரும் ஆரவாரம் செய்தனர். 27

அங்கி யன்னபொற் படியகங் கோடிகம் அடைப்பை
திங்கள் வெண்குடை கவரிகொண் டொழுகினர் சிலதர்
துங்க மிக்கவன் சீர்த்தியும் ஆணையுந் தொடர்ந்து
மங்க லந்திகழ் உருக்கொடு சூழ்ந்திடும் வகைபோல்,

நெருப்பைப் போலும் ஒளியுடைய பொன்னில் செய்த எச்சில் படிகத்தையும்; பூந்தட்டையும்; வெற்றிலை வைத்திருக்கும் காளாஞ்சியையும் சாமரையையும் கைகளில் ஏந்தி ஒழுக்கமான கிரமப்படி தூதுவர் வந்து கொண்டனர். அத்தன்மையானது மேன்மை மிகுந்த சூரபன்மனுடைய புகழும் சீரும் ஆணையும் அவனுடன் தொடர்ந்து இந்த வகையான கொடிகுடை ஆலவட்டம் சாமரை என மங்கலம் திகழ்ந்த வடிவொடும் வருவதை ஒத்திருந்தது. 28

அண்ணல் மேவரு கோநகர் எல்லையுள் அடைந்த
எண்ணில் மாப்பெருஞ் சிகரியின் வாயில்கள் இகந்தே
கண்ண கன்றெருள்ளல் ஆயிர கோடியுங் கடந்து
வண்ண மாமணிக் கோபுர முதற்கடை வந்தான்.

இவ்வாறான சீருடன் தேர்மேல் புறப்பட்ட தலைமை மிகுந்த சூரபன்மன் தான் இருந்த அரச நகரின் எல்லையுள் அமைந்த எண்ணற்ற மிகப் பெரும் கோபுரமுடைய வாயிலினைக் கடந்து அகன்ற தெருவீதிகள் ஆயிரகோடியையும் கடந்து வண்ணங்கள் நிறைந்த பெரும் இரத்தின கோபுரமுடைய முதற்கடை வாய்தலில் வந்தான். 29

வேறு

தானவர் கோமகன் தடம்பொற் றேரொடு
மாநகர் முதற்கடை வாயில் போதலும்
ஆனது நோக்கியே அங்கட் சூழ்தரு
சேனைகள் ஆர்த்தன உடுக்கள் சிந்தவே.

அசுரர்கள் குலத்திற்கெல்லாம் பெரும் தலைவனான மன்னன் சூரபன்மன் விசாலமுடைய பொன்னினாலான தேருடன் வீரமகேந்திரபுர பெருநகரின் முதற் கடை வாயிலில் போதலும் அத்தன்மையை நோக்கியவராய் அங்கு சூழ்ந்து நின்ற சேனைகள் யாவும் மிகு பேரோசையுடன் ஆரவாரம் செய்தன. அவ்வோசையின் அதிர்ச்சியால் வெள்ளிகள் சிந்திடும் படியாக. 30

ஞெலித்திடு பரவையின் நீல வெவ்விடம்
ஒலித்தெழுந் தாலென உலப்பில் தானைகள்
கலித்தன படர்ந்தன கண்ண கன்புவி
சலித்தது கொடியரைத் தரிக்கொ ணாமையால்.

முன்பு ஒரு காலத்து கடையப்பட்ட பாற் கடலில் நின்றும் நீல நிறமுடைய கொடிய நஞ்சு ஒலிகொண்டு எழுந்து வந்தால் எனும்படி அளவு காண்பரிய அசுரச் சேனைகள் சத்தமிட்டன. எழுந்து புறப்பட்டன. அகன்ற இந்த பூமி அவர்கள் செலவால் சலித்தது. ஏனென்றால் கொடியோரான அவர்களை சுமந்துகொள்ள இயலாமையால். 31

நேரியம் பரியதோர் நிசாளஞ் சல்லிகை
பேரியம் பணிவயிர் பிறங்கு தண்ணுமை
தூரியங் காகளந் துடிமு தற்படு
சீரியம் பலவுடன் இயம்பிச் சென்றவே.

எம்மால் நேராக இன்னென்றை எடுத்து உவமையாகச் சொல்லொணுத வகையாக அதிக சிறப்புடைய நிசானம் என்னும் மேளமும் சல்லிகையும் பெரிய முரசப் பறையும் ஊது குழலும் ஒலி சிறந்திடும் மத்தளமும் தூரியம் எனும் பறையும் காகளம் உடுக்கு முதற்பட்ட பலவகை வாத்தியங்கள் சிறந்த முறை கொண்டு முழங்கிச் சென்றன. 32

சேயின குஞ்சிகள் செறிந்த தானவர்
பாயின தானையில் படர்ந்த பூழிகள்
வாயின பரவைமேல் வடவைத் தீவிராய்ப்
போயின நாளெழு புகையைப் போன்றவே.

சிவந்த சடைகள் செறிந்த அசுரர் திரண்டு செல்கின்ற சேனையின் செலவால் எழுந்து அவர்கள் மீது திரண்ட புழுதியின் காட்சி சமுத்திரத்தின்மேல் வடவாமுகாக்கினி என்னும் நெருப்பு எழுந்து போயின நாளில் அந்த நெருப்பின் மேற்புகை போனது போன்றிருந்தது. 33

வானினும் கண்ணினும் மாதி ரத்தினுந்
தானிறை கடலினுந் தணப்பின் றுகியே
மேனிறை பூழிகள் மிடைய எங்கணுஞ்
சோனைகொள் பின்பனித் தூவல் போன்றவே.

வான உலகிலும் பூவுல கெங்கும் திக்கில் உள்ள உலகிலும் சூழ்ந்து நீர் நிறைகின்ற கடலிலும் நீக்கம் இல்லாதபடிமேல் எழுந்த புழுதி சென்று படிந்திட அதனை நோக்கினல் பெருமழை பெய்த பிற்பாடு அவ்விடத்து பனிப்படலம் போன்று விளங்கியது. 34

சூரனி கத்தெழு தூளி அந்நகர்
ஆரகில் ஆவியும் யாரும் ஆடிய
பூரிகொள் கண்ணமும் பொருந்திப் போவது
காரின மின்னெடு கடலுண் டேகல்போல்.

சூரபன்மனுடைய சேனைமீது எழுகின்ற புழுதியுடன் அந்த நகரில் உள்ள அசுரர்கள் இடுகின்ற வாசனைப் புகையான அகிற்புகையும் அங்குள்ளார் விளையாட்டாக ஒருவர்மீது ஒருவர் எறிந்து ஆடிய அழகிய பொற் சுண்ணப்பொடியும் கலந்து உடன் செல்லும் காட்சி மேகக் கூட்டங்கள் மின்னலுடன் கடலுண்டு எழுவது போன்றிருந்தது. 35

திண்டிறற் கரிகளில் தேரில் வெண்கொடி
மண்டுறு பூழிதோய் வானிற் செல்வன
கொண்டலின் இருதுவிற் கொக்கின் மாலைகள்
தண்டுளி யுறைப்புழிப் படருந் தன்மைபோல்.

திண்மையான திறல் கொண்ட யானைகளில் தேர்களில் கட்டிய வெள்ளைக் கொடிகள் நிரையாக புழுதி மண்டி நிறைகின்ற வானிலே செல்கின்றன எதுபோலும் என்றல் மாரிக் காலப் பருவத்தில் கொக்கின் கூட்டங்கள் வரிசையாகப் பறந்து மழைத்துளிகளை ஊடறுத்துச் செல்வனபோன்றிருந்தது. 36

படைவகை திசையெலாம் படரப் பாயிருள்
அடைவது சூரறிந் தண்டம் யாவினும்
மிடைதரு கதிர்களை விளிக்க வந்தெனக்
குடைநிரை எங்கணுங் குழுமு கின்றவே.

சூரபன்மனது நான்கு வகையாகும் சேனைகள் இவ்வண்ணம் திக்குகள் எங்கும் படர்ந்திட அதனுல் கொடிய இருள் வந்து கூடிக்கொள்வதை சூரபன்மன் அறிந்து அண்டங்கள் யாவற்றிலும் இருக்கின்ற சூரியர்களை இங்கு வாருங்கள் எனக் கட்டளை யிட அச் சூரியர்கள் வந்ததை ஒத்து குடைகளின் வரிசைகள் காணப்படுகின்றன: அக்குடைகள் சூரியன்போல் ஒளியுடையனவாகி விளங்கின. 37

வெம்பரி கரியுமிழ் விலாழி மாமதம்
இம்பரின் நகரெலாம் யாற்றின் ஏகலால்
உம்பர்மற் றல்லதை ஒருவன் தானைகள்
அம்புவி சென்றிடற் கரிய தானதே.

கொடிய குதிரை யானை உமிழ்கின்ற வாய் நீரும் பெருகும் மத நீரும் இந்த வீரமகேந்திர புரத்தின் ஆறு ஓடுவதுபோல ஓடலால் இப்பூமி முழுவதையும் தனிக் குடைக்கீழ் ஆள்கின்ற சூரபன்மனது சேனைகள் வான மார்க்கமாகச் சென்றன அன்றி நிலத்தில் கால் தோயும்படி நடந்து செல்வதற்கு அரிதாகப்போனது. 38

இவ்வகை தானைகள் ஈண்டிச் சென்றிடத்
தெவ்வலி அவுணர்கோன் செம்பொற் றேரின்மேல்
மைவரை மேருவின் வருவ தாமெனக்
கவ்வையின் அமர்புரி களரி ஏகினுன்.

இவ்வகையாகச் சேனைகள் எங்கும் பரந்து சென்றிட பகைமையை வென்றிடும் வலி யுடைய அசுரர்களது தலைவன் சூரபன்மன் செம்பொன்னில் செய்த அத் தேரின் மீது; கரு[illegible]யான [illegible] பொன்னுன மேருமலையில் வருவதை ஒத்து மிகுந்த ஓசை யுடைய போர்புரி[illegible] போர்க்களத்தில் சென்ருன். 39

பூசலின் எல்லையில் புரவ லன்செலத்
தூசிய தாகியே தொடர்ந்த தானைகள்
ஈசன தருள்மகன் இனிது வைகிய
பாசறை சூழ்ந்தன படியும் வானுமாய்.

போர்க்களத்தின் எல்லையின் அரசனுன சூரபன்மன் சென்றிட முற்படையாகி அவனைத் தொடர்ந்த சேனைகள் யாவும் ஈசன் சிவனின் அருள் நிறைந்த திருக்குமரன் இனிதுடன் வீற்றிருந்தருளிய பாசறைத் தலத்தை பூமியின் நாற்றிசையும் வானின் மேலுமாக எப்புறமும் மொய்த்து மூடிக்கொண்டன. 40

உரற்றிய கணமழை உம்பர் சூழ்ந்தென
விரற்றெடு சூழ்படை ஈட்டம் நோக்கியே
மரற்றூறு பலங்களில் வாரி கண்வர
அரற்றினர் வெருவினர் அமரர் யாவரும்.

முழங்கி இருண்ட பெரு முகில்கள் வான்மேல் மொய்த்து மூடி சூழந்தது என் னும் படியாக எம்பெருமானது பாசறைத் தலத்தை நாற்புறமும் மேலுமாக ஆங் காரத்துடன் ஆர்ப்பரித்து சூழ்ந்திடுகின்ற படைகளின் தொகையை நோக்கி அங்கி ருக்கும் தேவரெல்லாம் மரத்தில் பழுத்த பழங்கள் இயல்பாக மளமளவென்று வீழ்ந் திடும் தன்மை போல் தங்கள் தங்கள் கண்களால் கண்ணீர் பெருகப் பெருக அச்சத் தால் துயருற்று அழுதார்கள். 41

அழுங்கினன் புரந்தரன் அகிலம் யாவையும்
விழுங்குறும் இருவரும் விம்மி ஞருளம்
புழுங்கினர் வீரர்கள் பூதர் ஏங்கினர்
கொழுங்கனல் இடைப்படு விலங்கின் கொள்கைபோல்.

இதனைக் கண்டுகொண்ட தேவர்கட்கு அரசனை இந்திரன் அஞ்சி அழுதான். உலகம் யாவற்றையும் முன்னர் விழுங்கிய பெரு வலியுடைய பிரம விட்டுணுக்களா கும் இருவரும் விம்மினர்கள். தங்கள் உள்ளம் புழுங்கி வேதனை கொண்டார்கள். இலக்கத்து எட்டு வீரர்கள் பூதங்கள் எல்லாம் ஏக்கமுற்ருர்கள். இவர்களது நிலை எவ்வாருயிற்றென்ருல் சுவாலித்து நாற்புறமும் சூழ்ந்து எரிகின்ற நெருப்பின் இடைப்பட்டவர்கள் அவதியுறுவது போன்ற நிலையானுர்கள் 42

ஆவதோர் காலையில் அரியும் நான்முகத்
தேவனும் ஏனைய திசையி னேர்களும்
மூவிரு முகமுடை முதல்வன் தன்னிரு
பூவடி பணிந்திவை புகறல் மேயினர்.

அவ்வாருகிய காலையில் விஷ்ணு பெருமானும், நான்கு முகமுடைய பிரமதேவ னும் ஏனைய திக்கிற்கு அதிபரான இந்திரன் முதல் கடவுளரும், ஆறுமுகமுடைய முதல்வனுகும் எமது ஈசனின் மலர்போலும் திவ்விய பாதத்தினைப் பணிந்து எம் பிராற்கு இவற்றை ஓதிடுகின்ருர்கள். 43

வேறு

அந்தமி லாத அண்டம் ஆயிரத் தெட்டுத் தன்னில்
வந்திடு தானை யோடு மாபெருஞ் சூர பன்மன்
உந்திய தேரின் மேலான் உறுசமர் புரிவான் போந்தான்
முந்திய தூசி நந்தம் பாசறை மொய்த்த தென்ருர்.

முடிவு என்பதிலாத அண்டங்கள் ஆயிரத்து எட்டுத் தன்னில் இருந்தும் இப்பூ மியில் வந்திடுகின்ற சேனையோடும் மிகப் பெரிய சூரபன்மன் மிகு வேகமுடன் செலுத்திடும் தேர் ஒன்றின் மேலாகித் தேவரீருடன் உற்ற போரினைப் புரியும்படி வந்துள்ளான். அவனுடன முன் வந்த தூசிப்படையானது நமது பாசறை எங்கும் மொய்த்துக் கொண்டது என்ருர். 44

என்னலும் முறுவல் செய்தாங் கிலங்கெழில் தவிசின் வைகும்
பன்னிரு கரத்து வள்ளல் பவனனைக் குறிப்பின் நோக்க
முன்னம துணர்ந்து வல்லே முளவுகோல் கயிறு பற்றிப்
பொன்னவிர் மனவே கப்பேர்ப் புரவிமான் தேர்முன் உய்த்தான்.

என்று இவர்கள் யாவரும் ஓதுதலும் அதுகேட்டு முறுவல் செய்தருளி பிரகாச முடன் சிறந்த சிம்மாசனத்துற்ற பன்னிருகையுடைய அருள் வள்ளல் ஆறுமுகப் பெரு மான் வாயுபகவானை குறிப்பால் நோக்கியருளலும், அதனை முன்னமே உணர்ந்து கொண்ட வாயுபகவான் எழுந்து விரைவுடன் சென்று சவுக்கினையும் கடிவாளக் கயிற்றையும் கையில் பற்றி பொன்னுக விளங்கிடும் மனவேகம் என்னும் குதிரை பூட்டிய தேரைக் கொணர்ந்து எம்பிரான் திருமுன் விடுத்தான். 45

உய்ந்திடு கின்ற காலத் தொய்யென எழுந்து காமர்
புத்தலர் நீபத் தாரான் புகர்மழுக் குலிசஞ் சூலஞ்
சத்திவாள் பலகை நேமி தண்டெழுச் சிலைகோல் கைவேல்
கைத்தலங் கொண்டான் என்னின் அவன்தவங் கணிக்கற் பாற்றே.

தேரினைத் திருமுன்பு உய்த்திடுகின்ற காலத்தில் அதுகண்டு விரைவுடன் எழுந்து அழகுடன் பொழிந்திட உடன் அலர்ந்த கடப்பமாலை அணிந்த கடவுள் ஆறுமுகப் பெருமான் அங்குசம் மழுவாயுதம் குலிசாயுதம் சூலம் சத்தியுடைய வாள் கேடயம் சக்கரம் தண்டாயுதம் எழுவாயுதம் வில் அம்பு திருக்கைவேல் ஆகிய அத்தனை படைகளையும் ஒருவனுன சூரபன்மனைச் சங்கரிக்கும் பொருட்டாகத் தமது பன்னிரு திருக்கரத்திலும் எடுத்துள்ளார் என்றால், அந்தச் சூரபன்மன் செய்துள்ள தவம் எத்தகையது எனவும் நாம் எண்ணமுடியுமோ.

இந்தச் சூரபன்மனை சங்கரித்திடல் ஈசனுக்கு ஓர் திருவிளையாட்டாகும். தேவர்கள் கனவிலும் காண்டற்கரிய கடவுள் ஆறுமுகப்பெருமான் அவன்பால் போரிட வருதல் அவன் செய்த தவத்தின் விளைவன்றி வேறில்லை. பாவமே பயில்கின்ற அவனிடத்து பரமன் தனது நிச சொரூபத்துடன் எழுந்தருளிவர அதனை பகை கொண்ட கண்ணால் காண்பதும் அவன் தவமே. அன்றியும் அவனைச் சங்கரிக்க பன்னிரண்டு படைகளை தமது திருக்கரத்தில் எடுத்தருளினுர் எம்பிரான் என்னின் அச்சூரனுடைய தவம் குறிக்கமுடியுமோ? இச்செய்கை வேறு யார்பொருட்டு எங்காகிலும் நிகழ்ந்தது இல்லையே. 46

மாறிலா அருக்கன் நாப்பண் வைகிய பரம னேபோல்
ஆறுமா முகத்து வள்ளல் அலங்குளைப் புரவி மான்தேர்
ஏறினுன் வீர வாகு இலக்கரோ டெண்ம ராகும்
பாறுலாங் குருதி வேலார் பாங்கராய்ப் பரசி வந்தார்.

மாறிலாத சூரிய தேவன் நடுவணுக ஒளிக்கொளியாய் வைகிய சிவமூர்த்தியே போன்று ஆறுபெருமுகமுடைய ஐயன் அழகிய வெண்ணிறமுடைய பிடரி மயிர் கொண்ட குதிரை பூட்டிய ஒளியுடையதேர் மீது ஏறியருளினுர். அதுபோது வீரவாகுதேவர் இலக்கம் வீரர் மற்றும் எட்டுப்பேர் ஆகி, பருந்து வட்டமிட்டு உலவும்படி இரத்தம் தோய்ந்த வேலுடைய வீரர்கள் எப்பிரான் பக்கராக வணங்கித் துதித்தவாறு வந்தார்கள். 47

இராயிர வெள்ள மாகும் எண்டொகைப் பூதர் யாரும்
மராமரம் பிறங்கல் ஈட்டம் வரம்பறு படைகள் பற்றி
விராவினர் சூழ்ந்து சென்றுர் விரிஞ்சனே முதலோர் யாரும்
பராவொடு புடையின் நின்று பனிமலர் மாரி தூர்த்தார்.

இரண்டாயிரம் வெள்ளமாக எண்ணப்பட்ட பூதங்கள் யாவும் தங்களது கைகளில் மராமரம் மலைக் கூட்டங்கள், அளவற்றபடைகள் ஆகிய இவற்றை யெல்லாம் ஏந்தி எம்பிரானை அயலாக அடைந்து சூழ்ந்து சென்றுர்கள். பிரமதேவன் முதல் கடவுளர் யாவரும் எம்பிரானை வணங்கி துதித்தவாறு பக்கரில் நின்று குளிர்ச்சி பொருந்தியமலர்களைச் சொரிந்தார்கள், 84

தூர்த்திடு கின்ற காலைச் சுருதியின் தொகைக்கும் எட்டாத்
தீர்த்தன்மான் றேர்மே லாகித் திண்புவி அண்டந் தன்னில்
பேர்த்திடும் உயிர்கள் மாற்றப் பின்னுறு முன்னேன் போல
ஆர்த்திடு தானை வெள்ளத் தவுணர்கள் மீது போனுன்.

திருமால் பிரமன் முதல் யாவரும் மலர்களைச் சொரிந்திடுகின்ற காலத்தில், வேதங்களின் தொகைக்கும் எட்டொணுத அருள்நோக்கால் தீர்த்தமாட்டும் குமரன் மாட்சிமைகொண்ட தேர் மேலாகி புறப்பட்டு திண்ணிய பூமி அண்டம் யாவற்றிலும் பிறந்துற்ற உயிர்கள் யாவற்றையும் சங்கரித்திட வேண்டி பின்னல் வந்தருளும் முன்னைப்பொருளாகும் உருத்திரமூர்த்தி போன்று ஆரவாரித்து நிற்கும் சேனை வெள்ளங்களாகும் அசுரர்மீது போரிடும்படி போயருளினுர் 49

ஆங்கது காலை தன்னில் ஆறிரு தடந்தோள் ஐயன்
பாங்குறு பூதர் யாரும் பாரொடு திசையும் வானும்
நீங்குத லின்றிச் சூழும் நேரலன் படையை நோக்கி
ஏங்கினர் தொல்லை வன்மை இழந்தனர் இனைய சொற்றுர்.

அங்கு அவ்வாருகிய நேரத்தில் பன்னிரண்டு பெரும் தோளுடைய ஐயன் ஆறு முகன் பக்கராக வந்திடும் பூதங்கள் யாவும், பூமியுடன் திசையும் வானமும் எங்கும் நீக்கமின்றி சூழ்ந்திடுகின்ற பகைவன் சூரபன்மனின் படையைநோக்கி ஏக்கமுற்றனர். அதனுல் தமது வலிமை இழந்தனர். இத்தன்மைகளைச் சொல்கின்ருர்கள். 50

தீயன புரியுஞ் சூரன் செய்திடு தவத்தாற் பெற்ற
ஆயிர விருநான் கண்டத் தவுணரும் போந்தார் அன்றே
ஏயதோ ரண்டம் ஒன்றில் இருந்தனர் இவர்மற் றன்ருல்
மாயிருந் திசையும் விண்ணும் வையமுஞ் செறிந்து நின்ருர்.

தீய செயலைச் செய்திடும் சூரபன்மன் தான் செய்திடுகின்ற தவத்தின் பேற் ருல் அரசாளப் பெற்ற ஆயிரத்து எட்டு அண்டங்களில் உள்ள அசுரரும் இங்கு இப்படி வந்து கொண்டனரன்ருே? இவ்வளவு சேனையும் சூரபன்மனுடைய அந்த ஆயி ரத்தெட்டில் ஒரு அண்டத்தில் இருந்தவர் அல்ல. ஏனெனில் இவர்கள் இப்பெரும் திக் கும் வானமும் மண்ணுலகும் எங்கும் நீங்குதலின்றிச் செறிந்து நிற்கின்ருர்கள். 51

வரத்தினிற் பெரியர் மாய வன்மையிற் பெரியர் மொய்ம்பின்
உரத்தினிற் பெரியர் வெம்போர் ஊக்கத்திற் பெரியர் எண்ணில்
சிரத்தினிற் பெரியர் சீற்றச் செய்கையிற் பெரியர் தாங்குங்
கரத்தினிற் பெரியர் யாருங் காலனிற் பெரியர் அம்மா.

அம்மவோ இவ்வசுரர்களைப் பார்த்தால் வரத்தினுல் பெரியவர்கள். மாயம் செய்திடும் வலிகளால் பெரியவர்கள், தோளின் வலியால் வென்றிடுதலில் பெரிய வர்கள். கொடிய போரை சலிப்பின்றிச் செய்திடும் ஊக்கத்தில் பெரியவர்கள். எண் ணற்ற தலைகள் உடையராதலின் அதனிலும் பெரியவர்கள். கோபத்தால் செய்தி டும் கொலைத் தொழிலில் பெரியவர்கள். படைகள் கொண்ட கைகள் பல கொண்டு அதனுலும் பெரியவர்கள். இவர்கள் யாவரும் இயமனிலும் பெரியவராயினுர்கள். 52

மாகத்தின் வதிந்த வானேர் வன்மையும் வளனும் வவ்விச்
சோகத்தை விளைத்து வெம்போர் தொடங்கியே தொலைவு செய்தோர்
மோகத்தின் வரம்பாய் நின்ருேர் முழுதுயிர்க் கடலுண் வேட்கை
மேகத்தின் வலிந்த தீயோர் விரிஞ்சன்ஏற் றிடினும் வெல்வோர்.

இவ்வசுரர்கள் வானுலகில் வாழ்கின்ற தேவர்களது வலியையும், செல்வ வளங்களையும் பறித்து எடுத்து அவர்கட்கு சோகத்தை விளைத்து கொடிய போரை அவர்களுடன் செய்து அத்தேவ உலகையே முற்றிலும் தொலைத்தவர்கள். மோகம் (பற்று) என்பதற்கு இவர்கள் எல்லைப் பொருளாய் நின்றவர்கள். இந்த உலகில் உள்ள பல உயிர்களை உண்டு தொலைப்பதற்கு பெரும் கடலை உண்கின்ற ஓர் மேகத் தின் வலியுடைய நீர் வேட்கையிலும் பார்க்க; வேட்கையுடைய தீயவர்கள் இவர் கள். இவர்களுடன் பிரமதேவன் போரிட வந்து ஏற்ருலும் அஞ்சாது எதிர்த்துப் போரிட ஏற்பார்கள்.

மேகம் இயல்பான நீர் வேட்கையால் கடலை உறிஞ்சுதல் போன்று உலகில் உயிர்களைக்கொன்று தொலைத்திடற்கு உற்ற பெருவிருப்பம் இயல்பாக உடையவர்கள். உலகில் தீமையாயது ஆசை. அந்த ஆசை மனிதனை அலைத்து முடிவில் அழித்துவிடும். ஆதலால் ஆசையை ஊட்டுவார் இத் தீயோர் என்பதை குறித்திட மோகத்தின் வரம்பாய் நின்ருேர் எனக் கூறினுர் ஆசிரியர். மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யால் மனிதரெல்லாம் சின்னபின்னமாருரடி கிளியே என்னும் யோகசுவாமிகளின் திருவாக்கும் இத்துடன் ஒப்பநோக்குக. 53

கூற்றெனும் நாமத் தண்ணல் கொண்டிடும் அரசுஞ் செங்கேழ்
நூற்றிதழ்க் கமல மேலான் நுனித்தனன் விதிக்கு மாறு
மாற்றிடுஞ் செய்கை வல்லோர் மாநில முழுதுண் டாலும்
மாற்றரும் பசிநோய் மிக்கோ ரண்டங்கள் அலைக்குங் கையோர்.

கூற்றுவன் என்னும் பெயருடைய கடவுள் இயமன் கொண்ட அரசை அழித்திடும் ஆற்றலும், சிவந்த ஒளியுடைய நூறு இதழ் கொண்ட தாமரை மலர் மேல் இருந்து நுனித்து எல்லாவற்றையும் படைக்கின்ற பிரமனது செயலையும் மாற்றிட வல்லவர்கள். இவர்கள் கொண்ட பசிக்கு பெரு நிலம் முழுவதையும் உண்டாலும் அதனாலும் தீராத பசியுடையோராகும் கொடியவர்கள். அண்டங்களையே அலைக்கின்ற பெருங் கைகளை உடையோர்கள். 54

வெங்கனல் சொரியுங் கண்ணர் விரிகடற் புரைபேழ் வாயார்
பங்கமில் வயமேற் கொண்டோர் பவத்தினுக் குறையு ளானோர்
செங்கதிர் மதியந் தோயுஞ் சென்னியர் செயிர்தீர் ஆற்றல்
அங்கத விறையும் பேர அடிபெயர்த் துலவும் வெய்யோர்.

கொடிய நெருப்புச் சொரிகின்ற கண்ணுடையார்கள். விரிந்த கடலை ஒத்து அகன்ற பெருவாயை உடையவர்கள். பங்கப்படாத பல வெற்றிகளை முன்கொண்டவர்கள். பாவச்செயல் தங்கி இருத்தற்கு இருப்பிடமாய் உள்ளவர்கள். செங்கதிருடைய சூரியதேவன் சந்திரதேவனை முட்டும்படி வளர்ந்த தலையுடையவர்கள். அளவு கடந்த ஆற்றலுடைய நாக அரசன் ஆதிசேடன் நிலைவிட்டுப் பெயருமபடி அடி தூக்கிவைத்து உலவுகின்ற கொடியவர்கள் இவர்கள். 55

அங்கிமா முகத்தி னுன்போல் அடைந்தனர் பல்லோர் யாளித்
துங்கமா முகத்தினுன்போல் தோன்றினர் பல்லோர் சூழி
வெங்கைமா முகத்தி னுன்போல் மேயினர் பல்லோர் மேலாஞ்
சிங்கமா முகத்தி னுன்போல் திகழ்ந்தனர் பல்லோர் அன்றே.

இவர்களைப் பார்த்தால் அக்கினி முகாசூரனைப் போன்று பலர் வந்திருக்கின்றுர்கள். வீரமுடைய யாளி முகனைப் போன்று தோன்றுகிருர்கள் பலர். துளையுடைய கொடும் துதிக்கை கொண்ட யானை முகமுடைய தாரகாசூரனைப் போன்று வந்துற்ருர் பலர். அசுரர்களில் மேலாகிய சிங்கமுகாசூரனைப் போன்று திகழ்ந்துகொண்டு நிற்கிருர் பல அசுரர்கள். 56

மதுவொடு கைட பன்போல் வந்தனர் பல்லோர் யாருந்
துதியுறு புகழ்ச்சுந் தோப சுந்தரிற் செறிந்தோர் பல்லோர்
அதிர்கழற் சலந்த ரன்போல் ஆர்த்தனர் பல்லோர் ஆற்ற
முதிர்சின மகிடன் போல மொய்த்தனர் பல்லோர் அம்மா.

அம்மவோ! இங்கு மது என்பானுடன் கைடபன் என்னும் அசுரர்போல் வந்தார்கள் பல அசுரர். யாவரும் துதித்திடவுற்ற புகழும் சுந்தரமும் கொண்ட சுந்தோப சுந்தரைப்போல் செறிந்திருக்கிருர்கள் பலர். அதிர்கின்ற சிலம் பணிந்த சலந்தரா சூரனைப்போன்று ஆர்த்துக்கொண்டிருக்கின்றனர் பலர். ஆற்றவும் முதிர்ந்த சினமுடைய மகிடாசூரனைப்போல் மொய்த்துவந்திருக்கிருர்களே பல அசுரர்கள். இப்பெயர்கள் மது வஞ்சனை புகழ் சுந்தரம் சஞ்சலம் சோம்பல் இவற்றை உட்பொருளாகக் குறிப்பன காண்க. 57

அரன்படை பரித்தோர் பல்லோர் அப்புயத் தவிசின் மேவும்
வரன்படை பரித்தோர் பல்லோர் மழுவொடு தண்டந் தாங்குங்
கரன்படை பரித்தோர் பல்லோர் கால்படை பரித்தோர் பல்லோர்
முரன்படை படுத்த கொண்டல் முதுபடை பரித்தோர் பல்லோர்.

சிவபிரானது படையைக் கைக்கொண்டவர் பலர்; தாமரைமலர் ஆசனத்திருக்கும் பிரமன்படை கைக்கொண்டவர் பலர்; மழுவாயுதத்தோடு தண்டாயுதத்தையும் தாங்கிடும் கையுடைய இயமனின் படைகொண்டார் பல அசுரர். வாயுதேவன் படைகொண்டார் பல அசுரர். முராசூரனைக்கொன்று அவன் படையை அழித்த விஷ்ணுமூர்த்தியின் படையைக்கொண்டார் பல அசுரர். 58

ஆனதொ ரவுண வெள்ளம் அநந்தகோ டியதாம் என்றே
தானுரை செய்வ தல்லாற் சாற்றவோ ரளவும் உண்டோ
வானமும் நிலனும் ஏனைமாதிர வரைப்பும் எங்குஞ்
சேனைக ளாகிச் சூழின் யாமென்கொல் செய்வ தம்மா.

இவ்வாறாக நிலையான அசுரவெள்ளங்களின் தொகையை நாம் அநந்தகோடியானது என்று எடுத்துக்கூறுவதல்லாமல் இதற்கு இவ்வளவு என்று சொல்ல ஓர் எண் இலக்க அளவும் உண்டோ? வானமும் நிலனும் ஏனைய திக்கின் வைப்புகளும் எங்கும் சேனைகளாகச் சூழ்ந்திருந்தால் அம்மவோ! நாம் இங்கு என்னத்தைத் தான் செய்திடமுடியும் என்றன பூதங்கள். 59

ஓரண்டத் தவுணர் போரால் உலைந்தயாம் ஒருங்கே யெல்லாப்
பேரண்டத் தோருந் தாக்கிற் பிழைப்புறு பரிசும் உண்டோ
காரண்ட அளக்கர் சாடிக் கனவரை எறியுங் கால்கள்
ஏரண்டச் சூழல் புக்கால் அவைபின்னும் இருக்க வற்றோ.

மேலும் அப்பூதங்கள் சொல்கின்றன இப்பூமியான ஒரு அண்டத்திலே இருந்த அசுரருடன் செய்த போரால் உலைந்துபோன நாம்; இப்போது ஒருங்காக எல்லாப் பெரிய அண்டங்களின் உள்ள அசுரர் திரண்டு எம்மைத் தாக்கின் நாம் தப்பிப் பிழைப்பதற்குரிய ஒரு வழியும் உண்டோ? இது எதுபோல் என்றால் கருமையான வடிவுடைய சமுத்திரத்தை அலைத்து பெருமலைகளையும் தூக்கி எறியும் காற்றுக்கள் பெரிய அண்டங்களின் சூழல்களை பிரட்டி எறிவோம் எனப்போனால் அந்தக் காற்று பின்னரும் இருக்கமுடியுமோ. இவ்வளவு நாளும் வந்த ஒரு அண்டத்து அசுரருடன் ஒருவாறு போரிட்ட நாம் எல்லா அண்டத்தவரும் சேரவந்தால் நாமே அலுத்துப்போய் விடுவோம் என்று கூறின, 60

ஒருவரே எம்மை எல்லாம் உரப்பியே துரப்பர் பின்னை
இருவரே சென்று தாக்கின் யார்இவண் உய்ய வல்லார்
துருவரே யனைய துப்பிற் சூழுறும் அவுணர் யாரும்
பொருவரே என்னில் நேர்போய்ப் பூசலார் தொடங்கற் பாலார்.

ஒரு அசுரனே எங்கள் எல்லோரையும் உரப்பிக் கலைப்பான். பின்னர் இரண்டு பேர் இங்கு வந்து தாக்கினால் யார் இங்கு உயிரோடு இருக்கமுடியும்? உலகினை நிலை நிறுத்திவைத்திடும் துருவரை ஒத்த வலியுடையவராய் சூழ்கின்ற இந்த அசுரர் யாவருமாக வந்து போரிடுவரேல் என்றால் அவருடன் நேர்போய் யார்தான் போர் தொடங்கும் வலியுடையார்கள். 61

எல்லையில் ஆற்றல் கொண்ட எம்முடைத் தலைவர் யாரும்
அல்லன வீரர் தாமும் அவுணரை எதிர்க்க லாற்றார்
கல்லொடு மரத்தால் யாமோ அவர்திறல் கடக்க வல்லேம்
ஒல்லைநம் உயிரும் இன்றே ஒழிந்தன போலும் அன்றே.

எல்லையில்லாத பெருவலிகொண்ட எம்முடைய பூதத் தலைவர்கள் யாவரும், அல்லாத மற்றைய இலக்கத்தெட்டு வீரர்தாமும் இந்த அசுரரை எதிர்த்திட முடியாது என்றால் கல்லாலும் மரத்தாலுமோ நாங்கள் இந்த அசுரரை அடித்து மோதி அவர்களது வலியை வெல்லப் போகின்றோம். அப்படிச் செய்தால் உடனாக இன்று எமது உயிரும் ஒழிந்ததுபோலத் தான் ஆய்விடும் என்றார்கள். 62

நாற்படை அவுணர் தாக்கின் நாமெலாம் விளிதும் வீரர்
காற்படு பூளை யேபோற் கதுமென இரிவர் வாகைப்
பாற்படு திறலோன் நிற்கிற் பழிபடும் இனைய ரோடும்
வேற்படை யொருவன் அன்றி வேறியார் எதிர்க்க வல்லார்.

நான்குவிதமான படையுடைய அசுரர் எம்மைத் தாக்கினல் நாம் எல்லோரும் அழிவோம். அதுவன்றி எம் வீரர்கள் காற்றுல் அள்ளிவீசப்படும் தூசுபோலாகி விரைவுடன் பின்னிட்டு ஓடிவிடுவார்கள். இதுகாலவரையும் வெற்றி பலகொண்டு வாகைபெற்ற வீரவாகுதேவர் இவர்களுடன் போரிட ஏற்று நின்ருல் தோல்வியான பெரும் பழியினைச் சுமந்துகொள்வார் ஆதலால் இவரோடும் வேற்படையை திருக்கரத்தேந்திய ஒருவனுகும் எம்பிரானேயன்றி வேறு யார் இவர்களை எதிர்க்க வல்லமை உடையார். 63

நீடுறு திசையும் வானும் நிலனும்வெள் ளிடைய தின்றிப்
பாடுற வளைந்து கொண்டார் பற்றலர் அதனுல் யாமும்
ஓடியும் உய்ய லாகா ஒல்லுமா றவரைத் தாக்கி
வீடுதல் உறுதி யென்றே விளம்பிமேற் சேற லுற்ருர்.

நீடுற்ற பெரும் திசையும் வானமும் நிலனும் எங்கும் வெளியிடம் ஏதும் இலாது எமக்கு எப்பக்கரிலும் இந்தப் பகைவரான அசுரர் வளைத்துக்கொண்டனர். அதனுல் நாங்களும் தப்பிக்கொள்வதற்கு எங்காகிலும் ஓடியும் பிழைத்திடமுடியாது. ஆகவே எமக்குப் பொருத்தமான முறையால் இவர்களைத் தாக்கி அதனுல் நாம் இறத்தல் தான் உறுதியாகும் என்று எல்லாப் பூதங்களும் பேசி அசுரருடன் மேற்சென்று போரிட்டுத் தாக்குவதற்குப் போகலுற்ருர்கள். 64

மற்றது காலை தன்னில் மாபெரும் பூத சேனைக்
கொற்றவர் பலரும் ஏனை வீரர்தங் குழுவி னேரும்
வெற்றிகொள் மொய்ம்பன் தானு மிடைந்துசூழ் படையை நோக்கி
இற்றன கொல்லோ நந்தம் வன்மையென் றெண்ண முற்ருர்.

இவ்வாறுன இந்தக் காலத்தினில் பெரும் பூத சேனைகட்கு தலைவராயுள்ளோர் பலரும் மற்றைய வீரர்கணத்தின் கூட்டத்தினரும் இவர்கட்குமேலாக வெற்றி கொள்ளும் தோளுடைய வீரவாகுதேவரும்; அங்கு நெருங்கிச் சூழ்ந்திடுகின்ற அசுரரின் பெரும் படையை நோக்கி ஐயய்யோ! இன்றுடன் எம் வன்மை அழிந்து விட்டதோ என எண்ணங்கொண்டனர். 65

அண்டர்கள் முதல்வன் தானும் அமரரும் அகில மெங்குந்
தண்டுத லின்றிச் சூழுந் தானவர் அனிக மெல்லாங்
கண்டனர் துளங்கி அஞ்சிக் கவன்றனர் அவருட் காரி
வண்டுள அலங்கற் சென்னி வானவற் கினைய சொல்லான்.

தேவர்கட்கு முதல்வனுன இந்திரனும் தேவர்களும் அகிலமெங்கும் நீங்குதல் இன்றிச் சூழ்ந்திடுகின்ற இந்த அசுரப்படையின் கொடிய செறிவை நோக்கிக்கண்டனராய் நடுநடுங்கிப் பயந்து மனம் கவற்சிகொண்டு நின்ற நேரத்தில் அத்தேவர்களுள் இந்திரதேவன் எழுந்து வண்டுகள் மொய்த்திடும் துளசிமாலையணிந்த முடியுடைய நாராயணப் பெருமானை நோக்கி இவற்றைச் சொல்கின்ருன். 66

ஆண்டகை முருகன் தன்மேல் ஆயிர விருநா லண்டத்
தீண்டிய தானை யெல்லாம் இறுத்தன இவற்றினேடு
மூண்டமர் இயற்றி வெல்ல வூழிநாள் முடியும் என்ருன்
மாண்டிடு கின்ற தெங்ஙன் அவுணர்கள் மன்னன் மன்னே

ஆண்டகைமையுடன் அருளுருவாய் நிற்கும் குமரப்பெருமான் தன்மேல் போரிட ஆயிரத்து எட்டு அண்டங்களில் இருந்த அசுரச் சேனைகள் யாவும் வந்து கூடிக் கொண்டன. இவற்றுடன் நேரிட்டு போர்புரிந்து எம்பெருமான் வெல்வதற்கு எத்தனையோ ஊழிக்காலங்களான நாட்கள் சென்றிடுமே என்ருல், பின்னர் இந்த அசுரர்க்கெல்லாம் மன்னனுன சூரபன்மன் எப்படி மாளப்போகின்ருன்? அது நடவாது போல இருக்கின்றதே! 67

அடுதிறல் வலிபெற் றுள்ள அவுணராம் பானுட் கங்குல்
விடிவதும் அமரர் தங்கள் வெஞ்சிறை வீடு மாறும்
நெடியதொல் வெறுக்கை தன்னை நீங்கிய நமது துன்பம்
முடிவது மில்லை கொல்லோ மொழிந்தருள் முதல்வ என்றான்.

ஆதலால் அனைவரையும் அழித்துக்கொன்றிடற்குரிய திறமை பெற்றுக்கொண்ட அசுரர்கள் என்னும் பெரும் இரவு நீங்கி விடிவதும், தேவர்களது கொடிய சிறை நீங்கப்பெறுகின்றதும்; நெடுங்காலமாக நாம் அனுபவித்து வந்த எமது முன்னைய செல்வத்தை நீக்கிக்கொண்டமையால் வந்த நமது துன்பம் முடிகின்றதும் இல்லையோ? ஐயனே! எம் முதல்வா! இது என்னவென்று சொல்லியருள்க என்றான் இந்திர தேவன். 68

இந்திரன் இனைய தன்மை இசைத்தலும் இலங்கை காத்த
ஐந்திரு சென்னி யானை அடுதிறல் கொண்டு நின்ற
செந்திரு மருமத் தண்ணல் தேவரை அளிக்குந் தொல்லோன்
புந்திகொள் கவலை நாடி இனையன புகலா நின்றான்.

இந்திரதேவன் இவ்வாறாக எடுத்துக் கேட்டு நிற்றலும், அதுவேளை இலங்கை நாட்டை அரசாண்ட பத்துத் தலையுடைய இராவணனைக் கொன்று பெருவலி கொண்டு நின்றவரும், மகாலக்குமியை மார்பில் வைத்திருந்தவருமான நாராயணப் பெருமான்! அதனைக் கேட்டருளி தேவர்களை எல்லாம் இரட்சித்தருளுகின்ற மிகு முதியோனான இந்திரக் கடவுளின் மனதில் கொண்ட கவலையை உணர்ந்து இதனை அவனுக்கு சொல்லியவாறு நின்றருள்கின்றார். 69

காலமாய்க் காலம் இன்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோலம் இன்றிக் குணங்களாய்க் குணங்கள் இன்றி
ஞாலமாய் ஞாலம் இன்றி அநாதியாய் நங்கட் கெல்லாம்
மூலமாய் இருந்த வள்ளல் மூவிரு முகங்கொண் டுற்றான்.

இந்திரதேவனே கேள்: நேற்று இன்று நாளை என்று சொல்லப் பெறும் காலங்களாகவும் அன்றி அதுதானே என உற்று அவதானிக்கும்போது அது அல்லாமலும், எல்லாக் கருமங்களாகவும் அன்றி, அக் கருமங்கள் அல்லாமலும், எல்லாக்கோலங்களாகியும், பின்னர் அக்கோலங்கள் அல்லாமலும், எல்லாக் குணங்களாகியும், அக்குணங்கள் அல்லாமலும், இப்பூமிகள் முதற்பொருட்களாகவும், அப் பூமி முதலியன அல்லாமலும், இப்படியாக எல்லா மாகியும் அல்லவுமாகியும், நிற்பதொரு பொருளாய அருள் முதலாகும் சிவமே ஆறுமுகம் கொண்டு குழந்தை வடிவாகி இதோ நின்றருள்பவர்.

உலகம் உயிர் செயல் யாவும் ஆகியும் ஆகாமலும் நிற்பதொரு பொருளே சிவமெனும் கடவுள். அது பிறப்பு இறப்பு பெயர் குணம் குறியாவும் கடந்து எவர் சிந்தைக்கும் எட்டொணாது நிற்பது. அன்றும் இன்றும் என்றும் உள்ளது, இப்போ புதிதான தல்ல எப்பவோ உள்ளது. அதுதான் ஆறுமுகம் உடையதாய் கருணையால் எம்முன் வந்துளது என்று அறிவாயாக என்றார் விஷ்ணுமூர்த்தி. 70

குன்றுதொ றாடல் செய்யுங் குமரவேள் மேரு வென்னும்
பொன்றிகழ் வெற்பின் வந்து புவனங்கள் முழுதும் அங்கட்
சென்றுறை உயிர்கள் முற்றுந் தேவருந் தன்பாற் காட்டி
அன்றொரு வடிவங் கொண்ட தயர்த்தியோ அறிந்த நீதான்.

இந்த உண்மையை மலையிடங்கள் எங்கும் திருவிளையாடல் புரிந்திடுகின்ற குமரப் பெருமான், முன்னர் ஒரு நாள் பொன்னாகத் திகழ்ந்திடும் மேரு மலையில் வந்து அவ்விடத்து நீங்கள் யாவரும் காணும்படி; இப்புவனங்கள் முழுவதையும் அங்கங்கு சென்று உறைகின்ற உயிர்கள் முழுவதையும் தேவர்களையும் தன்னிடத்தாகக் காட்டி ஒரு பெருவடிவம் அன்று கொண்டாரே அதனை நீ நேரில் தரிசித்தும் மறந்திட்டாயோ எல்லாம் அறிந்தவனான நீதானும் என்றார் நாராயணக் கடவுள். 71

பொன்னுரு வமைந்த கஞ்சப் புங்கவ ஞகி நல்கும்
என்னுரு வாகிக் காக்கும் ஈசன்போல் இறுதி செய்யும்
மின்னுரு வென்ன யார்க்கும் வெளிப்படை போலும் அன்னுன்
தன்னுரு மறைக ளாலுஞ் சாற்றுதற் கரிய தன்றே.

பொன்போல் மிளிர்கின்ற உருவுடைய தாமரை மலர்மேல் இருந்திடும் கடவுள் பிரமனுக உலகு உயிர்கள் அனைத்தையும் படைப்பான். எனது வடிவாகி நின்று காப்பான். ஈசன் சிவன்போன்று அழிப்பார். மின்னலின் உருப்போல் அவனைக் காண்குற விரும்பினுர்க்கு சோதியாய் எங்கும் நிலவி நின்ருலும் அவனது தன் மையை இன்னவண்ணம் என வேதங்கள் தானும் எடுத்துச் சொல்வதற்கு அரியது அல்லவோ? என்ருர் விஷ்ணுமூர்த்தி. 72

பாயிருங் கடலிற் சூழ்ந்த பற்றலர் படையை எல்லாம்
ஏயெனும் முன்னம் வீட்டுஞ் சிறுவனென் றெண்ணல் ஐய
ஆயிர கோடி கொண்ட அண்டத்தின் உயிர்கட் கெல்லாம்
நாயகன் அவன்காண் நாஞ்செய் நல்வினைப் பயனுல் வந்தான்.

பரந்த பெரும் கடல்போல் சூழ்ந்த பகைவரது படையை எல்லாம் ஏயெனும் அளவையின் முன்னம் அழிப்பான். அவனை சிறுகுழந்தை என எண்ணுதே! என் ஐயா இந்திரா! அவனைச் சொல்லப்போனுல் ஆயிரகோடியாகக் கொண்ட இந்த அண்டத் தில் காணப்படும் உயிர்கட்கு எல்லாம் உயிராகும் நாயகன் அவன் என்பதை நீ காண்பாய். அவ்வாருக எல்லார்க்கும் தம்பிரான் எம்போலும் ஒரு வடிவுடன் குழந் தையாகி ஆறுமுகத்துடன் வந்தருளியதும் நாம் செய்த நல்வினைப்பயனுல்தான் என்பதையும் தெளிந்து கொள்வாய். 73

சூரனே முதலோர் தம்மை இமைப்பினில் தொலைக்க உன்னின்
மூரலால் அடுவன் கொண்ட முனிவினுல் அடுவன் வாய்மைச்
சீரினுல் அடுவன் நாட்டச் செய்கையால் அடுவன் என்ருல்
நேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

எம்பெருமான் சூரன் முதாலான அசுரரைத் தொலைத்திட நினைந்தால் தனது புன்சிரிப்பினுல் கொல்வான். அல்லது தான் கொண்ட கோப நெருப்பால் கொல் வான். சீரிய வாக்காகும் ஓர் சொல்லால் கொல்வான். அல்லது தமது ஒருபார்வை யால் கொல்வான் என்ருல் தனக்கு நேரிலாத முதல்வனுகும் சுப்பிரமணியப் பெரு மானின் வலிமையை யாரே நிகழ்த்திட முடியும். 74

பாரிடர் சேனை யோடு படர்ந்ததும் இலக்கத் தொன்பான்
வீரர்கள் புடையிற் போற்ற மேயதும் படைகள் பற்றிச்
சூரனை அடுவான் வந்த சூழ்ச்சியுந் தூக்கின் மாதோ
வாரண முதலா மேலோற் கனைத்துமோ ராட லேகாண்.

எம்பிரான் பூதங்களாகும் சேனையோடு புறப்பட்டு இலக்கத்து ஒன்பது வீரர்கள் பக்கரிலே போற்றிடும்படி கருணையால் இங்கு எம்முடன் இவ்வுலகில் வந்ததும்; இன்று சூரபன்மனைச் சங்கரிக்கும் முகமாக திருக்கையில் படைகளுடன் வந்ததுமான எம்பிரானது சூழ்ச்சிகளை நாம் சிந்தித்து சீர்தூக்கிப் பார்த்தால் வேதங்கள் முத லாய எப்பொருட்கும் மேலாய பெருமானுக்கு இவ்வனைத்ததும் ஓர் திருவிளை யாட்டு என்பதை நீ கண்டுகொள். 75

துய்யதோர் குமர னேபோல் தோன்றிய முதல்வன் சூழ்ந்த
வெய்யதா னவரை யெல்லாம் விரைந்துடன் அறுத்து நீக்கிக்
கையில்வேல் அதனுற் சூரன் ஆற்றலுங் கடக்கும் யாதும்
ஐயுறேல் காண்டி யென்ருன் அறிதுயில் அமர்ந்த பெம்மான்.

தூய்மை நிரம்பிய ஓர் குமரன் போன்று இங்கு தோன்றிய முதல்வராகும் ஆறு முகப்பெருமான் தம்மைச் சூழ்ந்த கொடிய அசுரரை எல்லாம் மிகு விரைவாக அம் பினுல் உடன் அறுத்து நீக்கி; திருக்கையில் உள்ள வேலால் சூரபன்மனுடைய வலியையும் தொலைத்து நீக்குவார்; இதனைப்பற்றி நீ யாதும் ஐயுறவேண்டாம். இதனை நீ சாட்சியாகக் கண்டுகொள்க என்ருர் எல்லாவற்றையும் அறிந்தும் அறியாதவர் போல்று பாற்கடலில் யோக நித்திரையில் அமர்ந்த நாராயணப்பெருமான் 76

மாலிவை பலவுங் கூறி மகபதி உளத்தைத் தேற்றி
ஓலமொ டவுண வெள்ளம் உம்பருஞ் செறிந்த செவ்வேள்
பாலுற நின்று போரின் பரிசினைப் பார்த்து மென்றே
வேலுடை முதல்வன் பாங்கா விண்ணவ ரோடும் போந்தான்.

நாராயணப் பெருமான் இந்திரனுக்கு இவை பலவற்றைக் கூறி இந்திரனது உள்ளத்தைத் தேற்றி பின்னர் சொல்வார் ஓலமிட்டு இரைந்தவாறு அசுரரின் சேனை வெள்ளங்கள் வானமேலும் வந்து விட்டன. ஆதலால் இங்கு நாம் நிற்பதை விடுத்து முருகப்பெருமான் பாலாக நின்று இப்போரின் இயல்பினைக் காண்போம் என்று, வேலைத் திருக்கரத்து ஏந்திய முதல்வராகும் முருகப்பெருமான் பக்கராக அங்கு நின்ற விண்ணவரோடும் வந்தான். 77

வேறு

அன்ன தன்மைகண் டறுமுகன் முறுவல்செய் தடுபோர்
உன்னி யேகலும் வானமும் வையமும் ஒன்ருத்
துன்னு தானவப் பெருங்கடல் ஆர்த்தமர் தொடங்க
முன்ன மேகிய பாரிடர் யாவரும் முரிந்தார்.

இவ்வண்ணமாக இந்திரனுடைய கவலை விஷ்ணுமூர்த்தியின் தேறுதல் மொழியாரு நீங்கி தமது பாங்கர் வந்தமையை நோக்கி ஆறுமுகப்பிரான் புன்முறுவல் கொண்டு கொலை நிகழும் போரினை நினைந்து செல்லலும்; வானமும் பூமியும் ஒன்ருக நெருங்கி வந்த அசுரராகும் பெரும் சமுத்திரம் இரைந்தார்த்துப் பெரும் போர் தொடங்க அவருடன் போர் புரிவோமென முன்போன பூதங்கள் யாவும் தமது வலிகெட்டு தோற்று பின்னிட்டோடினுர்கள். 78

முரிந்த காலையில் பூதரின் முதல்வர்கள் முரட்போர்
புரிந்து சாய்ந்தனர் இலக்கரோ டெண்மரும் பொருதே
இரிந்து நீங்கினர் இன்னதோர் தன்மைகள் எல்லாந்
தெரிந்து திண்டிறல் மொய்ம்பினன் சிலைகொடு சேர்ந்தான்.

பூதங்கள் ஓடிய காலையில் பூத சேனுதிபதிகள் விடாது முரணுன பெரும் போரை அசுருடன் புரிந்து ஆற்ருது அவர்களும் பின்னிட்டனர். இச்சேனையுடன் இலக்கம் வீரரும் மற்றைய எட்டு வீரரும் வந்து நேரிட்டு போர்புரிந்து ஆற்ருது தப்பி ஓடிப் பறந்தார்கள். இத்தன்மைகள் எல்லாவற்றையும் தெரிந்து வீரத்தோளுடைய வீரவாகுதேவர் வில்லை ஏந்தியவாறு இச்சேனையுடன் போரிடும்படி வந்துகொண் டார். 79

சேர்பு தன்சிலை வாங்கியே சரமழை சிதறி
நேர்பு குந்திடும் அவுணர்கள் நெடுந்தலை புயங்கள்
மார்பு வெங்கரங் கழலடி வரைகளாய் வீழ
ஈர்பு நின்றமர் இயற்றினன் சிறுவரை இகலி.

வீரவாகுதேவர் இவ்வாறு வந்து கொண்டு தனது வில்லை வளைத்து அம்புகளாகும் மழையினைப் பொழிந்து நேராக வந்திட்ட அசுரர்களது நீண்ட தலைகளை தோள்களை மார்பினைக் கொடிய கைகளை சிலம்பணிந்த கால்களை எல்லாவற்றையும் அறுபட்டு மலைபோல் குவியும்படி வலிமையாக அறுத்து அறுத்துக்கொண்டு சிறிது நேரம் மட்டும் போரிட்டு நின்ருர். 80

மாக மேல்நிமிர் ஆயிர கோடிமா கடலுள்
நாக மொன்றுசென் றலைத்தென நண்ணலர் எதிர்போய்
ஆக வம்புரிந் துலப்புறுத் தன்மைகண் டழுங்கி
ஏக நாயகன் தனதுபால் வந்தனன் இளவல்.

வானமேல் நிமிர்கின்ற ஆயிரம் கோடி பெருங்கடலினுள் ஓர் யானை சென்று கலக்கி நிற்பதை ஒத்து பகைவர் முன்பாக வீரவாகுதேவர் சென்று அசுரரை அம்பினுல் அறுத்து அறுத்து வீழ்த்திடுதலும் அவைகள் ஒழியாத தன்மை கண்டு மனம் சலித்து வேதனைகொண்டு இதன்மேல் தனது செயல் முடியாததை உணர்ந்து ஏக நாயகரான குமரப்பெருமான் பக்கராக வந்து சேர்ந்து கொண்டார். 81

காலை யங்கதில் அவுணர்தந் தானையோர் கணத்தின்
சாலம் ஓடின பூதரில் தலைவருஞ் சாய்ந்தார்
கோல வெஞ்சிலை வீரரும் முரிந்தனர் குழவிப்
பால னேயிவண் வருமெனச் சூழ்ந்தனர் பலரும்.

அவ்வாறுகிய காலையில் அசுரர்களின் சேனைகளானோர் இச் செயல்களை நோக்கி எம்முடன் போரிட வந்த பூதங்கள் ஓடின. பூத சேனுதிபதிகளும் பின்னிட்டார்கள். கோலமுடைய வில்லின் வீரரான இலக்கத்தெட்டு வீரரும் போரிட முடியாது புறமுதுகுகாட்டி ஓடினுர்கள். இனிமேல் எம்முடன் போரிடுதற்கு அந்த குழந்தையாகும் முருகனே இவ்விடம் வருவான் என எண்ணி பலரும் ஆயத்தமாக வளைந்து கொண்டனர். 82

தண்டு நேமியுங் குலிசமுஞ் சூலமுந் தனுக்கள்
உண்டு மிழ்ந்திடு வாளியும் உடம்பிடித் தெரிகையும்
பிண்டி பாலமுங் கணிச்சியும் பாசமும் பிறவும்
அண்டர் தந்திடு படைகளுஞ் சொரிந்துநின் றுர்த்தார்.

இவ்வாறு வளைந்துகொண்ட அவர்கள் தண்டாயுதமும் சக்கரமும் குலிசாயுதமும் சூலப்படையும் வில்லின் நின்றும் சொரி தரும் அம்புகளும் வேவின் தொகைகளும் பிண்டி பாலங்களும் வச்சிராயுதமும் பாசமும் பிற ஆயுதங்களையும் தேவர்கள் கொடுத்திட்ட பெரும் படைகளையும் சொரிந்து நின்று ஆரவாரங் கொண்டனர் 83

பாரி டங்களின் படையெலாம் நெக்கதும் பாங்கர்
வீர மொய்ம்பனும் இளைஞரும் வருந்திமீண் டதுவுங்
காரி னம்புரை அவுணர்தஞ் செய்கையுங் காணு
மூரல் செய்தனன் எவ்வகைத் தேவர்க்கும் முதல்வன்.

பூதங்களின் படைகள் யாவும் போரிடமுடியாது மனம் நெக்கி உடைபட்டோடியதும்; தமது பக்கராக வீரவாகுதேவரும் அவரின் இளைஞர்களாகும் இலக்கத்தெட்டுப்பேரும் வருத்தமுடன் திரும்பிவந்ததையும் கருமேகம் போன்ற அசுரர் போரிடக் கொண்ட செயலையும் பார்த்து புன்சிரிப்புக் கொண்டருளினுர் எந்தெந்த வகையாகும் தேவர்கட்கு எல்லாம் முதல்வராகும் ஆறுமுகப்பெருமான். 84

நாட்டம் மூன்றுடைத் தாதைபோற் சிறிதிறை நகைத்து
நீட்ட மிக்கதோர் சிலையினை நெடுங்கரம் பற்றிக்
கோட்டி நாணெலி கொண்டிட அண்டருங் குலைந்தார்
ஈட்ட மிக்கபல் லுயிர்களுந் துளக்கமெய் தினவே.

மூன்று கண்களுடைய தந்தை சிவபிரானைப் போன்று சிறிது ஓர் இறைப்பொழுது எம்பிரான் நகை செய்து நீளம் மிகுந்துள்ள தனது வில்லை எடுத்து தமது நெடிய திருக்கரத்துப் பிடித்து வளைத்து அவ்வில்லில் நாணேசையைச் செய்தபொழுது அந்த ஓசை கேட்டு தேவர்களுமே அஞ்சி நடுங்கினுர்கள்; தொகுதியாக எங்குமுள்ள உயிர்களும் நடுக்கம் அடைந்தன. 85

வேறு

முக்கணன் உதவிய திருமுருகன் முரணுறு வரிசிலை முதிரொலிபோய்த்
தொக்கன செவிதொறும் நுழைதலுமே தொலைவறும் அவுணர்கள் தொகைமுழுதும்
நெக்கன பகிர்வன இரதமெலாம நிரைபட வருபரி புரள்வனவே
மைக்கரி தரைமிசை விழுவனவான் மதிதொடு நெடுவரை மறிவனபோல்.

மூன்று கண்ணுடைய எம்பெருமான் உலகம் வாழத் தந்தருளிய அழகே உருவான முருகப்பெருமான் எடுத்த முரண் கொண்ட வரியுடைய வில்லின் ஓசையானது சென்று தொகையாகக் கொண்ட அசுரர்களின் காதுகளில் புகுதலும் தொலைவிலாத அசுரர்களின் தொகை முழுதும் திடுக்கிட்டு பயத்தால் நெக்கி நின்றன. தேர்கள் யாவும் பிளக்கின்றன; நிரையாக வருகின்ற குதிரைகள் வீழ்ந்து புரள்கின்றன; மைபோலும் கருமைகொண்ட பெருயானைகள் முழுவதும் பூமி மீது புரண்டு வீழ்கின்றன. எதுபோலும் எனில் சந்திரனைத் தொடும்படி உயர்ந்த மலைகள் சரிந்து வீழ்தல்போன்று; 86

மாசறு மறைகளின் மறையதனை மலைமுனி யுணர்வகை யருள்புரியுந்
தேசிக முதலவன் வரிசிலையிற் செறிமுகில் உறைவகை சிதறுவபோல்
ஆசுகம் அளவில கடவினனால் அடல்கெழும் அவுணர்கள புடைவளையும்
காசினி அகலமும் விரிகடலுங் ககனமும் மிடைவன கணையெனவே.

மாசில்லா வேதங்களின் எவர்க்கும் தெளிவுகொள்ளமுடியாத உண்மைப் பொருளினை பொதிய மலையில் தவ இருக்கைகொண்ட அகத்திய முனிவர் உணரும் வகையாக முன்னர் குருவாக உணர்த்தியருளிய குருமூர்த்தியாகும் முருகப்பெருமான் தமது திருக்கரத்தில் நின்றும் வானில் செறியும் முகில்கள் துளிகளைச் சிதறிடும் தன்மை போன்று அம்புகள் அளவற்றனவற்றைச் செலுத்தினன். அவ்வாறு எம்பிரானால் விடப்பெற்ற அம்புகள் யாவும் எம்பிரானை அவுணர்கள் சூழ்ந்திருக்கும் பூமியின் பரப்பும் விரிந்த கடலும் வானமும் எங்கு அம்புகள் எனும் படியாகவே நெருங்கிக் கொள்வன. 87

கொடிகளை அடுவன அளவிலவே குடைகளை அடுவன அளவிலவே
படைகளை அடுவன அளவிலவே பரிகளை அடுவன அளவிலவே
கடகரி அடுவன அளவிலவே கனையொலி இரதமோ டவுணர்கள்தம்
முடிகளை அடுவன அளவிலவே முழுதுல குடையவன் விடுசரமே.

எல்லா உலகமும் தாமேயாகும் கடவுள் குமரன் விடுத்திட்ட இந்த அம்புகள் யாவும் அசுரர்களது கொடிகளை அறுப்பன அளவற்றன. குடைகளை அறுப்பன அளவற்றன. கையில் பிடித்த படைக்கலங்களை அறுப்பன அளவற்றன. குதிரைகளை அறுப்பன அளவற்றன. மத யானைகளை அறுப்பன அளவற்றன. கனைத்திடும் குதிரை பூட்டிய ஓலிதரும் தேருடன் அங்குள்ள அசுரர்களின் முடிகளையும் அறுப்பன அளவற்றன; 88

பரவிய தருவினம் என அவுணப் படைநிரை விழுவன தொடுகடலில்
திரையென விழுவன புரவியினந் திருநெடு வரைகளின் விழுவனதேர்
கருமைகொள் மணிமுகில் இனமெனவே கடகரி விழுவன கனவரைசூழ்
இரவியும் மதியமும் விழுவனபோல் எழுவன கவிகையும் விழுவனவே.

இவ்வாறு அந்த அம்புகள் பல அசுரரையும் வாகனங்களையும் அறுத்திடும் பொழுதில் பரந்திருக்கும் மரங்கள் முறிந்து வீழ்வதுபோன்று அசுரப்படைகளின் நிரைகள் அறுபட்டு வீழ்வன. தொடுத்த கடலில் உள்ள திரைகள் என குதிரைகள் துள்ளி எழுந்து வீழ்வன. மிகு அழகுடைய பெருமலைகள் வீழ்வன போன்று தேர்கள் வீழ்வன; கருமை கொண்ட அழகுடைய முகில்களின் இனமெனும்படி மத யானைகள் வீழ்வன. மேருமலையைச் சூழவரும் சூரியனும் சந்திரனும் வீழ்கின்றன எனும்படி குடைகளும் அறுபட்டு எழுந்து வீழ்வன. 89

செல்லுறு தாள்களும் அடுபடைகள் சிந்திய செங்கைக ளுந்திறலே
சொல்லிய வாய்களும் விம்மலுறுந் தோள்களும் நோக்குறு துணைவிழியுங்
கல்லென ஆர்த்திடு கந்தரமுங் கவசமும் வீரர்கள் துவசமுடன்
எல்லையி லாதமர் தனிமுதல்வன் எய்திடும் வாளிகள் கொய்திடுமே.

வேறு

அந்த அசுரர்கள் நடந்து செல்கின்ற கால்களையும் கொலை செய்யும் படைகளைச் செலுத்திய சிவந்த கைகளையும் வீரத்திறங்களைச் சொல்லிய வாய்களையும் போரின் பூரிப்பால் பருத்த தோள்களையும் பார்க்கின்ற துணையான இருகண்களையும் கலீரென சத்தமிடும் பெரிய கழுத்தையும் கவசங்களையும் வீரர்கள் கைப்பிடித்த கொடிகளையும் யாவற்றையும் அங்கிங்கெனுதபடி எங்கும் தானுக நின்றருளுகின்ற தனி முதல்வன் ஆறுமுகப் பெருமானின் அம்புகள் கொய்தெடுத்து அறுப்பன; 90

## வேறு

வட்டணை கொண்டிடு மால்வரையும் எட்டெனும் ஓங்கலும் யானைகளும்
பட்டுரு விக்கணை பாறினவால், ஒட்டலர் எங்ஙனம் உய்குவதே.

வட்டணையான வடிவமுடைய பெரிய மேருமலையும் அதனைச் சூழ எட்டென்று சொல்லிய மலைகளும் திக்கில் உள்ள எட்டு யானைகளும் எங்கும் பட்டுருவி எம்பெருமானுடைய அம்புகள் சென்றன எனின் பகைவராகும் அசுரர் இனி எவ்வாறு தப்பி உய்வார்கள் அதுமுடியாததொன்று. 91

பொன்னுல கெல்லைபு குந்துலவும் அன்னமு யர்த்திடும் அண்ணல்பதந்
துன்னுறும் அச்சுதர் தொல்லுலகின் மின்னென வேசெலும் வேள்கணையே.

எம்பெருமானுடைய அம்புகள் பொன்னுன தேவ உலகின் எல்லை எங்கும் புகுந்து உலாவுவன. அன்னக்கொடியுடைய கடவுளாகும் பிரமனின் பதந்தோறும் புகுந்திடுவன; நாராயணப்பெருமானின் வைகுந்த உலகிற்கு மின்னல் எனும்படி சென்றிடுவன; 92

மேதினி கீண்டு விரைந்துபுகும், பாதல மூடு பரந்துசெலும்
மூதகும் அண்ட முகட்டுருவும், மாதிரம் ஏகுறும் வள்ளல்சரம்.

எமது அருள் வள்ளல் முருகனுடைய அம்புகள் இப் பூமியைக் கிழித்துக் கொண்டு விரைவாக கீழும் சென்று பாதாள இடம்மெல்லாம் பரந்துபோகும்; முதுமையுடைய அண்டங்களின் உச்சியிலும் ஊடுருவிப் போகும் திக்குகளில் எல்லாமும் விரைவில் அவை சென்றிடும். 93

மூவிரு செய்ய முகத்தொருவன், ஏவிய செஞ்சரம் எங்குமுற
மேவலர் தங்களை வீட்டிடுமவே. றேவர்கள் கண்ணும் இறுத்திலவே.

இவ்வாறு ஆறு அழகிய செம்மையாகும் முகங்களுடன் எல்லார்க்கும் ஒரு கடவுளாக நின்றருளும் முருகப்பெருமான் செலுத்திய சிவந்த அம்புகள் எங்கும் சென்று பகைவர் தங்களை அழித்திடுமே யன்றி அவைகள் செல்லும் இடங்களில் உள்ள வேறு யாவர்களிடத்தும் ஒரு தீங்கும் புரியாயின. 94

ஆனனம் ஆறுள அண்ணல்சரம் தானவர் சென்னிகள் தள்ளுதலும்
வானிடை போயின மாணகதிர்கள், மேனிம றைப்புறும் வெய்யவர்போல்.

ஆறு அற்புதம் நிறைந்த திருமுகமுடைய கடவுளின் அம்புகள் அசுரருடைய தலைகளை விரைவில் அறுத்து பின்னுல் தள்ளுதலும் அத்தலைகள் வானில் எடுபட்டுச் செல்கின்றன எப்படியெனில் அவை மாண்புடைய சூரிய சந்திரருடைய மேனிகளை மறைக்கப் புகுந்த ராகு கேதுக்கள் என்னும் கொடியோரைப் போன்று; 95

வாளெழு வேல்பிற வாங்கினர்தம், தோள்களை வாளி துணித்தெறிய
நீளிடை சென்று நிரந்திடுதங், கேளிரை அட்டன கீழ்மையர்போல்.

வாள் எழுவாயுதம் வேல் இன்னும் பிறபடைகளைக் கைப்பிடித்த அசுரர்களின் தோள்களை எம்பெருமானுடைய அம்புகள் துணித்து வீச அப்படைகளுடன் அறுபட்ட கைகள் நீண்ட வான மீது சென்று மீண்டு வந்து நிரையாக நெருங்கி நின்ற தமது குலத்தவரான அசுரரையே அறுத்தெறிவன எது போலும் எனில் தம் இனத்தவரை அழித்திடும் கீழாகிய செயல்கொண்டுள்ள மக்களைப்போன்று; 96

மாசகல் வானக மாதிரவாய், காசினி வேலைகளத் தின்அகம்
பாசறை சுற்றிய பாடியெலாம், ஆசற அட்டனன் அற்புதனே.

மாசு அகன்ற வானவெளி திக்கில் உள்ள இடங்கள் பூமியின் பரப்பு கடல்கள் போர்க்களத்தின் இடமெங்கும் பாசறையைச் சூழ்ந்துள்ள பாடிகள் எங்கும் நெருங்கி நின்ற கொடிய அசுரர் அனைத்துளோரையும் அங்குள்ள அழுக்குகள் நீங்கிட அம் பினால் அழித்தான் அற்புதமாக நின்றருளும் ஆறுமுகக்கடவுள். 97

அட்டிடு கின்றுழி அம்புயன்மால், ஒட்டுறு வாசவன் உள்மகிழாக்
கெட்டனர் தானவர் கேடில்துயர், விட்டனம் என்று விளம்பினரே.

எம்பிரான் இவ்வாறு அழித்திடுகின்ற நேரத்தில் அதுகண்டு பிரமதேவரும் நாரா யணக் கடவுளும் அச்சத்தால் அவருடன் ஒட்டி நின்ற இந்திரன் முதலியோர் யாவ ரும் உள்ளம் மகிழ்ந்து அதோ அசுரர் அழிந்தனர் எக்காலமும்கெடாது நின்ற எம் துயரையும் நாம் விட்டோம் எனச் சொன்னார்கள். 98

அடைந்தனர் விம்மிதம் ஆங்கவுணர், மிடைந்தது நோக்கினர் வேற்படையோன்
தடிந்தது காண்கிலர் தாரணிமேற், கிடந்தது கண்டனர் கேசரரே.

இதை எல்லாம் கண்ணுற்ற பூதங்கள் பெரும் ஆச்சரியம் கொண்டனர் எனெ னில் அப்பூதங்கள் அசுரரின் படைகள் நெருங்கிச் சூழ்ந்ததை நோக்கிக் கண்டனவே யொழிய வேற்படை ஏந்திய பெருமான் அம்பினால் அவற்றைச் சங்கரித்ததை கண்ணால் காண்கிலாது பின்னர் அசுரர்கள் பூமியில் இறந்தது கிடந்ததையே கண்டார்கள். 99

அலமரு பாரிடர் அவ்வவர்தந், தலைவர்கள் ஏனையர் தானவர்தம்
மலிபடை சாய்த்து வயம்புனைவிற், புலவனை ஆர்ப்பொடு போற்றினரே.

அவ்வாறாகிய நேரத்து அசுரரைக்கண்டு சலித்து அலமந்த பூதங்களும் அவர் அவர்களுடைய சேனைத் தலைவர்களும் மற்றைய வீரர்களும் அசுரராக எங்கும் செறிந்து மலிந்த பெரும் படைகளை அழித்து வெற்றிமாலை சூடிய வில் வீரனை முருகப்பெருமானை பெரும் ஆரவாரிப்புடன் போற்றி செய்தார்கள். 100

வள்ளல்ச ரம்பட வான்முகடு, கொள்ளுறு தானை குழாங்தொலைய
வெள்ளிடை யாயின விண்ணவர்தம், உள்ளக மாற்றவு வப்புறவே.

அருள் வள்ளலாகிய முருகப்பெருமானின் அம்புகள் பட்டிட வானத்தின் உச்சி வரையும் நிறைந்து நின்ற அசுரர் கூட்டம் தொலைந்துபோய் எங்குபார்த்தாலும் பெரு வெளியாக முன்னர்போல் வந்திடலும் அதுகண்டு தேவர்களுடைய உள்ளங் கள் மிகவும் உவப்புற்றது. 101

அண்டக டாகம தப்புறமாய்க், கொண்டிடு தானவர் கொள்கையிது
கண்டிறை வன்கழல் காணநெறி, உண்டினி யென்றனர் உள்மகிழ்வார்.

இப்பூமியின் எல்லையில் முன்வந்த அசுரர்கள் நிறைந்திடுதலால் இங்கு வரமு டியாதபடி அண்டகடாகத்தின் (புறச்சுவர்) எல்லையின் அப்புறமாய் நின்ற அசுரர் கள் இதைக்கண்டு; இனிஎம் சூரபன்மன் பாதத்தை நாம் காணவழி வந்துள்ளது என்று கூறினார்கள் தங்கள் உள்ளம் மிகவும் மகிழ்ச்சிகொண்டவர். 102

காற்றென அண்ட கடாகநெறி, தோற்றிய வாயில் தொடர்ந்துபுகா
மேற்றிகழ் தேர்கரி வெம்பரியின், ஏற்றமொ டொல்லென ஏகினரால்.

காற்றின் இயல்புபோன்று அண்டகடாகத்தின் வழியில் தோன்றிய வாயில்கள் ஊடாகத் தொடர்ந்து புகுந்து மேலாகத் திகழ்ந்திடும் தேர்கள் யானைகள் கொடிய குதிரைகள் மிகுந்த பெரும் படையுடன் ஒல்லென்று விரைவுடன் இப் பூமிக்கு வந்தார் கள் அந்த அசுரர்கள். 103

அந்நெறி ஏகியிவ் வண்டமெலாந், துன்னினர் வான்புவி சூழ்ந்துவெளி
என்னது மில்லென ஈண்டினரால், முன்னுற வந்து முடிந்தவர்போல்.

அந்த வழியால் சென்று இந்த அண்டங்கள் எங்கும் நெருங்கினராய் வானமும் பூமியும் வெளி என்னதும் கொஞ்சமும் இலாதபடி சூழ்ந்து கொண்டனர் இந்த அசுரர்கள். முன்னர் வந்து இப்படிச் சூழ்ந்து இறந்துபோன அதே அசுரர்களைப் பான்று. 104

சூரன் எனப்படு தொல்லிறைவன், பேரமர் ஆற்றிடு பெற்றியினைல்
தேரிடை வந்துறு செய்கைதெரீஇ, ஆர்வமொ டேநெடி தார்த்தனரே.

இவ்வாறு இத்த அண்டம் வந்த அசுரர்கள் சூரபன்மன் எனப்படும் தங்கள் முதுமையான அரசன் பெரும்போர் செய்கின்ற அத்தன்மையால் தேர்மீது இங்குவந்துற்ற அச்செய்கையை அறிந்து மிகு ஆர்வத்துடன் மகிழ்வால் ஆரவாரித்தனர். 105

ஆர்த்தனர் தம்முன் அடைந்துளர்தாம், பேர்த்திடுகின்ற பிணக்கிரியாய்
ஈர்த்திடு சோரி இடைப்படுதல், பார்த்தனர் சிந்தை பரிந்தனரே.

அவ்வாறு ஆர்த்திட்ட அசுரர் தமக்கு முன்பாக அங்கு அடைந்துள்ள அசுரர் யாவரும் மிகப்பெரிய பிணமலையாகி அங்கு அப்பிண மலைகளை இழுத்தோடிச் செல்கின்ற இரத்தாற்றினுடன் கிடப்பதைப் பார்த்து பெரும் கவலை கொண்டு இரக்கப்பட்டார்கள். 106

பரிந்தனர் நம்படை பட்டிடவே, புரிந்திடு வானெடு போர்புரியா
விரைந்து வயங்கொடு மீடுமெனுத், தெரிந்தனர் சிந்தனை தேற்றினரே.

இவ்வாறு பரிந்த அசுரர் யாவரும் நமது படைகள் அழிந்திடும்படியாக செய்திட்ட குமரனுடன் யாம் போர் புரிந்து விரைவில் வெற்றிகொண்டு மீள்வோம் என்று சிந்தித்து பரிபவப்பட்டமனத்தைத் தேற்றினுர்கள். 107

தேற்றிடு கின்றுழி தேவரெலாம், போற்றிட வீரர் புடைக்கணுற
ஆற்றல்கொள் பூதர்கள் ஆர்த்திடவே, தோன்றினன் ஈறெடு தோற்றமிலான்.

இவ்வாறு அந்த அசுரர்யாவரும் மனம் தெளிவுகொள்கின்ற நேரத்துத் தேவர்கள் யாவரும் போற்றெடுப்ப வீரர்கள் பக்கராக வந்திட, ஆற்றல் உடைய பூதங்கள் ஆர்ப்பரித்திட அந்த அசுரர் முன்பு தோன்றினர் முடிவொடு முதலும் இலாத ஆறுமுகப்பெருமான் 108

சேயுரு வாகிய சீர்முதல்வன், மேயது கண்டு மிகச்சிறியன்
பாய்பரி யானை படைத்துமிலான், ஏயிவ னேனம தெண்ணலனே.

அவ்வண்ணம் குழந்தை வடிவான சீருடைய எமது முதல்வன் முருகன் அங்கு தம் முன்போந்ததைக்கண்டு அவரை நோக்கி இவன் மிகவும் சிறியவன். பாய்கின்ற குதிரைப்படை யானைப்படை இவைகளைக் கொண்டதும் அல்லன். இவனு நமது பகைவன் என மிக எளிமையாக நினைத்து சொன்னுர்கள். 109

ஆண்டகை மைந்தனிவ் வண்டமெலாம், ஈண்டியதானை இமைப்பொழுதின்
மாண்டிட அட்டனன் மற்றிதுதான், ஈண்டிடும் அற்புத நீர்மையதே.

ஆண்டகை உடைய இக் குமரன் சிறுவனுயினும் இந்த அண்டங்கள் எங்கும் நெருங்கி நின்ற எமது சேனையை ஓர் இமைப்பொழுதில் மாண்டுபோகும்படி அழித்துள்ளான். இச்செயல் தான் இவ்விடத்து பெரியதொரு அற்புதமாயது என்றுர் அந்த அசுரர்கள். 110

அன்னது நின்றிட அங்கவன்மேல் மன்னவர் மன்னவன் வந்துபொரு
முன்னமர் ஆற்றி முடிக்குதும்யாம், என்ன இயம்பினர் யாவருமே.

அது அப்படி இருப்ப அக்குமரன் மேலாக எமது மன்னர் மன்னவன் சூரபன்மன் வந்து போரிடுவதற்கு முன்பு நாம் எல்லாம் திரண்டு போரிட்டு அவனை முடிவு செய்வோம் என்று எல்லா அசுரருமாகப்பேசிக்கொண்டனர். 111

தற்பமொ டின்னன சாற்றியவண், முற்படு தானவர் முக்கணுடைத்
தற்பரன் நல்கிய சண்முகனை, வற்புடன் ஆர்த்து வளைந்தனரால்.

முன்னாக வந்துள்ள அசுரர்யாவரும் மிகவும் அகந்தையுடன் இதனைச்சொல்லி மூன்று கண்ணுடைய சிவபிரான் தந்தருளிய எமது சண்முகப்பெருமானை மிகு வலியுடன் ஆரவாரித்துச் சூழ்ந்து வளைத்துக் கொண்டார்கள். 112

வளைந்திடு காலையில் வானவர்கள், உளைந்தனர் பூதர்கள் உட்கிமனந்
தளர்ந்தனர் வீரர் சலித்தனரால், விளைந்தது பேரமர் மீட்டுமெனா.

எம்பெருமானை மறுபடியும் பின்வந்த அசுரர் வளைந்துகொண்ட காலையில் தேவர்கள் அதுகண்டு வேதனை அடைந்தார்கள். பூதங்கள் உட்கி மனம் தளர்ந்தார்கள்; வீரர்கள் யாவரும் சலிப்புற்றனர். மீண்டும் பெரும் போர்விளைந்துள்ளது என்ற கவலையால். 113

## வேறு

ஐயன்ம ருத்தினை அத்துணை நோக்கிக்
கையணி நெற்றி கடைக்குழை யாகி
வெய்யவர் தானைகள் மேவுழி யெல்லாம்
வையம்வி டுக்குதி வல்லையில் என்றான்.

எம் ஐயர் பெருமான் அத்துணையில் சாரதியான வாயுதேவனை நோக்கி இந்தக் கொடிய அசுரர்களது சேனைகள் கைவகுத்து வந்துள்ள முன்வரிசை பின்வரிசை அதுவன்றி இவர்கள் மேவுகின்ற இடங்கள் எல்லாம் ஆங்காங்கு விரைவுடன் நமது தேரை விடுப்பாயாக என்றார். 114

அட்டுறு நீப அலங்கல் புனைந்தோன்
கட்டுரை கொண்டு கரந்தொழு காலோன்
ஒட்டுறு நண்ணலர் உற்றுழி காணா
விட்டனன் அம்ம விறற்பரி மான்தேர்.

சொரிகின்ற தேன் கொண்ட கடப்பமலர் மாலை அணிந்த கடவுள் குமரன் கூறிய திருவாக்கை வாயுதேவன் ஏற்றுக்கொண்டு கைகளை கூப்பிவணங்கி; வெளியிடமின்றி ஒட்டிக்கொண்டு எங்கும் பரந்த அசுரர்கள் இருந்த இருந்த இடமெல்லாம் கண்டு கண்டு வலிமைகொண்ட குதிரைபூட்டிய மனோவேகம் என்னும் எம்பிரானது தேரை வேகமாக விடுத்தான். 115

மண்ணிடை சென்றிடு மாதிர நீந்தும்
விண்ணிடை சூழ்தரும் வேலையின் மீதாங்
கண்ணுறும் எப்படி கைதொழும் வானோர்
எண்ணினும் நாடரி தெந்தைபி ரான்தேர்.

அவ்வாறு வாயுதேவன் செலுத்தியிடும் தேர் பூமி மீது சென்றிடும். திக்கெல்லாம் நீந்தி வரும். வானில் சுழன்று சென்று வரும். சமுத்திரத்தின் மீதாகவும் வந்திடும். எம்பிரான் தேர் எங்குற்றது என காதலுடன் கண்ணுற்று கைதொழுகின்ற தேவர்களது எண்ணத்திலும் நாடற்கரியதாகி எந்தை பெருமானுடைய தேர் செல்கின்றது. 116

சேயது காலை திறத்திற மாகி
மூயின தானவர் மொய்ம்புறு தானை
சாய்வுற ஓர்தொடை தன்னில் அநந்தம்
ஆயிர கோடிக ளாக்கணை தொட்டான்.

குழந்தை வடிவாகும் ஈசன் அதுகாலை வெவ்வேறு வடிவாகிச் சூழ்ந்துள்ள அசுரர்கள்நின்றிடும் இடங்கள் தோறும் தமது வில்லில் நின்றும் ஒருதொடுப்பில் அநந்தம் ஆயிரகோடி எனும்படியாக அம்புகளை தொடுத்து அந்த அசுரர் சாய்வுற்று ழிந்திடும்படி விடுத்தார். 117

பரிந்தன சூழ்ந்தவர் பாணிகள் மொய்ம்பு
சிரந்துணி வுற்றன செம்புன லாழி
சொரிந்த பிணக்கிரி துற்றிய வற்றல்
நெரிந்தது வையம் நெளிந்தது நாகம்.

எம்பிரானை வென்றிடும்படி பரிவுடன் வந்து சூழ்ந்த அசுரர்களின் கைகள் தோள்கள் தலைகள் யாவும் துணிபட்டன. அறுபட்ட உடலில் நின்றும் செந்நீரான இரத்தம் கடல்போன்று சொரிந்தது, பிணங்களின் மலைகள் பெருகுற்றன; அதனால் இப் பூமி சுமைதாங்காது நெரிபட்டது ஆதிசேடனும் பாரம் தாங்காது நெளிந்தான். 118

பொய்கொலை ஆற்றிய பூரியருக்கார்
செய்குவர் நன்மை செறிந்துள ரேனுங்
கைகெழு ஞாளிக ளேகறித் துண்ட
மைகெழு தானவர் மாண்டிடும் யாக்கை.

இவ்வாறு அசுரர் அழிவுறும் பொழுது பொய்யும் கொலையும் செய்திடுகின்ற இந்த அசுரர்களுக்கு எந்த ஒரு தீங்கில்லாத நன்மைகொண்டவர்கள் ஆரெனினும் ஓர் நன்மைசெய்வார்களோ? இதைச் செய்யார என்பதைக் காட்ட இவர்கள் கையில் கொண்டு வந்த நாய்களே இறந்த இவர்களது உடலைக் கடித்து உண்டது.

நாய் நன்றியுள்ள மிருகம் அவ்வாறாக தன்னை வளர்த்த எசமானிடம் அது விசுவாசமாக இருந்திடவேண்டும். அதற்கு பதிலாக அந்த நன்றியுள்ள நாய் அதனையும மறந்து தனது எசமானனின் உடலைக் கடித்து உண்டமை இவ்வுலகில் பொய் கொலை முதலியபாதகங்களைச் செய்வார்க்கு யாரெனிலும் உதவி செய்யமாட்டார் என்பதைக் காட்டுகிறது. 119

ஒன்னலர் மீதின் உயிர்க்குயி ராஞேன்
மின்னென வீசிய வெஞ்சர மாரி
பின்னுற முந்து பெயர்ந்திடு மென்றால்
அன்னவன் தேர்விரை வார்கணிக் கின்றார்.

பகைவரான அசுரர்மீது எல்லா உயிர்கட்கும் உயிராய் நிற்கின்ற ஆறுமுகப் பெருமான் மின்னல்போல் சென்றிடும்படி வீசிய மழைபோன்ற கொடிய அம்புகள் பிற்பட எம்பிரானது தேர்முன்னுகச் சென்றிடும் என்றால் எம்பிரானின் தேரின் விசை இத்துணையென்று யாரால் கணக்கிட்டு சொல்லமுடியும்; 120

பரத்தினு மேதகு பண்ணவன் வார்வில்
கரத்தினை யும்விரை வாற்கரந் தூண்டுஞ்
சரத்தினை யுந்தடந் தேரினை யுங்கால்
உரத்தினை யும்புகழ் வார்புடை யுள்ளார்.

எப்பொருட்கும் மேலாய நிலைக்கும் மேலாய கடவுள் முருகன் அம்புகள் சொரிந்திடும் வார்கொண்ட வில்லுடைய திருக்கரத்தையும் விரைவாக திருக்கரம் செலுத்தி விடுகின்ற அம்பின் வேகத்தையும் பெருத்த அவரது தேரினைச் செலுத்திடும் வாயு தேவரின் தேர் செலுத்தும் வலிமையையும் புகழ்ந்து கூறுவார்கள் பக்கரில் நின்ற வீரராயுள்ளோர் யாவரும். 121

வெவ்விசை யப்படை வீட்டிடும் வாளிச்
செவ்விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கைவிசை யோநெடுங் கால்விசை தானே
வெவ்விசை யோவிசை என்றனர் வானோர்.

கொடிய பெருவெற்றிகளைக்கொண்ட அசுரர்களை அழித்திடும் அந்த அம்புகளின் விசையையும் தேரினது விசையையும் நாடிக்கண்டு கொள்ளும் தேவர்கள் செம்மைவாய்ந்த திருக்கோலமுடைய முருகப்பெருமானின் திருக்கரத்து விசையோ அல்லது நெடிய வடிவமுடைய வாயு தேவனது விசையோ எந்த ஒரு விசைதான் மிகுந்த விசையானது எனப் பேசினார்கள். 122

துய்யவன் வாளி துணித்திட வீரர்
கையொடு வானிடை செல்வ கணிப்பில்
ஐயிரு வட்டம ராப்புடை பற்ற
வெய்யவர் பற்பலர் விண்ணெழல் போலும்.

தூய்மையுடையோனுகும் குமரனது அம்புகள் துணித்து வீழ்த்திடலும், வீரர்களாகும் அசுரர்கள் கை அறுபட்டு வானில் சென்றிடுதல் எப்படி இருப்பதென்றுல் பத்துத் தலைகளுடைய பாம்புகள் பக்கரில் பற்றிக்கொள்ள கொடிய வெப்பமுடைய சூரியர்கள் விண்ணில் எழுந்து செல்வதை ஒத்தது. 123

காலொரு பாங்கர் கழுத்தொரு பாங்கர்
வாலொரு பாங்கர் மருப்பொ டெருத்தம்
மேலொரு பாங்கர் வியன்கையொர் பாங்காத்
தோலினம் இவ்வகை யேதுணி கின்ற.

கால் ஒருபக்கத்திலும் கழுத்து ஒருபக்கத்திலும் வால் ஒருபக்கத்திலும் கொம்புடன் ஏரி வேறு ஒரு பக்கத்திலும் பெரிய துதிக்கை ஒருபக்கத்திலும் போய் வீழுமாறு இவ்வகை எம்பிரானது அம்பினுல் யானைகள் துணிகின்றன- 124

பல்லணம் அற்றன பன்முழு தற்ற
செல்லுறு தாளொடு சென்னியும் அற்ற
ஒல்லொலி அற்ற உரந்துணி வுற்ற
வல்லமர் நீந்துறு மாத்தொகை முற்றும்.

கடிவாளங்கள் அறுந்தன. பற்கள் முழுதும் அறுந்தன. ஓடிச்செல்கின்ற கால்களுடன் தலைகள் அறுந்தன; கனைப்பொலிகள் கெட்டன. வலிமை கெட்டது இப்படியே எந்த ஒரு போரிலும் வெற்றி காணும் அசுரரது குதிரைப்படைகள் எம்பெருமானது அம்பால் அறுபட்டன. 125

மாழைகொள் வையம் மடிந்திட நேமி
ஆழிகொள் சோரியின் ஆழ்வன மேருச்
சூழுறும் வெய்யவர் தொல்புவி கீண்டே
கீழுறும் எல்லை கெழீஇயின போலும்.

பொன் கொண்ட தேர்கள் அழிந்திட அதன் சில்லுகள் கடல்போலும் இரத்த வெள்ளத்தின் ஆழ்ந்திடுகின்றன எதுபோலும் எனில் மேருமலையைச் சூழ்ந்துவரும் சூரியர்கள் இப்பூமியினைக் கிழித்துச் சென்று கீழ் உள்ள பாதள எல்லையில் போவது போன்றிருந்தது. 126

ஏறிய தேர்களும் யானைகள் யாவுஞ்
சூறைகொள் வாசிக ளுந்துணி வுற்றே
வீறகல் வீரர்மி சைப்பட வீழ்ந்த
மாறவை ஆற்றிடும் வல்வினை யேபோல்.

அசுரர்கள் தாங்கள் ஏறிவந்த தேர்களும் யானைகள் யாவும் சூறுவளிக் காற்றைப் போன்ற குதிரைகளும் துணிபட்டு கீழே வீழும்பொழுது தமது வலியெலாம் அற்ற அசுரர் மேலாக அவை பட்டு வீழ்ந்திட்டன. இது எது போலும் எனில் ஒருவன் தான் செய்தவினை மாறி தனக்கே திரும்பவும் வருதல்போன்றது.

யானையிலும் குதிரையிலும் தேரிலும் வந்த அசுரர் அவைகள் அறுபட்டு அவை மேலுக்கும் தாம் கீழுக்குமாகக் கிடந்தனர். இது ஒருவர் செய்திடும் கொடுஞ்செயல் தமக்கே எய்தியது போன்றது. 127

ஞாலமும் வானமும் நண்ணலர் ஆவி
மாலொடு வாரி மடங்கல் உலைந்தான்
சாலுமி வற்கிது தாள்வலி யாற்கொல்
கால னெனப்புகல் கட்டுரை பெற்றுன்.

இப் பூமியில் நின்றவரதும் வானில் நின்றவரதுமான அசுரர்கள் இறப்ப அவர்களுடைய உயிர்களை மிகு ஆர்வத்துடன் ஆங்காங்கு ஓடி ஓடிப் பிடித்துப் பிடித்து இயமன் அங்கும் இங்கும் உலைந்து திரிந்தான். இந்தவேலை இவன் ஒருவனுக்குத் தான் பொருந்துவதுபோலும்; ஏனெனில் இவனது கால்வலியாற்போலும் இப்படி ஓடுகிறுன்; ஏனையோரால் இது செய்யமுடியாததொன்று. அவ்வளவு கால்வலிமை உடையவனுனபடியால் போலும் இவனுக்கு காலன் என்பதொரு காரணப் பெயரும் பலராலும் சொல்லப்பெற்றுன். 128

எறிபடை யாவையும் ஏமம தாகச்
செறிபடை யாவையுஞ் சேயவன் ஏவால்
முறிபடு கின்ற முனிந்துவ ணப்புட்
கறிபட மெய்துணி கட்செவி யேபோல்.

அசுரர்கள் எறிகின்ற படைக்கலங்கள் யாவும் இதுவன்றித் துணையாகக்கொண்டு வந்து வைத்திருந்த சேமப் படைகளுமே எம்பிரானது அம்புகளால் முறிபட்டு துணி படுகின்றன. எப்படியெனில் கருடப் பறவையானது பெரு முனிவுடன் கறித்து துண்டுபட நறுக்கிடும் பாம்பினைப் போன்று. 129

முன்னுறு வார்கள் முரட்படை தூவிப்
பின்னுறு வார்பெய ராதுபு டைக்கண்
துன்னுறு வார்கள் எலாந்துணி வாக
மின்னென எங்கணும் வேள்கணை தூர்த்தான்.

முன்னே நின்ற அசுரர்கள் முரணுன படையினைச் செலுத்திட பின்னின்றவராகும் அசுரர்கள் முன்வராதபடி அவர்களின் பக்கரில் நின்ருர்கள் எல்லாம் துணிபட்டுப் போம்படியாக மின்னல்போல எங்கும் சென்று தைத்திட எம்பிரான் அம்புகளைச் செலுத்தினுர். 130

சூலம தேகொல் கணிச்சிகொல் தொல்லை
மாலெறி நேமிகொல் வச்சிர மேகொல்
காலொடு சென்ற கனற்குழு வேகொல்
வேலது கொல்லென வேள்கணை விட்டான்.

எம்பிரானுடைய இந்த அம்புகளை சூலமென்று சொல்லுதுமோ மழுவாயுதமென்போமோ அல்லது நாராயணக் கடவுளின் சக்கரப் படையோ அல்லது வச்சிரப் படையோ அல்லது காற்றுடன் சென்ற நெருப்பின் சுவாலையோ அல்லது வேலோ என்றிடும்படி எம்பிரான் அம்பினை விடுத்தார். 13

## வேறு

மழைத்திடு மெய்யுடை மாற்றலர்கள், இழைத்திடு மாய இயற்கைகளும்
விழுத்தக வீசும் விறற்படையும், பிழைத்தன தாங்கள் பிழைத்திலரால்.

மழைமேகம் போன்ற கரிய மேனியுடைய பகையசுரர்கள் அங்கு இழைத்து நின்ற மாயவித்தைகளும், அவர்கள் மேன்மையுடன் வீசிடுகின்ற வலிமிக்க படைகளும் ஒருவாறு பிழைத்துப் போயின எனினும், அந்த அசுரர் ஒருவருமே பிழையாது யாவரும் இறந்தார்கள். 132

முக்கணன் மாமகன் மொய்கணைகள், தொக்கவர் யாக்கை துணிந்திடலும்
மெய்க்கிடு பல்கலன் மின்விழல்போல், திக்குல விப்படி சிந்தினவே.

மூன்று கண்ணுடைய சிவபிரானின் பெரும் திருக்குமரன் விடுத்த வலிமிக்க அம்புகளால் தொகுதியாக வந்த அசுரர்களது உடலங்கள் துணிபட்டுப் போதலும் அந்த அசுரர் தமது மேனிக்கு அணிந்த பல ஆபரணங்களும் மின்னல் வீழ்கின்றது போன்று பல திக்கிலும் சிதறுண்டு வீழ்வன. 133

அண்ணல் சரங்கள் அறுத்திடலும், எண்ணலர் யாக்கைகள் இற்றவைதாம்
மண்ணை யளந்தயில் மாலெனவே, விண்ணை யளந்து விழுங்கினவே.

எமது பெருமான் முருகன் விடுத்துள்ள அம்புகள் அறுத்துத் தள்ளுதலும், பகையசுரருடைய உடலங்கள் அறுந்து பிணக்குவியலாக மலைபோன்று குவிந்து அவைகள்தாம் பூமியை அளந்த நாராணயக் கடவுளைப்போன்று வளர்ந்து வானை அளந்து விழுங்குகின்றன. 134

சூழுறு தானை துணிந்தஉடல், ஏழெனும் நேமியும் எண்டகுபேர்
ஆழியும் விண்ணும் அடைத்திமையோர், வாழுல கங்களை வெளவியவே.

எம்பிரானைச் சூழவந்த சேனைகளின் துணிபட்ட உடல் ஏழென்று சொல்லிய கடல்களும் மாட்சிமையுடைய பெரிய புற வாழிச் சமுத்திரமும் வானும் வெளி இலாதபடி அடைத்து தேவர்கள் வாழ்ந்திடும் உலகங்களையும் மூடிக்கொண்டது; பகை அசுரரின் தொகை இதனினுல் எடுத்துக் கூறப்பட்டது. 135

காடி யிழந்து கவந்தமாய், ஆடின வெள்ளமும் ஆயிரமா
கோடி யதுண்டு குகன்கணையால், வீடின எல்லை விதிக்குநர்யார்.

தலையறுபட்டு உடற்குறையாய் ஆடிக்கொண்டு நின்றிடும் அசுரவெள்ளமும் ஆயிரமானகோடி உண்டு என்று சொல்லப்பெற்றால் பின்னர் எம்பெருமானது அம்புகளால் இறந்துபோன அசுரர்களுக்கு எத்தனை என்று ஓர் எல்லைப் பிரமாணத்தை யார் விதித்துச் சொல்ல முடியும். 136

வீழுறு மாற்றலர் மெய்க்குருதி, ஆழிக ளாகிய அகன்புவியில்
பூழைக ளோடு புகுந்துபிலம், ஏழுள எல்லையும் ஈண்டியதே.

அம்பினல் அறுபட்டு வீழ்கின்ற பகையசுரர்களது மேனியில் நின்றும் வடிந்திடும் இரத்தம் கடல்போன்று பெருகி பல சமுத்திரங்களாகி பூமியில் உள்ள துவாரங்களுடன் புகுந்து கீழ்சென்று தங்கி உறைந்து பாதாளம் ஏழின் எல்லையையும் அடைந்து பரந்துகொண்டது: 137

வேறு

பாதல எல்லை பரந்திடு சோரி
பூதல மீண்டு புகுந்து பராவி
ஓத நெடுங்கடல் ஓங்கிய வாபோல்
மாதிரம் எங்கும் மறைத்தன அன்றே.

பாதாள எல்லையில் சென்று பரந்த இரத்தம் பூமியிடத்து மீண்டு திரும்பி வந்து பரவி சமுத்திரமான பெருங்கடலானது பெருகி ஓங்கி எழுந்ததுபோல திக்குகள் எல்லாம் சென்று மறைத்தன. இது நடந்துள்ளதே.

அண்டமெல்லாம் நிறைந்துற்ற அசுரர்கள் அறுபட்டதால் எழுந்த இரத்தம் பூமியின்கீழ் பாதாளம் ஏழும் சென்று நிரம்பி பின்னர் மேல்நோக்கி வந்து திக்கெலாம் எழுகின்ற பெரும் சமுத்திரம்போல் பரந்துகொண்டது. 138

மீனுடு வாக விளங்கிய திங்கள்
பானு மலர்ந்திடு பங்கய மாகச்
சோனைகொள் மாமுகில் தோணிய தாக
வானிமிர் செம்புனல் மாகடல் ஒக்கும்.

இவ்வாறு பரந்துகொண்ட இரத்தக் கடல்மீது வானிலுள்ள வெள்ளிகள் மீன்களாக விளங்கிட சந்திரதேவன் சூரியனுல் மலரப்பெற்ற தாமரை மலர்போன்று அங்கு விளங்கிட வானில் செல்லும் சோனை மழைமுகில்கள் தோணிபோல் சென்றிட இப்படி அமைய வானளவும் நிமிர்ந்த இரத்தநீர் பெரிய கடலை ஒத்திருந்தது.

இரத்தத்தின் பெருக்கை இவ்வாறு உவமித்தார். இது ஒரு மனிதர்கள் மனிதர்களை கொல்கின்ற போர்க்களம் அல்ல. உலகை ஆட்டி வைக்கின்ற அசுரப் படைகளை ஈசன் சங்கரிக்கின்றார். ஆதலால் இதனை நாம் குறுமையான உயிர் வாழ்க்கையுடன் கொண்ட மிக முதிய வளங்களாகும் இந்த ஒரு உலகின் அளவைக்கொண்டு நிர்ணயித்தல் ஆகாது. 139

மாசறு கூற்றனும் மற்றுளர் தாமுங்
கேசர ராகிய கிங்கரர் யாரும்
பாசம லைந்திடு பல்பிணி பற்றா
வீசினர் ஆருயிர் மீன்கள் கவர்ந்தார்.

மாசற்ற இயமனும், அவனைச் சேர்ந்த துணைவரும், அவனது படைஞராகும் கிங்கரர் எல்லாரும் தமது கையில் பாசங்கள் மாட்டிய பல வலைகளைப் பிடித்து வீசினராய் அரிய அசுரரின் உயிராகிய மீன்களைப் பிடித்தார்கள். 140

பாலுறு கின்ற பணிக்கிறை நாப்பண்
மாலரு ளில்துயில் மாட்சிமை யென்ன
நீலறு திங்கள் நிணங்கெழு செந்நீர்
வேலையின் மீது விளங்கிய தம்மா.

பாலினுல் உற்ற கடல்மீது விளங்கிடும் பாம்புகட்கு இறையாகும் அநந்தன்மீது நாராணயப் பெருமான் அருளுடன் துயில்புரிகின்ற தன்மைபோன்று நீலநிறமாகிய முயல் கறையுடன்கூடிய சந்திரன் பிணங்களினின்றும் பெருகிய இரத்தக் கடலின் மேல் விளங்கி இருப்பது. 141

மட்டறு செம்புனல் வாரிதி நீந்தி
ஒட்டலர் யாக்கையின் ஓங்கல் அறுத்துத்
தட்டுறு செங்கதிர் சண்முக மேலோன்
விட்டிடு நேமியின் விண்மிசை செல்லும்.

மட்டற்று பெருகிய சிவந்த இரத்தக் கடலில் நீந்திச்சென்று பகை அசுரரின் உடலாய பிணங்களின் மலைகளை அறுத்துத் தேர்மீது சென்றிடுகின்ற சூரியதேவன்; எல்லார்க்கும் மேலவராகிய சண்முகப் பெருமான் விட்டிடுகின்ற சக்கரப்படை போன்று வான்மீது சென்றிடுவான். 142

சிறைப்புற வுக்கருள் செய்திட மெய்யூன்
அறுப்பவன் என்ன அடைந்தனர் விண்ணின்
நெறிப்படு வானவர் நேரலர் யாக்கை
உறப்படு சோரிமெய் உற்றிடு நீரால்,

அழகிய சிறகுகளினைக்கொண்டு வேடனுடைய அம்பினில் கட்டப்பெற்ற புறு ஒன்று அவனது கையில் இருப்பதைக் கண்டு அதன்மீது இரக்கம்கொண்டு அப் புறுவை விடுவிக்கவேண்டி அப்புறுவின் இறைச்சிக்குப்பதிலாக தனது மேனியில் நின்றும் தசையை அறுத்துக் கொடுக்க சிபிச்சக்கரவரத்தி அச்செயலைப் புரிந்துள்ளபோது உடலால் இரத்தம் வடிந்திடும்படி நின்ற தன்மைபோன்று இறந்த அசுரரின் உடலினுள்ள இரத்தம் தெறித்தலால் தமது மேனியில் படவே சிபிச் சக்கரவர்த்திபோல் வானில் நின்ற தேவர்கள் காணப்பட்டனர். 143

ஆனதொ ரெல்லையில் அண்ட நிறைந்த
சேனைகள் வீழ்ந்தன செம்மல் சரத்தால்
ஊனுயிர் பூதமொ ழிந்தன முக்கண்
வானவன் மூரலின் மாய்ந்திடு மாபோல்.

அவ்வாறான நேரத்தில் அண்டங்கள் எங்கும் நிறைந்த சேனைகள் யாவும் எம் தலைவரான முருகப்பெருமானது அம்புகளால் அறுபட்டு வீழ்ந்தன; எதுபோலுமெனில் ஊன் பொருந்திய உடலுடன் கூடிய உயிர்கள் ஏனைய பூதங்களாகும் எல்லாப்பொருளும் முக்கண்ணுடைய உருத்திரமூர்த்தியின் புன்சிரிப்பால் அழிந்திடும் தன்மைபோன்று. 144

வேறு

அண்டம் ஈங்கிது முற்றொருங் கீண்டிய அவுணர்
தண்ட மாய்தலும் ஏனைய அண்டங்கள் தம்மில்
கொண்ட தானைகள் பின்னரும் வந்திடக் குமரன்
கண்டு மற்றவை தொலைந்தனன் செலுத்திடு கணையால்.

இந்த அண்டம் ஒன்றிலே முழுவதும் ஒருங்காகத் திரண்டுநின்ற அசுரர்களின் படைகள் மாய்தலும் அதுகண்டு, மற்றைய அண்டங்களில் வர முடியாது நின்ற அந்த அசுரர் இங்கு பின்னரும் வந்திடக்கண்டு அந்த அசுரர் யாரையும் குமர மூர்த்தி செலுத்திடும் அம்பினால் தொலைத்தார். 145

அறுத்து வெம்முனைத் தானையை யாண்டுசெல் லனிகம்
மறித்தும் வந்துவந் தடைதரும் இவணென மனத்துட்
குறித்து வெங்கணை மாரியால் அண்டகோ ளகையின்
நெறித்த ரும்பெரு வாயிலை யடைந்தனன் நிமலன்.

கொடிய போர்முனைகொண்டு வந்த அசுரச் சேனையை முருகப் பெருமான் அம்பினால் அறுத்து அவ்விடம் அறுக்க அறுக்க மீளவும் அப்பாலுள்ள அண்டம் தொறும் நின்றுவரும் அசுரர் வந்துவந்து கூடிக்கொள்வார் என நின்மலனாகும் குமரக் கடவுள் திருவுளத்து குறித்து கொடிய அம்பாகும் மழையைச் சொரிந்து அந்த அம்புகளால் அந்த அந்த அண்டங்களினின்றும் சேனைகள் புறப்பட்டு இந்த அண்டத்திற்கு வரக்கூடிய வாயில்கள் முற்றையும் அடைத்தார். 146

ஆண்டு சென்னெறி மாற்றியே அண்ணல்வெங் கணையால்
மாண்ட தானைகள் சோரியுங் களேவர மலிவும்
நீண்ட பாதலங் கடற்புவி கொண்டுவான் நிமிர்ந்தே
ஈண்டு கின்றது கண்டனன் வரைபக எறிந்தோன்.

அவ்விடம் அசுரர் செல்கின்ற வழிகளை எம்பிரான் கொடிய அம்புகளால் அடைத்து பின்னர் அம்பால் அறுபட்டு மாண்ட சேனைகளின் இரத்தமும் பிணக் குவியலின் பெரும் தொகையும் நீண்டதான பாதாள உலகெங்கும் கடல்கள் எங் கும் பூமி எங்கும் நிறைந்துகொண்டு வானில் எங்கும் நிமிர்ந்து இரத்தமும் பிண முமாய் நிற்பதைப் பார்த்தருளினர், கிரவுஞ்சமலையை பிளவுபட வேலினால் எறிந்த குமரக் கடவுள். 147

நெற்றி நாட்டத்தின் உலகெலாம் அட்டிடு நிமலன்
பெற்ற மாமகன் பன்னிரு விழிகளும் பிறங்கு
கற்றை வெஞ்சுடர் வடவைபோல் ஆக்கியக் கணத்தில்
உற்று நோக்கினன் நெரிந்தன களேவரத் தோங்கல்.

தமது நெற்றிக்கண்ணினால் உலகம் யாவற்றையும் அழித்திடுகின்ற நின்மலப் பொருளாகும் சிவபெருமான்பெற்ற பெரும் திருக்குமரன் இதனை நோக்கித் தமது பன்னிரு விழிகளிலும் பெருகிடும் கற்றையாகும் கொடும் சுடருடைய வடவா முகாக்கினிபோல் நெருப்பாகும்படி ஆக்கி அக்கணத்தில் அக்கினியாகும் பார்வை யால் உற்று அவைகளை நோக்கினார். நோக்கலும் எங்கும் செறிந்த பிணமான மலைகள் யாவும் எரிந்து சாம்பராயின. 148

வெந்து நுண்டுகள் பட்டன களேவரம் விசும்பின்
உந்து சோரிநீர் வறந்தன மூவகை உலகு
முந்து போலவே அமைந்தன முளரியான் முகுந்தன்
இந்தி ராதியர் ஆர்த்தனர் குமரனை ஏத்தி.

வானில் பிணக்குவியல் யாவும் எரிந்து நுண்ணிய துகள்களாகப் போயின. பொருதலைத்த இரத்தநீர் வற்றியது. சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூவகையான உலகும் முன்னர்ப்போலவே ஆயின. அந்த அற்புதத்தைக் கண்டு பிரமதேவன், திருமால், இந்திரன் ஆதியான கடவுளர் யாரும் குமரப்பெருமானை துதித்துப்போற்றி ஆரவாரம் கொண்டனர். 149

பாறு லாவரு களேவரத் தமலேயும் படிமேல்
வீறு சோணித நீத்தமும் வேவுற விழித்து
நீற தாக்கினுன் சூரனே அட்டிலன் நின்றுன்.
ஆறு மாமுகன் ஆடலே உன்னினன் ஆங்கொல்.

பருந்துகள் வட்டமிட்டு உலவுகின்ற பிணமலேகளின் பொலிவும் பூமிமேல் பெருகி எழும் இரத்தக் கடலேயும் சாம்பராகும்படி நோக்கி நீருக எரிந்தபொழுதும் அவர் நெருப்பான பார்வைக்குள் படக்கூடிய சூரபன்மனேயும் சேர்த்து எரியாது தப்பவிட்டு நின்றுர் எம்பிரான் ஆறுமுகன். இதனுல் தாம் ஓர் பெரும் திருவிளேயாடல் நினேந்தான்போலும். 150

ஆகும் எல்லேயின் ஒல்லேயின் அடுகளத் தடைந்த
சேகு செஞ்சுடைச் சூரன்இத் திறமெலாந் தெரிந்து
மாக நீடுநம் தானேயை அலேத்தமாற் றலனே
நாகர் தம்மொடு முடிக்குவன் யானென நவின்றுன்.

இவ்வாருகிய நேரத்தில் அதிவிரைவாக அப்போர்க்களத்தை அடைந்த வஞ்சனேயாகும் நெஞ்சுடைய சூரபன்மன் இத்தன்மைகள் யாவற்றையும் கண்டு உணர்ந்து; வானில் நெடுகப் பரந்து நீடிய என் சேனேயை மாய்த்த என் பகைவன் குமரனே தேவர் தம்முடன் ஒருங்கே நான் முடிவு செய்வேன் எனக்கூறினுன். 151

மாற்றம் இத்திறம் இசைத்திடும் அவுணர்கோன் மனத்தில்
சீற்ற மூண்டிட அமர்வினே குறித்தனன் திகிரிக்
காற்றின் ஒல்லேவந் தேற்றலும் மருத்துவன் கடவிப்
போற்று தேர்மிசை முருகனுஞ் சென்றெதிர் புகுந்தான்.

இத்தன்மையாகும் வார்த்தையினே எடுத்துக்கூறிய அசுரர்களது தலேவன் சூரபன்மன் மனதில் கோபம் மூண்டிட போர்புரிதலே நினேந்தானுய் சுழல்காற்றின் வேகம் போன்று சடுதியாக போர்புரியுமாறு எதிர்வரலும் அதுவேளே வாயுதேவன் வணக்கத்துடன் செலுத்திடும் தேர்மேலாக முருகக் கடவுளும் சூரபன்மன் முன் சென்று எதிரிட்டு நேர்ந்தார். 152

புக்க காலேயில் அறுமுகன் தோற்றமும் புடையின்
மிக்க பன்னிரு கரங்களும் வியன்படைக் கலனுந்
தொக்க வீரமும் வன்மையும் நோக்கியே தொல்லேத்
தக்க னேயென அவுணர்கோன் இன்னன சாற்றும்.

எம்பெருமான் சூரபன்மன் முன்போந்த நேரத்தில் ஆறுமுகப்பெருமானின் திவ்விய தோற்றமும், பக்கராக அமைந்து சிறந்துற்ற பன்னிரு கைகளும், அதன் மீது கொண்ட மேலான படைக்கலங்களும் தெளிவுடன் காண்குறும் வீரமும், வன்மையும் யாவற்றையும் ஒருங்குடன் சூரபன்மன் கண்ணுற்று ; அவரை நோக்கி முன்னேய காலத்தில் வாழ்ந்த தக்கன்போன்று சூரபன்மன்இதனேச் சொல்வான்;

தனக்கு மேலான வாழ்வைத் தரும்படி சிவபிரான் எழுந்தருளி வந்தார் என்பதை நினேயாது அவரைத் தன்போல் ஒருவராகத் தக்கன் நினேந்து தன் அகந்தையால் பலவாறு பேசி இகழ்ந்து பின்னர் துயரப்பட்டவன். அந்நிலே இவனுக்கும் இங்கு வந்துகொண்டது. பத்தித்திருமுகப் ஆறுடன் பன்னிரு புயங்களுடன் தித்தித்திருக்கும் அமுதாக எம்பிரான் நேரில் காட்சி கொடுத்தும் சூரபன்மன் உணர முடியாது அகந்தையால் பாலன் தன் பகைவன் என எண்ணினுன். ஆதலால் அவனே இங்கு தொல்லேத் தக்கனே என கூறினுர் ஆசிரியர். 153

சிறந்த வான்மதி மிலேச்சினேன் அருள்புரி செயலால்
இறந்தி டேனியான் என்றுமிவ் பெற்றியாய் இருப்பேன்
மறந்தும் என்னெடு பொருதிலர் தேவரும் மலேந்தே
இறந்து ளார்பலர் உணர்ந்திலே போலுநீ இதுவே.

சிறந்த வானில் விளங்கிய சந்திரனே சடைமீது சூடிய கடவுள் எனக்கு அருள் புரிந்த வரத்தால் ஒருக்காலமும் இறந்திட மாட்டேன். எக்காலமும் இத்தன்மை யாகவே இருப்பேன். மறந்தும்கூட தேவர்கள் என்னுடன் போர்புரியார்கள். என் னுடன் போரிட்டு இறந்துபோனவர் பலர். இவையெல்லாவற்றையும் நீ உணர வில்லேப்போலும். 154

உள்ளம் நொந்துநொந் தென்பணி ஆற்றியே உலேந்து
தள்ளு றுஞ்சுரர் மொழியினேச் சரதமென் றுன்னிப்
பிள்ளே மென்மதி யாலிவண் வந்தனே பெரிதும்
அள்ள லுற்றுழிப் புகுந்திடுங் கயமுனி யதுபோல்.

எனது ஏவல் பணிகளேச் செய்திடும் பொழுது உள்ளம் நொந்து நொந்து என்பணி செய்து உலேவுற்று ஓடி ஒளித்திட்ட தேவர்கள் என்னே இலேசில் வென் றிடலாம் எனக்கூறிய அவர்வார்த்தையை உண்மையென நீ நினேந்து உனது பிள் ளேத் தனத்திற்குரிய விளப்பமில்தாத புத்தியால் மைந்தனே! நீ இவ்விடம் வந்தாய்; உன் செயல் பெரிதும் சேறு இருக்கின்ற இடத்தில் புகுந்துற்ற ஓர் யானேக்குட்டி யின் செயல் போலாயிற்று.

யானேக்குட்டி சேற்றில் புகுந்தால் அதுவெளிவருதல் முடியாத தொன்று: ஆத லின் எம்பெருமானே குழந்தை எனவே நினேந்து இவ்வாறு கூறினுன் சூரபன்மன் 155

உடைப்பெ ரும்படை செறுத்தனே பாலனென் றுன்னே
விடுப்ப தில்லேயால் வெரிநது கொடுக்கினும் விரைவில்
படுப்பன் வானவர் தொகையுடன் பாரிடர் தமையுங்
கெடுப்ப னென்றனன் தன்பெருங் கிளேயுடன் கெடுவான்.

என்னுடைய பெரும் சேனேகளாய படைகளே நீ அழித்தாய். அப்படி செய்த நீ ஒரு குழந்தை என்று நான் நினேந்து உன்னுடன் போரிடுதல் எனக்கு வசைஎன எண்ணினுலும் நான் உன்னேவிடேன். என்னுடன் நீ போரிட்டு தோற்று பின்னிட்டு ஓடிப்போனுலும் விடாது தொடர்ந்து வந்து உனேக் கொல்வேன். தேவர் தொகை யுடன் பூதங்களேயும் எல்லாம் ஒருங்கே கெடுப்பன் எனக் கூறினுன் தான் மட்டு மன்றி தன் பெருங்கிளேயுடன் கெடுபவனுகிய சூரபன்மன். 156

வெம்பு ரைத்தொழிற் கொருவனுங் கயவநீ வறிதே
வம்பு புரைத்தனே யாவதொன் றில்லேநின் மார்பஞ்
செம்பு ரைப்பட யாம்விடு கின்றதோர் திறல்வாய்
அம்பு ரைத்திடு மாறுனக் கென்றனன் அமலன்.

அவ்வாறு எமது ஐயனே நோக்கி வீரம்பேசிய சூரனே எம் கடவுள் பார்த்து உலகில் மிகக் கொடிய வஞ்சமுடைய அற்பச் செயல்களுக்கு ஒரு வீரனுகும் கள் வனே நீ இப்போது எம்முடன் வீணுன வம்புவார்த்தை பேசினுய். உனது பேச்சால் ஆவது ஒன்றும் இல்லே. ஆனுல் உனது வார்த்தைக்கு உத்தரமாக உனது மார்பானது சிவந்த இரத்தம் பெருகிடுமாறு யாம் விடுகின்ற ஓர் அம்பு உனது வார்த்தைக்கு ஏற்ற பதில் சொல்லும் என்ருர் நின்மலமூர்த்தியான குமரன். 157

ஆரும் நேரிலாப் புங்கவன் சேயின தறையைச்
சூர ஞகிய அவுணர்கோன் துண்ணெனச் செயிர்த்து
மேரு நேர்வதோர் வரிசிலே யெடுத்துவிண் ணிழியும்
வாரிபோன்றிடு நாணினே ஏற்றியே வளேத்தான்.

தனக்கு வேருயாரும் ஒப்பிலாத அப்பன் சிவன் உடைய திருக்குமரன் இதனேக் கூறியருளிட அதுகேட்ட சூரபன்மன் எனப்படும் அசுரர்களது மன்னவன் திடீரெனக் கோபமுற்று மேருமலேயை ஒத்ததொரு வரியுடைய வில்லே எடுத்து விண்ணின்று சொரியும் மழைநீர் தாரைபோன்று விளங்கிடும் நாணினேச் செறித்துவளேத்தான். 158

வளைத்த டங்கிரி புரைவதோர் சிலையினை வயத்தால்
வளைத்த செய்கையைக் காண்டலும் பாரிடர் வானோர்
வளைத்த டங்கடல் வந்திடு நஞ்சொடு மலைவான்
வளைத்த தன்மைபோல் அவுணர்தம் முதல்வனை வளைத்தார்.

நீண்ட பெருமலையை ஒத்ததொரு அந்த வில்லினை தனது வீரத்தால் வளைத்த அச் செய்கையை கண்டு கொள்ளலும் அங்குநின்ற பூதங்கள் யாவும்; தேவர்கள் யாரும் அன்று கடைந்த பால்கடலில் தோன்றி வந்திட்ட நஞ்சினுடன் போரிடும் படி அந் நஞ்சினைச் சுற்றி வளைத்தது போன்று அசுரர்க்கெல்லாம் முதல்வனை சூரபன்மனை சூழ்ந்து வளைத்தார்கள். 159

சிலையை வீசினர் கொடுமரம் வீசினர் செறிமூ
விலையை வீசினர் படையெலாம் வீசினர் எதிர்ந்தார்
உலைய வீசியே அடல்செயும் மும்மதத் துவாவை
வலையை வீசியே பிணித்திட மதித்துளார் என்ன.

சூரபன்மனை வளைந்துற்ற பூதங்கள் அவன்மீது மலைகள் வீசினர்கள். பெரிய மரங்களை வீசினர். நிரந்த முச்சுடருடைய சூலத்தை வீசினர்கள். தாம் கொண்ட படைகள் எல்லாம் வீசினர். இவ்வாறு பூதங்கள் அவனுடன் எதிர்த்தார்கள். இவர்களின் இச் செயல் யாவரும் உலையும்படி பல பொருள்களையும் வீசி முரித்து கொலை புரியும் மும்மதயானை ஒன்றை ஓர் வலையை வீசியே அந்த யானையைக் கட்டுப் படுத்தலாம் என நினைந்துளார் போன்று. 160

கண்டு மற்றதை அவுணர்கோன் வில்லுமிழ் கணையாங்
கொண்டல் நுண்துளி சிதறியே கணங்கள்கூட் டறுத்து
விண்டு லாவர அரக்கினாற் குயின்றதோர் வெற்பைச்
சண்ட வெங்கனல் உடைப்பது போலவே தடிந்தான்.

இத்தன்மையை அசுரர்க்கரசனான சூரபன்மன் கண்டு தனது வில்லில் நின்றும் செலுத்திடும் அம்பினை மேகங்கள் சிந்திடும் துளிகள் போல் எங்கும் சொரிந்து அப்பூதங்களின் கூட்டத்தை அறுத்துத்தள்ளி; வானில் உலவிடும் அரக்குமெழுகால் செய்யப்பட்ட பெருமலை ஒன்றை சூறுவளிக் காற்றுடன் சேர்ந்த நெருப்பு உடைத் தெறிவது போன்று அப்பூதங்களை அழித்தான். 161

வீடி னார்களும் புயங்கரந் துணிந்திட மெலிந்து
வாடினார்களும் மயங்கிவீழ்ந் தார்களும் வல்லே
ஓடி னார்களும் ஓடவும் வெருவிவேற் றுருவங்
கூடி னார்களும் ஆயினர் பாரிடக் குழாத்தோர்.

இறந்துபோனார்களும் தோள்கைகள் துணிந்து அறுபட மெலிந்து வாடினார்களும் மயங்கி வீழ்ந்து அயர்வுற்றார்களும் அச்சத்தால் விரைவாக ஓடினார்களும் அவ்வணம் ஓடுதற்கும் அஞ்சி வேறு வடிவத்துடன் தம்மை ஆக்கினார்களுமாக அங்குநின்ற பூதத் தொகையினர் நிலைகொண்டனர் கொடிய சூரபன்மன் விடுத்திட்ட அம்புகள் வந்து பட்டுக்கொள்வதால். 162

பூதர் சாய்ந்துழி இலக்கரோ டெண்மரும் பொருவில்
வேத நாயகன் தூதனுஞ் சூழ்ந்துடன் மேவிக்
கோதை தூங்கிய கொடுமர மாயின குனித்துச்
சோதி வான்கணை மாரிகள் அவுணன்மேற் சொரிந்தார்.

இவ்வாறு பூதங்கள் சூரபன்மனது அம்பினால் அறுபட்டு இறந்தும் சிதைந்தும் ஒருவருமில்லாது புறங்காட்டி ஓடிய நேரத்தில் அது கண்டு இலக்கம் வீரருடன் வீரவாகு தேவரின் மற்றைத் தம்பியர் எட்டுப் பேரும் தமக்கு நிகரில்லாத வேத நாயகனாகும் ஆறுமுகப் பெருமானது தூதுவர் வீரவாகுதேவரும் யாவரும் ஒருங்கு சேர்ந்து சூரன் முன்வந்து மாலை தூக்கிய தத்தமது விற்களானவற்றை வளைத்து அதில் பிரகாசமுடைய பெரும் அம்பாகும் மழையினைச் சூரன்மேல் சொரிந் தார்கள். 163

சொரிந்த வெங்கணை எங்கணும் வருதலுஞ் சூரன்
தெரிந்து வாளிதொட் டறுக்கலன் நின்றதோர் செவ்வி
விரைந்து வந்தவை ஆங்கவன் மெய்ப்பட விளிந்து
பரிந்து போயின செய்ததொன் றில்லைஅப் பகழி.

வீரர்கள் சொரிந்த கொடிய அம்புகள் எல்லாவிடமும் வருதலும் சூரபன்மன் அதைத் தெரிந்து கொண்டும் அந்த அம்புகளை பதிலுக்கு தானும் அம்பினைச் செலுத்தி அறுத்திடாதவனாய் அங்கு வெறுமனே நின்ற அந்த செவ்விய நேரத்தில் அந்த அம் புகள் விரைவாக வந்து அவன் மேனியில் பட்டிட; பட்டிட்ட அம்பே முரிந்து உடை பட்டுப் போயின. அந்த அம்புகள் யாது ஒன்றுகிய தீங்கினையும் சூரன்பால் செய்ய வில்லை. 164

பரப்பின் ஈண்டிய வீரர்தஞ் சூழ்ச்சியைப் பாரா
உரப்பி ஆவலங் கொட்டியே வெகுளிகொண் டொருதன்
பொருப்பு நேர்சிலை குனித்துவெஞ் சிலீமுகம் பொழிந்து
திருப்பெ ருந்தடந் தேரொடுஞ் சாரிகை திரிந்தான்.

இப்படியாகக் கூட்டாகப் பரந்து வந்த இலக்கத்து ஒன்பது வீரரும் ஒருங்கே தன்மீது அம்பினை பலபாட்டாலும் விடுத்த நுட்பத்தை சூரபன்மன் கண்டு உரப் பிச்சத்தமிட்டு மிகுகோபம் கொண்டு தனது ஒருமலை ஒத்தவில்லை வளைத்து கொடிய சிலீமுகக்கணைகளைச் சொரிந்து சிறப்புடன் ஓங்கிய தனது தேரொடும் அவ்வீரர் பால் இடம் வலம் என்று சாரிகையாகமாறி மாறித் திரிந்தான். 165

நூறு கோடிவெஞ் சரமொரு தொடையுற நூக்கிச்
சூறை யாமென வட்டணை திரிந்துளான் சூழ்வோர்
மாறு தூண்டிய சரங்களைத் துணித்துமற் றவர்கள்
ஏறு தேருடன் பிடித்திடு சிலைகளை இறுத்தான்.

ஒவ்வோர் தொடுப்பிலும் நூறுகோடி கொடிய அம்பினை விடுத்துக் சூறுவளிக் காற்றைப்போன்று வீரர்கள்பால் சுழன்று வட்டமாக வந்துகொள்பவன் தன்னைச் சூழ்வோராகும் இலக்கத்து ஒன்பதுபேரும் மாறுக விடுகின்ற அம்புகளைத் துணித் தெறிந்து அத்துடன் அவரவர்கள் ஏறிவந்த தேருடன் அவர்கள் கையில் பிடித்த விற்களையும் முறித்தெறிந்தான். 166

வையம் வில்லுடன் இற்றபின் மற்றவர் மலைவு
செய்ய உன்னுமுன் மொய்ம்பினும் உரத்தினுஞ் சிரத்துங்
கையி னுங்கணை ஆயிர மாயிரங் கடுந்தீப்
பெய்யும் மாரிபோற் செறித்தனன் செம்புனல் பெருக.

தேரானது வில்லுடன் ஒருங்கே அழிவுறலும் அதன்பின் அந்த வீரர் வேறு தேரேறி போர்தொடங்கிச் செய்ய நினைக்குமுன்பே அவர்களது தோளிலும், நெஞ்சிலும், தலையிலும் கையிலும் சென்றுபடுமாறு ஆயிரம் ஆயிரம் கொடிய நெருப்பு மழை சொரிவதுபோன்று அம்புகளைச் செலுத்தினன் அவர்கள் மேனியெல்லாம் அம்புபட்டு இரத்தம் சிந்துமாறு சூரபன்மன் 167

புரந்த னிற்செறி கறையினர் புலம்புகொள் மனத்தார்
உரந்த ளர்ந்துளார் வில்வலி இழந்துளார் ஒருங்கே
இரிந்து நீங்கினர் இலக்கரோ டெண்மரும் இளவல்
திருந்த லன்தடந் தேர்மிசைப் பாய்ந்தனன் சினத்தால்.

இவ்வாறு சூரபன்மன் செய்திடலும் அதனால் நெஞ்சில் செறிந்த இரத்தக் கறை உடையவர்களும் வேதனையால் புலம்பிடுகின்ற மனம் உடையவராயும் வலிமை யாவும் தளர்வுற்றவராயும் வில்லின்போர்செய்ய வலி இழந்துள்ளாராயும் ஆகிய நிலையாய் அங்குள்ள இலக்கத்தெட்டு வீரரும் ஒருமித்து அவ்விடம்விட்டு ஓடினார்கள். ஆனால் எம்பிரான் வீரவாகு தேவர்மட்டும் ஓடாது பகைவனை சூரபன்மனது பெருந்தேர்மீது மிகு சினத்துடன் பாய்ந்தார். 168

பாய்ந்து திண்டிறல் மொய்ம்பினுன் பரமன்முன் னளித்த
நாந்த கந்தனை யுரீஇக்கொடு நண்ணலர்க் கிறைவன்
ஏந்து வில்லினைத் துணித்தனன் துணித்தலும் எரிபோல்
காய்ந்து வெய்யவன் புடைத்தனன் உரத்திலோர் கரத்தால்.

சூரபன்மனது தேரின்மீது திண்மையான தோளுடைய வீரவாகுதேவர் பாய்ந்து சிவபிரான் முன்னர் கொடுத்தருளிய வாளினை உறையில் நின்றும் உருவி பகைவர்க்கு அரசனான சூரபன்மன் பிடித்த வில்லை வெட்டித் துணித்தார். அவ்வாறு வில்லைத் துணித்தலும் சூரபன்மன் நெருப்பைப்போல் கோபித்து அக்கொடியவன் வீரவாகு தேவர் நெஞ்சில் தனதொரு கையால் அடித்தான். 169

அங்கை கொண்டுசூர் ஒருபுடை புடைத்தலும் அகலம்
பொங்கு சோணிதம் அலைத்திட வாகையம் புயத்துச்
சிங்கம் வீழ்ந்தயர் வுற்றிடத் தூதனைச் செகுத்தல்
இங்கெ னெக்கடா தென்றெடுத் தும்பரின் எறிந்தான்.

தனது அழகிய கையைக்கொண்டு சூரபன்மன் ஒருகால் அடித்தலும் அவனது மார்பால் பொங்குகின்ற இரத்தம் பெருகி கொப்பளித்துச் சொரிந்திட்டு உடலை மூட வெற்றிமாலை சூடிய தோளுடைய வீரவாகு தேவர் வீழ்ந்து மயக்கம்கொண்டிட அதுகண்ட சூரபன்மன் இத்தூதுவனைக் கொல்லல் இங்கு எனக்கு அடாது என்று எடுத்து மேலே வானில் எறிந்தான். 170

எறிந்த காலையில் விண்ணிடைப் படர்ந்திடும் ஏந்தல்
அறிந்து மீண்டுசென் றுறுமா முகன்படை அடைந்தான்
தறிந்து போகிய சிலையினைத் தரைமிசை யிட்டுச்
சிறந்த தோர்தனு எடுத்தனன் தீயரில் தீயோன்.

சூரபன்மன் எறிந்த நேரத்தில் வானில் போன வீரவாகுதேவர் மயக்கம் நீங்கித் தெளிந்து மீண்டுசென்று ஆறுமாமுகக் கடவுள் பக்கராக வந்தார். அதுவேளை வெட்டுப்பட்ட தனது வில்லை பூமியில்போட்டு அப்பால் இன்னொரு சிறந்த வில்லை எடுத்தான் தீயவர்களிலும் தீயோனான சூரபன்மன். 171

அத்த மேல்கிரி உதயமால் வரைத்துணை யான்று
நித்த லும்பிறர்க் கிடர்செய்து மேருவின் நீண்டு
கொத்து நீடுபல் குவடுடைத் தாகியே குமரன்
சத்தி யாலட நின்றவெற் பனையதத் தனுவே.

அந்த வில்லானது மேற்குத் திக்கிலுள்ள அத்தமன மலையும் கிழக்கிலுள்ள உதய மலையும் வரை அகன்று நித்தலும் அவ்வில் பிறர்க்கு இடர்செய்து மேருமலையைப் போன்று நீண்டு இங்கு கொத்தான பல முடிகளை உடைத்தாகியே குமரப்பெருமானின் சத்தியால் அழிவுறும்படி நின்ற ஓர் மலைபோன்றது,

அவ்வில் உதயம் அத்தம் என்னும் மலைகளின் இடைவெளித் தூரமாக அகன்று மேருமலைபோல் நீண்டு பல குவடுகொண்டு நின்றது என்றமை பிறப்பு இறப்பு எனும் காலம்வரையும் உறுகின்ற துயரிற்கு ஒப்பாயது என்க. 172

வனைக ருங்கழல் அவுணனக் கார்முகம் வளைத்துப்
புனலும் அங்கியும் காலுடன் ஒலிப்பது புரைய
எனைய ருந்துளக் குறும்வகை நாணொலி யெடுத்தான்
அனைய பெற்றியை அறிந்தனன் அமரரை அளித்தோன்.

அழகுடன் புனைந்த வீரக்கழல் அணிந்த சூரபன்மன் அந்த வில்லை வளைத்து நீரும் நெருப்பும் காற்றும் உடன்கூடி இரைந்து ஓசைபடுவதுபோன்று எல்லாரும் நடுக்கமுறும்படி நாணோசை செய்தான். அத்தகைய சூரனது இயல்பை உணர்ந்து கொண்டான் தேவரைக் காத்தருளிய செல்வன் ஆறுமுகப்பெருமான். 173

புயலின் மேனியன் புவிநுகர் காலையும் போதன்
துயிலு மாலையுந் துஞ்சிய வேலையுந் தொலையா
தியலு மண்டத்தின் அடிமுடி உருவினின் றிலங்குங்
கயிலை போல்வதோர் நெடுஞ்சிலை எடுத்தனன் கந்தன்.

அவ்வாருகிய நேரத்து ஆறுமுகப்பெருமான் மேகம்போன்ற மேனியுடையவரான விஷ்ணுமூர்த்தி இப்பூமியை உண்டிடும்பொழுதாகிய காலைநேரம் (உலக உற்பத்தி) பின்னர் பிரமதேவன் துயில்கொண்டிடும் மாலைக் காலத்தும் (பிரளயம்) அப்பிரமன் இறந்த நேரத்தும் (கற்பம்) தொலைவுருத இயல்பினை உடையதுமாகும் அண்டங் களின் அடிகளையும், முடிகளையும் உருவிக்கொண்டு நின்று இலங்கிடுகின்ற கைலை மலையைப்போல்வதோர் நீண்ட வில்லினை எடுத்தார். 174

வாரி யாலுல கழிந்திடும் எல்லையின் மருங்கின்
மேரு வாதியாம் வரைகளுங் கிரிகளும் விசும்பில்
காரு மேலுள உலகமும் அமரருங் கயிலைச்
சாரல் சூழ்தல்போல் விரவியார்ப் புடையதத் தனுவே.

இன்னும் அந்த வில்லானது கடலினுலே உலகம் அழிந்திடும் காலத்தில் பக்க ராக உள்ள மேருமலை ஆதியாகச் சொல்லப்பெறும் மலைகளும் அதனைச் சூழ்ந்துள்ள திக்குமலைகளும் வானில் உள்ள மேகங்களும் அதன்மேலுள்ள உலகங்களும் தேவரும் எல்லாமாகச் சென்று கைலைமலையைச் சூழ்ந்து ஆரவாரத்துடன் நிற்றல்போன்று பெரும் இரைச்சலைக் கொண்டது. 175

நீட்ட மிக்கதோர் அப்பெருஞ் சிலையினை நிமலன்
தோட்டு ணைக்கொடு வாங்கியேழ் வகையினுல் தோன்றும்
ஈட்ட மிக்கபல் லுயிர்களும் வான்உரும் ஏற்றினன்
கூட்ட மாகியே யார்த்தெனக் குணத்தொலி கொண்டான்.

நீட்டம் மிகுந்துள்ள தொருவில் அதனை நின்மலமாகும் கடவுள் முருகன் தமது திருத்தோளின் துணைகொண்டு வளைத்து அதனிடத்தாக இவ்வுலகாகிய எங்கும் ஏழ் வகைத் தோற்றமாகும் தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன நீர் வாழ்வன தாவரம் ஆகிய உயிர்கள்யாவும் வானில் உள்ள இடியேற்றின் கூட்டங் களும் ஒருங்குடன் சேர்ந்து ஆரவாரித்திடுதல் போன்று எம்பிரான் நாணின் ஓசை யைச் செய்தார். (இஃது ஈசன் அற்புதத்தைக் காட்டியது) 176

குணங்கொள் பேரொலி கோடலும் இரலையூர் கொற்றத்
தணங்கு லாவரு கார்முகங் குழைத்துளை யவதி
இணங்க வாங்கியே பத்துநூ றுயிரத் திரட்டி
கணங்கொள் வெஞ்சரம் உகைத்தனன் கூற்றினுங் கடியோன்.

எல்லா உலகமும் சேமமுறும்படி குணங்கொண்ட பேரோசையை எம்பிரான் எடுத்தலும் அதுகண்ட சூரபன்மன் சிங்கத்தை வாகனமாகக்கொண்டு எழுந்து வரு கின்ற கொற்றமுடைய துர்க்கை என்னும் தெய்வம் உலாவி விளங்கிய தனது வில்லை காது அளவும் வசையுமாறு இழுத்து வாங்கி அதில் இருபது இலக்கம் அச்சம்தரும் கொடிய அம்புகளைச் செலுத்தினுன் இயமனிலும் கொடியோனுன சூரபன்மன். 177

வான்ம றைத்தன மாதிரம் மறைத்தன மதியோர்
மீன்ம றைத்தன கதிர்வெயின் மறைத்தன வேலை
தான்ம றைத்தன வசுமதி மறைத்தன தருவார்
கான்ம றைத்தன வரைகளை மறைத்தன கணைகள்.

அவ்வாறு சூரபன்மன் விடுத்த அம்புகள் வானின் வெளி இலாதபடி மறைத் தன; திக்குள் தோன்ருதபடி மறைத்தன; சந்திரனுடன் கூடிய நட்சத்திரங் கள் தோன்றிடாதபடி மறைத்தன; ஒளிக்கிரணமுடைய சூரியதேவனை மறைத் தன; பூமியை மறைத்தன; மரங்கள் நிறைந்த காடுகளை மறைத்தன. மலைகளை மறைத்தன. 178

காற்றிற் செல்வன அங்கியிற் படர்வன கடுங்கட்
கூற்றிற் கொல்வன வேலைவெவ் விடத்தினுங் கொடிய
பாற்றுத் தொல்சிறை உள்ளன பஃறலை படைத்த
நாற்றிக் கும்புகழ் அவுணர்கோன் ஆணையின் நடப்ப.

அந்த அம்புகள் காற்றைப்போன்று வேகமாகச் செல்வன; நெருப்பைப்போன்று கடுமையுடன் செல்வன; கொடுந்தன்மையுடைய இயமனைப்போன்று செல்வன; சமுத்திரத்து எழுந்த நஞ்சிலும் கொடியதான; பருந்துகளின் சிறகுபோன்ற முதுமையான சிறகுகளைக்கொண்டன; பல தலைகளையுடையன: நாலு திக்கிலும் புகழ்கொண்ட சூரபன்மன் எப்பக்கமாக அவை செல்லவேண்டுமென ஆணையிடுவானோ அப்படியாகச் செல்கின்றன. 179

பருமி தத்தன மேருவைத் துளைப்பன பாங்கர்
வரைகி ழிப்பன அண்டமும் பொதுப்பன வான்தோய்
உருமி டிக்குலம் பொருவன விடத்தையுண் டுமிழ்வ
கருமை பெற்றன சேயன தீயவன் கணைகள்.

இன்னமும் அவைகள் பருமையுடையன. வலியால் மேரு மலையையும் துளைப்பன; அதன் பக்கமாக உள்ள திக்கு மலைகளைக் கிழிப்பன; அண்டங்களை உருவிப் போவன. வானில் விளங்கும் இடியேற்றின் குலம்போன்று கொடுமையாய் இருப்பன; நஞ்சினை உண்டு கக்குவன; கருமைநிறமுடையன; சிவந்த நிறமுடையன; தீமையுடையோனான சூரபன்மனுடைய அம்புகள்.

இப்பாடலால் கருமையும் சிவப்பும் தீமைக்கே உரியனவாகியதென்பதை எடுத்துக் காண்பிக்கின்றது. 180

துண்ட வெண்பிறை வாளெயிற் றவுணர்கோன் துரப்ப
மிண்டு வெங்கணை யெங்கணுஞ் செறிந்திட விண்ணோர்
கண்டு கண்ணனை அணுகியே கைகுலைத் தைய
உண்டு கொல்நமக் கொளிப்பதோர் இடமென உரைத்தார்.

வளைந்த பற்களை துண்டாகிய வெண்பிறைபோன்று கடைவாயில் விளங்கிடக் கொண்ட சூரபன்மன் செலுத்திடச் செல்லும் முரண்படும் கொடிய அம்புகள் எங்கணும் சென்று செறிந்திடுதலும் தேவர்கள் அதுகண்டு அச்சமடைந்து நாராயணப் பெருமானை அணுகி கைகளை உதறி ஐயனே இந்த அம்புகளினின்றும் தப்பி ஒளித்துக் கொள்வதற்கு ஒரு இடம் எங்காகிலும் உண்டோ எனக் கூறினர்கள். 181

உரைத்து ளார்க்குமால் மாறுரை வழங்குமுன் ஒள்வேல்
கரத்தி லேந்திய குமரவேள் இன்னது கண்ணுல்
தெரித்து வெங்கனல் விடுத்திடும் ஊதைபோற் சிலதன்
சரத்தி னுலவன் தூண்டிய கணையெலாந் தடிந்தான்.

இவ்வாறு கூறிய தேவர்களுக்கு நாராயணக் கடவுள் மறு உத்தரமானதொரு வார்த்தையைச் சொல்லு முன்பு பிரகாசமுடைய வேற்படையை திருக்கரத்து ஏந்திய குமரப் பெருமான் இந்த நிலையைத் தமது திருக்கண்ணுல் கண்டருளி கொடிய நெருப்பை மூண்டெரியச் செய்திடும் காற்றைப்போல் சில தனது அம்புகளை விடுத்து சூரபன்மன் தூண்டிய அம்புகள் எல்லாவற்றையும் அறுத்தருளினுர். 182

மடிந்தி டும்படி மாற்றலன் சரங்களை வள்ளல்
தடிந்த தன்மைகண் டமரர்கள் உவகையில் தழைத்தார்
படர்ந்து நீடிய கங்குலின் பாயிருள் புலர
விடிந்த காலையின் எழுங்கதிர் கண்டமே தினிபோல்.

பகைவனுன சூரபன்மனது அம்புகளை அருள் வள்ளலான ஆறுமுகப்பெருமான் அழித்திட்ட தன்மையைக் கண்டு தேவர்கள் மகிழ்வால் திளைத்தார்கள். எதுபோல் எனில் ஒழிவின்றி எங்கும் படர்ந்திருந்த நீண்ட இரவின் இருள் நீங்கி விடிந்த நேரத்து எழுகின்ற சூரியதேவனைக் கண்டு பூமியில் உள்ளார் கொண்ட மகிழ்ச்சி போன்று. 183

### வேறு

அங்க வெல்லை அவுணர்கோன், எங்கள் நாதன் எதிருற
மங்குல் போல்வ ரம்பிலாச், செங்கண் வாளி சிதறினன்.

அந்த நேரத்தில் அசுரர் தலைவனான சூரபன்மன் எங்கள் நாயகரான முருகப் பெருமான் எதிராக மேகங்கள் மழையைப் பொழிதல்போன்று கொடுமையால் சிவந்த அம்புகள் அளவற்றனவற்றைச் சொரிந்தான். 184

ஆய காலை அறுமுகன், தீயன் உந்து செறிகணை
மாய வாளி மாமழை, ஏயெ னுமுன் ஏவினன்.

அவ்வாறான நேரம் ஆறுமுகப் பெருமான் தீயவனான சூரபன்மன் செலுத்தும் எங்கும் பரவிடும் அம்புகளை அழிவுற்றிடத் தாமும் அம்பாகும் மழையினை "ஏ" என்று சொல்லி முடிப்பதன் செலுத்தினர். 185

எங்கள் நாதன் ஏவிய துங்க வாளி சூர்விடும்
புங்க வங்க ளைப்புரத், தங்கி போல றுத்தவே.

அதுவேளை எங்கள் நாயகன் குமரன் செலுத்திய மேன்மையான கொடும் அம்புகள் சென்று சூரபன்மன் அம்புகளை முப்புரத்தை எரித்த நெருப்பைப்போன்று அறுத்து எரித்துத் தள்ளின. 186

அறுத்த பின்னும் அறனிலான், மறுத்தும் வாளி மாமழை
கறுத்த கண்டர் காளைமேல், செறுத்து வல்லை சிந்தினன்.

எம்பெருமான் அறுத்துவிட்ட பின்பும் அறம் இல்லாதவனான சூரபன்மன் மீண்டும் அம்பாகிய பெருமழையை கறுத்த கண்டமுடைய சிவபிரான் திருக்குமரன் மேல் மிகு கோபமுடன் விரைவில் சொரிந்தான். 187

சிந்து கின்ற செஞ்சரம், வந்து றுமுன் வந்தெனக்
கந்தன் நூறு கணைதொடா, அந்தில் பூழி ஆக்கினன்.

சூரபன்மன் சொரிகின்ற சிவந்த அம்புகள் வருவதற்கு முன்பே எம்பெருமானுடைய அம்புகள் வந்துற்றனவோ எனும்படியாக முருகப்பெருமான் நூறு அம்புகளைத் தொடுத்துவிடுத்து சூரபன்மனது அம்புகளை சாம்பராக நொருங்கிடும்படி யாக்கினர். 188

பூழி செய்து பொள்ளென, ஊழி நாதன் ஒண்சரம்
ஏழு நூற தேவினன், சூழு மாயை தோன் றல்மேல்.

அவனது அம்புகளை பொடிசெய்து பின்னர் ஊழி எல்லாவற்றிற்கும் தான் ஒருவனேயான ஆறுமுகப்பெருமான் கூரிய அம்புகள் எழுநூற்றைச் செலுத்தினர், உலகினைச் சூழ்ந்துபற்றும் மாயவளின் தலைமைப்புதல்வனான சூரபன்மன்மேல். 189

மாயை மைந்தன் மற்றதை, ஆய வாளி யால்அறுத்
தேயி னுனி ராயிரஞ், சேயின் முன்சி லீமுகம்.

எம்பெருமான் செலுத்திய அம்புகளை மாயவளின் புத்திரனான சூரபன்மன் அத்தொகைப்பட்ட எழுநூறு அம்புகளை விடுத்து அறுத்து இரண்டாயிரம் அம்புகளை பின்னர் குழந்தை வடிவாகும் ஈசன்மேல் விடுத்தான். 190

### வேறு

விட்டதனை அத்தொகை விறற்பகழி தன்னால்
அட்டுவிரை விற்கடவுள் ஆயிர விரட்டி
கட்டழலை யொத்துள கடுங்கணைகள் தம்மைத்
தொட்டனன் வருத்தமொடு சூர்கிளை துளங்க.

சூரபன்மன் விடுத்த அம்புகள் அத்தனையையும் அத்தொகைப் பட்ட வலிமை யான அம்புகளை விடுத்து அறுத்து விரைவினில் ஆறுமுகக் கடவுள் இரண்டாயிரம் எனும் தொகைப்பட்ட கொடிய நெருப்பை ஒத்துநின்ற கடுமையான அம்புகளைச் சூரபன்மன் மேல் விடுத்தார். அச்செயலைக் கண்ட சூரனின் கிளைகள்யாவும் நடுக் கமுற்றன. 191

முராரியுத வுஞ்சுனை முந்துதளை இட்டாண்
டொராயிரம் அளித்தபரன் உயர்த்தகணை செல்ல
இராயிர நெடும்பகழி ஏவியவை நீக்கி
அராவிறையும் வையமும் அழுங்கலுற ஆர்த்தான்.

விஷ்ணு பெருமான் பெற்றெடுத்த மைந்தரான பிரமதேவனை முன்னர்க் காலத் தில் விலங்கில் இட்டு சிறை வைத்து ஆயிரம் ஆண்டுகள் பிரமனது படைப்புத் தொழிலை நடாத்திய கடவுள் ஆறுமுகப் பெருமான் செலுத்திய இரண்டாயிரம் அம்பும் சூரன் மேல் சென்றிட அவனும் இரண்டாயிரம் நெடிய அம்பினைச் செலுத்தி எம்பெருமானது அம்பினை அறுத்து நீக்கி ஆதிசேடனும் பூமியும் இரங்கும்படியாக உரத்துச் சத்தமிட்டான். 192

ஆர்த்தவன் விடுங்கணை அனைத்தினையும் முக்கண்
மூர்த்திதரு கான்முளை செலச்செல முடித்தான்
கார்த்தெழு புகைப்படலை கான்றுநிமிர் செந்தீச்
சேர்த்தினவை யாவையும் மிசைந்திடு திறம்போல்.

இவ்வாறு சூரன் ஆர்ப்பரித்துவிடுகின்ற அம்புகள் அனைத்தினையும் முக்கண் மூர்த்தி சிவபெருமான் திருக்குமரன் அவை வர வர அழித்தார்; எது போலு மெனில் கருமையுடன் எழுகின்ற புகைப் படலங்களைக் கக்கி எழும் செந்நிற நெருப் பாயது அதனிடத்துச் சேரும் சேரும் எப்பொருளையும் உண்டு அழித்திடும் திறம் போன்று. 193

ஐயன்விடு வாளிகளை அவ்வசுரன் நீக்கும்
வெய்யன்விடு வாளிகளை வேள்கடி தறுக்கும்
எய்யுநெடு வெம்பகழி இற்றவைகள் சிந்தி
வையமிசை போகியன வானமணித் தென்ன.

எமது ஐயன் விடும் அம்புகளை அந்த அசுரன் சூரபன்மன் அறுப்பான். கொடிய சூரபன்மன் விடும் அம்பினை முருகப்பிரான் விரைந்துடன் அறுப்பார்; இவ்வாறு இரு திறத்தாரும் எய்கின்ற நெடும் அம்புகள் அறுபட்டுச் சிந்தி பூமிமேல் எழுந்துபோய் கொண்டிருக்கின்றன வான உலகம் கிட்டவாய் வந்துளது என்றிடும்படியாக. 194

முற்றிய அமர்த்தலை முனிந்திவர் செலுத்துங்
கொற்றநெடு வாளிகள் குறைந்துழி எழுந்தீப்
பற்றியது பாரிடை பகிர்ந்தவரை முற்றும்
வற்றிய அளக்கரும் வறந்துளது கங்கை.

முதிர்ந்த இப்போரினிடத்து இருவோரும் ஒருவரை ஒருவர் முனிந்து உடன் செலுத்தும் சிறப்புடைய அம்புகள் முறிபடுங்கால் எழுகின்ற நெருப்பானது பூமி எங்கும் பற்றிக் கொண்டது; அதனால் மலைகள் முழுவதும் பிளவு பட்டன; சமுத்திர மும் வற்றியது; கங்கா நதியும் வறண்டு போயது. 195

தார்கெழுவு வேற்படை தடக்கையுடை யோனுஞ்
சூரனும் இவாறமர் இயற்றுதொழில் காணு
வீரமட மாதுளம் வியந்திவர் தமக்குள்
ஆரிடை நடத்துமென ஐயமொடு நின்றாள்.

மாலை சூடிய வேற்படையைத் தாங்கிய கையுடைய ஆறுமுகப் பெருமானும் சூரனும் இவ்வகையாகப் போர் இயற்றிடும் செயலைக் கண்டு; வீர இலக்குமி இரு வரையும் வியந்து இந்த இரு வீரருக்குள் ஆரிடத்து நாம் போவோம் என்று மனதில் சந்தேகமுடன் அவ்விடம் நின்றாள். 196

ஆளரிதன் முன்னிளவல் ஆனைவத னத்துக்
காளைமகிழ் பின்னிளவல் கார்முகம் உகைக்கும்
வாளிமழை யேயலது மற்றவர்கள் தம்மை
நீள்விழியி னல்தெரிகி லார்புடையின் நின்ருேர்.

வீரமுடைய சிங்கமுகா சூரனுக்கு மூத்தோனுகிய சூரன் எமது யானை முகமுடைய விநாயகப் பெருமான் எனது தம்பி என மகிழும் ஆறுமுகப் பெருமான் இவர்களது மேகம்போன்ற விற்கள் செலுத்திடும் அம்பாகிய மழையையே அன்றி மற்று அவ்விரு வோரையும் தமது கூரிய பெரு விழிகளினுல் காணுது போயினர் பக்கரில் நின்ற படைஞரர்யினேர். 197

நீடுசமர் இன்னணம் நிகழ்ச்சியுறும் எல்லை
மேடமிசை ஊர்பரன் விடுத்தகணை எல்லாம்
ஈடுபட நூறியவன் ஏறிவரு மான்தேர்
ஆடுறு பதாகையை அறுத்துவிரைந் தார்த்தான்.

நீண்ட பெரிய போரை இவ்வாறு நிகழ்த்தியிடும் நேரத்தில் ஆட்டுக் கடாவின் மீது எழுந்தருளி வரும் பரம்பொருளாகும் ஆறுமுகப் பெருமான் விடுத்த அம்புகள் யாவற்றையும் ஒன்றும் தப்பாது முரிபட அறுத்து அவர் ஏறிவரும் மனே வேகம் என்னும் தேர்மீது ஆடிக்கொண்டிருக்கும் கொடியையும் அறுத்து வீழ்த்தி விரைந்து மிகவும் ஆர்ப்பரவம் செய்தான் சூரபன்மன். 198

ஆர்த்துவிறல் வால்வளையை அம்பவள வாயில்
சேர்த்தியிசைத் தான்தனது சீர்த்தியிசைத் தென்ன
மூர்த்தமது தாழ்க்கிலன் முனிந்துகணை பின்னுந்
தூர்த்துமுரு கன்தனது தோற்றமறைத் திட்டான்.

சூரபன்மன் ஆர்ப்பரித்து வலிமையுடைய வெற்றிச் சங்கை எடுத்து வாயில் வைத்து ஊதினுன், தனது புகழை எடுத்து இசைப்பான்போன்று. அதன் பின்னும் ஒரு மூர்த்தமானபொழுதும் தாமதியாது மீண்டும் அம்புகளைச் சொரிந்து முருகப் பெருமான் தோற்றத்தை மறைத்திட்டான். 199

மறைத்தபக ழித்தொகையை வாளிமழை தன்னுற்
குறைத்தவுணன் ஊர்ந்திடு கொடிஞ்சிநெடு மான்தேர்
விறற்கொடி தனைக்கொடிய வெஞ்சரமொ ரேழால்
அறுத்துமுரு கன்பரவை யாழ்கடலின் இட்டான்.

முருகப்பிரான் தம்மை மறைத்த அம்பின் தொகையை அம்பாகிய மழையினுல் அறுத்து அதன்பின் கொடிய சுடுசரம் ஏழினை விடுத்து சூரபன்மன் ஏறிவரும் பெரும் தேர்மீதுள்ள சிங்கக்கொடியை அறுத்து அக்கொடியை ஆழ்ந்த சமுத்திரத்தின்மீது போட்டார். 200

வேறு

தான வர்க்குத் தலைவன் தனிக்கொடி
மீன வேலையில் அற்றுடன் வீழ்ந்துழிப்
பானு கம்பென னப்படு பாரிடர்
சேனை காவலன் தெற்றென நோக்கினுன்.

அசுரர்க்கெல்லாம் தலைவனுன சூரபன்மனது சிங்கக் கொடி அறுபட்டு மீன்கள் செறிந்த சமுத்திரத்து வீழ்ந்தபோது பானுகம்பன் எனப் பேர்கொண்ட பூதசேனுதி பதியானவன் திடீரென அதனை நோக்கினுன். 201

கண்டு சிந்தை களித்துப் பெருமிதங்
கொண்டு குப்புற் றிசைத்துக் குனித்திடா
அண்டர் போற்றத்தன் ஆயிரம் வாயினும்
ஒண்தி ரட்சங்கம் ஒல்லைவைத் தூதினுன்.

பானுகம்பன் என்னும் பூதத்தலைவன் இதுகண்டு மனம் களிப்புற்று பெருமிதம் கொண்டு குப்புறச் சுழன்று எழுந்து நின்று புகழ்ந்து கூத்தாடி அங்குள்ள தேவர்கள் யாவரும் போற்றிடும்படியாகத் தனது ஆயிரம் வாய்களிலும் அழகால் திரண்ட சங்கினை விரைவாக வைத்து ஊதினான். 202

கானு கம்படு கந்துகத் தேருடைப்
பானு கம்பன் பனிமதி ஆயிரம்
மானு கம்பவை வாய்வைத் திசைத்தலுந்
தானு கம்பல தங்கிற்றவ் வோசையே.

காற்றினைப் போன்ற வேகமுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற தேருடைய பானுகம்பன் தனது ஆயிரம் வாயிலும் குளிர்ந்த ஆயிரம் சந்திரனைப் போன்ற ஆயிரம் சங்கினை வைத்து ஊதலும், அந்தச் சங்கோசையானது இவ்வுலகில் பலயுககாலம் வரையும் ஒலித்துக் கொண்டு நின்றது. 203

பாய்பெ ரும்புகழ்ப் பானுகம் பன்வளை
ஆயி ரங்களும் ஆர்த்திட அண்டர்தம்
நாய கன்தன் விறல்கண்டு நாரணன்
தூய சங்கு முழங்கிற்று துண்ணென.

பரந்து எங்கும் விளங்கிடும் புகழினை உடைய பானுகம்பன் சங்குகள் ஆயிரமும் முழங்கி ஆர்த்திடலும் அதுபோது அண்டர்கட்கெல்லாம் நாயகரான குமரப்பெருமான் திறமையைக் கண்டு நாராயணக் கடவுள் கையில் இருந்த பாஞ்சன்யம் எனும் தூய சங்கும் துண்ணென முழக்கம் செய்தது. 204

போதம் அங்கதிற் புங்கவர் யாவருஞ்
சோதி வேற்படைத் தூயவன் ஏறுதேர்
மீது கேதனம் இல்லை வியன்கொடி
ஆதி நீயென் றழலினை ஏவினர்.

அவ்வாறு சூரபன்மன் கொடி அறுபட்ட அற்புத வேளையில் தேவர்கள் யாவரும் அங்குநின்ற அக்கினிபகவானை நோக்கி சோதியாய் மிளிரும் வேற்படை ஏந்திய எம்பெருமான் தேரில் கொடி இல்லை. ஆதலின் நீ அற்புதமான ஓர் கொடியாகி அமர்வாய் என்று கூறி அக்கினிபகவானை எம்பிரான் தேரில் கொடியாய் அமரும் படி தூண்டினர்கள். 205

ஏவ லோடும் எரிதழற் பண்ணவன்
வாவு குக்குட மாண்கொடி யாகியே
தேவதேவன் திருநெடுந் தேர்மிசை
மேவி ஆர்த்தனன் அண்டம் வெடிபட.

தேவர்கள் அவ்வண்ணம் தூண்டுதலும் சுடுகின்ற தழல் உடைய அக்கினிக் கடவுள் பறக்கின்ற ஓர் பெருமை தரும் சேவற் கொடியாகி தேவாதிதேவன் ஆறுமுகப் பெருமானது திருவுடைய நெடும் தேர்மேல் பறந்துசென்று அங்கு புகுந்து நின்று அண்டங்கள் வெடிபடும்படி கூவி ஆர்த்தனன். 206

படியி லாதமர் பண்ணவன் தேர்மிசைக்
கொடிய தாய்நின்று குக்கு டங்கூயது
கடிய தானவர் கங்குல் புலர்ந்திடும்
விடியல் வைகறை வேலையைக் காட்டல்போல்.

பூமியில் தங்கிடாது மேலாகிச் சென்றிடும் எம்பெருமானது தேர்மேலாகிக் கொடியாய் நின்று அக்கினிக் கடவுளான சேவல் கூவியது; எதுபோலும் எனில் கொடிய அசுரர் என்னும் இரவு கழிந்தது விடியற் காலமான வைகறை வந்திட்டது எழுந்திருந்து விழித்துக்கொள்ளுங்கள் எனத் துயரம் நீங்கி வாழும் காலையைக் காட்டுதல் போன்றிருந்தது. 207

சங்க மோடு தபனனும் ஆர்த்தலும்
மங்குல் வண்ணத்து மாயவன் ஆர்த்தனன்
பங்க யாசனப் பண்ணவன் ஆர்த்தனன்
திங்கள் ஆர்த்தது செங்கதிர் ஆர்ப்பவே.

அக்கினிதேவன் தமது பரிவாரத்துடன் கொடியாய் நின்று கூவி ஆர்ப்பரித்தலும் அதுகண்டு மேகநிறமுடைய நாராயணப் பெருமான் ஆர்த்தார். தாமரை மலரில் இருக்கும் கடவுள் பிரமதேவன் ஆர்த்தார். சந்திரதேவனும் ஆர்த்தனன். சூரியக் கடவுளும் மகிழ்வால் ஆர்ப்பரித்தனன். 208

மறலி ஆர்த்தனன் மாருதங் கட்கெலாம்
இறைவன் ஆர்த்தனன் இந்திரன் ஆர்த்தனன்
அறைக டற்கர சானவன் ஆர்த்தனன்
குறையில் செல்வக் குபேரனும் ஆர்த்தனன்.

இயமன் ஆர்ப்பரித்தனன்: காற்றுக் கெல்லாம் இறையோனுன வாயுதேவன் ஆர்ப்பரித்தனன். முழங்கிடும் கடல்களுக்கு இறையோனுன வருணன் ஆர்ப்பரித்தனன். குறைவிலாத சங்கநிதி பதுமநிதியுடைய செல்வக்குபேரனும் மகிழ்வால் ஆர்ப்பரித்தனன். 209

ஆர்த்த ஓசைபோய் அண்டத்தை முட்டியே
சூர்த்த நோக்குடைச் சூரபன் மன்செவிச்
சீர்த்து ளைக்குட் செறிதலுந் தேவரைப்
பார்த்த னன்கடு உண்டன்ன பான்மையான்.

இவர்கள் யாவரும் ஆர்ப்பரித்து மகிழ்ச்சியால் போட்ட சத்தமானது சென்று அண்டங்களையும் முட்டி, பார்த்தற்கு பயங்கரமான பார்வையுடைய சூரபன் மனது காதுகளின் சீருடைய துளைகளில் செறிதலும், அதுவேளை தேவர்களை எல்லாம் பார்த்தான். பார்க்கும் போதே நஞ்சுண்ட தன்மை போன்று வெறித்துப் பார்த்தான். 210

மாறிலென்முன் வருவதற் கஞ்சியே
பாறு போன்று பழுவத்து லைந்துளார்
தேறி வந்து தெழித்தனர் என்முனும்
ஆறு மாமுகன் ஆற்றல்கொண் டேகொலாம்.

இவர்கள் மாறின்றி என்பணி செய்ய என்முன் வருவதற்குப் பயந்து பருந்து போல காட்டில் மறைந்து உழன்று ஓடித்திரிந்துள்ளவர். இப்போது பயம் தீர்ந்து நேரில் வந்து என்முன்னுமா சத்தமிட்டு ஆர்க்கின்றனர். இந்தக் குழந்தையான ஆறு முகனுடைய வலியைக் கொண்டோ இதை இவர்கள் செய்தனர். 211

நன்று நன்றிது நான்முகன் ஆதியா
நின்ற தேவர் நிலையழித் தொல்லையில்
கொன்று பின்னர்க் குமரனை வெல்வனுல்
என்று சீறினன் யாரையும் எண்ணலான்.

நல்லது நல்லது நான்முகமுடைய பிரமதேவன் முதலாக இங்கு நின்ற தேவர்களது வானில் நின்ற நிலையினை அழித்து உடனடியாக இவர்களைக் கொன்று பின்னராக குமரனை நான் வென்றிடுவேன் என்று கூறி மானத்தால் சீறினுன். யார் என்ற தன்மையாக எவரையுமே மதித்து எண்ணிடாத சூரபன்மன். 212

இருக்க மைந்தன் இகலிவண் விண்ணிடைச்
செருக்கு தேவர் திறலினைச் சிந்துவான்
அருக்க னேடிய அந்தரத் துய்க்குதி
தருக்கு தேரினைச் சாரதி நீயென்றான்.

இந்தக் குமரனுடன் செய்திடும்போர் இங்கு இவ்வளவுடன் இருக்கட்டும்; வானில் செருக்கு உள்ளாராய் நின்று கோஷமிடும் தேவர்கள் வலியை நீக்குவேன்; ஆதலின் எனது சாரதியே சூரியதேவன் ஓடித்திரிகின்ற அந்தரமார்க்கத்தில் சிறப்பும் பெருமையும் மிகுந்த எனது தேரைச் செலுத்திடுவாய் என்றான். 213

மற்றிவ் வாறு வலவனை நோக்கியே
சொற்ற காலைத் தொழுதெந்தை நன்றெனுப்
பொற்றை போலும் பொலன்மணித் தேரினை
வெற்றி யாகென விண்மிசைத் தூண்டினன்.

இந்தவிதமான வார்த்தையால் சாரதியினை நோக்கி சூரபன்மன் சொல்லிய நேரத்தில் சாரதி அதுகேட்டுத்தொழுது எந்தை பெருமானே நன்று என்று மலை போலும் அழகுடன் விளங்கிடும் மணித்தேரினை இன்று வெற்றியாகட்டும் என ஆசிர்வதித்து வான்மேல் தேரைச் செலுத்தினன். 214

பாகன் தூண்டிய பாண்டிலந் தேரெழீஇ
மேகங் கீண்டு மிசைப்படு சூறையின்
ஆகங் கீறி அமரர்கள் ஈண்டிய
மாகஞ் சென்றது வானிழிந் தென்னவே.

தேர்ச்சாரதி செலுத்திய பெரும் சில்லுகளையுடைய தேரானது எழுந்து மேகத்தைக் கிழித்துக்கொண்டு அதன்மேற்பட்ட வாயுமண்டலத்தையும் கிழித்து தேவர்கள் நெருங்கிநின்ற வான் பதத்தைச் சேர்ந்தது. இத்தன்மையால் வானம் கீழ் இறங்கியதோ என்னும்படியாயது. தேர்போன வேகத்தில் வான் பதம் கீழ் இறங்கியதோ எனும்படி தேர்சென்று வான்பதத்தைச்சீக்கிரமாக அடைந்துகொண்டது. 215

சென்ற தேரொடு சேணிடைப் புக்குளான்
குன்ற மன்ன கொடுஞ்சிலை கோட்டியே
துன்று தேவர் தொகைஇரிந் தோடுற
மன்ற வாளி மழைகளை வீசினன்.

வான் பதத்தில் சென்ற தேருடன் வான்பதம் புகுந்த சூரபன்மன் மலை போன்ற தனது கொடிய வில்லை வளைத்து அங்கு கூட்டாக நின்ற தேவர்களின் தொகை அச்சத்தால் அவ்விடம்விடுத்து ஓடுமாறு மிகவும் நெருக்கமாக ஓயாது சென்றிட அம்பாகிய மழைகளைச் சொரிந்தான். 216

வீசு கின்றுழி விண்ணவர் மேற்சரம்
நீசன் விட்டிடு நீர்மையை நோக்கியே
ஈசன் மாமகன் ஈண்டுநின் றெண்ணிலா
ஆசு கங்களுய்த் தங்கவை சிந்தினன்.

சூரபன்மன் தேவர்கள்மீது அம்பினை வீசுதலும், நீசன் அத்தேவர்கள்மேல் அம்பு விடுகின்ற அச்செயலை நோக்கி ஈசன்சிவனுடைய பெருமகன் முருகப்பிரான் இப்பூமியில் நின்றவாறே எண்ணற்ற அம்புகளைத் தாமும் செலுத்தி தேவர்கள்மீது சூரபன்மன்விடுத்த அம்பினை அறுத்துத் தள்ளினர். 217

வேறு

மற்றவை துணித்தபின் வடிக்கயிறு முட்கோல்
பற்றிய தடக்கையுள பாகுதனை நோக்கிக்
கொற்றஅயில் தூண்டியொரு குன்றைவெளி கண்டோன்
தெற்றெனவிண் மேல்நமது தேர்விடுதி யென்றான்.

சூரபன்மனுடைய அந்த அம்புகளைத் துணித்த பிற்பாடு கடிவாளக் கயிற்றையும் சவுக்கினையும் பிடித்துக்கொண்ட பெரும் கையுடைய சாரதியான வாயுதேவனை நோக்கி கொற்றம் மிகுந்த வேலைச் செலுத்தி ஓர் கிரவுஞ்ச மலையை பிளந்து வெளிகண்டோராகிய சண்முகப் பெருமான் சீக்கிரமாக வானமேல் நீ நமது தேரை விடுவாயாக என்றார். 218

என்னலும் இறைஞ்சிஇர லைப்பரியின் மேலோன்
பொன்னுலகு பாருலகு புக்கெழுவ தென்ன
மின்னின்மிளிர் தேரதனை விண்மிசைக டாவி
நன்னெறி செலாஅவுணர் நாயகன்முன் உய்த்தான்.

என்று எம்பிரான் மொழிந்தருளுதலும் நன்று என்று வணங்கி கலைமான்
வாகனத்தின்மேல் வருபவராகிய் வாயுதேவன் தேவ உலகம் பூமியான இவ்வுலகில்
வந்து மீண்டுபோகின்றது எனும்படி மின் ஒளியால் சிறந்துற்ற எம்பிரானது மனோ
வேகம் என்னும் தேரினை வான்மேல் செலுத்தி அங்கு முன்போன நன்நெறியில்
ஒழுகிவராத அசுரர்களின் தலைவன் சூரபன்மன் முன்கொண்டு சென்று விடுத் 219
தான்.

வையநெடு வானமிசை வல்லைபுகும் எல்லை
ஐயன்இமை யோர்கள் அயர்ந் தோடுவது நோக்கி
நையலிர் புலம்பலிர் நடுங்கலிர்கள் என்றோர்
செய்யகரம் ஏந்திமுரு கன்கருணை செய்தான்.

எம்பிரான் தேரானது நெடிய விசும்பில் விரைவாகச் செல்கின்ற நேரத்து
எமது ஐயன் ஆறுமுகன், தேவர்கள் அச்சத்தால் வானில் நின்றும் அயர்ச்சிகொண்டு
ஓடுவதை நோக்கி 'தேவர்களே நீங்கள் அஞ்சவேண்டாம்; புலம்பவேண்டாம்;
நடுங்கவேண்டாம்' என்று தமது செம்மையான திருக்கரமொன்றைக் காண்பித்து 220
அபயம் கொடுத்து எம்பிரான் கருணை புரிந்தார்.

கந்தன்மொழி வானவர்க ணத்தவர்கள் கேளா
எந்தையிவண் வந்திடலின் யாமுயிர் படைத்தே
உய்த்தனம் எனாவிரைவில் ஓடுவது நீங்கிச்
சிந்தைமகிழ் வத்தொடு திகந்தமுற நின்றார்.

முருகப்பெருமானுடைய திருவாக்குகளை தேவர்களும் ஏனைய கடவுளர்களும்
கேட்டு எந்தை பிரபுவே தேவரீர் இங்கு வருதலால் நாம் எமது உயிரை மீளவும்
பெற்றுக்கொண்டு உய்ந்துள்ளோம் என்று கூறி விரைவாக ஓடுவதை விடுத்து
கவலை நீங்கி சிந்தைபெரும் மகிழ்வாகி வான்பதத்தின் எல்லையில் பழமைபோல் 221
நின்றார்கள்.

நின்றிடலும் வெவ்வவுணன் நீர்மையது நோக்கிப்
பின்றிடுவ ராம்பிரம னேமுதல தேவர்
ஒன்றோர்சிறு வன்கொலெனை உற்றெதிரு நீரான்
நன்றிதென வேவெகுளி கொண்டுநகை செய்தான்.

தேவர்கள் அவ்வாறு நின்றிடலும் கொடிய அசுரன் சூரபன்மன் அந்த நீர்
மையை நோக்கி நான் வந்ததும் பின்னிட்டு ஓடுகின்றார்களாம் இந்த பிரமன்
முதலான தேவர்கள். அப்படி இருப்ப இங்கு ஓரேயொரு சிறுவனோ எனை அடைந்து
எதிர்த்து நின்று போரிட வல்லனாகி முன் வந்தவன். இது நன்றாயிருக்கின்றது என 222
கோபமுற்று நகைத்தான்.

காய்சின மிகுந்தவுணர் காவலன் அநந்தம்
ஆசுகம் விரைந்துபடர் ஆசுகம தென்ன
வீசுதலும் வாளிபல விட்டவை விலக்கி
ஈசனருள் மாமதலை ஏற்றிகல் புரிந்தான்.

எவ்வரையும் அழித்திடும் கோபம் மிகுந்த அசுரர்களின் காவலனாகிய சூரபன்
மன் அநந்தம் அம்புகளை எடுத்து விரைவாக எழுந்தோடும் நாகபாம்புகளைப்
போன்று எம்பிரான்மேல் வீசுதலும், எமது ஈசன் சிவனின் பெருங்குமரன் ஆறு
முகப்பெருமானும் அதுவேளை அம்புகள் பலவற்றைச் செலுத்தி சூரனது அம்புகளை 223
விலக்கி சூரனை எதிர்த்துப் போர்புரிந்தார்.

சுறுக்கொள மயிர்ப்பொடி உயிர்ப்புவிடு சூரன்
கறைக்கதிர் அயிற்பொலி கரத்தன்இவர் தம்மில்
செறுத்துடன் வடிக்கணை செலுத்திஅகல் வானம்
மறைப்பது மறுக்குது மாகிமலை வுற்றார்.

சுறுக்கென்று உரோமங்கள் சிலிர்த்திடும்படி கோபத்தால் மூச்சுவிடும் சூரபன் மனும், இரத்தக்கறையுடன் ஒளியுடை வேற்படையை திருக்கரத்தில் ஏந்தியவரு மான ஆறுமுகப்பெருமானுன இருவரும் தம்மில் கோபமுற்று உடன் வடிக்கணை களைச்செலுத்தி அந்த அம்புகளால் அகன்ற வானவெளியினை மறைப்பதும் பின் னர் அறுப்பதுமாகப் போரிட்டார்கள். 224

## வேறு

விரைந்திரு வோர்களும் வியன்கணை மாரிகள்
சொரிந்தனர் பேரமர் தொடர்ந்துசெய் போழ்தினில்
எரிந்தது மாதிரம் இரங்கினர் பாருளர்
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே.

விரைவாக இருவோர்களும் பெருமையுற்ற அம்பாகிய மழைகளை சொரிந்து பெரிய போரினைத் தொடர்ந்து இவ்வண்ணம் செய்கின்ற காலத்தில் அம்புகள் அறுபட்டு முரிதலாகும்பொழுது எழும் நெருப்பால் திக்குகள் எங்கும் தீப்பற்றி எரிந்தது; பூமியில் உள்ளார் சலித்து இரங்கினர். இருவருடைய சிறந்த தேர்களும் இடம்வலம் என மாறிமாறிச் சுழன்று திரிந்தன. 225

கறங்கினம் போல்வன கலஞ்செய் குலாலன
திறங்கெழும் ஆழிகள் திரிந்தன மானுவ
மலங்கெழு சூறைகள் மயங்கின போல்வன
துறுங்கணை மாரிகள் சொரிந்தவர் தேர்களே.

காற்றாடியைப்போன்று அங்குமிங்கும் மாறிமாறிச் செல்வன. மட்பாத்திரம் செய்யும் குயவனுடைய திறமையுள்ள சக்கரம் சுழல்வதுபோன்று சுழன்று கொள் வன. கொடுமையால் உலகை அழித்திடும் சூறுவளிக் காற்று சுழன்றடித்தல் போல் வன. கொடிய அம்பின் மழைகளைச் சொரிந்துவரும் அவர்களது தேர்கள். 226

பாதல மூழ்வகு பாரிடை சூழ்குவ
மாதிர மோடுவ வாரிதி சேர்குவ
பூதர மேவுவ பூமல ரோன் நகர்
மீதினும் ஏகுவ மீளுவ தேர்களே.

இன்னமும் அவர்களுடைய தேர்கள் பாதாளம்போய் வருவன; பூமியைச் சுற்றி ஓடிவருவன, திக்குகளில் ஓடுவ, கடல்மீது சேர்குவ, மலைகளிலும் செல்வன. தாமரை மலர்மீதிருக்கும் பிரமதேவனுடைய உலகிலும் செல்வன, மீண்டு வருவன. 227

எண்டிசை சூழும் இருங்கடல் பாய்வன
விண்டொடு நேமி வியன்கிரி வாவுவ
கொண்டலின் ஆரிருள் கொண்டுழி போகுவ
அண்டமுன் ஏகுவ அங்கவர் ஏறுதேர்.

எட்டுத் திக்கிலும் சூழ்ந்துவரும் பெருங்கடலில் அவர்கள் தேர்பாய்வன; வான உலகினைத் தொடும்படி உயர்ந்த சக்கரவாளமலையிற் செல்வன; அப்பால் மேகத்தையொத்த கொடிய இருள் சூழ்ந்த அப்பகுதியிலும் போவன; அப்பாலுள்ள அண்டங்களிலும் செல்வன அவர்கள் ஏறிய தேர்கள். 228

பெயர்ந்திடு தேருறு பிழம்பவை காணுபு
தியங்கினர் நான்முகர் தெரிந்திலர் சீருரு
மயங்கினர் ஆதவர் மருண்டனர் வானவர்
உயங்கினர் பாருளர் உலைந்தனர் நாகரே.

மிக விரைவாக இடம்பெயர்ந்து வேகமாகச் செல்கின்ற இருவோருடைய தேர்களில் பளிச்சிடும் ஒளிப் பிழம்புகளைக் கண்டபோது நான்முகமுடைய கடவுளர்களேதியங்கினூர்கள். தேரின்சீரிய உருவத்தைத் தெரிந்திட முடியாதபடி சூரியர் மயங்கினூர்கள்; தேவர்கள் வெருண்டார்கள்; பூமியிலுள்ளோர் சோர்வுற்றூர்கள்; நாக உலகத்தவர் உலைவுகொண்டனர். 229

முதிர்ந்திடு போரினர் முழங்கிய தேர்செல
அதிர்ந்தது பாருல கலைந்தன வேலைகள்
பிதிர்ந்தன மால்வரை பிளந்தது வான்முக
டுதிர்ந்தன தாரகை உகுந்தன கார்களே.

அம்பு செலுத்தலால் முதிர்ந்த போரினைக்கொண்ட இருவரது முழங்கிய ஓசையுடைய தேர்சென்றிட பூமியான உலகுகள் நிலைகெட்டு அதிர்ந்தது; சமுத்திரங்கள் அலைந்தன; பெரியமலைகள் பிளவுபட்டன; வானில் உற்ற அண்டச் சூழலும் பிளவுபட்டது. நட்சத்திரங்கள் உதிர்ந்தது; முகில்களும் வீழ்ந்தன. 230

### வேறு

தேரிவை இரண்டு மாகித் திகழுமு தண்ட மெங்குஞ்
சாரிகை வருத லோடுஞ் சண்முகன் மீது செல்லச்
சூரெனும் அவுணர் கோமான் தொலையுநாள் எழிலி பொங்கி
ஆரழல் மழைகான் றென்ன அடுசர மாரி தூர்த்தான்.

இருவோருடைய இத்தேர்கள் இரண்டுமாகத் திகழ்ந்து விளங்கிடும் முதிய அண்டங்கள் எங்கும் வட்டமாகச் சூழ்ந்து வருதலோடும் அதுவேளை அசுரர் தலைவன் சூரபன்மன் சண்முகப்பெருமான்மீது சென்றிடுமாறு உலகம் தொலைவுறு நாளில் மேகங்கள் பொங்கி கொடிய நெருப்பு மழையைப் பெய்தல் போன்று கொலை நிகழ்த்தும் அம்பாகிய மழையைச் சொரிந்தான். 231

மழுப்படை அநந்த கோடி வச்சிரந் திகழ்முச் சென்னிக்
கழுப்படை அநந்த கோடி கப்பணம் அநந்த கோடி
கொழுப்படை அநந்தகோடி குலிசம்வேல் அநந்தகோடி
எழுப்படை அநந்த கோடி இடையிடை இடிபோல் உய்த்தான்.

அத்துடன் மழுப்படை அனந்த கோடியையும் வச்கிரப்படை அநந்த கோடியையும் திகழும் முச்சுடருடைய கழுவாயுதம் அநந்த கோடியையும், கப்பணம் அநந்த கோடியையும், கலப்பைப்படை அநந்த கோடியையும், எழுவாயுதம் அநந்த கோடியையும் அந்த அம்புகளுக்கு இடையிடையாக இடிபோன்று விடுத்தான். 232

கூற்றுயிர் குடிக்குந் துப்பிற் கொடும்படை மாரிதன்னை
ஆற்றலின் அவுணர் கோமான் விடுத்துழி அவற்றை யெல்லாங்
காற்றெனப் பகழி தூண்டி முறைமுறை கடிதிற் சிந்தி
மாற்றினன் திரிந்தான் ஐயன் மூதண்ட வரைப்பு முற்றும்.

இயமனுடைய உயிரையுமே குடித்திடும்படியான வலியுடைய கொடிய இப்படைகளின் மழை தன்னை மிக்க சாமர்த்தியத்தோடும் அசுரர் தலைவன் சூரபன்மன் செலுத்தியிடலும் அந்தப் படைகளை எல்லாம் காற்றைப்போலச் செல்லுமாறு அம்புகளைச் செலுத்தி முறைமுறையாக அவைகளை விரைவில் அழித்தவாறு எமது ஆறுமுக ஐயன் வானமும் முதிய அண்டங்களின் எல்லை எங்கணும்திரிந்தார். 233

இத்திறந் திரிந்த செவ்வேள் இடைதெரிந் தேழொ டேழு
பொத்திரந் தன்னைத் தூண்டிப் புகழுறும் அவுணர் செம்மல்
சித்திரத் தேரும் மாவின் தொகுதியுஞ் சிந்தி நீக்கக்
கைத்தனு வோடுந் தீயோன் கதுமெனப் புவிக்கண் உற்றான்.

இத்திறமாகத் திரிந்த எமது பெருமான் ஓர் நல்ல தருணமான காலத்தைத் தெரிந்து பதினான்கு அம்புகளைச் செலுத்தி தன்னையே பெரிதும் மதித்துப் புகழ் கொண்ட அசுரர் தலைவன் சூரபன்மனின் சித்திரப்பாடுடைய தேரையும் அதில் பூட்டிய குதிரையின் கூட்டத்தையும் அழித்து நீக்கிடச் சூரபன்மன் தேரிழந்த பாது கையில் பிடித்த வில்லுடன் பூமியில் வந்துற்றான். 234

நாணுடை வரிவில் வாங்கி நண்ணலன் நஞ்சு பில்கும்
ஏணுடை வயிர வாளி எண்ணில தூண்டி ஏற்பத்
தாணுவின் மதலை கண்டு தன்பெருஞ் சிலையைக் கோட்டித்
தூணிகொள் கணையின் மாரி தொடுத்தவை துணித்து விட்டான்.

பூமியில் வந்துற்ற பகைவன் சூரபன்மன் நாண்கொண்ட தனது வில்லை வளைத்து நஞ்சினைக் கக்கிடும் கொடுமை கொண்ட வயிர அம்புகள் எண்ணற்றவற்றைச் செலுத்தி மீண்டும் எம்பிரானுடன் போரிட ஏற்று நிற்ப, அதுவேளை சோதியாகும் சிவபரஞ் சுடரின் திருக்குமரன் கண்டு தமது பெருவில்லை வளைத்து அம்புக்கூட்டி லிருந்து அம்புகளை மழை சொரிதல்போன்று வில்லில் தொடுத்து விடுத்து சூர னுடைய அம்புகளை அழித்திட்டார். 235

துணிப்புறும் எல்லை வல்லே சுடர்க்கணை அநந்த கோடி
தணப்பற விடுத்த லோடுஞ் சண்முகன் அவற்றை யெல்லாங்
கணைப்பெரு மழையால் மாற்றிக் காசிபன் தனது செம்மல்
அணிப்படு தோள்மேற் பின்னும் ஆயிரம் பகழி உய்த்தான்.

எம்பெருமான் சூரபன்மனது அம்புகளைத் துணித்திட்ட நேரத்தில் விரைவாகச் சுடர்கொண்ட அம்புகள் அநந்த கோடியானவற்றைப் பின்னரும் அவன் ஓய்வின்றி எம்பிரான்பால் விடுத்தலோடும், சண்முகக் கடவுள் அந்த அம்புகளானவற்றை யெல்லாம் தாம் விடுக்கும் மழைபோன்ற அம்புகளால் மாற்றி காசிப முனிவனின் திருக்குமாரன் சூரனது ஆபரணம் நிறைந்த தோள்மேற் பின்னரும் ஆயிரம் அம் புகளை விடுத்தார். 236

ஊழியின் முதல்வன் மைந்தன் ஓராயிரங் கணையுஞ் சூரன்
பாழியம் புயத்து மீது படுதலுங் கடிதே இற்றுச்
சூழுறச் சிதறிற் றம்மா தொலைவிலா வயிரங்கொண்ட
காழ்கிளர் வரைமேல் வீழ்ந்த கன்மழைத் தன்மை யேபோல்.

ஊழியின் காலம் பலவரினும் அதில் எல்லாம் ஒருவனாகவே விளங்கும் முதல் வன் சிவபிரானது திருக்குமாரன் முருகக்கடவுள் எய்த ஓராயிரம் அம்புகளும் சூர பன்மனது பருத்த அழகுடைய தோள்மீது படுதலும் விரவாக அம்புகள் அழி வுற்று பொடியாகச் சூழ்ந்து சிதறிப்போயது எதுபோல் எனில் தொலைவிலாத வயிர மாகக்கொண்ட உரம்செறியும் மலைமீது வீழ்ந்த கன்மழைத்தன்மையேபோல். 237

அந்தமில் வன்மை சான்ற அவுணன்மற் றதனை நோக்கி
முந்துறு வெகுளி தூண்ட முறுவலும் உயிர்ப்புந் தோன்ற
எந்தைதன் மொய்ம்பிற் செல்ல இராயிரம் பகழி வாங்கிச்
சிந்தையிற் கடிது தூண்டித் தேவரும் மருள ஆர்த்தான்.

அந்தமில்லாத வலிமையுடைய சூரபன்மன் மற்று இந்தத் தன்மைகளைக் கண்டு எதற்கும் முன்னான கோபம் பெருகிட சிரிப்பும் பெருமூச்சும் தோன்றிட எந்தை பெருமானுடைய தோள்மேல் சென்று படும்படி இரண்டாயிரம் அம்புகளை எடுத்து மனதிலும் கடிது செல்லுமாறு செலுத்தித் தேவரும் இதுகண்டு மயங்கி அஞ்சு மாறு ஆரவாரித்தான். 238

உட்டெளி வுற்றார் காணும் ஒப்பிலா முதல்வன் தோள்மேல்
விட்டிடு பகழி முற்றும் வெந்துவெந் துகள தாகிப்
பட்டன திசைகள் முற்றும் பரந்தன பரத்தின் மேலோன்
கட்டழல் அதனுல் மாய்ந்த காமவேள் யாக்கை யேபோல்

பிறவியின் பயன் உணர்ந்து ஈசனை அடைதலே இன்பமென்ற உள்ளத் தெளிவுடையோர் காண்கின்ற ஒப்பிலாத முதல்வனுன ஆறுமுகப்பெருமான் தோள்மேலாக விடுத்திட்ட அம்புகள் முற்றும் அங்கு செல்லுமுன்பே வெந்து கொடும் துகள்களாகப் பட்டுப்போயின. அத்துகள் திசைகள் முழுவதும் பரந்தன. இது எதுபோலாயிற்றென்ருல் எப்பொருட்கும் மேலாகி மேலான சிவபிரானுடைய நெற்றிக்கண் அதனுல் மாய்ந்துபோன மன்மதனுடைய உடல் சாம்பலானது போன்று. 239

ஆங்கது காலை தன்னில் அறுமுகம் படைத்த ஐயன்
நீங்கரு நெறியால் உய்த்த நெடுஞ்சரம் அனைத்தும் மாற்றிப்
பாங்கமர் வயவர் மீதும் பாரிடப் படைகள் மீதுந்
தீங்கனை அழுத்த லுற்றான் தேவரை இடுக்கண் செய்தான்.

அவ்வாருகிய காலையில் ஆறுமுகம்கொண்ட ஐயர்பெருமான் நீங்குதலில்லாத நெறியால் விடுத்திட்ட நீண்ட பெரும் அம்புகள் அனைத்தையும் மாற்றி பக்கராக உள்ள வீரர்கள்மீதும் பூதப்படைகள்மீதும் கொடிய அக்கினிக்கணைகளைச் செலுத்தலுற்றான், தேவர்களை எல்லாம் பொல்லாத இடுக்கண் செய்த சூரபன்மன். 240

தன்னிணை தானே யாகி நின்றிடுந் தனிவேல் வீரன்
அன்னதோர் தன்மை கண்டோ ராயிரம் பகழி பூட்டித்
துன்னலன் குனித்த சாபந் துணிந்தனன் துணியா முன்னம்
பின்னுமோர் சிலையை ஏந்திப் பெருமுகில் இரிய ஆர்த்தான்.

தனக்கு இணை தானேயாகி நின்றிடுகின்ற தனிவேலினைக் கைக்கொண்ட வீரராகும் ஆறுமுகப்பெருமான் அவனது அந்தச் செயலைக்கண்டு ஓர் ஆயிரம் அம்பினைப் பூட்டி பகைவனுன சூரபன்மன் பிடித்த வில்லை முரித்து எறிந்தார். அந்த வில்லை முரிப்பதற்கு முன்பே சூரபன்மன் பின்னருமோர் வில்லை எடுத்து பெருமுகிலும் பயந்தோடிடும்படி முழங்கி ஆரவாரித்தான். 241

இம்பரின் மலைந்த சூரன் இம்மென வருக்கொண் டேகி
அம்பரத் திடையே தோன்ற அன்னது குமரன் காணு
உம்பரிற் சென்று தாக்க ஓரிறை எதிர்ந்து நின்று
நம்பியொ டாடல் செய்வான் நவிலரும் மாயை சூழ்வான்.

இவ்வுலகில் நின்றும் போர்புரிந்த சூரபன்மன் இம்மெனத் தனது உடலை மறைத்து அருபியாகிச் சென்று வானின் இடையே தோன்றுதலும் அதனை முருகப் பெருமான் கண்ணுற்றருளி தாமும் அங்கு வான வெளியில் சென்று தாக்கிட அதுவேளை எம்பெருமானுடன் சூரபன்மன் ஓர் இறைப்பொழுது நின்று போரிட்டு பின்னர் எம்பிரானுடன் மீண்டும் போர் செய்தற்கு வேண்டி சொல்லற்கரிய பல மாயைகளைச் செய்வான். 242

விண்ணிடை நின்ற சூரன் விரைந்துடன் கரந்து சென்று
மண்ணிடை மீட்டுஞ் செல்ல மாநில வரைப்பிற் செவ்வேள்
துண்ணென வந்து வெம்போர் தொடங்கலுந் தோற்ற மாற்றிக்
கண்ணகல் தூய நீத்தக் கனைகடல் நடுவண் ஆனுன்.

வானில் நின்ற சூரபன்மன் விரைவாக உடன் மறைந்து சென்று பூமிமீது மீண்டும் வந்திட எம்பெருமானும் இப்பூமியின் எல்லையில் திடீரென அவனைத் தொடர்ந்து வந்து அவனுடன் கொடும் போரைத் தொடங்கலும் சூரபன்மன் பின்னரும் தனது தோற்றத்தை மாற்றி பரந்து அகன்ற தூயநீராகி ஒலிமிக்க கடலின் நடுவணுகச் சென்று நின்றுன். 243

ஆயிடை முருக வேள்சென் றடுசமர் இயற்றும் எல்லை
மாயையின் மறைந்து சூரன் மாதிர முடிவில் தோன்ற
ஏயென ஆண்டுஞ் செவ்வேள் ஏகியே நெடும்போர் ஆற்றக்
காய்கனல் உமிழும் வேலோன் கரந்துபா தலத்தின் நின்றான்.

அவ்விடத்தும் முருகப் பெருமான் சென்று கொலை நிகழும் போரினைப் புரித லும் அவ்வேளையிலும் சூரபன்மன் மாயையால் மறைந்து திக்குகளின் எல்லையில் தோன்ற "ஏ" என்னும் அளவின்முன் அவ்விடத்தும் முருகப்பெருமான் சென்று தாக்கி பெரும்போர் செய்திட அதுவேளை காய்கின்ற நெருப்பைப்போலும் கொடிய வேலுடைய சூரபன்மன் அங்கு நின்றும் மறைந்து பாதலத்தில் நின்றான். 244

ஆறிரு தடந்தோள் வள்ளல் அதுகண்டு பிலத்து ளேகி
மாறமர் இயற்றும் எல்லை வல்லைதன் னுருவ மாற்றி
விறுள சிமையைச் செம்பொன் மேருவின் குவட்டின் நிற்ப
ஏறுடை முதல்வன் மைந்தன் இம்மென அங்கட் சென்றான்.

அதுவேளை அழகுநிறைந்த பன்னிரு தோளுடைய அருள்வள்ளல் அதுகண்டு தாமும் பாதாள உலகில் சென்றருளி அவனுடன் மாறான பெரும்போரினைப் புரிந் திடும் எல்லையில் அங்கும் மிகு சமர்த்துடன் சூரபன்மன் தனது உருவத்தை மாற்றி சத்தி மிகுந்த முடியுடைய மேரு என்னும் செம்பொன் மலையின் உச்சியில் தோன்றி நிற்ப, அதுவேளை இடப வாகனமுடைய சிவபெருமான் திருக்குமரன் முருகக் கட வுள் இம்மெனும்படி அங்கு சென்றார். 245

மேருவின் சிகரம் நண்ணி வேலுடைத் தடக்கை வீரன்
பேரமர் இயற்றத் தீயோன் பின்னரும் ஆண்டு நீங்கி
நாரணன் உலகில் தோன்ற நம்பியுந் தொடர்ந்து போந்து
சூரெனும் அவுண னோடு தொல்சமர் ஆற்றி நின்றான்.

மேருமலையின் முடியில் சென்று; வேற்படையை திருக்கரத்துடைய வீரனான முருகக்கடவுள் அவனுடன் அங்கு பெரும் போரினைப் புரிந்திடலும் அதுவேளை தீயோனான சூரபன்மன் பின்னரும் அவ்விடம்விடுத்து நீங்கி நாராயணக் கடவுளின் வைகுந்த உலகில் சென்று தோன்றிட எம்பிரானும் சூரனை அங்கு தொடர்ந்து சென்று அந்த அசுரனுடன் முன்னைய பெரும் போரினைப் புரிந்து நின்றார். 246

**வேறு**

ஆற்றிடு கின்ற காலத் தவுணர்கோன் அண்ட கோள
மேற்றிகழ் வாயில் செல்ல விமலனும் அங்கண் ஏகி
ஏற்றெதிர் மலையா அன்னான் ஏறிய இவுளித் தேரைக்
கூற்றுழம் பகழி தன்னால் அட்டனன் கொற்றங் கொண்டான்.

அப்போரினை எம்பிரான் அவனுடன் செய்திடுகின்ற காலத்தில் அசுரர் தலை வனான சூரபன்மன் அங்கு நின்றும் அண்டகோளகையின்மேல் திகழ்ந்திடும் வாயி லில் சென்றிட, எம்பிரானும் அங்கு சென்று அவனுடன் போரை ஏற்று மலைந்து நின்று அவன் ஏறிய தேரை அம்பினால் அழித்து வெற்றிகொண்டார். 247

கந்துக விசய மான்தேர் இற்றலுங் கடுங்கோன் மன்னன்
இந்திர ஞாலம் என்னும் எறுழ்மணித் தடந்தேர் தன்னைச்
சிந்தனை செய்த லோடுஞ் சேண்கிளர் செலவிற் றாகி
வந்திட அதன்மேல் ஏறி வல்லைபோர் புரிதல் உற்றான்.

குதிரைகள் பூட்டிய வெற்றித் தேரானது அழிவாதலும் கொடுங்கோல் அர சனான சூரபன்மன் அதுகண்டு இந்திரஞாலம் எனப் பேர்கொண்ட ஒளிமிகுந்த விசாலமான முத்துத் தேரினை அங்கு வருமாறு சிந்தனை செய்திடுதலோடும் அத் தேர் அதை உணர்ந்து வானில் பொருந்திய மார்க்கமாகி வந்திடுதலும் அத்தேர் மேலாகி ஏறிக்கொண்டு சூரபன்மன் விரைவுடன் போர்புரியலுற்றான். 248

மண்டமர் புரியும் எல்லை வள்ளல்தன் பகழி தன்னால்
அண்டம தடைந்த வாயில் அடைத்ததும் அப்பால் உள்ள
தண்டம தெல்லாஞ் செல்லாத் தன்மையுந் தகுவர் கோமான்
கண்டனன் நன்று நன்றென் னிறைத்தொழிற் காவ லென்றான்.

கொடிய பெரும்போரினை சூரபன்மன் புரிகின்ற நேரத்தில் அருள் வள்ளல் முருகப் பெருமானது அம்புகளால் அண்டங்களில் அங்கு வெளிப்புறப்பட வைத்த வாயில்கள் அடைபட்டதும், அதனினால் அப்பாலாக இருக்கும் தனது பெருஞ் சேனை எல்லாம் வரமுடியாது இருக்கின்றமையையும் அசுரர்களின் பெரும் தலைவன் சூரபன்மன் கண்டனனாய் நல்லது நல்லது எனது அரசிருந்த தொழிலுக்குரிய காவல் என்றான். 249

இறைத்தொழில் அவுணர் செம்மல் ஏந்துதன் சிலையை வாங்கித்
திறத்தொடும் அநந்த கோடி செஞ்சரந் தூண்டி அண்ட
நெறிப்படு வாயில் பொத்து நெடுங்கணைக் கதவ முற்றும்
அறுத்துநுண் தூளி ஆக்கி அம்பரஞ் சுழல விட்டான்.

அரசத் தொழிலிற்குரிய அசுரரின் தலைவன் சூரபன்மன் கையில் ஏந்திய வில்லை வளைத்து மிக திறமுடன் விரைவில் அநந்தக் கோடி சிவந்த அம்புகளைச் செலுத்தி அண்டங்களில் நின்றும் வெளிவருதற்குரிய பாதைகளை முன்னர் எம்பிரான் அடைத்து வைத்த நீண்ட அம்பின் கதவுகளை துளைத்து முழுவதும் அறுத்துத் தள்ளி நுண்ணிய பொடியாகும்படி செய்து வானவெளியில் அப்பொடிகள் கழலும்படி விட்டான். 250

காவலன் அண்ட வாயிற் கணைகளின் கபாடம் நீக்கி
மாவொடு களிறுந் தேரும் வயவரும் வரம்பின் றாகி
ஓவரு நெறியின் அப்பால் உற்றதன் தானை தன்னைக்
கூவினன் வருக என்று குவவுத்தோள் கொட்டி ஆர்த்தான்.

அசுரர்களின் காவலனான சூரபன்மன் அண்டங்களின் வாயிலை அடைத்து வைத்த அம்புக்கூடுகளை அறுத்து நீக்கி அங்கு வரமுடியாது தடைப்பட்டு நின்ற குதிரைகளுடன் யானையும், தேரும், வீரரும் அளவு கடந்தனவாய் ஓய்வில்லாத முறையால் நின்றனவற்றை இங்கு இனி வாருங்கள் என்று கூவி அழைத்து பருத்த தனது தோளைத் தட்டி ஆரவாரம் செய்தான். 251

ஆர்த்திடு கின்ற காலத் தண்டத்தின் அப்பால் நின்ற
தேர்த்தொகை களிற்றின் ஈட்டந் திறல்கெழும் இவுளிப் பந்தி
சூர்த்திடும் அவுண வெள்ளந் துண்ணென ஈண்டை ஏகிப்
போர்த்தொழில் முயன்று செவ்வேள் புடையுறத் தெழித்துச் சூழ்ந்த

சூரபன்மன் ஆர்த்திடுகின்ற காலத்தில் அண்டங்களின் அப்பால் நின்ற தேர்த்தொகைகள் யானைகளின்கூட்டம் திறமைகொண்ட குதிரைப் பந்திகள் அச்சம் விளைக்கின்ற அசுரர்களாய வெள்ளங்கள் யாவும் திடீரென இவ்விடம் வந்து போர்த் தொழிலினைத் தொடங்கி முருகப் பெருமான் பக்கராக வந்து கர்ச்சனை செய்து அவரைச் சூழ்ந்துகொண்டன. 252

நீணுதல் விழியின் வந்த நிருமலக் கடவுள் தன்னை
ஏணெடும் அண்டத் தப்பால் இருந்திடு தானை சுற்றச்
சேணுறு நெறிக்கண் நின்ற திசைமுகன் முதலாந் தேவர்
காணுத லோடும் உள்ளங் கலங்கிமற் றினைய சொல்வார்.

எம்பிரான் சிவனுடைய நீண்ட நெற்றிக் கண்ணில் நின்றும் வந்த நிருமல மூர்த்தியான கடவுள் ஆறுமுகத்து ஐயனை அண்டங்களின் அப்பாலுள்ள இடங்கள் தோறும் நின்றுவந்த சேனை இறுமாப்புடன் சூழ்ந்துகொள்ள; அச்செயலை மிகத் தூர பூமியான வானநெறிக்கண் நின்ற பிரமன் முதலாகிய தேவர் காணுதலோடும் உள்ளம் கலங்கி இந்த வார்த்தைகளைச் சொல்வார்கள். 253

காலமோ டுலகம் உண்ணக் கனன்றெழு கரிய தீயின்
கோலமோ அண்டத் தப்பாற் குரைபுனல் நீத்தந் தானே
ஆலமோ அசனிக் கொண்மூ ஆயிர கோடி சூழ்ந்த
சாலமோ யாதோ என்று தலைபனித் திரியல் போனர்.

இச்சேனையானது காலங்களுடன் உலகு அனைத்தையும் எரித்து அழித்திடும்படி பின்னொரு காலத்தில் கோபித்தெழுகின்ற ஊழித்தீயெனும் நெருப்பின் கோலமோ; அல்லது அண்டங்களுக்கு அப்பாலாய் சத்தமிடும் பெரும் புறவாழிச் சமுத்திரமோ; அல்லது இடிகள்கொண்ட மேகங்கள் ஆயிரகோடியாகச்சூழ்ந்து நின்ற ஓர் மேகங்களின் திரட்சியோ யாதோ இதுவாகும் எனக்கூறி அச்சத்தால் தலை நடுங்குமாறு ஓடினர்கள் தேவர்கள். 254

ஆயின காலை தன்னில் அண்டங்கள் தோறும் நின்ற
மாயிருந் தகுவன் தானை வந்துதன் மருங்கு சுற்றிப்
பாய்புனல் முகில்கான் றென்னப் படைத்தொகை வீசி ஆர்ப்பத்
தீயுரு வான செம்மல் சிறுதுதன் நாட்டம் வைத்தான்.

அவ்வாறான காலையில் அண்டங்கள்தோறும் நின்ற மிகப்பெரும் அசுரனது சேனைகள் வந்து தனது பக்கராகச் சூழ்ந்து; பரந்து எழுகின்ற முகில்கள் மழை சொரிந்தாற்போன்று; படைகளான தொகையை வீசி ஆர்ப்பரித்திட அதுவேளை தீயின் வடிவாகிச் செவ்வொளிகொண்ட கடவுள் முருகன் சிறிதே அச்சேனைமீது தனது பார்வையை வைத்தருளினர். 255

அடலையின் நலத்தை வீட்டி அரும்பெறல் ஆக்கஞ் சிந்தி
அடலையின் உணர்வின் ருகும் அவுணர்கோன் தானை முற்றும்
அடலையின் நெடுவேல் அண்ணல் அழலெழ விழித்த லோடும்
அடலையின் உருவாய் அண்டத் தொல்லுரு வழித்த மன்னே.

வலியதேவரது நன்மையை அழித்து பெறற்கரிய அவர்கள் செல்வத்தைச் சிதைத்து தனக்கு ஒரு முதல்வன் இருக்கிருன் என்னும் உணர்வில்லாத அசுரர்களின் தலைவன் சூரபன்மனது சேனை முழுவதையும் வலிமையால் மிகுந்துள்ள நெடிய வேற்படைக்கு முதல்வராகும் ஆறுமுகப்பெருமான் நெருப்பு எழும்படி பார்த்தலோடும் அப்பார்வையால் அவை எரிந்து சாம்பலின் வடிவாகி அங்குள்ள அண்டங்களின் தொன்மை வடிவை மாற்றி சாம்பல் மயமாக்கின. 256

முற்படும் அனிக முற்றும் முடிதலும் முடித லின்றி
எற்படும் அண்டத் தப்பால் ஈண்டிய பதாகி னிக்குள்
பிற்பட அளப்பில் சேனை பெயர்ந்துமற் றீண்டை துன்னிச்
சிற்பரன் குமரன் தன்பாற் படைமுறை சிதறிச் சூழ்ந்த.

தமது திருமுன்பு வந்துள்ள சேனை முழுவதும் முடிவாதலும் இன்னமும் முடிவிலாதபடி ஒளியுடன் விளங்கிடும் அண்டங்களின் அப்பாலுள்ள இடங்களின் நெருங்கி நின்ற அளவற்ற அசுரச்சேனை பினனரும் எழுந்து இங்கு மற்று வந்து ஞானமுதல்வராகும் சிவபெருமான் திருக்குமரன்பால் தங்கள் கைகளில் உள்ள படைகளைச் சொரிந்து சூழ்ந்துகொண்டன. 257

பரப்பொடு மிடைந்த தானைப் பரவையை நோக்கி ஐயன்
நெருப்புமிழ் தன்மைத் தென்ன நெட்டுயிர்ப் பனில முந்தி
உரப்பினன் சிறிதே அற்றால் உம்பரில் குவிந்த பூளைப்
பொருப்பிடை அழல்புக் கென்னப் பூழியாய் உலகம் போர்த்த.

திரும்பவும் பரவலாக எங்கும் நெருங்கிச் செறிந்த சேனைகளின் கடலினை நோக்கி எம் ஐயன் நெருப்பை உமிழ்ந்ததன்மை என்னும்படியாக நீண்டதொரு பெருமூச்சான காற்றைச் செலுத்திச் சிறிது உரப்பினர்; அவ்வண்ணம் உரப்புதலோடும் அதனல் வானில் சென்று குவிந்துள்ள பூளைகளின் மலையில் நெருப்புப் பட்டு அவை பொடியாகிப்போனதுபோன்று அச்சேனைகள் யாவும் எரிந்து சாம்பராய் உலகினை மூடின. 258

மாட்சியின் உலவு சேனை வடிவெலாம் விடுத்துத் தொல்லை
மாட்சியின் உயிரே தாங்கி மலைதுமென் றுன்னிப் பின்னுஞ்
சூட்சியின் வளைந்த வாபோற் சோதிவேற் குமரன் தன்பாற்
சூட்சியின் மேவிற் றம்மா தூயநுண் துகளின் ஈட்டம்.

மேன்மையுடன் போரிடும்படி அவ்விடம் வந்து உலவிய சேனையானது தனது வடிவை இப்பொழுது விடுத்துத் தமது உடல் எடுக்க முந்திய நிலையில்கொண்ட உயிர் ஒன்றினையும் தாங்கி இந்த உயிருடன் எம்பிரானுடன் போரிடுவோம் என நினைந்து பின்னரும் சோதிவேற் குமரன்பால சூழ்ச்சியாக வளைந்துள்ளது போன்று அந்த தூயதான புழுதியின் கூட்டம் எம்பிரானை முற்றிலும் மூடிக்கொண்டது. 259

அந்தமில் தானை முற்றும் அத்தன்ஓர் உங்கா ரத்தால்
வெந்துக ளாகப் பின்னும் மேலையண் டத்துள் நின்ற
தந்தியும் பரியுந் தேருந் தானவப் படையும் ஆர்த்து
வந்துவந் தயலிற் சூழ வரம்பிலா முதல்வன் கண்டான்.

அந்தமில்லாத சேனை முழுவதும் எம்பெருமானுடைய ஓர் உங்காரத்தினால் வெற்றுச் சாம்பர் புழுதியாகிட; பின்னரும் மேலுள்ள அண்டத்துள்ளே நின்ற யானையும், குதிரையும், தேரும் அசுரப்படையும் ஆரவாரித்து வந்துவந்து அயலிலே சூழ்தலும் வரம்பிலா அருளுடைய முதல்வன் ஆறுமுகப்பெருமான் கண்டருளினார். 260

திருத்தமிழ் மதுரை தன்னிற் சிவன்பொருள் நிறுக்கு மாற்றால்
உருத்திர சருமனாகி உற்றிடு நிமலன் வெம்போர்
அருத்திகொள் கணிச்சி சூலம் ஆழிதண் டெழுவ தாகுங்
கரத்தினிற் படைகள் தம்மை நோக்கியே கழற லுற்றான்.

திருத்தகும் சிறப்புடைய மதுரை நகரத்தில் எழுந்தருளி இருக்கும் சோமசுந்தரக் கடவுள் உலகிற்கு தமிழின் பெருமை சிறக்குமாறு அருள்புரிந்த இறையனார் அகப்பொருள் நூலின் உண்மைப் பொருளினை உலகிற்கு எடுத்து உணர வைக்கும் முகமாக அம்மதுரையில் உப்பூரிக்குடிக்கிழார் குலத்தில் உருத்திரசன்மன் என்னும் நாமமுடன் அவதரித்து நின்றருளிய நின்மலப் பொருளாகும் முருகப்பெருமான் வேகமான சத்தியுடைய கணிச்சி சூலம் சக்கரம்தண்டு எழுப்படை என்னும் திருக்கரத்தினில் இருந்த ஐந்து படைகளை நோக்கி இதனைச்சொல்லியருள்கின்றார். 261

வென்றியம் படைகள் கேண்மோ விரைந்துடன் தழுவி நம்பாற்
சென்றிடும் அனிகந் தன்னைச் சென்னெறி பெறுமல் அப்பால்
நின்றிடு படையை எல்லாம் நீவிர்பல் லுருக்கொண் டேகிக்
கொன்றிவண் வருதி ரென்று கூறிமற் றவற்றைத் தொட்டான்.

வெற்றிகொண்ட அழகுடைய படைகளே! கேளுங்கள்; விரைவாக உடன் என்னை வளைத்து எம்பால் போரிடும்படி வந்துள்ள இந்த அசுரச் சேனையையும் இன்னமும் இங்கு வருதற்கு வழிபெற முடியாமல் அப்பால் நின்றிடுகின்ற அசுரப் படையையும் எல்லாவற்றையும் நீங்கள் பல உருவம் எடுத்துக்கொண்டு சென்று அவைகளைக் கொன்று மீண்டு எம்பால் இவ்விடம் வருவீராக எனக் கூறியருளி அந்த ஐந்து படைகளையும் செலுத்தினார் ஆறுமுகக்கடவுள். 262

ஆதிநா யகன்விட் டுள்ள படையெலாம் அநந்த கோடி
சோதியார் கதிருந் தீயும் பணிகளும் போலத் தோன்றி
ஏதிலான் அனிக மாகி இம்பருற் றனவி மைப்பின்
பாதியின் முன்னம் அட்டுப் பெருவிறல் படைத்த மன்னே.

எவற்றிற்கும் ஆதியான ஆறுமுகப்பெருமான் விட்டுள்ள ஐந்து படைகளும் திருக்கரத்தி னின்றும் புறப்பட்டு சோதியாய் விளங்கிடும் சூரியர்களும் நருப்பும்

பாம்புகளும் போலத்தோன்றி பகைவனுன சூரபன்மனின் சேனேகளாகி இப் பூமியில் நின்றவற்றை ஓர் இமைப்பொழுதின் பாதியளவு நேரத்தில் அழித்து அதனுல் பெரும் வலியினைப் பெற்றுக்கொண்டன. 263

தூயதோர் குமரற் சூழ்ந்த படையைமுன் தொலைத்து வீட்டி
ஏயின படையோ ரைந்தும் இம்பரே ஒழிய நின்ற
ஆயிரத் தோரேழ் அண்டத் தகலமுஞ் சென்று சென்றுங்
கோய்வற எழுந்த தானை முழுதுமட் டுலவு கின்ற.

தூயதாக விளங்கிடும் குமரப்பெருமானைச் சூழ்ந்த அசுரப்படைகளை முற்றுகத் தொலைவு செய்து அழித்துச் சென்றிடுகின்ற அந்த ஐந்து படைக்கலமும் இவ்வுலகு ஒழிய அப்பால் நின்ற ஆயிரத்து ஏழு அண்டங்களின் பரப்பெல்லாம் சென்று சென்று அங்கு ஓய்வின்றி எழுகின்ற சேனேகள் முழுதினையும் அழித்து உலவுகின்றன. 264

ஐவகைப் படைகள் முற்றும் அண்டங்கள் தோறும் நின்ற
வெவ்விய அவுணர்த் தேய்த்து விரைவொடு திரித லோடுந்
தெவ்வியல் அவுணர் மன்னன் செயிர்த்துமற் றிதனை நோக்கி
இவ்வொரு கணத்தின் முன்னம் இவனுயிர் உண்பன் என்றுன்.

ஐந்து படைகளும் ஆயிரத்தெட்டு அண்டங்கள் தோறும் முழுவதும் நின்ற கொடிய இயல்புடைய அசுரரை அழித்து விரைவாக எங்கும் திரிவதோடும் பகைமையின் இயல்புடைய சூரபன்மன் இதனைக் கண்டு மிகுகோபமுற்று இந்த ஒரு கணத்தின் முன்பு இந்தக் குமரனது உயிரை உண்பேன் என்றுன். 265

சாற்றியித் தன்மை தன்னைத் தானவர்க் கரசன் முன்னங்
கூற்றுயிர் குடித்த நோன்றுட் பண்ணவன் கொடுப்பக் கொண்ட
மாற்றருந் திகிரி தன்னை வாங்கினன் வழிபட் டேத்திக்
காற்றினுங் கடிது செல்லக் கந்தவேள் மீது விட்டான்.

கொடுமை நிறைந்த இத்தன்மையான வார்த்தையை அசுரர் அரசனுன சூரபன்மன் சொல்லி முன்னர் இயமனுடைய உயிரைக்கொன்ற வலியாகும் திருப்பாதமுடைய சிவபிரான் தனக்குக் கொடுப்பப் பெற்றுக்கொண்ட எப்படையாலும் அழிக்க முடியாத சக்கரப்படையை கையில் எடுத்து வழிபாடு புரிந்து துதி செய்து காற்றிலும் பார்க்க அச்சக்கரம் விரைவாக சென்றிடும்படி முருகப்பிரான்மேல் விடுத்தான். 266

விட்டிடு திகிரி யாரும் வெருக்கொள விரைந்து சென்று
கிட்டிய காலைச் செவ்வேள் கிளர்ந்ததோர் பாணி நீட்டி
வட்டணை நேமி தன்னை வருதியால் என்று பற்ற
ஒட்டலன் அதனை நோக்கி உளந்தளர்ந் துயிர்த்து நின்றுன்.

சூரபன்மன் விடுத்திட்ட சக்கரப்படை எவரும் அச்சம்கொள்ள விரைவாகச் சென்று முருகப்பெருமானைக் கிட்டிய நேரத்தில் முருகப்பெருமான் தமது சிறந்ததொரு திருக்கரத்தை நீட்டி வட்ட வடிவாகும் சக்கரத்தை இங்கு வருவாயாக என அதனைப்பற்றிப் பிடித்திட பகைவனுன சூரபன்மன் அதுகண்டு உளம் தளர்ந்து பெருமூச்சு விடுத்து நின்றுன். 267

உண்ணிலா மாயை வல்ல ஒருதனித் தேர்மேல் நின்றேன்
எண்ணிலா உருவங் கொண்டே இருங்கணை மாரி தூர்ப்பத்
தெண்ணிலா மௌலி அண்ணல் உதவிய செம்மல் நோக்கி
நண்ணலான் ஒருவன் மாய நன்றுநன் றென்று நக்கான்.

உள்ளத்துள் பெரும் மாயதந்திரங்களைச் செய்ய வல்லமை உடையதொரு தனியான இந்திர ஞாலத் தேரின் மேல் நின்ற சூரன் எண்ணற்ற பல வடிவங்களை எடுத்துக்கொண்டு கொடிய அம்பாகும் மழையினை எம்பிரான்மேல் சொரிந்திட அது போது தெள்ளிய நிலவு அணிந்த சடையை உடைய கடவுள் தந்துதவிய திருக்குமரன் முருகப்பிரான் அதனை நோக்கி இந்தப்பகைவன் ஒருவனுடைய மாயம் நன்று நன்று என்று சிரித்தருளினர். 268

சிறுநகை செய்து மேலாஞ் சேதனப் பகழி பூட்டி
அறுமுகன் அவுணர் செம்மல் ஆற்றிடு மாய முற்றும்
இறைதனில் முடித்தி யென்றே ஏவலும் விரைவின் ஏகி
முறைநெறி பிழைத்தோன் மாயம் முற்றொருங் கட்ட தன்றே.

சிறிய சிரிப்பினை எம்பெருமான் ஆறுமுகன்கொண்டு; மேலான ஞான மயமான அம்பை வில்லில்பூட்டி அதனை நோக்கி நீ சென்று அசுரர்தலைவன் கொண்ட மாயம் முழுவதையும் ஓர் இறைப்பொழுதில் முடித்திடுவாயாக என்று கூறியருளி அந்த அம்பினைச் செலுத்தியருளலும் அந்த ஞானமய மான அம்பு விரைவிற் சென்று முறையாக வாழவேண்டிய நெறியினை தப்பவிட்ட சூரபன்மனது மாயம் முழுவதையும் ஒருங்கே அழித்திட்டது. 269

மாயையின் உருவ நீங்க வலியழிந் துள்ளம் மாழ்கித்
தீயவன் ஒருவ னாகிச் சேணுயர் தேரின் நின்றான்
ஆயது தெரிந்து வானோர் அறுமுகத் தவனைப் போற்றிப்
பாய்புனற் கடலின் ஆர்த்துப் பனிமலர் மாரி தூர்த்தார்.

சூரபன்மனது மாயையின் வடிவம் நீங்க அத்தீயவன் வலியழிந்து உள்ளம் சோர்ந்து தான் ஒருவனேயாகி வானில் உயர்ந்த அத்தேர்மேல் நின்றான். அதனை எல்லாம் தேவர்கள் தெரிந்து ஆறுமுகமுடைய பெருமானைப் போற்றிப் பெருகும் திரைகளையுடைய கடல்போல் இரைந்து ஆரவாரங்கொண்டு குளிர்மைவாய்ந்த பூக்களை எம்பிரான்மீது சொரிந்தார்கள். 270

தூர்த்தலுந் தேருந் தானுந் துண்ணெனக் கரந்து சூரன்
பேர்த்திடு மண்ட கூடப் பித்திகை வாயி லெய்தி
ஆர்த்தறை கூவிப் புக்காங் கப்புறத் தண்டஞ் செல்லத்
தீர்த்தனும் அதனை நோக்கித் தீயனைத் தொடர்ந்து போனான்.

தேவர் பூச்சொரிதலும் சூரபன்மன் தேருடன் தானுமாக விறுக்கென மறைந்து இயங்கும்படியான அண்ட கூடங்களின் புறச்சுவரின் வாயிலை அடைந்து அங்கு நின்றும் ஆரவாரித்து அங்கு போரிடவருமாறு அறைகூவி அழைத்து அப்புறத்தில் உள்ள அண்டங்களில் செல்ல அது கண்டு எமது அருள்வள்ளல் ஆறுமுகப்பெருமானும் தீயவனான சூரனைத் தொடர்ந்து சென்றான். 271

தொடர்ந்துதன் மனத்திற் செல்லுந் தொல்லைமால் இரதத் தோடுங்
கடந்தபேர் ஆடல் மிக்க காசிபன் தனயன் நின்ற
இடந்தலைப் படலும் அன்னான் எந்தையோ டிகற்போ ராற்றி
அடுந்திறல் மாயை நீரால் அப்புறத் தண்டம் போனான்.

தொடர்ந்து தன்மன எண்ணப்படி செல்கின்ற மிகு பழமையான மயக்கம் செயும் இந்திரஞாலம் என்னும் தேருடன் பல வெற்றிகளைக்கொண்டு போர்வல்லபம் மிகுந்த காசிபமுனிவன் புத்திரன் சூரன் நின்ற இடத்திற்கு எம்பிரான் ஆறுமுகன் சென்றிடலும் அதுவேளை அங்கு எந்தைபெருமானுடன் சூரபன்மன் வலியுடைய போரினைப் புரிந்து பின்னரும் மாயத்தன்மையால் அப்பாலுள்ள அண்டங்களிற் போயினான். 272

இந்நிலை அவுணர் கோமான் இருநிலத் தண்ட முற்றும்
மின்னெனப் படர்ந்து தோன்றி வெய்யபோர் விளைத்து நின்று
துன்னருங் கரந்து செல்லப் பிரானும்அவ் வண்டந் தோறுந்
பின்னலன் தனைவி டாது தொடர்ந்தமர் இயற்றிப் போனான்.

இந்நிலையாக அசுரர்க்கெல்லாம் தலைவனான சூரபன்மன் இந்தப் பூமியின் தொடர்பான அண்டங்கள் முழுவதிலும் மின்னல்போல் சென்று தோன்றிக் கொடிய போரினை எம்பெருமானுடன் விளைத்து நின்று பின்னரும் அங்கு நின்றும் மறைந்து செல்ல எம்பெருமானும் அந்த அந்த அண்டம் தோறும் பகைவனான சூரபன்மனைவிடாது தொடர்ந்து போரிட அங்கங்கு சென்றருளி அவனுடன் போரிட்டு இந்த இடம் நீங்கி அறியொணாத அப்பாலுள்ள எல்லையிற் போயினர். 273

## வேறு

ஆய காலை அயன்முதல் தேவர்கள்
நேய மிக்க குரவரை நீங்கிய
சேயி னோர்களில் தேம்பித் திருமகள்
நாய கன்றனை நோக்கி நவிலுவார்.

அவ்வாறாக எம்பிரான் போயின காலையில் பிரமன் முதலானதேவர்கள் யாவரும் தங்கள் பால் அன்புமிக்க தாய் தந்தையரை நீங்கிய குழந்தைகள் போலாகி அச்சமுற்று அழுது மகா இலக்குமி தேவிக்கு நாயகரான நாராயணப் பெருமானை நோக்கிச் சொல்லுகின்றார்கள். 274

வலங்கை வாளுடை மாயைதன் மாமகன்
பொலன்கொள் அண்டப் புரைதனுட் போயினன்
இலங்கு வேற்படை யெந்தைதன் போரிடை
விலங்கி னனலன் என்றும் விளிகிலான்.

வலது கரத்தில் வீரமுடைய வாளினைக்கொண்ட மாயவளது பெருமகன் அழகுடன் விளங்கிடும் அண்டங்களின் எல்லையில் மறைந்து போயினன். இலங்குகின்ற வேற்படையைக் கைக்கொண்டருளிய எந்தை பெருமானுடன் செய்துள்ள போரினில் அழிவுற்றானல்லன். ஏனெனில் அவன் என்றுமே அழிவிலாதவனாயினன். 275

மாயை ஆற்றவும் வல்லவன் ஈண்டொரீஇப்
போய தன்மை புணர்ச்சிய தேயலால்
ஆயின் வேறிலை ஆறிரு மொய்ம்புடைத்
தூயன் மற்றது சூழ்ந்திலன் போலுமால்.

அவனோ மாயைகள் மிகவும் வல்லவன்: இவ்விடம் விட்டு மறைந்து போன தன்மை ஏதோ ஒரு சூழ்ச்சிக்குக் காரணமேயன்றி நாம் ஆராயப் புகுந்தால் வேறொன்றாக இருக்கமாட்டாது. பன்னிரண்டு திருத்தோளுடைய தூயவரான எமது பெருமான் மற்றிந்த சூழ்ச்சியை தான் உணர்ந்து கொள்ளவில்லைப் போலும். 276

வாடி னானென மாற்றலனைத்தொடர்ந்
தோடி னான்எந்தை ஒல்லையிற் சூரனைக்
கூடி னான்கொல் குறுகல னாகியே
நாடி னான்கொல் அறிகிலம் நாமெலாம்.

சூரபன்மன் தோற்றோடுகின்றானே என எண்ணித்தான்போலும் எந்தை பெருமானும் பகைவனான சூரபன்மனைத் தொடர்ந்து ஓடினன் போலும். அப்படியாக அந்தப் பகைவனை விரைவாக எந்தை பெருமான் கிட்டினாரோ; அல்லது அவனைக் குறுகமுடியாது தேடிப் பார்க்கின்றாரோ யாதோ என நாம் எல்லாம் அதனை அறிய முடியாது போயினோம்! 277

மாக மேல்நிமிர் மற்றையண் டத்தினுஞ்
சேகு லாவிய சிந்தையன் தன்னுடன்
ஏகி னான்ஐயன் என்னினித் தான்விளை
வாகு மோவென்றும் அஞ்சுதும் ஏழையேம்.

வான வெளியில் நிமிர்கின்ற மற்றைய அண்டங்களிலும் வஞ்சனை நிரம்பிய சிந்தனையுடைய சூரபன்மனுடன் எம்பிரான் சென்றருளினர் ; இனி என்னதான் விளையப் போகின்றது என்ற பயத்தால் நாம் மிகவும் அஞ்சுகின்றோம் ஏழையோம். 278

என்ற காலையித் லங்கெழிற் பூவைபோல்
நின்ற மாயவன் நீள்மல ரோன்முதல்
துன்றும் வானவர் சூழலை நோக்கியே
ஒன்றும் அன்பொ டுளப்பட ஓதுவான்.

என்று அந்தத் தேவர்கள் பெரும் அச்சமும் கவலையும் அழுகையும்கொண்டு உரைத்தநேரத்தில் அவ்விடத்து எழிலுடைய காயாம் பூ மரம் போன்ற வண்ணமுடன் விளங்கிடும் நீல நிறத் திருமேனியுடைய நாராயணப் பகவான் நீண்ட தாமரை மலர் மேல் இருக்கும் பிரமதேவன் முதலாக தம்மை நெருங்கிச் சூழ்ந்து விளவிய கடவுளர் குழுவை நோக்கி அவர்பால் ஒன்றிய அன்பினல் அவர்கள் உள்ளத்தில் பதியுமாறு இதனைக் கூறுகின்றார். 279

வேறு

வஞ்ச மேதகும் அவுணர்கோன் ஆற்றலை மதித்தீண்
டஞ்சி அஞ்சியே இரங்கலிர் அறுமுகத் தொருவன்
செஞ்சி லைத்தனி வன்மையும் வீரமுந் தெரிந்து
நெஞ்ச கத்திடை ஐயுறு கின்றது நெறியோ.

கடவுளர்களே ! கேளுங்கள். நீங்கள் வஞ்சனையால் மிகுந்துள்ள அசுரர் மன்னன் சூரபன்மனது மாய ஆற்றலை எண்ணி அஞ்சியஞ்சி இரங்காதீர்கள். ஏனெனில் ஆறுமுகமுடைய ஒருவனை எமது கடவுளின் செம்மைவாய்ந்த வில் வன்மையையும்; வீரத்தையும் நன்கு தெரிந்துகொண்டும் உமது நெஞ்சிடத்தாக நீங்கள் ஐயப்படுகின்றது உமக்கு நல்ல நெறியோ ?

எம்பெருமானுடைய உண்மையான வீரத்தையும் ஆற்றலையும் எண்ணாது, வஞ்சகனை அவனுடைய தீயசெயலைப் பற்றிய எண்ணம் ஏன் உமக்கு? அது கூடாது என்றார் பகவான் நாராயணர். 280

ஓதி யாகியும் உணர்ந்தவர்க் குணரவும் ஒண்ணு
நீதி யாகியும் நிமலம தாகியே நிகழுஞ்
சோதி யாகியுந் தொழுதிடும் எம்மனோர்க் கெல்லாம்
ஆதி யாகியும் நின்றவன் அறுமுகன் அன்றே.

எமது கண்முன் ஆறுமுகமும் பன்னிரு கையுமுடன் தித்தித்திருக்கும் அமுதாகத் தோன்றிய ஒருவனே ஞானமாகியும் அதனை உணர்ந்தார்க்கும் உணரவும் முடியாத நீதியாகியும் நின்மலமாய் எக்காலமும் நிகழ்ந்திருக்கும் சோதியாகியும் தொழுகின்ற எம்மனோர்க்கு எல்லாம் ஆதியுமாய் நின்றவன்.

எல்லாம் உணர்கின்ற ஞான உணர்வாயும் ஆனல் உணர்கின்றவரும் உணர முடியாத நீதியாயும் அன்றும் இன்றும் என்றுமுள்ள சோதியாகியும் தூயதாய் மலபந்தமில்லாததாகியும், பிறப்பு இறப்பு அறிவு அறியாமை யாவும் கடந்தது தான் ஆறுமுகம் என்றார் எம்பிரான் நாராயணர். 281

ஈறிய லாதமர் பரமனே குழவியின் இயல்பாய்
ஆறு மாமுகங் கொண்டுதித் தானென்ப தல்லால்
வேறு செப்புதற் கியையுமோ மேலவன் தன்மை
தேறி யுந்தெளி கின்றில உமதுசிந் தையுமே.

முடிவு என்பதிலாது எக்காலமும் உள்ள பரமசிவனே குழந்தையின் உருவாகி ஆறுமுகம்கொண்டு உதித்தார் என்பதல்லாது வேறு ஒன்றையும் நாம் சொல்வதற்கு இங்கு இயைவாகுமோ ? தேவர்களே அப்பெருமானுடைய அற்புதத் தன்மையை முன்னர் நீங்கள் கண்டு தெளிந்தும் இன்னமும் உமது சிந்தை தெளிகின்றதில்லையே ! 282

ஐயம் எய்தலிர் ஆயிர கோடி அண்டத்தும்
வெய்ய னேகினுந் தொடர்ந்துபோய் வெஞ்சமர் இயற்றிச்
செய்ய வேலவன் துரந்துவந் திடுந்தினைத் துணையில்
கையின் நெல்லிபோற் காட்டுவன் நீவிருங் காண்டீர்.

இதனைப்பற்றி நீவிர் சந்தேகமுறுதீர். ஆயிரகோடியாகும் அண்டங்களிலும் கொடியவனான சூரபன்மன் சென்றாலும் அவனை அங்கங்கு தொடர்ந்து சென்று கொடும்போரினைப் புரிந்து செம்மையான வேலைத் திருக்கரத்துடைய பெருமான் சூரனைத் துரத்திக்கொண்டு இங்கு வந்திடுவார். இதனை ஓர் தினைத்துணைப்பொழுதில் கையிலுள்ள நெல்லிக்கனிபோன்று காட்டுவேன், நீவிரும் காணுங்கள். 283

என்று மாயவன் கழறலும் அயன்முதல் எவரும்
நன்றெ னத்தெளி வுற்றனர் அவ்வழி நண்ணான்
ஒன்றின் ஆயிர கோடியண் டத்தினும் ஓடி
நின்று நின்றமர் ஆடினன் எந்தையை நேர்ந்து,

என்று நாராயணப் பெருமான் எடுத்துக் கூறலும் பிரமதேவன் முதல் எல்லோரும் அதுகேட்டு நன்றுநன்று என்று கூறித் தெளிவு கொண்டனர். அவ்வழியாக பகைவனான சூரபன்மனும் ஒன்றின் ஒன்றான ஆயிரகோடி அண்டங்களிலும் ஓடி ஓடி நின்று எந்தைபெருமானை ஆங்காங்கு எதிர்த்துநின்று போர்புரிந்தான். 284

வெந்திற றற்சமர் ஆற்றியே அவுணர்கோன் மீட்டும்
இந்த வண்டத்து மகேந்திர வரைப்பில்வந் திருத்தான்.
முந்து நீழலை விடாதுசெல் வோரென முனிந்து
கந்த னுந்தொடர்ந் தவனொடு போந்தனன் கடிது.

கொடிய திறலுடைய போரினைப் புரிந்து சூரபன்மனானவன் மீண்டும் இந்த அண்டத்தில் வீரமகேந்திரபுரத்தின் எல்லையில் வந்து சேர்ந்தனன். ஆனால் முன் சென்றிடும் தனது நிழலைவிடாது தொடர்ந்து செல்வோரென மிகு முனிவுடன் முருகப்பெருமானும் தொடர்ந்து சூரபன்மனுடன் விரைவாகத் தாமும் வீரமகேந்திரபுர எல்லையில் வந்துற்றார். 285

## வேறு

போந்திடு தன்மை நோக்கிப் புராரிதன் புதல்வன் நங்கள்
ஏந்தலைத் தொடர்ந்தான் என்னா இம்பரில் அவுணர் தானை
தீந்தழ லென்னப் பொங்கிச் செங்கையிற் படைகள் வீசி
ஆய்ந்திடும் உணர்வின் மேலாம் ஆதிதன் புடைசூழ்ந் தார்த்தார்.

எம்பிரான் வந்துற்ற நேரத்தில் முப்புரமெரி செய்த கடவுளின் திருக்குமரன் தமது தலைவனைத் தொடர்ந்து போரிட வந்தான் என்று இவ்வுலகிலுள்ள அசுரச் சேனைகள் தீய்கின்ற நெருப்பினைப்போல் பொங்கி எழுந்து தமது சிவந்த கைகளில் படைகளையும் எடுத்து வீசி அவனையே ஆராய்கின்ற உணர்விற்கெல்லாம் மேலாகிய ஆதியாம் ஆறுமுகப்பெருமான் புடையாகச்சூழ்ந்து ஆரவாரித்தார்கள். 286

நாதனும் அதனை நோக்கி நன்றிவர் முயற்சி யென்னா
ஓதினன் முறுவல் செய்ய ஒன்னலன் தானை தொன்னாள்
மூதெயில் என்ன நீறாய் வெந்துடன் முடிந்த தம்மா
தாதைதன் செய்கை மைந்தன் செய்வது தக்க தன்றே.

எங்கள் நாதனாகிய குருபரனும் அதனை நோக்கி நன்றாயிருக்கின்றது இவர்களது சூழ்ச்சி என்று ஓதியவாறு ஓர் புன்முறுவல் செய்ய உடனே அங்குள்ள அசுரச் சேனையாவும் முன்னைய காலத்திலுள்ள மூன்று மதில்போன்று நீறாகி வெந்து பொடியாயது. தந்தையாகிய சிவயோக நாதனின் செய்கையை மைந்தனான இவர் ஆறுமுகப்பெருமான் செய்வது தக்கதொரு கருமம்தானே. தந்தை சிவபெருமான் இரும்பு, பொன், வெள்ளியாலாய முப்புரங்களையும் புன்சிரிப்பாலே எரித்தருளினார். ஆதலால் அவர் அவ்வாறு செய்தால் மைந்தரும் அப்படி புன்சிரிப்பினால் இச்சேனையை அழித்தது தக்கதே. 287

ஆனதோர் காலை தன்னில் அறுமுகம் படைத்த அண்ணல்
தூநகை அங்கி செல்லத் துண்ணெனப் பதைத்து வீழ்ந்து
தானவர் அனிகம் வெந்த சாம்பரின் குன்றை நோக்கி
வானவர் மகிழ்ந்து பூத்தூய் வள்ளலை வழுத்தி நின்றார்.

அவ்வாருகிய காலத்தில் ஆறுமுகம்படைத்த அண்ணல் சண்முகப்பெருமானின் தூய நகையான நெருப்புச் சென்றிட கொலையும் புலையும் களவும் குரோதமும், வஞ்சமும், உலோபமும், மாயமும், காமமும் கொண்ட அத்தனை அசுரரின் சேனையும் திடீரெனப் பதை பதைத்து வீழ்ந்து. எரிந்து சாம்பலாகிப்போயது. அந்தச் சாம்பல் மலையை நோக்கி தேவர்கள் மகிழ்ந்து மலர்தூவி வள்ளலான முருகப் பெருமானை வணக்கம் செய்து நின்றனர். 288

முருகவிழ் தொடைய லான்றன் முறுவலான் அனிக முற்றும்
விரைவின் நுண் துகளதாகி வீழ்தலும் அவுணர் வேந்தன்
ஒருவனுந் தமியன் நின்றான் ஒண்டமிழ் முனிவன் உண்ணத்
திரைகட லின்றித் தோன்றுந் தீப்பெருங் கடவுள் ஒத்தான்.

மகரந்தப்பொடி சொரியும் மாலையணிந்த வள்ளலான ஆறுமுகப்பெருமானின் புன்சிரிப்பால் அசுரசேனை முழுவதும் விரைவினில் நுண்பொடியாகி வீழ்தலும், அந்த இடத்தில் அசுரவேந்தன் சூரபன்மன் மட்டும் தனியே ஒருவனாகி நின்றான். அவனைப் பார்த்தால் தீந்தமிழ் வல்ல முனிவனான அகத்திய முனிவர் ஏழுகடல் நீரையும் உண்டபோது அங்கு தனியே நின்ற வடவாமுகாக்கினி எனும் பெருங் கடவுளை ஒத்திருந்தான். 289

முன்படை குமரன் அங்கண் முறுவலித் திட்ட வாறும்
தன்படை அழிந்த வாறும் தமியன்றான் நின்ற வாறும்
கொன்படை வீர ரோடு குறட்படை ஆர்க்கு மாறும்
துன்படை அவுணன் கண்டாங் குளத்தொடுஞ் சொல்ல லுற்றான்.

தமது முன்பு வந்த படையை நோக்கி குமரன் அங்கு புன்சிரிப்புக்கொண்டவாறும் அச்சிரிப்பொன்றால் தன்படைமுற்றும் அழிந்தவாறும் தனியனாகி தான் ஒருவன் மட்டும் புத்திரர், சுற்றம், படைகள் சேனைகள் யாவும் இழந்து நின்ற தன் மையையும் கண்டு; அங்குள்ள உயர்வான படைகள் கொண்ட வீரரொடு குறளான வடிவுடைய பூதங்கள் ஆர்ப்பரித்து மகிழ்ந்து கூத்தாடுவதுமான இச்செயல் யாவையும் துன்பினை அடைகின்ற சூரபன்மன் கண்டு உள்ளத்துடன் சொல்லல் உற்றான். 290

பின்னுறு துணைவர் மைந்தர் பேரியல் அமைச்சர் ஏனோர்
முன்னுற முடிந்தார் இன்று முடிவுறுத் தானை முற்றும்
பன்னிரு கரத்து மைந்தன் படுத்தனன் தமிய னானேன்
என்னிவண் செய்வ தென்னா உயிர்த்தனன் எண்ண மிக்கான்.

என்பின் தோன்றிய தம்பிமார் என் மைந்தர்கள் பெருமையான இயல்புடைய மந்திரிகள் ஏனைய சேனாதிபதிகள் முன்னாக முடிவுற்றுப்போயினர். ஆனால் இன்று எக்காலமும் முடிவுறாத சேனையையும் பன்னிரண்டு திருக்கைகளையுமுடைய இந்த வள்ளல் குமரன் கொன்றுவிட்டான். எல்லாத் துணையும் இழந்து நான் தனியனானேன். என்ன இனிச்செய்வேன் என்று பெருமூச்சுவிடுத்து பலவிதமான சிந்தனை கொள்கின்றான் சூரபன்மன். 291

மாயவள் தன்னை மன்னன் மனத்திடை நினைத்த லோடும்
ஆயவள் வந்து தோன்றி அரும்பெறல் ஆற்றல் மைந்த
நீயொரு தமிய னாகி நின்றுளந் தளர்ந்தே என்னைக்
கூயினை முன்னிற் றென்னை தெரிவுறக் கூறு கென்றாள்.

அவ்வேளை தாயாகிய மாயவளைச் சூரபன்மன் மனத்திடை நினைத்தலோடும், அம்மாயவள் சூரபன்மன் முன்தோன்றி அவனை நோக்கி பெறற்கரிய அருமையால் பேராற்றல்கொண்டுள்ள மைந்தனே! நீ இங்கு ஒரு தனியனாகி நின்று உள்ளம் தளர்ந்து என்னை வரவழைத்தாய். நீ நினைத்தது என்னவோ அதைத் தெரியுமாறு கூறுவாயாக என்றாள். 292

அறிந்திடு மாயை இவ்வா றறைதலுங் குமரன் போரின்
மறந்தகு துணைவர் மைந்தர் மந்திரி தானை முற்றும்
இறந்திட எஞ்சி னேன்யா னியாவரும் எழுதற் கொத்த
திறந்தனை அருண்மோ என்ன நகைத்தவள் செப்ப லுற்றாள்.

எல்லாவற்றையும் அறிகின்ற மாயை இவ்வாறு கூறுதலும், சூரபன்மன் அவளை நோக்கி அன்னையே! முருகனுடன் யான் செய்த போரில் மறங்கொண்ட எனது தம்பிமார், மைந்தர்கள், மந்திரிகள், சேனை முழுவதும் இறந்திட யான் மட்டும் மிஞ்சினேன்: இறந்தார் யாவரும் மீண்டும் எழுதற்கு ஏற்றதொரு திறத்தை தேவி நீ எனக்கு அருள் செய்யவேண்டும் எனக்கேட்ப, அதுகேட்டு தாயானவள் சிரித்து இதனைச் செப்பலுற்றாள். 293

உறுபடை சுற்றந் துஞ்ச ஒருவனே யாயும் விண்ணோர்
சிறைவிடுத் துய்யு மாறு சிந்தனை செய்தி லாய்நீ
அறுமுகன் தன்னோ டின்னும் அமர்செயக் குறித்தி யாயின்
நிறைபெருஞ் செல்வ வாழ்க்கை நீங்கினை போலும் அன்றே.

மகனே! உனக்கு உற்ற துணையான படைகள் சுற்றம் யாவும் இறந்திட, நீ ஒருவனேயாகியும் தேவர்களது சிறையை விடுத்து நீ உய்யுமாறு சிந்தனை செய்கின்றாயில்லை. நீ இன்னமும் ஆறுமுகப் பெருமானுடன் போரிடக்குறித்தால் அது எதுவாய் முடியுமெனின், உனது நிறைவுற்ற பெரும் செல்வ வாழ்க்கையை நீங்கினாய் போலவே ஆகும். 294

பன்னிரு தடந்தோள் கொண்ட பகவனைப் பாலன் என்றே
உன்னலை அவன்கை வேலால் ஒல்லையிற் படுதி கண்டாய்
இன்னுயிர் துறக்க நின்றாய் என்மொழி கேட்பாய் அன்றே
சென்னியில் விதியை யாவ ராயினுந் தீர்ந்தார் உண்டோ.

பன்னிரண்டு விசாலமுற்ற தோள்கொண்ட கடவுளை நீ பாலன் என நினைந்திடாதே. அவனுடைய திருக்கை வேலால் விரைவாக நீ அழிந்திடுவாய், அதை அறிந்துகொள். உனது இனிய உயிரை நீ நீக்கிட நின்றாய். ஆதலின் எனது வார்த்தையை நீ கேட்கமாட்டாய் அல்லவோ! தலையில் ஒருவர்க்கு இப்படியாகட்டும் என விதித்தவிதியை யார்தான் ஆயினும் தீர்ந்தவர் உண்டோ இல்லையே.

தாய் சொல் அமுதம் அப்படி இருப்பவும் நீ அதைத் தட்டுவாய், அதன் காரணம் நீ இறச்கவேண்டும் என்ற விதி என்றாள் மாயவள். 295

நின்றிட அனைய தன்மை நின்னுளம் மகிழு மாற்றால்
பொன்றினர் எழுதல் வேண்டில் புறக்கடற் கொருசா ராக
மன்றல்கொள் அமுத சீத மந்தர கூடம் என்றோர்
குன்றுள ததனை ஈண்டே கொணருதி கூடும் என்றாள்.

அவை யாவும் நின்றிட இப்போது நினது உள்ளம் மகிழும்படியாக இறந்தார் எழவேண்டுமென்றால் புறவாழிச் சமுத்திரத்திற்கு ஒருபுறமாக நல்ல அமுதக்காற்று தருகின்ற அமுதசீத மந்தரகூடம் என்னும் மலை ஒன்று உள்ளது: அதனை இங்கே நீ கொண்டு வருவாய் என்றால், நீ விரும்பியது கூடும் என்றாள் மாயவள்;

நீ எனது வார்த்தையைக் கேளாதுவிடினும யான் உனக்காகச் செய்யவேண்டிய கடமையில் தவறக்கூடாது என்றாள் மாயவள் என்க. 296

இவ்வகை உரைத்து மாயை ஏகினள் ஏக லோடும்
மைவரை யென்ன நின்ற மன்னவர் மன்னன் கேளா
அவ்வைதன் சூழ்ச்சி நன்ருல் அடுகளத் தவிந்தோர் யாரும்
உய்வகை இதுவே என்னு உன்னினன் உவகை மிக்கான்.

இவ்வகையாக மாயவள் உரைத்து மறைந்து போயினுள். போதலோடும், கரியமலேபோன்று நின்ற மன்னவர் மன்னன் சூரபன்மன் அதுகேட்டு எனது தாயின் சூழ்ச்சி நன்ருகும். இப்போர்க்களத்து இறந்தோர் யாவரும் உய்கின்ற வகை இதுவேயாகும் என எண்ணினன், அளவு கடந்த சந்தோஷமுடையனுனுன்.

தாய் சொல்லிய உறுதியான உண்மை நிலேகளே அவனுல் உணர முடியவில்லே; அப்போதுற்ற மானபங்கத்திற்குத் தீர்வுகாண்பதான இலேசான வழியை அறிந்த வுடன் அளவற்ற மகிழ்ச்சிகொண்டான். 297

ஆவகை உவகை கொள்ளா அமுதமந் தரங்கொண் டேக
ஏவரை விடுத்தும் என்றே இறைப்பொழு தவுணர் தங்கள்
காவலன் முன்னி மாயக் கடுமுரண் தேரின் நீங்கித்
தேவியல் அரிமான் ஏற்றுத் திறலுடை எருத்தம் புக்கான்.

அவ்வாறுன வகை உவகைகொண்டு தாய்சொல்லியவாறு அமுதசீதகூட மந்தர மலேயைக் கொண்டுவர யாரை விடுப்போம் என்று ஒரு இறைப்பொழுது அசுரர் களின் காவலனுன சூரபன்மன் நினேந்து உடனே தான் நின்ற மாயமும் மிற கொடுமையும் நிரம்பிய தேரினின்றும் நீங்கி சிவபெருமானுல் கொடுக்கப்பெற் தெய்வத்தன்மை கொண்டதொரு சிங்கங்களின் அரசாகும் ஓர் தனிச் சிங்கத்தின் முதுகில் ஏறிக்கொண்டான்;

யானேகளின் அரசு ஐராவதம்போன்று இந்த சிங்கமும் சிங்கங்கள் யாவற்றிற் கும் தனி அரசான சிறப்புடையது என்க. 298

இந்திர ஞாலந் தன்னே இறையவன் விளித்து நீயென்
புந்தியின் விரைந்து சென்று புறக்கடல் மருங்கின் மேவி
அந்தம தடைந்தோர்க் காவி அளித்திடும் அமுதங்கொண்ட
மந்தர கிரியைக் கீண்டு மற்றிவண் கொணர்தி யென்ருன்.

இந்திர ஞாலம் என்னும் தேரினே இறையோனுன சூரபன்மன் நோக்கி நீ எனது மனதிலும் விரைவாக புறவாழிச்சமுத்திரத்தின் பக்கராகச் சென்று அங்கு மரணத்தினே அடைந்தோர்க்குத் திரும்பவும் உயிரினேக் கொடுக்கவல்ல அமுதத்தை கொண்ட அமுதசீத மந்தரமலேயை கிளப்பி எடுத்துக்கொண்டு இங்கு வருவாயாக எனக் கூறினுன். 299

விழுமிய மாய மான்தேர் வினவியோர் கணத்தின் முன்னம்
எழுகட லினுக்கும் அப்பால் இருந்திடு கடலின் சார்போய்
அழிவுறு தங்கண் நின்ற அமுதமந் தரத்தைக் கொண்டு
வழிபடர் கதியின் மீண்டு மகேந்திரம் புக்க தன்றே.

மிகவும் உயர்வான சித்துகளுடன் மாயத்தன்மை பொருந்திய அப்பெரும் தேர் சூரனது வார்த்தையைக் கேட்டு ஒருகணப்பொழுதின் முன்பே ஏழு கடலுக் கும் அப்பால் இருந்திடுகின்ற புறவாழிச் சமுத்திரத்தின் அருகாகப்போய் அழி வுறுது அவ்விடத்து நின்ற அமுத சீத மந்தரகூடம் எனும் மலேயை பேர்த்து எடுத் துக்கொண்டு போனமார்க்கமாகவே திரும்பவும் வழிக்கொண்டு வேகமாய் வந்து வீரமகேந்திரத்தில் புகுந்துகொண்டது; 300

**வேறு**

அக்காலேயில் இரதந்தரும் அமுதத்தனி வரையின்
மெய்க்கால்வர அந்நாள்வரை வெம்பூசல் இயற்றி
மைக்காலன்மெய் யுயிருண்டிட மறியும்படை முழுதும்
தொக்காலம் தெழுந்தாலெனத் துண்ணென் றெழுந்தனவே.

அந்த வேளையில் இந்திர ஞாலத்தேர் அங்கு கொண்டு வருகின்ற முற்றிலும் அமுதமான அமுதசீதகூட மந்தர மலையின் அழிவிலாமையைத் தரும் காற்று அருகாக எழுந்து வரலும் அப்போர்க்களத்து அற்றைநாள் வரையும் கொடிய போர் புரிந்து கருமையான இயமன் உயிரை உண்டிட இறந்துபோன அசுரப்படை முழுவதும் ஆலகாலம் என்னும் நஞ்சு தொகுதியாக எழுந்ததுபோன்று துண்ணென எழுந்துகொண்டது. 301

பரியின்தொகை முழுதுய்ந்தன பனைபோலிய நெடுங்கைக்
கரியின்தொகை முழுதுய்ந்தன கடுந்தேர்த்தொகை ஈர்க்கும்
அரியின்தொகை முழுதுய்ந்தன அவுணப்படை யாகி
விரியுந்தொகை முழுதுய்ந்தன மெய்யூறது நீங்கி.

தங்கள் தங்கள் மேனியில் ஊறுபட்டு இறந்துபோன குதிரைகளின் தொகை முழுவதும் உயிர்பெற்று எழுந்தன. பனைபோனற நீண்ட துதிக்கைகளையுடைய யானைப்படை முழுதும் உயிர்பெற்று எழுந்தன. கடுவேகமுடைய தேர்களை இழுக்கும் சிங்கங்களின் தொகை முழுவதும் உயிர்பெற்றெழுந்தன. அசுரப்படையாகிய எங்கும் பரந்த அசுரவீரர்கள் முழுவதும் உயிர்பெற்றெழுந்தனர் தத்தமது உடம்பிலுள்ள ஊறுகள் நீங்கி. 302

வடிவற்றுடல் அழிந்திட்டிடும் உயிரானவும் மருமம்
அடிகைத்தலம் முடிதோள்முதல் அங்கங்கள் குறைந்தே
முடிவுற்றிடும் உயிரானவும் முளரிக்கனல் உண்ணப்
பொடிபட்டிடும் உயிரானவும் எழுந்திட்டன புவிமேல்.

தமது உருவை காணொணதபடி அழிவுற்றிடும் உயிரானவும், நெஞ்சு கால், கை முடி, தோள் முதலான அங்கங்கள் வெட்டுப்பட்டு இறந்துள்ள உயிர்களும்; தாமரைப் பூப்போலும் சிவந்த நெருப்பு உண்டிடப் பொடிந்து சாம்பராகிய உயிர்களும் பூமிமேல் உயிர்பெற்று உடலுடன் எழுந்திட்டன. 303

மிண்டிக்கடி துயிர்பெற்றெழு வெஞ்சூர்முதல் அனிகம்
எண்டிக்கொடு புவிபாதலம் இருநாற்கடல் எங்கும்
மண்டிக்கக னத்தேழ்வகை உலகங்களும் மல்கி
அண்டத்தனி முடிகாறும் அடைந்திட்டன மிடைந்தே.

மிண்டுடன் விரைவில் உயிர்பெற்றெழுந்திட்ட கொடிய சூரபன்மனது சேனையானது எட்டுத்திக்குடன் பூமி, பாதாளம், ஏழுகடல் புறவாழிச் சமுத்திரம் எங்கும் மண்டிப் பரந்து வானில் மேலுள்ள ஏழுவகையான உலகங்களையும் நிறைத்து அப்பாலுள்ள அண்டகூடங்களின் தனி உச்சி வரையும் அடைந்து எங்கும் நெருக்கிக்கொண்டன. 304

மாதண்டம்ம ழுத்தோமரம் வயிரப்படை வாள்கோல்
கோதண்டம்மு தற்பல்படை கொடுதானவர் அனிகம்
வேதண்டமெ னச்சேணுயர் வேழம்பரி நிரைகள்
மூதண்டம்வெ டிக்கும்படி முழங்குற்றன அன்றே.

பெரிய தண்டாயுதம் எழுவாயுதம் தோமராயுதம் வச்சிராயுதம் வாள், அம்பு, வில் முதலான பல படைகளையும் பிடித்துக்கொண்டு அசுரர்களின் சைனியமானது மலைபோல் வானில் உயர்ந்த யானைகளுடனும், குதிரைகளின் அணிகளுடனும் முதிய இந்த அண்டங்கள் யாவும் வெடிக்கும்படி முழக்கம்கொண்டன. எழுந்த சேனைகள் முழங்கி இரைகின்ற ஓசையாயது முதிய அண்டமெல்லாம் உடையும்படி அதிரச் செய்தது. 305

எழுந்தான்வயப் புலிமாமுகன் இரவிப்பகை எழுந்தான்
எழுந்தான்எரி முகவெய்யவன் இளமைந்தனும் எழுந்தான்
எழுந்தான்அறத் தினைக்காய்பவன் இருபாலரும் எழுந்தார்
எழுந்தார்ஒரு மூவாயிரர் ஏனோர்களும் எழுந்தார்.

எழுந்தான் சிங்கமுகாசூரன். பானுகோபன் எழுந்தான். அக்கினிமுகாசூரன் எழுந்தான். வச்சிரவாகுவும் எழுந்தான், அதிசூரனும் அசுரேந்திரனும் எழுந்தார். மூவாயிரம் பிள்ளைகளும் எழுந்தார். ஏனையோர்களும் எழுந்தார். 306

சூர்க்கின்றதொல் வடிவங்கொடு துண்ணென்றெழு கின்றோர்
பார்க்கின்றனர் அனிகங்களைப் பகுவாய்த்திறந் திடிபோல்
ஆர்க்கின்றனர் தமதாடலை அறைகின்றனர் நம்மேல்
போர்க்கின்றுவந் தனர்யாரெனப் புகல்கின்றனர் இகலால்.

பார்ப்பதற்கு பயங்கரமான வடிவைக்கொண்டு துண்ணென உயிர்பெற்றெழு கின்றோர் இவர் யாவரும் தமது சேனைகளைப் பார்க்கின்றனர், அகன்ற வாயினைத் திறந்து இடியேறுபோல் கத்துகிறார். தமது வீரப்போரின் சிறப்பைப் பேசுகிறார்; மிகுவலியால் நம்மேல் போர்க்கு இன்று யார் வந்தார் என்று திடமொடு கேட் கின்றார்கள். 307

ஈடுற்றிடு சமரெல்லையில் இடையுற்றிடு படைகள்
நாடுற்றிவண் எடுத்திட்டனர் நறையுற்றிடு தும்பை
சூடுற்றிடு மணிமாமுடிச் சூரன்புடை தன்னில்
கூடுற்றனர் வெம்போர்செயுங் குறிப்புற்றனர் அன்றே.

எதிரிட்டு நின்று போர்புரியும் இப்போர்க்களத்தில் இடையாக இறக்குமுன்பு தாம்போட்ட படைக்கலங்களை இவ்விடம் தேடி எடுத்திட்டனர். வாசம் கமழ்ந் திடும் தும்மை மலர்மாலையைச் சூடிக்கொண்ட இரத்தினப்பெருமுடியணிந்த சூர பன்மன் பக்கராக வந்து இவர்கள் கூடுற்றனர். இவர்கள் யாவரும் கொடும்போர் செய்யும் குறிப்பைக் கொண்டுள்ளனராஞர்கள். 308

வேறு

உய்ந்திவர் யாவரும் ஒல்லை எழுந்தே
அந்தமில் சேனையொ டார்த்திடு காலை
இந்திர ஞாலம் எனப்படு மான்தேர்
வந்தது தானவர் மன்னவன் முன்னம்.

இந்த அசுரர்கள் யாவரும் உயிர்பெற்று உய்ந்து விரைவாக எழுந்து முடிவில் லாத சேனைகளுடன் கூடி இரைந்து கத்தி ஆர்த்திடுகின்ற நேரத்து இந்திர ஞாலம் என்னும் தேரானது அமுதசீதகூட மந்திரமலையுடன் அசுரர்களின் பெரும் அரசன் சூரபன்மன் முன்பு வந்தது. 309

பொற்றையி னோடு பொலன்கெழு மான்தேர்
உற்றதும் அன்பினர் உய்ந்தெழு மாறுந்
இற்றப தாதி இரைத்தெழு மாறுந்
தெற்றென மாயவள் செம்மல் தெரிந்தான்.

அமுதமலையுடன் அழகுடைய மணிகள்கொண்ட இந்திரஞாலம் என்னும் சிறந்த தேரானது அங்கு தம்முன் வந்ததும், தனது அன்பிற்குரிய தம்பி பிள்ளைகள் மந் திரிகள், சேனுதிபதிகள் யாவரும் உய்ந்து உயிர்பெற்றெழுந்த தன்மையும்; அழிவுற்ற காலாட்படை வீரர்கள் உயிர்பெற்றெழுந்து இரைந்தார்க்கும் அச்செயல் யாவற் றையும் திடீரென மாயவளின் தலைமை மைந்தன் சூரபன்மன் தெரிந்தான். 310

மகிழ்ந்தனன் ஆர்த்தனன் வானவர் தம்மை
இகழ்ந்தனன் விம்மிதம் எய்தினன் யாயைப்
புகழ்ந்தனன் மேனி பொடித்தனன் நெஞ்சந்
திகழ்ந்தனன் நன்னகை செய்தனன் அன்றே.

மகிழ்ந்தான் ; ஆர்ப்பரித்தான் ; தேவரை நோக்கி இகழ்ந்தான் ; அற்புதம் அடைந்தான். இதுகாலவரையும் போரிட்டு இறந்த இத்தனைபேரையும் எழச் செய்ததே அமுதமலே என்று அந்த உபாயத்தைப் புகட்டிய தாயைப் புகழ்ந்தான் : உரோமம் சிலிர்த்தான் ; நெஞ்சம் திகழ்ந்தான் ; இன்புற்ருன் ; நல்லதொரு சிரிப் புக்கொண்டான். 311

உந்திநி ரப்புறும் உண்டிய தின்றி
முந்திநி ரப்பிடை மூழ்கினன் வல்லே
வெந்திறல் ஆளி வியன்றவி சேறி
இந்திர நல்வளம் எய்திய தொத்தான்.

தனது வயிற்றை பசிவந்துற்றபோது நிரப்பிக்கொள்வதற்கு ஏற்ற நல்ல உணவு கிடைக்க முடியாது முன்னர்க் காலம்தொட்டே வறுமையை அனுபவித்து நின்ருேன் ஒருவன் மிகு விரைவாகக் கொடும் திறலுடைய சிங்கங்கள் சுமந்திடும் பெருமையான சிம்மாசனத்து ஏறி அரசாள்வதுடன் இந்திரபோகம் என்னும் செல்வத்தையும் பெற்ருல் அந்த வறியோன் எவ்வளவு மகிழ்ச்சிகொள்வானே அத் தன்மையானுன் சூரபன்மன். 312

ஓங்கிய சென்னி உயர்ந்தன மொய்ம்பு
வீங்கிய தாளுடன் .மிக்கு மதர்ப்புத்
தேங்கிய சிந்தை சிலிர்த்த உரோமம்
ஆங்கவன் எய்திய தாரறை கிற்பார்.

சூரனுடைய தலே மகிழ்வால் ஓங்கியது ; தோள்கள் பூரித்துயர்ந்தன ; உடல் வீங்கியது ; மதர்ப்பும் இறுமாப்பும் மிகுநதது ; சிந்தை களிப்பால் தேங்கியது : உரோமங்கள் இந்த அதிசயத்தை நினைய நினைய சிலிர்த்தன. இப்படியாக அவ் விடத்துச் சூரபன்மன் பெற்ற மகிழ்வை யார் எடுத்துரைப்பார்; 313

வஞ்ச னிதந்திடு மைந்தன்இவ் வாற்ருல்
நெஞ்ச மகிழ்ந்தவண் நின்றிடு காலே
நஞ்சம் எழுந்திடு நாள்கொலி தென்றே
அஞ்சி நடுங்கினர் அண்டர்கள் எல்லாம்.

வஞ்சனைக்கு ஒரு முதல்வியான மாயவள் பெற்றமைந்தன் சூரபன்மன் இவ் வாற்ருல் நெஞ்சம் மகிழ்ந்து அவ்விடத்து நின்றிடுகின்ற காலேயில் இதனை எல்லாம் அவதானித்து நின்ற தேவர்கள் எல்லோரும் திடுக்கிட்டு நஞ்சம் எழுகின்ற நாள் இதுவோ என்று அச்சத்தால் நடுக்கம்கொண்டார்கள். 314

பொன்னகர் வாழ்க்கை புவித்திசை வாழ்க்கை
பின்னுறு கின்ற பெரும்பத வாழ்க்கை
எந்நகர் வாழ்க்கையும் எய்திய இன்னே
ஒன்னலர் கொல்லுமுன் ஓடுதும் என்ருர்.

நடுக்கமுறும் தேவர்கள் யாவரும் ஒகோ இப்படி நிலேமையாயின் இனி எங்கட்கு பொன் நகரமான அந்த உலகவாழ்க்கை அது தப்பினுல் பூமியில் இருந்திடும் வாழ்க்கை அல்லது திக்கிலுள்ள எந்தொரு உலகிலுள்ள வாழ்க்கை பின்னுல் வரப்போகும் பெரும் பதத்திற்குரிய வாழ்க்கையான எல்லா நகர வாழ்க்கையும் இப்போது வந்ததையா வந்தது ! ஐய்யய்யோ இப்பகைவர் எம்மைக் கொல்லு முபை நாம எல்லாம் ஓடுவோம் ஓடுவோம் என்று கூச்சலிட்டுக் கூறினர். 315

ஊர்ந்திடும் ஊர்திகள் ஓர்புடை தம்பாற்
சார்ந்தவர் ஓர்புடை தாமொரு பாலாய்ச்
சேர்ந்திடு கைப்படை சிந்திவிண் ணோர்கள்
பேர்ந்திரி கின்றனர் பின்னது நோக்கார்.

இவ்வாறு அச்சமுற்று ஓடிடும் தேவர்கள் ஏறிவரும் வாகனம் ஒருபக்கத்தாலும் தம்பால் நின்ற பரிசனரும், தோழர்களும் ஓர் பக்கத்தாலும், தாங்கள் ஓர் பக்கத்தாலுமாகப் பறந்தோடுகின்ருர்கள். ஓடுகின்ற வேகத்தில் பின்னுல் கூட திரும்பிப்பாராது ஓடுகின்ருர்கள். 316

கிள்ளை புறுமயில் கேழ்கிளர் அன்னம்
பிள்ளை மணிக்குயில் பேரிசை ஆந்தை
கள்ளுணும் வண்டு கரண்டம தாதிப்
புள்ளுரு வங்கொடு வானவர் போனர்.

இப்படி ஓடும் தேவர் தம்மை அசுரர் கண்டுகொண்டால்வரும் கேட்டை நினைந்து அதற்காக தமது உருவை மறைத்து கிளி, புரு, மயில் அழகுவிளங்கும் அன்னம், நாகணவாய், நீல இரந்தினம்போன்ற குயில் பேரோசையுடைய ஆந்தை, தேன் உண்ணும் வண்டு, நாரை ஆகிய பறவைகளின் வடிவங்கொண்டு ஓடிப்போயினர். 317

அங்கது நோக்கி அடற்கண வீரர்
மங்கிய தானையும் மாண்டுளர் யாரும்
இங்கெழு கின்றனர் யாமிவண் வீந்தாஞ்
சங்கையி லென்று தளர்ந்தலை வுற்ருர்.

அங்கு அசுரர் அனைவரும் உயிர்பெற்றெழுந்ததமையை நோக்கி அடல்கொண்ட பூத கணங்களாய வீரர் யாவரும் ஓகோ! இறந்துபோன சேனையும் மாண்ட அசுரரும் யாவரும் இங்கு உயிர்பெற்றெழுகின்ருர்கள். இனி யாங்கள் அழிந்தோம்! இதற்கு சந்தேகமில்லை என்று தளர்ந்து அங்குமிங்குமாக அந்தரப்பட்டு அலைவுற்ருர். 318

இலக்கரும் எண்மரும் ஏந்தலும் நோக்கி
அலக்கணும் அச்சமும் அற்புத நீருங்
கலக்கமும் வெய்ய கடுஞ்சின முங்கொண்
டுலைக்கனல் அன்ன உயிர்ப்பொடு நின்ருர்.

இலக்கம் வீரரும் மற்றைய எட்டுப்பேரும் எம் தலைவரான வீரவாகு தேவரும் இதனை நோக்கி அலக்கணும் கவலையும் பயமும் அததுடன் இன்ன தன்மையாக இவர்கள் உயிர்பெற்றனரே எங்கு இப்படி நிகழ்ந்தது எனும் அற்புதமும் மனக் கலக்கமும் மிக்ககொடிய கோபமுங்கொண்டு கொல்லனுடைய உலைக்களத்தில் தோற்றும் நெருப்புப்போன்று சூடான பெருமூச்சுடன் நின்ருர்கள். 319

வேறு

வென்றி கொண்டவேற் குமரன்இவ் விளைவெலாம் நோக்கி
நின்ற ஒன்னலன் சூழ்ச்சியும் வலவைசொல் நெறியுங்
குன்றின் வன்மையும் உய்ந்தெழு பரிசனர் குழுவும்
நன்று நன்றெனக் கையறிந் தழலெழ நகைத்தான்.

வெற்றிகொண்ட வேற்படையை திருக்கரத்துடைய குமரப்பெருமான் இந்த விளைவுகள் யாவற்றையும் நோக்கியருளி, அங்கு நின்ற பகைவனை சூரபன்மனது சூழ்ச்சியும் வஞ்சனையான மாயவள் சொன்ன புத்தி நெறிகளையும் அமுதசீதகூட மந்தர மலையின் இறந்தாரையும் எழுப்பும் சத்தியினையும், அதனுல் உயிர்பெற்று உய்ந்தெழுந்த அசுரரது செறிவையும் கண்டருளி அது நன்றுநன்றென்று திருக் கையினை தட்டி நெருப்பு எழுந்திடச் சிரித்தார். 320

ஆன காலையில் அரிமுகன் அலரிதன் பகைஞன்
ஏனை மைந்தர்கள் அறத்தினை வெகுண்டிடும் ஏந்தல்
சேனை காவலர் யாவருஞ் சூரன்முன் சென்று
மான வீரமோ டிறைஞ்சிநின் றினையன வகுப்பார்.

அவ்வாறான காலையில் சிங்கமுகாசூரன், பானுகோபன், ஏனைய சூரனது மற்றைய மைந்தர்கள், தருமத்தை வெருண்டு விலக்கி வாழ்ந்த தலைமை மந்திரி தரும கோபன், ஏனைய சேனாதிபதிகள் ஆகிய எல்லா அசுரரும் சூரன்முன் சென்று அவனை மானம்கொண்ட மற்றைய வீரருடன் கைகூப்பித்தொழுது முன்னின்று இதனை எடுத்து ஓதுகின்றார். 321

எந்தை நீயிவண் நிற்குதி யாமெலாம் ஏகிக்
கந்த வேளுடன் அவன்படை வீரரைக் கடிந்து
சிந்த ராகிய பூதர்தந் தொகையையுஞ் செகுத்து
வந்து நின்னடி வணங்குதும் வல்விரைந் தென்றார்.

எமது பிரானே! நீர் இவ்விடத்து நிற்பீராக. நாங்கள் எல்லோரும் சென்று கந்தனுடன் போரிட்டு அவனுடைய படைவீரர்களைக் கொன்று அற்பராகிய பூதங்களின் தொகையையும் கொன்று பின்னர் வெற்றியுடன் அதிவிரைவில் வந்து உமது காலடியில் கைதொழுது வணங்குவோம் என்றனர். 322

கொற்ற வீரர்கள் இவ்வகை உரைத்தலுங் கொடியோன்
மற்றிவ் வாசகம் நன்றெனைப் போற்றுவான் வந்தீர்
பற்ற லன்பெரு வன்மையும் வீரமும் படுத்து
வெற்றி இன்றெனக் கருளுதி ராலென விடுத்தான்.

கொற்றம் மிகுந்த வீரர்களான அசுரர் இவ்வகை உரைத்தலும், அதனைக் கேட்ட கொடியவனான சூரபன்மன் அவர்களை நோக்கி நீங்கள் இப்பொழுது கூறிய வாசகம் நன்று. எனைக்காத்து ஆதரிக்கும்படி இவ்விடம் வந்துளீர். என் பகைவன் முருகனுடைய வலியையும் வீரத்தையும் கெடுத்து எனக்கு இன்று வெற்றியாகும்படி செய்திடுவீரென்று விடுத்தான். 323

விடுத்த காலையில் விடாதுசூழ் அனிகங்கள் விரவி
அடுத்து வந்திடப் பொள்ளென ஏகியே ஆர்த்துப்
பிடித்த பல்வகைப் படைகளும் உருமெனப் பெய்து
வடித்த வேற்படை நம்பியை அன்னவர் வளைத்தார்.

விடுத்த காலையில் இந்த அசுரர் யாவரும் தங்களை விடாது சூழ்ந்துவரும் சேனைகள் நெருங்கிப் பக்கரில் வந்திட விரைவாகச் சென்று ஆர்ப்பரித்திரைந்து கைகளில் பிடித்த பலவகையாகும் படைகளையும் இடிபோன்று செலுத்தி, கூரிய வேற்படையை திருக்கரத்து ஏந்திய எம்பெருமானை அவர்கள் யாவரும் வளைத்துக் கொண்டனர். 324

தீங்க னற்பெருங் கடவுள்பாற் செறியிருட் டொகைபோல்
வாங்கு விற்கரத் தையனை அவுணர்கள் வளைப்ப
ஏங்கல் உற்றனர் பாரிடர் ஏனையோர் எம்மால்
தாங்கு தற்கரி திப்பெரும் படையெனத் தளர்ந்தார்.

அக்கினி தேவனுக்கும் பெரும் கடவுள்பக்கம் வந்து செறிகின்ற கொடிய இருள் போல் வளைத்த வில்லுடன் பொருந்திய கையுடைய எம் ஐயனை அசுரர்கள் புறமே சூழ்ந்து வளைத்திட, அதுகண்டு பூதங்கள் ஏக்கங்கொண்டனர். ஏனைய இலக்கத்தெட்டு வீரரும் வீரவாகுதேவரும் இப்பெரும்படையை எம்மால் தாங்கி எதிர் ஏற்றுப் போரிட முடியாதே! என சலித்துத் தளர்ச்சியடைந்தார். 325

விறலு டைப்பஃ றானையும் வெய்யவர் தொகையும்
நொறிலு டைக்கதி கொண்டுசூழ் வுற்றது நோக்கி
அறுமுக கத்தனிப் பண்ணவன் உயிர்த்தொகை அனைத்தும்
இறுதி யைப்புரி கடவுள்மாப் படையினை எடுத்தான்.

விறல்கொண்ட பலவகைப்பட்ட சேனையும் கொடிய அசுரது தலைவரும் துரிதமுடைய வேகம்கொண்டு தன்னைச் சூழ்வுற்றதை ஆறுமுகக் கடவுள் பார்த்தருளி உடனேகவே உயிர்த்தெசகை அனைத்திற்கும் முடிவைப் புரிகின்ற பெருமை வாய்ந்த கடவுள் உருத்திரமூர்த்தியின் பெரும்படையை திருக்கரத்தெடுத்தார். 326

அங்கை யிற்கொடு சிந்தையால் வழிபடல் ஆற்றிச்
சிங்க மாமுகன் ஆதியாம் அவுணர்தந் திறத்தைச்
சங்கை இன்றியே நின்றிடு தானைகள் தம்மை
இங்கு வல்லையில் அடுதியால் எனவிடுத் திட்டான்.

தந்தையின் உருத்திரப் படையினை தமது அழகுடைய திருக்கரத்து எடுத்துக்கொண்டு மனதினுல் வழிபடல் புரிந்து அப்படையை நோக்கியருளி நீ சென்று சிங்கமுகாசூரன் ஆதியாகச் சொல்லப்பெறுகின்ற அத்தனை அசுரரையும் நீக்கமின்றி எங்கும் நெருங்கி நிலவிநின்றிடும் சேனைகள் தம்மையும் எல்லாரையும் இங்கு மிகுவிரைவாகக் கொன்று வருவாயாக எனக் கற்பித்து சிவன்படையை அங்கு சூழ்ந்த அசுரர்மீது விடுத்தார். 327

விடுத்த காலையில் கட்செவி நிரைகளும் விடமும்
இடிக்கு ழாங்களும் உருத்திரர் உருக்களும் எரியுங்
கடற்பெ ருங்கணத் தொகுதியும் அளவிலாக் கடவுட்
படைக்க லங்களு மாய்விரிந் ததுசிவன் படையே.

எம்பிரான் சிவப்படைக்கலத்தை விடுத்த காலையில் உடனே அப்படையானது பாம்புகளின் நிரைகளும் நஞ்சும் இடிக்கூட்டமும் உருத்திரமூர்த்தியின் உருவங்களும் நெருப்பும், கடல்போல் பரக்கும் பூதகணங்களின் தொகுதியும் அளவு கடந்த தேவப் படைக்கலங்களுமாக விரிந்தது.

அந்த சிவப்படைக்கலம்; எம்பிரான் திருக்கரத்து நின்றும் புறப்படும்போது ஒன்றுயிருந்தது, இப்பொழுது பலபல வேடமாகும் படைகளாக விரிந்துபெருகியது. 328

இன்ன தன்மையால் அரன்படை மூதண்டம் எங்குந்
துன்னி யார்த்தெழீஇத் துண்ணெனச் சென்றுசூழ் வுற்று
முன்னர் உய்ந்தெழும் அவுணர்தம் படையெலாம் முருக்கி
ஒன்ன லன்தமர் யாரையும் ஒருங்குகொன் றதுவே.

இன்னதன்மையாக சிவப்படைக்கலமாயது இந்த முதிய அண்டங்கள் எல்லாம் மும்மரமாகப் பரந்து முழங்கி எழுந்து துரிதமுடன் சென்று சூழ்வுற்று முன்னராக உயிர்பெற்றெழுந்த அசுரப்படைகள் யாவற்றையும் பொசுக்கிக் கொன்று அழித்து சூரபன்மனுடைய சுற்றங்களாகும் தலைவர்கள் அத்தனை பேரையும் ஒருங்கே கொன்றருளியது. 329

முந்து வெய்யசூர்ப் பரிசனத் தொகையெலாம் முருக்கி
இந்தி ரப்பெரு ஞாலமாந் நேர்மிசை இருந்த
மந்த ரப்பெருங் கிரியினைத் துகளெழ மாய்த்துக்
கந்த வேள்புடை மீண்டது சிவன்படைக் கலமே.

முன்னுக எழுந்துவந்த கொடிய சூரபன்மனது படையின் தொகை யாவையும் ஒருங்கே கொன்று அதன்பின் இந்திரஞாலம் என்னும் தேர்மீதிருந்து இறந்தாலும் உயிர்பெற்றெழச் செல்யவல்ல அமுதசீதகூட மந்தர மலையையும் பொடியாக அழித்து முருகப்பெருமான்பால் மீண்டருளியது சிவபெருமானுடைய அப்படை. 330

அரிமு கத்தவன் ஆதவன் தனைமுனம் அழன்றோன்
எரிமு கத்தவன் வச்சிர மொய்ம்பன் நூற் றிருவர்
முரண்மி குத்தமூ வாயிரர் அறப்பகை முதலோர்
விரிக டற்படை வெற்பொடு முடிந்தவண் வீழ்ந்தார்.

அவ்வேளை சிங்கமுகாசூரன் ; சூரியனைக் கோபித்த பானுகோபன் ; அக்கினிமுகாசூரன்; வச்சிரவாகு; சிங்கமுகனுடைய நூறுபிள்ளைகள் அதிவீரன் அசுரேந்திரன் வலிமிகுந்த மூவாயிரம் மைந்தர் ; தருமகோபன் முதலோர் விரிந்த புறவாழிச் சமுத்திரத்தின் நின்ற அமுதசீதகூட மலையொடும் அழிந்து அவ்விடம் வீழ்ந்தார்கள். 331

தன்மை அங்கவை யாவையுங் கண்டனன் தளர்ந்தான்
வன்மை நீங்கினன் கவன்றனன் இரங்கிமெய் மறந்தான்
புன்மை யாயினன் உயிர்த்தனன் செயிர்த்தனன் புலர்ந்தான்
தொன்மை போலவே தமித்தனன் துணையிலாச் சூரன்.

இத்தன்மைகள் யாவற்றையும் அங்கு சூரபன்மன் கண்டான். கண்டதுமே முன்கொண்டுள்ள மகிழ்ச்சி யாவும் நீங்கித் தளர்ந்தான். தனது வலிமை யாவையும் நீங்கினன். மனக்கவர்ச்சிகொண்டான். அழுது மெய்மறந்தான். மிகவும் சிறுமையாயினன். பெருமூச்சுவிட்டான். கோபமுற்றான். வாடினான். முன்போலவே தனியாக நின்றான். தனக்கு வேறொரு துணையுமில்லாத சூரபன்மன். 332

கண்ட கன்படை முற்றொருங் கிறந்தது காணா
எண்டொ கைப்படு பூதரும் ஏனைவீ ரர்களும்
முண்ட கந்தனில் இருந்திடு புங்கவன் முதலாம்
அண்டர் யாவருந் துயரொரீஇ உவகைபெற் றார்த்தார்,

கொடியோனான சூரபன்மனது பெரும்படை முழுவதும் அழிவுற்றதைக்கண்டு இரண்டாயிர வெள்ளம் என்னும் தொகைப்பட்ட பூதங்களும் ஏனைய வீரர்களும் தாமரை மலரில் இருந்திடுகின்ற பிரமன் முதலாகிய தேவர்கள் யாவரும் துயரம் நீங்கி உவகையான இன்பம்பெற்றுக் கூத்தாடி ஆரவாரம் கொண்டனர். 333

அழுந்தும் ஆரிருள் ஒருவிவிண் மிசைதனில் அடைவோர்
கழிந்த தோரிடை ஊற்றினன் மீட்டும்அக் கதியில்
விழுந்த தேயெனத் துன்பொடு நின்றனன் விளிவுற்
றெழுந்த தானையை இழந்திடும் அவுணருக் கிறைவன்,

இது எப்படி இருப்பதென்றால் அழுந்தித் துயருறுகின்ற கொடிய இருளினின்றும் நீங்கி ஒளியாகும் வான உலகில் அடைவோர் பின்னர் முன் செய்துற்ற ஓர் இடையூற்றால் வந்த பாவத்தால் திரும்பவும் வான உலகை விடுத்து முன்பிருந்த இருட்பூமியாகும் நரகத்து வீழ்ந்தது எனும்படியாக ; அளவற்ற துன்பத்துடன் அந்த சோக நிகழ்ச்சியைக் கண்டு நின்றான் அமுதமலையால் உயிர்பெற்றெழுந்த தன் துணைவரையும் சேனையையும் இழந்த அசுரர்தலைவன் சூரபன்மன். 334

அனைய தன்மையின் நின்றிடும் அவுணர்கோன் ஆற்றச்
சினம தெய்தியென் படையெலாஞ் சிதைத்தபா லனையுந்
தனிமை செய்துபின் வெல்வனென் றுளங்கொடு தழற்கண்
முனைவன் நல்கிய தேரினை நோக்கியே மொழிவான்.

அவ்வாறான தன்மையில் நின்றிடும் சூரபன்மன் மிகவும் கோபமடைந்து தன் படையெல்லாவற்றையும் சிதைத்த அப்பாலனையும் என்னைப்போன்று தனிமை செய்து பின்னர் வெல்வேனென்று உள்ளங்கொண்டு அன்று யாகாக்கினி நெருப்பில் நின்றும் இறையோன் சிவபிரான் கொடுத்தருளிய இந்திரஞாலம் என்னும் தேரினை நோக்கி சொல்கின்றான். 335

கொச்ச கத்தியற் குதலைவாய் மதலைபாற் குழீஇய
வச்சி ரத்தெயி றுடையவெம் பூதரை வயின்சூழ்
கைச்சி லைத்திறல் வீரரைக் கவர்ந்துபோய் அண்டத்
துச்சி யிற்கொடு வைத்தனை இருத்தியென் றுரைத்தான்.

கொச்சகமாகப் பயின்றிடும் கொஞ்சுமொழி பேசும் வாயுடைய குழந்தையின்பால் அங்கு சேனையாகக் கூடிநின்ற வச்சிரம்போன்ற பற்களுடைய கொடிய பூதங்களை; அவ்விடம் சூழ்ந்த கைவில்லின் போரில் திறமைசாலிகளான இலக்கத்தெட்டு வீரரை ; வீரவாகுவை ; நீ ஒருவருக்கும் தெரியாதபடி மறைவாகத் தூக்கிக்கொண்டுபோய் அவர்களை அண்டத்தின் உச்சியில் வைத்துக்கொண்டு அங்கிருப்பாய் எனக் கூறினன் சூரபன்மன். 336

உரைத்த காலையில் நன்றென வினவியே ஓடித்
திருத்த குந்திறல் வாகுவை முதலினோர் திறத்தைக்
கிருத்தி மப்பெருந் தானையைக் கிளையொடும் வாரிக்
கருத்தை மாமயல் செய்தது கைதவன் கடுந்தேர்.

சூரபன்மன் சொல்லிய நேரத்தில் வஞ்சகனான அவனது அத்தேரும் நன்று என்று அதனைக் கேட்டு வேகமாக ஓடி அங்கு கூட்டாக நின்ற திருத்தமான வலியுடைய வீரவாகு தேவர் முதலாக மற்றைய இலக்கத்தெட்டு வீரரை பூதங்களாய சேனையை யாரையும் கிளையுடன் வாரிக்கொண்டு அவர்கள் சிந்தையை மயக்கமுறச் செய்தது வஞ்சகனின் கொடிய இந்திரஞாலத் தேர். 337

கையர் தன்மையிற் கடற்படை முழுவதுங் கவர்ந்து
மையல் சிந்தையிற் செய்துதன் வயினிடைத் தாங்கி
ஒய்யெ னச்சென்று மூதண்ட கோளகை யுழிப்போய்
வெய்ய வன்பணி ஆற்றிஆண் டிருந்தது வியன்தேர்.

வஞ்சகர் மேற்கொள்ளும் செயல்போல் கடல் போற் பரந்த எம்பிரான் சேனைகள் முழுவதையும் களவாண்டுகொண்டு அவர்களது சிந்தையில் மயக்கத்தைப் புரிந்து தன்னிடத்து அத்தனைபேரையும் தாங்கி விரைவாகச் சென்று முதிய அண்டங்களின் கோளகை எல்லையிற்போய் கொடிய சூரபன்மனின் பணியைச் செய்துகொண்டு அவ்விடம் அவர்களை விடாது வைத்திருந்தது மேலான இந்திரஞாலமெனும் தேர். 338

நிமலன் அவ்வழித் தானையம் பெருங்கடல் நீங்கத்
தமியன் நின்றனன் ஆங்கது தகுவர்கோன் காணு
நமது தேர்வலி நன்றென உவகையால் நகைத்தான்
அமரர் அச்செயல் நோக்கியே பின்னரும் அயர்ந்தார்

நின்மல சொரூபரன் முருகக்கடவுள் தனது சேனையான பெருங்கடல் நீங்கிட தனியனாக நின்றருளினர். அத்தன்மையைச் சூரபன்மன் கண்டு எமது இந்திரஞாலமென்னும் தேரின்வலி நன்றாக இருக்கின்றது என்று மகிழ்ச்சியோடு சிரித்தான். அங்கு நின்ற தேவர்கள் யாவரும் இச்செயலைக் கண்டபோதே அம்மவோ! இப்படியோ நடந்துவிட்டதென அயர்ச்சிகொண்டனர். 339

சூரிடத்துறு சூழ்ச்சியுந் துணைவர்கள் தம்மைப்
பாரி டத்தொடு முகந்தெழீஇ மாயையிற் படர்ந்த
தேரி டத்தியல் வன்மையும் ஆங்ஙனந் தெரிந்தான்
நேரி டப்பிறர் இன்றியே தமியனும் நெடியோன்.

அதுபோது அங்கு சூரபன்மனிடத்து உற்ற சூழ்ச்சியும் அதனினால் அவனது தேர் வந்து தனது துணைவரான இலக்கத்தொன்பது வீரரையும் பூதங்களுடன் சேர்த்து களவாக வாரிக்கொண்டு ஒருவருக்கும் தெரியாதபடி மாயையால் போன அதன் வலியையும் தெரிந்தான். தனக்கு நேராக இன்னொருவரை எடுத்துச் சொல்ல முடியாது அறிவுக்கறிவாகி அப்பாலுக்கப்பாலாய் அகலநீளம் ஏவராலும் அறியொணாது எங்கும் நிறைகின்ற ஏகன் ஆறுமுகப்பெருமான். 340

கண்டு சீறியோர் கார்முகம் வாங்கியே கடிதோர்
திண்டி றற்கணை பூட்டிநஞ் சேனையைப் பற்றி
அண்ட கோளகை புக்குறும் அடுமுரண் தேரைக்
கொண்டு வல்லையின் வருகென விடுத்தனன் குமரன்.

குமரப்பெருமான் இதனைக் கண்டு சீற்றம்கொண்டு ஓர் வில்லை வளைத்து சீக்கிரமே ஓர் திண்மையான அம்பினை அதில் பூட்டி அதனை நோக்கி 'நீ சென்று நமது சேனையைப் எடுத்துக்கொண்டு அண்ட கோளகையில் புகுந்து கொண்ட இந்திரஞாலம் என்னும் கொலைபுரியும் வன்மையுடைய தேரை இங்கு பிடித்து விரைவில் வருவாயாக' என்று அந்த அம்பினை விடுத்தருளினர். 341

விடுந்த னிக்கணை வேலெனச் சென்றுவில் வீசி
இடந்தி கழ்ந்திடும் ஏழ்வகை உலகமும் இமைப்பில்
கடந்து மற்றுள பதங்களும் நீங்கியோர் கணத்தில்
தொடர்ந்து மூதண்ட கோளகை புகுந்தது துன்னி,

எம்பிரான் விடுத்த தனியான அந்த அம்பு வேல்போன்று ஒளியைப் பரப்பி விசாலமாகி இடமகன்ற ஏழ்வகையாகும் உலகுகளையும் ஓர் இமைப்பொழுதில் கடந்து இன்னும் அப்பாலுள்ள வேறுபதநிலைகளையும் நீங்கிச் சென்று ஓர்கணத்தினில் சென்று மூதிய அண்டங்களின் கோளகையில் நேராகப்புகுந்தது. 342

துன்னி வெஞ்சரம் மாயமான் தேர்வலி தொலைச்சி
அன்ன தைக்கொணர்ந் தொல்லையின் மீண்டுள தம்மா
மின்னு லாய்நிமிர் எழிலியை விண்ணினும் பற்றி
இந்நி லத்தினிற் கொடுவரும் மாருதத் தியல்போல்.

அண்டகோளகையிற் சென்ற கொடிய அம்பு மாயம்கொண்ட பெரிய இந்திரஞாலம் என்னும் தேரின் வலியைத் தொலைத்து அந்தத் தேரை இழுத்துக்கொண்டு விரைவாக மீண்டுகொண்டது. எதுபோலெனில் மின்னல் உலவவிடும் பெரும் ஒரு முகிலை வானில் நின்றும் பிடித்துத் தள்ளி இம்பூமியில் கொண்டுவரும் காற்றின் இயல்புபோன்றது. 343

### வேறு

வெந்திறல் நெடுங்கணை மீண்டு ஞாலமேல்
இந்திர ஞாலமாம் இரதத் தைக்கொடு
கொந்தவிழ் மாலைவேற் குமரன் தன்முனம்
வந்தது வானவர் வழுத்தி ஆர்ப்பவே.

மிகும் திறல்கொண்ட நெடிய அந்த அம்பானது அண்டகோளகை நின்றும் திரும்பி இப்பூமிமேல் இந்திரஞாலம் என்னும் தேரினை இழுத்துக்கொண்டு கொத்விழும் பூமாலை சூடிய வேற்படையைக்கொண்ட குமரநாயகன் திருமுன்பு வந்து கொண்டது, அங்கு அதனைக் காண்குறும் தேவர்கள் யாவரும் சந்தோஷ மிகுதியால் கும்பிட்டுக் கூத்தாடி ஆர்த்திடும்படியாக. 344

முப்புரம் முடித்தவன் முருகன் தன்கணை
இப்புவி வருதலும் இலக்கத் தெண்மரும்
ஒப்பரும் இளவலும் ஒல்லென் பூதருங்
குப்புறல் உற்றனர் கொடியன் தேரினும்.

முப்புரங்களை எரித்து முடித்த சிவபெருமான் திருக்குமரன் முருகப்பெருமானுடைய அந்த அம்பு இப்பூமியில் இந்திரஞாலத்தேரைக் கொண்டு வருதலும் அதில் இருந்த தனக்கு ஒப்பில்லாத வீரவாகு தேவரும் "ஒல்" என்றார்க்கும் பூதங்களும் கொடியோனான சூரபன்மனது தேரில் நின்றும் பூமியில் குதித்து இறங்கினார்கள். 345

குதித்தனர் புடவியில் குமர வேள்இரு
பதத்திரு மலர்தனைப் பணிந்து பன்முறை
துதித்தனர் புடையராய்த் துன்னி நின்றனர்
கதித்திடு பேரருட் கடலின் மூழ்கியே.

பூமியில் குதித்து குழந்தை வடிவாய் திகழும் ஆறுமுகப் பெருமானின் என்றும் காப்பாகும் இரு திருவடி மலர்களைப் பன்முறை பணிந்து துதித்தனராய் பக்க ராகச் சூழ்ந்து நின்றனர்; ஆனந்தமாய் பெருக்கெடுத்திடும் பேரருளின் கடலினில் மூழ்கியோராய். 346

ஆவதோர் காலையில் அகிலம் யாவுமாம்
மூவிரு முகனுடை முக்க ணன்மகன்
வாவியல் வனப்புடை மாயத் தேர்தெரீஇத்
தேவர்கள் பரசுற இனைய செப்புவான்.

அவ்வாறாகிய காலையில் இந்த பூமிமுதல் எல்லாப் பொருளுமாய் எங்கும் நிறைந்து நின்றிடும் ஆறுமுகமுடைய முக்கண்மூர்த்தி சிவபெருமான் திருக்குமரன் அங்கு ஒருவருக்கும் தென்படாது பாய்ந்திடும் இயல்புடைய அழகிய இந்திரஞாலத் தேரை நோக்கி அங்கு நின்ற தேவர்கள் கைகூப்பித் தொழுதிட இந்த வார்த் தைகளைச் சொல்லியருள்வார். 347

தொல்லையில் வரம்பெறு சூரன் தன்புடை
செல்லலை ஆங்கவன் முடிகை திண்ணமால்
மல்லலந் திருவுடை மாயத் தேரைநீ
நில்லிவண் என்றனன் நிகரில் ஆணையான்.

அற்புதமான திருவுடைய மாயத்தேரே! மிகு முந்திய காலத்தில் பெரும் வரங் களைப் பெற்று சீர்கொண்ட சூரபன்மன் பக்கராகச் நீ செல்லல் வேண்டாம். அங்கு அச்சூரன் இனி முடிந்துபோவது திண்ணம். ஆதலின் இவ்விடம் நீ நின் றிடுவாயாக எனத் திருவாய் மலர்ந்தருளினர், நிகரற்ற ஆணையுடைய எமது ஆறுமுகப்பெருமான்.

ஆறுமுகம்கொண்டு எங்குமாய் எல்லாமாய் நின்றிடும் பூரணனாகி அரும் பெறல் மரபில் பெரும்பெயர் கடவுளாகி அனைத்தையும் அவனே இயற்றி நிற்றலால் அவனது ஆணை நிகரற்றது. இதனை தெளிவுற்ற பெரியோர்களும் அவனன்றி ஓர் அணுவும் அசையாது என மொழிந்தனர். 348

ஆண்டது வினவுறூ அவுணர் கோன்புடை
மீண்டிடல் அஞ்சியே மேலை வன்மைபோய்
மாண்டிடல் பிறப்பிலான் மதலை மாடுறப்
பாண்டிலந் தேரது பணியின் நின்றதே.

எமபெருமானுடைய ஆணையை அவ்விடத்து அத்தேர் கேட்டு அசுரர்களின் தலைவன் சூரபன்மன் பக்கராக திரும்பிப் போவதற்கு அச்சமுற்று தனது முன்னைய வலிகள் யாவும் நீங்கி, தீங்குபுரியும் செயல்கள் அத்தனையும் விடுத்து, பிறப்பு இறப்பு என்பதில்லாத கடவுள் சிவபெருமான் திருக்குழந்தையான எமது ஆறு முகப்பெருமான் பக்கராக அவர் கட்டளைப் பிரகாரம் பணியில் நின்றது. 349

அண்டம தடைந்ததேர் ஐயன் வாளியால்
மண்டலம் இழிந்து தன்மருங் குறுதலும்
எண்டகு பூதரும் யாரும் மீண்டதுங்
கண்டனன் அவுணர்கோன் கனலிற் சீறினான்.

அண்டங்களின் உச்சியை அடைந்த தனது தேர் எமது ஐயன் ஆறுமுகப் பெருமானது அம்பினுல் வானமண்டலத்தைவிட்டு இறங்கி இப்பூமியில் வந்தும் தன் பக்கர் வராதுபோனதும்; எண்ணற்ற வலியுடைய பூதங்களும் மற்றைய எல்லாரும் மீண்டுகொண்டதையும் கண்டான் சூரபன்மன். கண்டபோதே அவன் நெருப்பைப் போன்று உருத்துச் சீறினுன். 350

அன்னது காண்டலும் அவுணன் ஆங்கொரு
கொன்னெடுஞ் சிலையினைக் குனித்து வல்லையிற்
பன்னிரு கரமுடைப் பண்ண வன்மிசை
மின்னிகர் பகழிகள் மீட்டும் வீசினுன்.

அதனைச் சூரபன்மன் காண்டலும் அவ்விடத்து மிகு திறங்கொண்ட நெடியவில் ஒன்றினை எடுத்து வளைத்து மிகு விரைவாக பன்னிரண்டு கைகளை உடைய புண்ணியப் பொருளாகும் ஆறுமுகப் பெருமான்மீது மின்னலை நிகர்த்த கூரிய அம்புகளை மீண்டும் விடுத்தான். 351

மாசறு கங்கைதன் மதலை அவ்வழிக்
காய்சினங் கொண்டொரு கார்மு கம்வளைஇ
ஆசுக மாரிபெய் தவுணர் கோமகன்
வீசிய கணையெலாம் விலக்கி னுனரோ.

மாசற்ற கங்காதேவியிடத்து வந்த குழந்தையாகும் எம்பெருமான் அவ்வேளை கடுமையான கோபம்கொண்டருளி ஓர் வில்லை எடுத்து வளைத்து அம்பாகும் மழையினைச் சொரிந்து அசுரனுன சூரபன்மன் விடுத்த அம்புகள் யாவற்றையும் விலக்கி அறுத்தார். 352

கையனும் அத்துணை காய்சி னங்கொளீஇ
ஒய்யென எந்தைதேர் உய்க்கும் வன்மையோன்
மெய்யிடம் எங்கணும் வெளியு றுவகை
செய்யன பகழிகள் செறித்துப் போர்செய்தான்.

வஞ்சனையுடைய சூரபன்மனும் அத்துணையில் கடுமையான கோபமடைந்து அதிவிரைவாக எந்தை பெருமானின் தேரினைச் செலுத்தும் வலியுடையோனுகும் வாயுதேவனின் மேனி எங்கும் வெளி ஏதும் இலாதவகை சென்று தைத்திடும்படி சிவந்த அம்புகளைச் செலுத்தினுன். 353

பொருந்தலன் கணைபடப் புலம்பிக் காற்றிஞேன்
வருந்தினன் மயங்கினன் மாக்கள் தூண்டலன்
இருந்தனன் வறிதவன் இயற்கை யாவையுந்
தெரிந்தனன் குமரவேள் அருளின் செய்கையான்.

பகைவனுன சூரபன்மனின் அம்புகள் வந்து படுதலால் வாயுதேவன் பதைத்து புலம்பி அழுது வருந்தி மயங்கி குதிரைகளைத் தூண்டிட முடியாதுபோய் அவ்விடத்து அசைவின்றியிருத்தலும், வாயுதேவன அசைவின்றி இருக்கின்ற அவனது இயல்பை எல்லாம் தெரிந்தார் எல்லார்க்கும் அருள் புரிதலை தமது செய்கையாகக் கொண்டருளிய அறுமுகமுடைய அப்பன். 354

கண்டிடு முருகவேள் கணைகள் ஆயிரம்
விண்டொடர் செலவினுல் விடுத்து வெய்யசூர்
கொண்டிடு சிலையினைக் குறைத்துப் பல்பெருந்
துண்டம தாக்கினுன் அமரர் துள்ளவே.

இதனைக் கண்டுகொண்ட குமரப்பெருமான் ஆயிரம் அம்புகளை வானின் வழியாகச் செல்லுமாறு விடுத்து கொடிய சூரபன்மன் கையில் பிடித்த வில்லினை முரித்து பலபல துண்டுகளாகும்படி துகள் செய்தார். அதனைக் கண்டுகொண்ட தேவர்கள் அகமகிழ்ந்து துள்ளிக் கூத்தாடிடும்படியாக. 355

## வேறு

கைச்சிலை முரியச் சூரன் கண்ணுதற் பெருமான் தந்த
முச்சிகைப் படையொன் றேந்தி முடங்குளை யூர்தி தன்னை
உச்சியின் நீபஞ் சூடும் உலகுடை யொருவ னூர்ந்த
அச்சுறு தடந்தேர் முன்னர் அணுகுறத் தூண்டிச் சென்றான்.

தனது கையில் பிடித்த வில்லானது முரிந்திடலும் சூரபன்மன் அதுவேளை நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் முன்னர் தனக்குக் கொடுத்தருளிய மூன்று சுடருடைய சூலப்படை ஒன்றினை ஏந்திக்கொண்டு அழகிய பிடரி மயிரினைக் கொண்ட சிங்கவாகனத்தைச் செலுத்திக்கொண்டு உச்சியின்மீது கடப்ப மாலையை சூடி எல்லா உலகையும் தான்கொண்ட ஒருவனாகும் ஆறுமுகப்பெருமான் எழுந்தருளி வருகின்ற அச்சுடைய பெரும்தேர் முன்னர் அணுகி நெருங்கிப்போகுமாறு சிங்கத்தைச் செலுத்தி ஆர்த்துச் சென்றான். 356

தூண்டிய அரிமான் ஏறு சூரன துளத்திற் போந்து
மாண்டகு தனது தீய வள்ளுகிர்க் கரத்தால் எந்தை
பாண்டிலந் தேரை ஆற்றும் பரித்தொகை பதைப்ப மோதி
ஆண்டயல் நின்ற பூதர் அலமர ஆர்த்த தன்றே.

சூரபன்மன் செலுத்திய சிங்கங்களின் அரசானது சூரபன்மனது உள்ளப்படியே சென்று மாட்சிமையுடைய தீயதான கூரிய நகங்கொண்ட கைகளால் எம்பெருமானது பெரும் சில்லுடைய தேரை இழுத்துவரும் குதிரையின் தொகைகள் பதைப்புறுமாறு மோதியடித்து அங்கு பக்கராக நின்ற பூதங்கள் யாவும் அச்சுற்று ஏங்கிடும்படி கர்ச்சனை செய்தது. 357

அன்னது பொழுது தன்னில் அரிமிசைச் சென்ற சூரன்
தன்னுடை வலங்கை கொண்ட தனிப்பெருஞ் சூலந் தன்னைப்
பன்னிரு தடந்தோள் கொண்ட பகவன்மேற் றிரித்து வீச
மின்னென நிலவு கான்று விண்வழிப் படர்ந்த தன்றே.

அன்னது வேளையில் சிங்கேற்றின்மீது சென்ற சூரபன்மன் தனது வலக்கையில் கொண்ட தனியான சூலப்படையினை பன்னிரண்டு திருத்தோளுடைய எமது ஆறுமுகப்பெருமான்மேல் சுழற்றி எறிந்திடலும் அச்சூலப்படை மின்னல்போன்று ஒளியைப் பரப்பிக்கொண்டு சென்றது. 358

நீடிய சூலஞ் செல்ல நிமிர்ந்தன எழுந்து செந்தீக்
கூடின அசனி ஈட்டங் குழீஇயின படையின் கொள்ளை
ஆடியல் கணங்கள் ஈண்டி ஆர்த்தன அதனை நோக்கி
ஓடினர் அமரர் ஆனோர் உலகெலாம் வெருவிற் றம்மா.

நீண்ட அந்த சூலப்படையானது புறப்பட்டுச் சென்றிடுதலும் அங்கு அச்சூலத்தினின்றும் செந்தீயானது சுடர்விட்டு எழுந்தது. அங்கு இடியேற்றின் இனங்கள் கூடிக்கொண்டன. அதனுடன் ஏனைய கொடிய படைகள் பெருவாரியாக அங்கு தோன்றிக் கூடின. போர்மிக்க பூதகணங்கள் அச்சூலத்தின்பால் தோன்றி ஆர்த்தன. அச்சூலத்தினை நோக்கிய தேவர்கள் யாவரும் அச்சத்தால் ஓடினார்கள். இந்த உலகங்கள் எல்லாமே அச்சூலத்தை நோக்கி அச்சம் கொண்டது. 359

அண்ணலும் அதனை நோக்கி ஆயிர கோடி வாளி
கண்ணகன் சிலையிற் பூட்டிக் கதுமென எதிர்தந் துய்ப்பத்
துண்ணென அவற்றை எல்லாஞ் சூலவேல் துணித்து வீட்டி
நண்ணலன் வெகுளித் தீயின் உருவென நடந்த தன்றே.

எங்கள் ஆறுமுகப்பெருமான் அதனைநோக்கி ஆயிரம்கோடியாகும் அம்புகளை எடுத்து அகன்ற தமது வில்லில் பூட்டி விரைவாக அச்சூலத்தின் எதிராக விடுத்து நிற்ப அந்நேரம் அச்சூலம் துரிதமாக அந்த அம்புகளையெல்லாம் நறுக்கி அழித்திட்டு பகைவனுன சூரபன்மனின கோபாக்கினியின் வடிவம்போன்று எம்பிரானை நோக்கிச் சென்றது. 360

நடத்தலும் முகமா றுள்ளோன் ஞானநா யகனீந் துள்ள
படைத்திறல் வன்மை உன்னிப் பாணியொன் றதனின் மேவி
அடுத்திடு குலிசந் தன்னை அடையலன் உய்த்த சூலம்
பிடித்தனை வருதி யென்று பேசினன் செல்ல விட்டான்.

அந்தச் சூலவேல் தம்மையே நோக்கிவருதலும் ஆறுமுகமுடைய பெருமான் ஞானத்தின் முதலாகும் சிவபெருமான் கொடுத்தருளிய அப்படையின் திறத்தையும் வலியையும் நினைந்தருளி தமது திருக்கரத்து ஒன்றிலே இருந்தருளுகின்ற குலிசப்படையினை நோக்கி நீசென்று பகைவன் சூரபன்மன் செலுத்திய சூலத்தினைப் பிடித்து வருவாயாக என்று பேசி அக்குலிசாயுதத்தை செல்லும்படி விடுத்தார். 361

விட்டிடு கின்ற எல்லை வியன்பெருங் குலிசம் ஏகி
நெட்டழற் சிகைமீக் கான்று நிமிர்ந்திடு சூலந் தன்னைக்
கிட்டுத லொடும் பற்றிக் கிளர்ந்தமுத் தலையுங் கவ்வி
ஒட்டலன் சிந்தை உட்க ஒய்யென மீண்ட தன்றே.

ஆறுமுகப் பெருமான் குலிசப் படையை வீட்டிடுகின்ற எல்லையில் அற்புதமாய பெரிய குலிசப்படைசென்று நீண்ட நெருப்புச்சுவாலைகளைக்கக்கி நேரே நிமிர்ந்து வருகின்ற சூலப்படையைக்கிட்டிக் கொள்ளும் மாத்திரத்தே அந்த சூலப்படையைப் பிடித்து அச்சூலத்தின் வளர்ந்த மூன்று சுடர்களையும் கவ்விப் இழுத்துக்கொண்டு பகைவனுன சூரபன்பனின் சிந்தையாயது உட்கும்படி குலிசப்படை ஆறுமுகப் பெருமான்பால் மீண்டுகொண்டது. 362

முத்தலைப் படையைக் கொண்டு முரண்மிகு குலிசஞ் செவ்வேள்
கைத்தலம் உய்த்துத் தானுங் கதுமென இருந்த தம்மா
பைத்தலைப் பாந்தள் போற்றும் பருவரைச் சிகர மூன்றும்
இத்தலப் புணரி தன்னில் இடுமருத் தியற்கை யேபோல்.

மூன்று பெரும் சுடருடைய சூலப்படையை பிடித்துக்கொண்டு வலியால் மிகுந்துள்ள குலிசாயுதமானது திரும்பிவந்து ஆறுமுக ஐயனுடைய திருக்கரத்தில் கொடுத்துவிட்டு தானும் எம்பெருமான் திருக்கரத்தில் விரைவாக அமர்ந்துகொண்டது. எப்படியெனில் பசிய ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பு சுற்றிவளைத்து சிக்காராகக் காத்திடவும் கூட அதை பொருட்படுத்தாது மேருமலையின் மூன்று முடிகளையும் பிடுங்கி எடுத்து இப்பூமியைச் சூழ்ந்த சமுத்திரத்தில் கொண்டுவந்து போடுகின்ற வாயுதேவன் செய்த செய்கைபோன்றது. 363

ஆண்டது காலை தன்னில் அறுமுகத் தையன் கையில்
தூண்டிய குலிசத் தோடு சூலமும் வருத லோடுங்
காண்டகும் அமரர் எல்லாங் கரதலம் உச்சி கூப்பி
ஈண்டிவன் தன்னை அட்டே எமையளித் திடுதி யென்றூர்.

அவ்வாருகிய காலையில் ஆறுமுகமுடைய ஐயர் பெருமானின் திருக்கையில் நின்றும் செலுத்தப்பெற்ற குலிசாயுதத்தோடு பிடிபட்ட சூரனது சூலப்படையும் எம்பிரானிடத்து வருதலோடும் அதனைக் காண்கின்ற தேவர்கள் எல்லாம் தங்கள் கைகளை உச்சியின்மீது கூப்பி ஆறுமுகத்து அரசே இவ்விடம் இந்தக்கொடியோனை அழித்து இனி எமைக்காத்திடுதிராக எனப்போற்றினுர்கள். 364

என்னலும் எந்தை கேளா இராயிரம் பகழி பூட்டி
ஒன்னலன் ஊர்ந்து செல்லும் ஒருபெரு மடங்கல் ஏற்றின்
சென்னியில் அழுத்த லோடுஞ் சேண்கிளர்ந் தரற்றி வீழ்ந்து
தன்னுயிர் ஒல்லை வீந்து தரையிடைப் பட்ட தன்றே.

என்று தேவர்கள் வேண்டுதல் புரிந்து நிற்றலும் எந்தை பெருமான் அதனைக் கேட்டு இரண்டாயிரம் அம்புகளை வில்லில்பூட்டி பகைவனுன சூரபன்மன் ஏறிச் செல்லும் ஒருபெரிய சிங்க அரசின் தலையில் தைத்திட விடுத்தலோடும் அச்சிங்கமானது அம்புகள் படுதலாலே வானில் துள்ளி எழுந்து அலறிக் கதறி வீழ்ந்து உடனே உயிர்நீங்கி இறந்து இப்பூமியிடைக் கிடந்தது. 365

ஊர்திய திறந்து வீழ ஒருதனிச் சூரன் காணுப்
பார்தனிற் பாய்ந்து நின்று பராபரன் செம்மல் கையில்
கூர்தரு சூலம் போன கொள்கையுந் தெரிந்து பின்னுட்
சேர்தரு வடவை என்னச் செயிர்த்திவை சிந்தை செய்வான்.

தனது வாகனமானது இறந்து கீழே வீழ்தலும் ஒருதனி வீரனுய்த் தனித்து நின்ற சூரபன்மன் கண்ணுற்று பூமியில் பாய்ந்து நின்று பராபரனுன ஆறுமுகஐயன் கையில் கூரிய சூலப்படைபோன அத்தன்மையையும் தெரிந்து பின்னுல் இங்கு தோன்றுகிற வடவாமுகாக்கினி போன்றுகோபமுற்று இவற்றை எண்ணுகின்றுன். 366

தேரொடு படையை வௌவித் திறலுடை மடங்கல் சிந்தி
நேரலன் வலிய னேபோல் நின்றனன் அனையன் தன்னைச்
சாரதர் தொகையை ஏனைத் தலைவர்கள் தம்மை எல்லாம்
ஓருருக் கொண்டு யானே விழுங்குவன் ஒல்லை என்றுன்.

எனது இந்திர ஞாலத் தேருடன் சூலப்படையையும் பெற்றுக்கொண்டு அத்துடன் எனது சிங்கவாகனத்தையும் கொன்று நீக்கி என் பகைவன் முருகன்; தான் ஓர்வலிமையுடையான்போன்று நின்றனன்; ஆதலின் இச்செய்கைகளை என்பால் புரிந்த முருகனையும் பூதத்தொகையையும் ஏனைய தலைவரையும் நான் ஓர் பெருவடிவம்கொண்டு விரைவில் விழுங்கிடுவேன் என்றுன். 367

என்றிவை மனத்தி லுன்னி யிணையறு மாயை நீரால்
நின்றுள அவுணர் செம்மல் நேமியம் புள்ளே போல
ஒன்றொரு வடிவ மெய்தி ஒலிதிரைக் கடலின் ஆர்த்துத்
தன்துணைச் சிறகர் பெற்ற தனிப்பெருங் கிரிபோ லுற்றுன்.

என்று இவற்றை சூரபன்மன் மனதில் சிந்தித்து இணையிலாத கொடிய மாயத் தன்மையால் அங்கு நின்ற அவுணர் தலைவன் சக்கரவாகப் பட்சிபோன்ற ஓரே ஒரு வடிவத்தை எடுத்து ஒலித்திடும் கடல்போல் ஆரப்பரவம் கொண்டு தனது துணையான சிறகுகளைப் பெற்றுக்கொண்ட தன்னம் தனியான ஓர் மலைபோன்று அப் பறவை வடிவாகி நின்றுன். 368

கறையடித் தந்தி சிந்துங் காய்சின அரிமேல் உய்க்கும்
நறையடிக் கமலத் தையை ஞாட்பிடை ஆடற் கொத்த
பறையடித் திட்ட தேபோல் படிமகள் உடலம் விள்ளச்
சிறையடிக் கொண்டு தீயோன் சேணிடை எழுத லுற்றுன்.

உரல்போன்ற கால்களைக்கொண்ட யானைகளைக் கொன்றிடும் மிக்க கோபமுடைய சிங்க வாகனத்தில் செல்கின்ற மணங்கொளும் தாமரை மலர்போலும் பாதமுடைய துர்க்காதேவி அப்போர்க்களத்து ஆடல்கொள்வதற்கு ஏற்ற பறைமுழக்கம் செய்வதைப்போன்று இப்பூமிதேவியின் உடல் பிளந்திடும்படியாக தனது பெரும் சிறகுகளை மளமளவென்று அடித்து ஓசைகொண்டு சக்கரவாகப் பட்சிவடிவுகொண்ட தீயவனுன சூரபன்மன்வானிடை எழுதலுற்றுன்- 369

மண்ணிடை வரைப்பு முற்றும் மணிச்சிறை யதனன் மூடி
விண்ணிடைப் பரிதி யொள்வாள் விலக்கியே சுழலும் வேலைக்
கண்ணிடைப் பெருமீன் குப்பை கவர்ந்திட ஊக்கிற் றென்னத்
துண்ணெனப் பூதர் தானைச் சூழல்புக் கெறியு மாதோ.

மண்ணிலான எல்லைமுழுவதும் அழகிய சிறகு அதனினுல் மூடி வானில் விளங்கிடும் சூரியனுடைய பிரகாசமுடைய ஒளியைக் கெடுத்து நீக்கி; உலகினைச் சூழ்கின்ற சமுத்திரத்தின் இடத்துள்ள பரிய மீன் குவியல்களைக் கொத்தி எடுப்ப பறவை பாய்வதுபோன்று திடீரெனப் பூதங்களின் சேனையினிடத்துப் பறந்து ஓடிவந்து வீழ்ந்து அடிப்பான். 370

அடித்திடுஞ் சிறகர் தன்னல் அளவையில் பூதர் தம்மைப்
பிடித்திடும் புலவு நாறும் பெருந்தனி மூக்கிற் குத்தி
மிடற்றிடைச் செறித்து மெல்ல விழுங்கிடும் விறல்வேல் அண்ணல்
கொடித்தடந் தேரைச் சூழுங் கொடியபுள் வடிவக் கூற்றம்.

அவ்வண்ணம் பூதர்மேல் வீழும்போது பூதங்களைச் சிறகுகளால் மோதுவான். அளவற்ற பூதங்களைக் காலால் கௌவிப் பிடிப்பான். புலால் மணமுடைய சொண்டால் அவற்றைக் கொத்தி கழுத்தூடாக இட்டு மெல்ல விழுங்குவான். வலியுடைய வேற்படையைத் திருக்கரத்தேந்திய எம்பெருமானின் கோழிக்கொடி கொண்ட பெரிய தேரைச்சூழ்வான். இவ்வண்ணம் கொடிய சக்கரவாகப் பட்சி வடிவங்கொண்ட எமன்போலும் சூரபன்மன் போரிடுவான். 371

சுற்றிடுங் குமரன் தேரைத் தூண்டிய வலவன் தன்னை
எற்றிடுங் கொடிஞ்சி எஞ்ச இறுத்திடும்பரிகள் தம்மைக்
குற்றிடு மூக்கிற் சென்னி கொய்ந்திடுங் குழீஇய வீரர்ப்
பற்றிடும் படைகள் முற்றும் பறித்திடு முறித்து வீசும்.

குமரமூர்த்தியின் தேரினைச் சுற்றிடுவான், தேரைச் செலுத்திய சாரதியை வாயுதேவனை மோதுவான். குதிரைகள் பூட்டிய கொடிஞ்சிமுறிந்திட அடிப்பான். குதிரைகளைச் சொண்டால் குற்றுவான். தலையினைக் கொய்வான். கூட்டாக நின்ற இலக்கத்தெட்டு வீரர்களைப் பிடிப்பான். அவர்கள் கைக்கொண்ட படைகள் முழுவதையும் பறிப்பான், அல்லாமலும் அவைகளை முறித்து வீசுவான். 372

இத்திறம் அவுணர் செம்மல் இருஞ்சிறைப் புள்ள தாகி
அத்தலைக் கறங்கி வீழ்வுற் றந்தரந் திரித லோடும்
முத்தியை உதவு நோன்றாள் மூவிரு முகத்தன் காணுக்
கைத்தலம் புடைத்து நக்கு நன்றிவன் கற்பி தென்றான்.

இத்திறமாக அவுணர்கள் தலைவன் சூரபன்மன் பெரிய சிறகுடைய சக்கரவாகப் பட்சியாகி அவ்விடத்தில் சுழன்று வீழ்ந்து அடித்து வானில் மீண்டெழுந்து பலவாறு ஆகாயத்தில் மிகு வேகமாய் திரிதலோடும் மெய்யடியார்கட்கு எவராலும் தரமுடியாத பேரின்ப நிலையாகும் முத்தியைத் தந்தருளுகின்ற வலிமை கொண்ட திருவடிகளையுடைய ஆறுமுகப் பெருமான் அவனது நிலையைக் கண்ணுற்றருளித் தமது திருக்கையைத் தட்டிச் சிரித்து நன்றாக இருக்கின்றது இவனது கற்பனை என்றார். 373

எறித்தரு சுடர்வேல் அண்ணல் இம்மென வெகுண்டு போரில்
நிறுத்திய மேரு வென்ன நிமிர்ந்ததோர் வரிவில் வாங்கி
விறற்கணை அநந்த கோடி மிசைமிசைக் கடிது பூட்டித்
திறத்தியல் புள்ளாய்ச் சூழும் அவுணன்மேற் செல்ல வுய்த்தான்.

சோதியாய் விளங்கிப் பிரகாசிக்கின்ற வடிவேலைத் திருக்கரத்துடைய முதல்வன் ஆறுமுகப் பெருமான் விறுக்கெனக் கோபமுற்று அப்போர்க்களத்து நிறுத்தியுள்ள மேருமலைபோன்று நிமிர்ந்துள்ள ஓர் பெரும் வில்லை வளைத்து வலியாகும் அம்புகள் அநந்த கோடியை அவ்வில்லின்மீது திரும்பத்திரும்ப விரைவிற் பூட்டி மிகவும் திறமை வாய்ந்த பறவையாய்த் தன்னைச் சூழ்ந்திடும் அசுரன் சூரபன்மன்மேல் அந்த அம்பு களைச் செல்லுமாறு விடுத்தார். 374

நெறித்திகழ் பகழி மாரி நிமலன்விட் டிடலும் வெய்யோன்
சிறைப்புடைக் கொண்டு பாங்கிற் சிந்திட அவற்றை மோதிக்
குறைத்திடுந் துண்டந் தன்னாற் கொய்திடுந் தாளிற் பற்றி
முறித்திடுங் கிளர்ந்து வானம் முழுவதுஞ் சுழன்று செல்லும்.

எம்பெருமான் நெறியாக நேரிட்டுவரும் அம்புகளாய மழைகளை சூரபன்மன் மேல் செலுத்தலும்; கொடிய சூரபன்மன் அந்த அம்புகளை எல்லாம் தனது சிறகு களினால் அவை வரவர அடித்து பக்கரிலே அவைகள் சிதறுமாறு அழித்திடுவான்; மூக்கினால் அந்த அம்புகளைக் கொய்திடுவான். காலால் அவற்றைப் பிடித்து முறிப் பான். வானமேல் எழுந்து வானம் முழுவதும் பறந்து சுழன்று செல்வான். 375

வேலைகள் எல்லை முற்றும் படர்ந்திடும் விராவி மேவு
ஞாலம தகல முற்றும் படர்ந்திடு நாகர் வைகும்
வாலிய உலக முற்றும் படர்ந்திடும் வந்து பூத
சாலம தெறிந்து கவ்வித் தலைத்தலை மயங்கிச் செல்லும்

சமுத்திரங்களின் எல்லை முழுவதும் செல்வான். அந்த சமுத்திரங்கள் வளைந்து கொள்ளும் பூமிகள் முழுவதும் பறந்திடுவான். நாகர்கள் இருந்திடுகின்ற மிகக் கண்ணியமான உலகங்கள் முழுவதும் பறந்திடுவான். இப்படியெல்லாம் போய்ப் போய் வந்து பூதசேனைகளை அடித்து வாயினால் கவ்விக்கொண்டு போற திசை தெரி யாது மயங்கிச் செல்வான். 376

சூரன்மற் றினைய வாற்றால் சுலாய்க்கொடு திரித லோடும்
பூரணன் அதனைக் காணாப் புள்ளெனப் பெயர்வான் தன்னைத்
தேரொடுந் தொடர்ந்து கோறல் பழியெனச் சிந்தை செய்து
வாரணம் உயர்த்தோன் தன்னை நோக்கினன் வானோர் தம்முள்.

சூரபன்மன் இந்த வகையாகச் சுழன்றுகொண்டு திரிதலும் குறைவிலாது எங் கும் நிறைவாய் நின்றருளலும் ஆறுமுகப்பெருமான் அதனைக் கண்டருளி பட்சி யின் வடிவாகிச் சென்றிடும் சூரனை நாம் தேருடன் சென்று போரிட்டுக் கொல்வல் பெரும் பழியாகுமென எண்ணியருளி அங்குள்ள கடவுளர் கூட்டத்திலே நின்ற ஒருவனான ஐராவத யானையை வாகனமாகக்கொண்ட இந்திர தேவனை நோக்கி யருளினார். 377

இந்திரன் அனைய காலை எம்பிரான் குறிப்புந் தன்மேல்
அந்தமில் அருள்வைத் துள்ள தன்மையும் அறிந்து நோக்கிச்
சுந்தர நெடுங்கட் பீலித் தோகைமா மயிலாய்த் தோன்றி
வந்தனன் குமரற் போற்றி மரகத மலைபோல் நின்றான்.

எம்பெருமான் ஆறுமுகன் திருவுளத்து இத்தகைய நினைவுடன் இந்திரனை நோக்கியருள இந்திரன் அக்காலையில் எம்பெருமானுடைய திருவுள்ளக் குறிப்பும்; கடவுளர் எல்லோரும் குழுமியிருக்கும் அக்கூட்டத்தில் தன்மேல் மட்டும் அந்த மிலாத பேரருள் வைத்த அற்புதத்தையும் அறிந்து உணர்ந்து உடனேயே அப்ப னின் திருவுளப்படியே அங்கு ஓர் சுந்தரம் மிகுந்த நெடிய இறகுகளைக்கொண்ட தோகையுடைய மயிலாக உருவுகொண்டு எம்பிரான் திருமுன்பு வந்து பெரு மானைப் போற்றியவாறு ஓர் மரகதமலை நின்றதுபோன்று நின்றான். 378

நின்றிடு மஞ்ஞைப் புத்தேள் நெடுநிலங் கிழிய மேருக்
குன்றமும் புறஞ்சூழ் வெற்புங் குலைந்திடக் கரிகள் வீழ
வன்றிரை அளக்கர் நீத்தம் வறந்திடப் பணிகள் அஞ்சத்
தன்றுணைச் சிறகால் மோதி இனையன சாற்ற லுற்றான்.

இவ்வண்ணம் நிற்கின்ற மயிலாகும் கடவுள் இந்திரன் நெடிய இப்பூமி பிளந்து கிழிய மேருமலையும் அதனைப் புறத்தே சூழ்ந்த மலைகளும் குலைந்திட திக்கு யானைகள் வீழ்ந்திட, வன்மைகொண்ட கடல்நீர் வற்றிட, பாம்புகள் அஞ்சிட தனது துணையான இரு சிறகுகளை அடித்து நின்று எம்பெருமானுக்கு இந்த வார்த்தைகளைச் சொல்கின்றான். 379

ஐயகேள் அமர ரெல்லாம் வழிபட அழியன் தன்பால்
செய்ய பேரருளை வைத்தாய் ஆதலிற் சிறுமை தீர்ந்தேன்
உய்யலாம் நெறியுங் கண்டேன் உன்னடி பரிக்கப் பெற்றேன்
பொய்யுலா மாய வாழ்க்கைப் புன்மையும் அகல்வன் மன்னோ.

என்னை வாழ்விக்க வந்த ஐயனே கேள். இங்குள்ள தேவரெல்லாம் உன்னை வழிபட்டு நிற்பவும் அருளுககு எளியேன் இடத்தாக மிகவும் செம்மைவாய்ந்த பேரருளை வைத்தாய் ஆதலால் என் சிறுமையாவும் தீர்ந்தேன். நான் உய்யக் கூடிய மார்க்கம் ஒன்றையும் கண்டுகொண்டேன். தேவரீரின் திருவடிகளைச் சுமந்திடும் பேறுபெற்றேன். இதனல் பொய்யாய் விளங்கிய மாயங்கொண்ட என்வாழ்வின் புன்மை யாவும் இனி அகன்றிடும். 380

அல்லல்செய் தெமரை எல்லா மருஞ்சிறைப் படுத்தி வீட்டிப்
பல்வகை உலகை யாண்ட அவுணர்கோன் பறவை யாக்கை
செல்லுழிச் சென்று சென்று செருவினை இழைத்து வெல்வான்
ஒல்லையில் அடியேன் தன்மேல் ஏறுதி ஊர்தற் கென்றான்.

எமது இனத்தவரை எல்லாம் நித்தலும் இடர்செய்து கொடிய சிறையின்கண் அடைத்துத் துயருறுத்தி பலவகையாகும் உலகங்கள் அண்டங்களையும் ஆண்ட அசுரர்களது தலைவன் சூரபன்மன் கொண்ட பறவை வடிவம், செல்கின்ற எந்த இடமெல்லாம் சென்று சென்று தேவரீர் போரினைப் புரிந்து அவனை வெல்லுமாறு விரைவில் அடியேன் ஏறியருள்க புறப்பட்டு சென்றிடற்கு என்றான் இந்திர தேவன். 381

என்னலும் உளத்திற் செல்லும் இவுளிமான் தேரின் நீங்கிப்
பன்னிரு நாட்டத் தண்ணல் படர்சிறை மயூர மாகி
முன்னுறு மகவான் தன்மேல் மொய்ம்புடன் புக்கு வைகி
ஒன்னலன் செலவு நோக்கி உம்பரில் ஊர்த லுற்றான்.

என்று இந்திரன் வேண்டலும்; மனவிருப்பத்தின்படி செல்கின்ற குதிரை பூட்டிய ''மனோவேகம்'' என்னும் பெரும் தேரினின்றும் பன்னிரண்டு திருவிழிகள் கொண்ட எம் பகவான் நீங்கித் தமது திருமுன்பு படர்கின்ற பெரும் சிறகுடன் நின்ற மயிலான இந்திரதேவன் தன்மேல் மிகுவலியுடன் எழுந்தருளியிருந்து பகைவனன சூரபன்மன் செல்கின்ற இடமெல்லாம் நோக்கி வான வழியாக மயிலைச் செலுத்திச் சென்றருளினார். 382

ஆறுமா முகத்தெம் மண்ணல் அசனிபோல் அகவி ஆர்க்கும்
மாறிலா மயூர மென்னும் வயப்பரி தனைந டாத்தி
ஈறுசேர் பொழுதிற் சூழும் எரியினை அடுவான் முன்னிச்
சூறைமா ருதஞ்சென் றென்ன அவுணனைத் தொடர்ந்து சூழ்ந்தான்.

ஆறுதிருமுகமுடைய எம்பகவான் இடிபோல் முழங்கிக் கூவி ஆர்த்திடுகின்ற மாறு எதுவுமில்லாத மயில் என்னும் வெற்றியுடைய வாகனத்தைச் செலுத்தி உலகம் எல்லாம் முடிவுறுகின்ற காலத்தில் எழுந்திடும் பொல்லாத வடவாமுகாக்கினியை அழித்திட நினைந்து சூறாவளிக்காற்று செல்வதுபோன்று வேகமுடன் அசுரனாகும் சூரபன்மனை நெருக்கித் தொடர்ந்து சூழ்வுற்றார். 383

ஆகிய பொழுது தன்னில் ஆழியம் புள்ளாய்த் தோன்றி
மாகம துலவு கின்ற மாற்றலன் அதனை நோக்கிச்
சீகர அளக்க ரென்னத் தெழித்துமேற் சென்று தாக்கக்
கேகய அரசன் தானுங் கிடைத்தமர் புரித லுற்றான்.

அவ்வாறாகிய பொழுதினில் சக்கரவாகப்பட்சி வடிவாகத் தோன்றி வானில் உலவுகின்ற பகைவனான சூரபன்மன் அதனைக்கண்ணுற்று குளிர்ச்சியுடைய திரை கொண்ட கடல்போல் பொங்கிக் கர்ச்சித்து; மயிலினைச் சென்று தாக்கிட அது வேளை மயில்களுக்கெல்லாம் அரசாகும் இந்திரனும் எதிர்வந்த சூரனை எதிரிட்டுச் சென்று தானும் போர்புரிதலுற்றான். 384

நிறங்கிளர் பசலைத் துண்ட நீட்டியே யாக்கை முற்றும்
மறங்கொடு கீண்டு செந்நீர் வாய்ப்படக் கவ்வி வாங்கிப்
புறங்கிளர் சிறைகள் தம்மாற் புடைத்துவெங் காலில் தாக்கிப்
பிறங்குபுள் ளுருவ மானோர் இவ்வகை பெரும்போர் செய்தார்.

நிறமுடைய பசுமையான சொண்டினை நீட்டி ஒருவர் ஒருவரது உடலத்தை கொடுமை கொண்டு கிழித்து சிவந்த இரத்தம் வாயில் படும்படி உடலினை கொத்திக் கவ்வி இழுத்து உடலின் புறத்து வளர்ந்துற்ற சிறகுகளினால் ஒருவரை ஒருவர் அடித்து கொடிய காலால் உதைத்துத் தாக்கி மிக வலியான பறவை வடிவங் கொண்ட இந்திரனும் சூரபன்மனும் இவ்வகையாகப் போரிட்டார்கள். 385

இத்திறம் பொருத காலைப் பிணிமுகத் தேந்தல் தன்னைப்
பைத்தலை யுடைய தூவி பறித்திடா வதன முற்றுங்
குத்திவெங் குருதி வீட்டிக் குருமணிக் கலாபம் ஈர்த்து
மெய்த்துயர் புரிந்தான் நேமிப் புள்ளுருக் கொண்ட வெய்யோன்.

இத்திறமாகப் போரிட்ட நேரத்து மயில்வடிவம் கொண்ட இந்திரதேவனின் பசிய தலையிடத்துள்ள தூவியினைப் பிடுங்கி அவனது முகம் முழுவதும தனது சொண்டால் குத்தி இரத்தம் வடிந்திடச் செய்து அழகிய நீல இரத்தினம் போன்ற தோகையைப் பிடுங்கி உண்மையான பெரும் துயரினை இந்திரனாகிய மயிலுக்குச் செய்தான் சக்கரவாகப் பறவையின் உருவம் கொண்ட சூரபன்மன். 386

அச்செயல் முருகன் காணா ஆரழல் என்ன நக்குக்
கைச்சிலை யதனை வாங்கிக் கடுந்தொழில் அவுணர் மன்னன்
உச்சியின் முகத்திற் காலில் உரத்தினில் சிறைகள் தம்மில்
வச்சிர நெடுங்கண் வாளி வரம்பில தொடுத்து விட்டான்.

சூரனது அச்செயலை முருகப்பெருமான் கண்ணுற்றருளி கொடிய நெருப்பெனும் படி சிரித்துத் தமது கையில் உள்ள வில்லை வளைத்து கொடுங்கோன்மையால் கொடிய தொழிலைச் செய்திடும் சூரபன்மனது உச்சியிலும் முகத்திலும் காலிலும் நெஞ்சிலும் சிறகுகள் இடத்தும் வச்சிரமாகும் நீண்ட அம்புகள் அளவற்றன சென்று தைத்திடு மாறு செலுத்திவிட்டார். 387

விட்டிடு கின்ற வாளி வெய்யவன் அங்க மெங்கும்
பட்டிடு கின்ற காலைப் பதைபதைத் துதறிச் சிந்தி
எட்டுள திசையும் வானும் இருங்கடல் உலக மெங்குங்
கட்டழல் சிந்திச் சீறிக் கறங்கெனத் திரியா நின்றான்.

எமது ஈசன் ஆறுமுகன் விட்டிடுகின்ற அம்புகள் சென்று கொடியோனான சூரபன்மனது அங்கங்கள் எங்கும் தைத்திடுகின்ற நேரத்தில் அவன் பதைபதைத்து சிறகுகளை உதறியும் உடலைச் சிலிர்த்தும் அவற்றைச் சிந்தி எட்டுத் திசையிலும் ஆகாயத்திலும் பெரிய சமுத்திரங்களின் இடமெங்கும் கண்ணால் கொடிய நெருப்பைச் சொரிந்து சீறிக் காற்றாடி போலச் சுழன்றடித்துத் திரிவானாயினான். 388

திரிந்திடு கின்ற காலைச் செஞ்சுடர்த் தனிவேல் அண்ணல்
புரந்தரன் உருவாய் நின்ற பொறிமயில் நடாத்தி யேகி
அரந்தெறு கணைகள் தூண்டி அகிலமும் அவுணன் தன்னைத்
துரந்தமர் இழைக்க லுற்றான் விண்ணவர் தொழுது போற்ற.

இப்படி சக்கரவாகப் பறவை வடிவுடன் சூரபன்மன் திரிந்திடுகின்ற காலத்து செவ்வொளி பரந்திடும் சோதிவேற் கடவுள் அறுமுகப்பெருமான் இந்திரன் கொண்ட உருவாய் நின்ற பொறிகளையுடைய மயில்வாகனத்தைச் செலுத்திச் சென்று அரத்தினால் தீட்டிய அம்பினைச் செலுத்தி இந்த உலகம் எங்கும் அச்சூரபன்மனை கலைத்து கலைத்துச் சென்று போர்புரிதலுற்றார்; அதனைக் காண்குறும் தேவரெல்லாம் கைகூப்பித் தொழுது போற்றி செய்திட. 389

அத்தகும் எல்லை தன்னின் அவுணர்கள் எவர்க்கும் மேலோன்
எய்த்துளம் மெலிந்து சால இடருழந் திரக்க மெய்தி
மெய்த்தழ லென்னச் சீறி வேற்படை கொண்ட செம்மல்
கைத்தலத் திருந்த வில்லைக் கறிப்பது கருதி வந்தான்.

அவ்வாறாகிய நேரத்தில் அசுரர்கள் எல்லார்க்கும் மேலோனாகும் சூரபன்மன் களைப்புற்றான்; மெலிந்தான்; மிகவும் இடர்ப்பட்டு நொந்து அழுகையும்கொண்டு உண்மையால் நெருப்பு வேகமுடன் எரிவது போன்று சீறிக் கோபமுற்று வேற்படையைத் திருக்கரத்துக் கொண்ட எமது ஆறுமுகப்பெருமான் கையில் கொண்ட வில்லை சொண்டால் கொத்திமுறித்து நறுக்கிடும் எண்ணமாக பறவை வடிவுடன் எமது பெருமான்முன் பறந்து வந்தான். 390

வருவது நிமலன் காணா மலர்க்கரம் ஒன்றில் வைகும்
ஒருதனி ஒள்வாள் வீசி ஒன்னலன் பறவை யாக்கை
இருதுணி யாகி வீழ எறிந்தனன் எறித லோடும்
அரியயன் முதலாந் தேவர் அனைவரும் ஆடல் கொண்டார்.

சூரபன்மன் தான் கொண்ட சக்கரவாகப்பட்சி வடிவுடன் எப்பெருமான் திருமுன்பு வருவதை நின்மலமாய் நின்ற ஆறுமுகப்பெருமான் கண்டருளி மலர்போலும் திருக்கையிடத்து ஒன்றிலே இருந்த தனியாகும் வலிகொண்ட கூரியவாளை வீசி பகைவனான சூரபன்மனின் பறவை வடிவத்தை இரண்டு துண்டாக வீழும்படி வெட்டி எறிந்தார். அவ்வண்ணம் வெட்டுதலோடும் அதுகண்ட நாராயணப் பெருமான் பிரமன் முதல் எல்லாத் தேவரும் ஆனந்தமுற்று கூத்தாடல் கொண்டனர். 391

வேறு

தாரார் வாகை சூடிய வேலோன் தன்கையிற்
கூரார் வாளாற் புள்ளுரு வத்தைக் குறைவிக்கச்
சூராம் வெய்யோன் அண்டமு கட்டைத் தொடவோங்கிப்
பாராய் நின்றான் விண்ணவர் யாரும் பரிவெய்த.

சிறப்புடன் ஆர்ந்து விளங்கிடும் வெற்றி மாலை சூடிய வேலுடைய ஆறுமுகப் பெருமான் தமது மலர்க் கரத்துற்ற வாளினால் சக்கரவாகப் பறவை வடிவை வெட்டி வீழ்த்துதலோடும் அதுவேளை சூரன் என்னும் கொடியவன் அவ்வுரு அழிதலும் அண்ட முகட்டினைத்தொடும்படி வளர்ந்து எங்கும் மண்ணாகவே வடிவு கொண்டு நின்றான்; அதுகாணும் தேவர்கள் அனைவோரும் அச்சமுற்று துயர் கூர்ந்திட. 392

ஏழுட்பட்ட ஆழ்திரை நேமி யிடைதூர்த்துத்
தாழ்விற் செல்லு மாதவர் தேரைத் தடைசெய்து
சூழிக் கால்கள் வானெறி செல்லுந் துறைமாற்றிப்
பாழித் திக்கை மூடினன் நின்றான் படியானோன்.

மண்ணாகி வடிவமுற்ற சூரன் ஏழு எனச் சொல்லிய கடலினை இடையிலாது மூடித்தூர்த்து வான பதத்தில் தாழ்வுடன் சென்றிடும் சூரியர்களது தேரைப் போகமுடியாது தடைசெய்து சூழ்ந்திடும் காற்றுக்கள் வான் நெறியால் சென்றிடும் அவர்களது துறைகளை அடைத்துப் பரந்த பெரும் திக்கும் தோன்றாதபடி தனது மண்வடிவால் மறைத்து நின்றான். 393

ஆறூர் சென்னிப் பண்ணவன் மைந்த னதுகாணாச்
சீறா நன்றாற் சூர்புரி மாயத் திறனென்னாக்
கூறா அங்கைச் செஞ்சிலை தன்னைக் குனிவித்தே
ஊறார் வெங்கோல் ஏழு தொடுத்தே யுரைசெய்வான்.

கங்கை விளங்கும் சடையுடைய கடவுள் சிவமூர்த்தியின் திருக்குமரன் ஆறு முகப் பெருமான் அதனைக்கண்டு சீறி நன்றாகும் இந்தச் சூரன் புரியும் மாயம் என்று கூறி தமது அழகிய கை ஒன்றில் விளங்கிய செம்மையுடைய வில்லை வளைத்துக் கொண்டு மிகவும் கொடுமை கொண்ட ஊறுகளைச் செய்திடும் அம்புகள் ஏழினை அவ்வில்லில் பூட்டி இதனை அப்புகளுக்கு உரைத்திடுகின்றார். 394

நெடுவா னத்தின் காறும் எழுந்தே நிமிர்வெய்தி
முடிவான் வெய்யோன் பாரக மாய்என் முன்நின்றான்
கடலேழ் என்னுந் தன்மையின் நீவிர் கடிதேகி
அடுவீர் என்றே விட்டனன் யார்க்கும் அறிவொண்ணான்.

நெடிய வானத்தின் அளவும் எழுந்து எங்கும் நிமிர்ந்து இன்று முடிந்திடும் தன்மையால் போலும் கொடிய சூரபன்மன் மண் வடிவம் கொண்டு என்முன் நின்றான். நீங்கள் எழுவரும் ஏழுகடல்களாகிய உருவம் கொண்டு விரைவுடன் சென்று அந்த மண்வடிவை அழித்திடுவீராக என்று விடுத்தார் யாருக்குமே அறிந்திட முடியாத கடவுள் ஆறுமுகப்பெருமான். 395

ஒற்றைச் செவ்வே லோன்விடு வாளி யுலகெல்லாஞ்
சுற்றிக் கொண்டே உண்டிடு நேமித் தொகை போலாய்ச்
செற்றத் தோடும் ஆர்ப்பொடும் ஏகித் திரைவீசி
மற்றச் சூரன் தன்னுரு வத்தை வளைவுற்ற.

தன்னந் தனியான செவ்விய வேலைத் திருக்கரத்துக் கொண்ட வேற்பெருமான் விடுத்தருளிய அம்புகள் உலகமெல்லாம் சென்று சுற்றிக்கொண்டு அந்த உலகுகளை உண்டிடும் கடல்களின் தொகை போன்று வடிவாகி கோபத்தோடும் இரைச்சலோடும் சென்று திரைகளை வீசி மற்று அந்தச் சூரனுடைய மண் உருவத்தை சூழ்ந்து வளைந்துகொண்டன. 396

வளையா வெஞ்சூர் மாயிரு ஞால வடிவத்தைக்
களையா உண்டே இன்மைய தாக்கிக் கணையேழுந்
திளையார் நீத்தத் தொல்லுரு நீங்கிச் செருவின்கண்
விளையா டுற்ற எம்பெரு மான்பால் மீண்டுற்ற.

கொடிய சூரபன்மனது பெரிய பூமியாகும் மண் உருவத்தை வளைந்து சுற்றி அழித்து அவற்றைந் தாம் உண்டு அணுவும் இல்லாதபடி ஆக்கிய பின் ஏழு அம்புகளும் திளைத்தார்த்திடும் பழைய கடல் உருவத்தை விடுத்து அம்பாகி அப்போர்க் களத்து விளையாடல் கொண்டருளிய எம்பெருமான் பால் மீண்டு கொண்டன. 397

காணா வெய்யோன் பாருரு நீங்கிக் கடல்எல்லாம்
ஊணா வையம் வானொடும் உண்டற் கெழுமாபோல்
ஏணார் நீத்தத் தோர்வடி வாகி யிறைமுன்னம்
நீணா கத்தின் காறும் நிமிர்ந்தே நின்றிட்டான்.

இதனைக் கொடியோனான சூரபன்மன் கண்டு தனது பூமிவடிவை விடுத்து கடல்கள் எல்லாம் பூமியை தமக்கு உணவாகும்படி உண்பதற்கு எழுகின்ற தன்மை போன்று மிகவும வஞ்சனையுடைய கடலின் வடிவாகி எல்லார்க்கும் ஒரு கடவுளாகும் முருகப்பெருமான் பால் நீண்டவானம் அளவும் நிமிர்ந்தே நின்றிட்டான். 398

நேரான் மாயத் தொல்லுரு வத்தின் நிலைநோக்கிக்
கூரார் வாளி நூறு தொடுத்தே கொடியோன்பாற்
சேரா வூழித் தீயியல் பாகிச் செறிவுற்றுப்
பேரா தட்டே வம்மென விட்டான் பெயர்வில்லான்.

பகைவனான சூரபன்மனது மாயமாகும் மிகு பெரிய நீரின் வடிவாய நிலையை நோக்கியருளி கூர்மையால் சிறந்திடும் அம்புகள் ஏழினை வில்லில் தொடுத்து அவற்றை நோக்கி கொடியோனான சூரபன்மன் பால் நீவிர் ஊழித்தீயின் இயல் பாகும் உருவமுடன் சென்று எங்கும் பரந்த அவன் நீர் வடிவம் தவறிடாதபடி அழித்தே இங்கு வாருங்கள் என விடுத்தார் போக்கும் வரவும் இலாத புண்ணியன் ஆறுமுகப்பெருமான். 399

அவ்வா றுக வாளிகள் நூறும் அருள்நீரால்
வெவ்வாய் அங்கிப் பேருரு வாகி விரவிப்போய்த்
தெவ்வாய் நின்றோன் நீத்தம தாகுஞ் செயல்நீங்க
வெவ்வா யுஞ்சென் றுண்டென அம்மா இறை தன்னில்.

அவ்வாறுக அந்த நூறு அம்புகளும் அருளின் நீர்மையால் கொடிய திண்மையாகும் ஊழித்தீயின் பெரும் உருவம்கொண்டு பரந்து சென்று பகையாகி நின்ற சூரபன்மனது நீர்வடிவாகும் செயல் யாவும் அற்று நீங்கிட எப்பக்கரும் சென்று வளைத்து அவன் நீர்வடிவை உறிஞ்சி உண்டன ஓர் இறைப்பெழுதில். 400

தண்டா தார்க்கும் நீத்த இயற்கை தனையெல்லாம்
உண்டா வித்தே வாளிகள் மீண்டே யுறுகாலைக்
கண்டான் மாயத் தன்மை படைத்தோன் கனல்மேனி
கொண்டான் அண்டங் காறும் நிமிர்ந்தே குலவுற்றான்.

ஓய்வின்றி ஆர்க்கின்ற கடலின் இயற்கையை எல்லாம் அந்த அம்புகள் உண்டு ஆர்த்து வலிபெற்றுச் சிறந்து தமது தீயுரு நீங்கி முன்போல் அம்பாகி எம்பெருமானபால் மீண்டு கொள்ளுதலோடும் அதனைக் கண்டான். மாயத்தன்மை படைத்த சூரபன்மன். உடனுக இப்போது நெருப்பானதோர் உருவைக்கொண்டான். எங்கும் ஒரே நெருப்பாக அண்டம் எல்லாம் போய் பரந்துகொண்டான். 401

குலவுங் காலைக் கண்டு நகைத்தே கூற்றென்ன
நிலவுஞ் செங்கோல் ஆயிரம் வாங்கா நீடூழி
சுலவுஞ் சண்டச் சூறையின் ஏகிச் சூர்மாயம்
பலவுஞ் செற்றே வம்மென உய்த்தான் பரமானோன்.

தீயின் உருவாகி எங்கும் சூரபன்மன் விளங்கிய நேரத்து அதனைக் கண்டு நகைத்து இயமன் எனும்படி கூற்றென விளங்கிய செப்பமான அம்புகள் ஆயிரத்தை எடுத்து அவற்றினை நோக்கி நீங்கள் விளங்கிடும் சண்டமாருதம் எனும் காற்றின் உருக்கொண்டு சூரபன்மனது மாயங்கள் பலவற்றையும் அழித்து வாருங்கள் என விடுத்தார் எப்பொருட்கும் பரமாய் ஆதியொடும் அந்தமாகும் ஆறுமுகப் பெருமான். 402

உய்க்குங் காலத் தொய்யென ஏகி யுலகெங்குந்
திக்கும் வானுஞ் சூழ மருத்தின் திறனெய்தி
மைக்குந் தூமம் போல்பவன் மெய்த்தீ வடிவெல்லாம்
பொய்க்கும் வண்ணஞ் சாடின ஐயன் புகர்வாளி.

செலுத்திய காலத்தில் அந்த அம்புகள் ஆயிரமும் மிகவிரைவாகச் சென்று உலகம் எங்கும் திக்கும் வானமும் சூழவரும் சண்டமாருதக் காற்றின் உருவம் கொண்டு கருமையாய புகைபோன்று நின்ற சூரபன்மனது அழிவிலாத நெருப்பின் வடிவம் யாவற்றையும் பெய்யாகும்ம் வண்ணம் அழிவுசெய்தன ஆறுமுகத்து ஐயர் பெருமானுடைய வேல்போலும் அம்புகள்.

மாயமான தீயுரு அழிவிலாத உண்மைபோல நின்றது. ஆனால் எம்பெருமானுடைய இந்த அம்புகள் அவை உண்மையல்ல பொய் என்பதைக் காட்டும்படி அதனை அழித்துவிட்டன.

உலகம் முற்றும் பலபொருள்களும் உண்மையில் எமக்கு உறுதுணைபோன்றே நிற்பன. ஆனால் இறைவன் அருள் நமக்குக் கைகூடும்பொழுது இவை யாவும் எமக்கு எள் அளவிலேனும் சார்வாகமாட்டாது என்பதை இப்பாடலால் தோன்றுவதை நோக்குக. 403

வேறு

வண்டு லாவரு வாகையந் தாரினன்
கொண்டெ ழுந்த கொழுந்தழல் யாக்கையை
உண்டு வாளிகள் ஒய்யென மீண்டொராய்
அண்டர் நாயகன் பாங்கர் அணைந்தவே.

வண்டுகள் உலாவிவரும் வெற்றிமாலை சூடிய சூரபன்மன் கொண்டெழுந்த கொழுவிய பெரும் தழலுடைய நெருப்பு உருவத்தைக் காற்றுநக்கொண்ட அந்த ஆயிரம் அம்புகளும் உண்டு சிறந்து அவைகள் உடனே விரைந்து தேவாதிதேவனகும் எம்பெருமான்பால் மீண்டுகொண்டன. 404

ஆங்க வெல்லையில் அவ்வடி வத்தினை
நீங்கு மாற்றலன் நீள்சின மேற்கொளா
ஓங்கு மோதை உருவுகொண் டார்த்தலும்
ஞாங்கர் எந்தை நகையொடு நோக்கினன்.

அவ்வாறாகிய வேளையில் அந்த நெருப்பு வடிவத்தை நீங்கிய சூரபன்மன் மிகுந்த சினத்தை மேற்கொண்டு எங்கும் பரவி ஓங்கிடும் காற்றின் வடிவாய் உருவம் கொண்டு இரைந்தார்த்தவாறு எம்பிரான்பால் சூழ்தலும் அதனை எந்தை பெருமான் புன்சிரிப்புடன் நோக்கியருளினர் 405

ஆய்ந்து வாளியொ ராயிர நூற்றினை
வாய்ந்த கைக்கொடு மாற்றலன் வன்மையைப்
பாந்த ளாகிப் படுத்து வம்மோவென
ஏந்தல் கூறி இமைப்பினில் தூண்டினன்.

தம்மிடத்துக் கொண்ட அம்பினில் ஆராய்வுடன் ஆயிரம் நூறு அம்பினைத் தேர்ந்து அருள்தரவாய்ந்த திருக்கரத்தில் கொண்டு; அவற்றை நோக்கி நீவிர் சென்று பாம்புகளின் உருவாகி சூரபன்மன் கொண்ட மாயவடிவமாகும் காற்றின் வலிமைக் கெடுத்து வாருங்கள்; என்றுஎமது ஏந்தல் ஆறுமுகப்பெருமான் கூறியருளி ஓர் இமைப்பொழுதில் அவற்றைச் செலுத்தியருளினர். 406

அவ்வ யிற்கணை அந்தரத் திற்செலாச்
செவ்வி திற்கிளர் செந்தழல் போல்எழீ இப்
பைவி ரித்த பஃறலைப் பன்னக
வெவ்வு ருக்கொடு சூர்மிசை மேயதே.

அந்த வேல்போலும் அம்புகள் ஓர் இலக்கமும் அந்தரத்தில் சென்று செம்மையாகக் கிளர்ந்து சென்றிடும் செந்தழலுடைய நெருப்பைப்போன்று எழுந்து உடனே படங்களை விரித்தாடும் பல தலைகளை உடைய பாம்புகளின் கொடிய உருவத்தைக் கொண்டு சூரபன்மன்மேல் அவை சென்றன. 407

கூற்றம் அன்ன கொடுந்தொழில் மன்னவன்
காற்றின் யாக்கை கரப்ப மிசைந்திடா
ஆற்றல் மேவி அணைந்துடன் மீண்டன
வேற்ற டக்கை விமலன் புடைதனில்.

இயமனைப்போன்ற கொடும் தொழிலுடைய சூரபன்மனது காற்றின் வடிவத்தை இல்லாது போம்படி பாம்புகளின் உருக்கொண்ட அம்புகள் உண்டு. அதனால் தாம் வலியடைந்து உடனுக மீண்டு கொண்டன. வேலைத் திருக்கரத்துடைய நிர்மலமாய சோதியாகும் சண்முகப்பெருமானின் பக்கராக. 408

இன்ன தன்மையில் ஈரிரு நாள்வரைத்
துன்ன லன்தொலை யாதமர் ஆற்றியே
பின்னும் மாயையின் பெற்றியைப் புந்தியுள்
உன்னி யேபல் லுருக்கொடு தோன்றினன்.

இன்னதன்மையாக நான்கு நாட்கள் வரையிலும் பகைவனுன சூரபன்மன் தொலைவிலாது போர்புரிந்து பின்னரும் பெருமாயத்தன்மையை தனது மனதில் எண்ணியே அதனல் பல மாயவடிவங்களை எடுத்து எமது பெருமான் முன்தோன்றினன். 409

வேறு

ஓவாஇயல் புரிமூவரில் ஒருசார்வரு மொழியுந்
தேவாசுரர் பிறராமென ஒருசார்வருஞ் சேனுள்
கோவாமென ஒருசார்வரும் ஒருசார்வருங் குறள்போல்
ஆவாவெனக் கொடுங்கூற்றென ஒருசார்வரும் அன்றே.

மாய வடிவங்கொள்ளும் அவன் ஓயாது காத்தும் படைத்தும் அழித்தும் நிற்கின்ற இயல்புடைய திருமால் பிரமன் உருத்திரன் போல்வடிவாகி ஒருபுறம் வருவான். சொல்லப்பெறும் சிறப்புடைய தேவர்களாகி அசுரர்களாகி இன்னும் பிற இராட்சத கணங்களாகி ஒரு புறம்வருவான். தேவ உலகினை ஆள்கின்ற அரசன் இந்திரன்போல் இன்னெரு புறத்தில் வருவான். ஒருபுறத்து குறள்வடிவான பூதங்கள் போல வருவான். ஆ! ஆ! என்றவாறு வரும் கொடிய இயமனைப் போன்று இன்னெரு புறத்தில் வருவான். 410

பேயாமென ஒருபால்வரும் பிறழ்வெம்புகைப் படலைத்
தீயாமென ஒருபால்வரும் திசைஎங்கணும் சுழலும்
ஓயாமருத் தினமாமென ஒருபால்வரும் அகிலம்
பாயாவெழு திரையாழியில் ஒருபால்வரும் பரவி.

பேய் எனும்படியாக உருவுடன் ஒருபுறம் வருவான். பெருகிடும் புகைப்படலம் கொண்ட தீயெனும்படி ஒருபுறம் வருவான். திக்குகள் எங்கும் சுழல்கின்ற ஓய்விலாத காற்றின் தன்மையாகச் சுழன்று ஒருபுறம் வருவான் அகில உலகம் எங்கும் பாய்ந்து எழுகின்ற திரையுடைய கடல்போன்று பரந்தவாறு ஒருபுறம் வருவான். 411

ஒருசார்விட மெனவந்திடும் ஒருசார்வரும் பணிபோல்
ஒருசார்முகி லெனவந்திடும் ஒருசார்வரு மிருள்போல்
ஒருசாருரு மெனவந்திடும் ஒருசார்வரும் வரைபோல்
ஒருசார்தன துருவாய்வரும் ஒருசார்வருங் கதிர்போல்.

ஒருபுறம் நஞ்சுபோல வருவான். ஒருபுறம் பாம்புபோன்று வருவான். ஓர்புறம் முகில்என வந்திடுவான். ஒருபுறம் இருள்போன்று வருவான். ஒருபுறம் இடியேறுபோல் முழங்கி வருவான். ஒருபுறம் மலைபோல்வருவான். ஒருபுறம் தனது வடிவாகிக் கொண்டு வருவான். ஒரு புறம் சூரியனைப்போன்று வருவான் 412

தொக்கார்பல படையாமென ஒருசார்வருஞ் சூழுந்
திக்கார்களிற் றினமாமென ஒருசார்வருஞ் சினத்தால்
நக்கார்தரும் அரியேறென ஒருசார்வரும் நலிவான்
அக்கால்வரு தனிப்புள்ளென ஒருசார்வரும் அன்றே.

தொகுதியாகக் கொண்ட பலவகையாகும் படைகள் போல் வடிவாகி எம்பிரானின் ஓர்புறம் வருவான். திக்குகள் எட்டிலும் சூழ்கின்ற எட்டு யானைகள் எனும்படி வடிவாகி வருவான். கோபத்தால் சிரித்திடும் நரசிங்கம் போன்று எம்பிரானின் ஓர்புறம் வருவான். துயருறுத்தும்படி அப்போது வந்த சக்கரவாகம் என்னும் தனிப்பறவைபோல் ஒருபுறம் வருவான். 413

கரியின்முகத் துணைவன்னென ஒருசார்வருங் கடுங்கண்
அரியின்முகத் திளையோனென ஒருசார்வரும் அளக்கர்ப்
பரியின்முகத் தினில்வந்திடு பாழிக்கனல் படுக்கும்
எரியின்முகத் தனிமைந்தனில் ஒருசாரிடை யேகும்.

யானைமுகமுடைய தம்பி தாரகாசூரனைப்போன்று ஒருபுறம்வருவான். கடுமையான வெறித்த பார்வையுடைய கண்கொண்ட தம்பி சிங்கமுகாசுரன் போன்று ஓர் புறம் வந்திடுவான். ஓர்புறமாக சமுத்திரத்தில் உள்ள குதிரை முகமுடைய வடவாமுகாக்கினிபோன்று வருவான். ஒருபுறமாக எந்தக் கொடும் நெருப்பையும் அழித்திடும் அக்கினியின் முகமுடைய தனி வீரனாகும் தனது மகன் அக்கினிமுகாசூரனபோல் எம்பிரான் ஓர் புறமாக வந்தடைவான். 414

எல்லோன் றனை வெகுண்டோனென ஒருசார்வரும் ஏனைச்
சொல்லோங்கிய திறன்மைந்தரில் ஒருசார்வருஞ் சூழ்ச்சி
வல்லோனென ஒருசார்வரு மானப்படை மள்ளர்
பல்லோர்களுஞ் செறிந்தாலென ஒருசாரிடைப் படரும்.

ஒளியுடைய சூரியதேவனைக் கோபித்திட்ட பானுகோபன் போன்று ஓர்புறமாக வருவான். மற்றைய சொல்லால் சிறந்து பேசப்படும் வீரம் நிறைந்த மூவாயிரவர் அதிசூரன் அசுரேந்திரன் போன்று ஓர் புறம்வருவான். சூழ்ச்சியில் வல்லோனான மந்திரி தரும கோபன்போன்று ஓர் புறமாக வருவான். வீரம்கொண்ட சேனை வேந்தர்கள் பல்லோரும் கூடினாற் போன்று ஓர் புறமாக வந்திடுவான். 415

இத்தன்மையில் அவுணர்க்கிறை யாண்டுஞ்செறி வாகி
அத்தன்தனைப் புடைசூழ்தலும் அவைநோக்கிய இமையோர்
சித்தந்தளர்ந் திரிகுற்றனர் திரிகுற்றனர் அம்மா
கத்துங்கடற் புவிமாய்ந்திடு காலத்துயிர் எனவே.

இத்தன்மையாக அசுரர்க் கெல்லாம் இறைவனான சூரபன்மன் பல வடிவங் கொண்டு எம்பெருமானை எப்பக்கரிலும் சூழ்ந்து சென்று அங்கும் இங்கும் எங்கும் தனது இந்த வடிவுகொடுதோன்றி நிற்றலும், அதனைக்கண்டு கொண்ட தேவர்கள் எல்லோரும் தங்கள் சித்தம் தளர்வுற்று பயந்து ஓடலுற்றனர். அம்மவோ அவர்கள் ஓடலுற்றனர் எதுபோல் என்றால் உலகை எல்லாம் அழித்திடும் காலத்துக் கடல் எழுந்து உலகை மூடமூட உலகத்து உயிர்கள் அவதியுற்றுக் கத்திக்கொண்டு ஓடிப் போதல்போன்று. 416

வேறு

அங்கதன் நிலைமைநோக்கி ஆயிர கோடி வாளி
செங்கையில் வாங்கி வாங்குந் திருநெடுஞ் சிலையிற் பூட்டி
இங்குள அமரர் தங்கள் இருஞ்சிறை அகற்ற வந்து
பங்கயற் சிறைசெய் திட்ட பகவன்மற் றிதனைச் சொல்வான்.

அங்கு சூரபன்மன் கொண்ட இந்தமாயவடிவங்களின் கொடுமையை நோக்கி ஆயிரம்கோடி அம்புகளை தமது செங்கையால் எடுத்து வளைத்த திருவுடைய நெடிய வில்லில் பூட்டி இங்குள்ள தேவர் தங்களுடைய சிறையை நீக்கிடத் திரு அவதாரம் செய்து, ஆனால் திருவிளையாட்டாக தாமரை மலரில் இருந்த பிரமதேவனைப் பிரணவப் பொருள்கேட்டு அவன் உற்ற அகந்தையான அழுக்கை நீக்கிட அவனை சிறைசெய்திட்ட பகவான் எம் பன்னிரு புயத்து அப்பன் அந்த ஆயிரகோடி அம்பினையும் நோக்கியருளி இதனைச் சொல்வார். 417

தெவ்வடு பகழி யென்னும் தேவிர்காள் நீவி ரேகி
மெய்வலி படைத்து நின்ற மேவலன் ஒருவன் கொண்ட
அவ்வுரு வனைத்து மெய்தி ஆங்கவன் மாய முற்றும்
இவ்விடை அட்டு நீக்கி ஏகுதி ரென்று விட்டான்.

அ

பகைமையை அழித்திடும் அம்புகளாகும் தேவர்களே நீங்கள் சென்று அழிவிலாத உண்மைவலிகொண்டு இங்கு நின்ற சூரபன்மன் ஒருவன் கொண்ட அந்த வடிவங்கள் யாவையும் நீங்களும் கொண்டு அங்கு அவன்கொண்ட மாயங்கள் முழுவதையும் இவ்விடத்து அழித்து நீக்கி பின்னர் எம்பால் வருக என அவற்றை எமபிரான் விடுத்தருளினர். 418

விட்டிடு சிலீமு கங்கள் விரைந்துபோய் வெகுளி வீங்கி
ஒட்டலன் கொண்ட ஒவ்வொன் றுருவினுக் கெழுமை யாகி
எட்டுள புலமும் வானும் இருநில வரைப்பும் ஈண்டி
அட்டடல் பெற்ற அம்மா அனையவன் மாயந் தன்னை.

எமது ஆறுமுகப்பெருமான் விட்டிடும் அந்த ஆயிரகோடி அம்புகளும் விரைவாகச் சென்று கோபத்தால் மிகுந்து; பகைவன் சூரபன்மன் கொண்ட ஒவ்வொரு மாயவடிவிற்கும் தாம் ஏழு உருவமாகி இந்த எட்டாகிய திக்கும் வானமும் பெரிய இப்பூமியின் எல்லை எங்கும் பரந்து அவன்மாய வடிவங்களை அழித்து உண்டு அதனால் தாம் மிக்க வலியினைப் பெற்றுக்கொண்டன.

எம்மிடமுள்ள அசுர சத்திகளை நீக்கி அடக்கினால் அது மிகுந்த ஆன்ம பலத்தைத் தரும் அதுதான் பின்னர் பல சித்துக்களையும் புரிந்து அண்டினரைக் காத்திடவும் உதவும் என்பது ''அட்டு அடல் பெற்றதம்மா'' அந்த அம்புகள் எனக் கூறினர். 419

உடல்சின மோடு சூரன் ஒருவனாய் அங்கண் நின்றான்
அடல்வலி கொண்ட வாளி அந்தர நெறியான் மீண்டு
புடையுறு சரங்க ளோடு பொள்ளெனத் தூணி புக்க
சுடர்நெடுந் தனிவே லண்ணல் அவன்முகம் நோக்கிச் சொல்வான்.

தான்கொண்ட மாய வடிவம்யாவும் அழிவுற்றலும் அதுவேளை சூரபன்மன் யாதொரு செயலும் செய்யமுடியாது வலியாவும் இழந்து தனது உடலில் கொண்ட சினத்துடன் தனியனாய் நின்றான். அப்போது அவன் மாயத்திறத்தை அழித்து வலி பெற்ற அந்த அம்புகள் யாவும் வானநெறியால் எழுந்து மீண்டுசென்று எம்பெருமான் புடையில் உள்ள ஏனைய அம்புகளுடன் பொள்ளென்று அம்புக் கூட்டில் புகுந்து கொள்ள, அதுவேளை சுடர்கொண்ட தனியாகும் வேலினைத் திருக்கரத்து ஏந்திய ஆறுமுகப்பெருமான் சூரனுடைய முகத்தை நோக்கிச் சொல்லியருள் கின்றார்.

தன்னால் அவன் மாயையாவும் அழிக்கப் பெற்று தனியனாகச் செயலற்று நின்றானை நோக்கி அவன் செய்த தவப்பேற்றினால் இதனைக்கருணையுடன் கூறியருள்கின்றார். 420

வெம்புய லிடையில் தோன்றி விளிந்திடு மின்னு வென்ன
இம்பரில் எமது முன்னம் எல்லையில் உருவங் கொண்டாய்
அமபினில் அவற்றை யெல்லாம் அட்டனம் அழிவி லாத
நம்பெரு வடிவங் கொள்வ நன்றுகண் டிடுதி யென்றான்.

சூரபன்மனே நீ கொடிய மேகத்தின் இடையாகத் தோன்றி மறைந்திடும் மின்னல்போன்று இவ்வுலகில் எமது முன்னம் எல்லையற்ற வடிவங்களைக் கொண்டாய்; எமது அம்பால் அவற்றை எல்லாம் அழித்தோம். ஆனல் அழிவிலாத எமது பெரு வடிவத்தை இப்போது கொள்வோம் அதனை நீ நன்ருகக் கண்டிடுவாய் என்ருர்.

''உனது மாயவடிவங்கள் இவ்வுலகின் இயல்பைக் கொண்டது ஆனல் அவை அழியும் தன்மையானது; ஆதலால் அவற்றை நாம் அழித்தோம். எமது வடிவமோ அழிவிலாதது அது ஆவதுமில்லை அழிவதுமில்லை. என்றும் உள்ளது; ஆனல் அதை யாரும் காணுதது; உருவாயும் அருவாயும் உள்ளது. எல்லாம் அதனிடத்துத் தோன்றி பின்னர் அதனிலே ஒடுங்குவன அதனை நாம் காட்டுதும்'' கண்டுகொள்.

சூரன் கொள்ளக்கூடிய மாயவடிவம் தந்திரச் செயல் எல்லாம் இழந்து சும்மா இருக்கின்ற எல்லையில் அவனை எம்பிரான் விடுத்தார். விடுத்த பின்பு அவன் மீதுள்ள கருணையால் பின்னர் தமது எங்கும் நிறையும் எல்லாமும் அல்லவுமாகும் சோதியுருவைக் காண்பிக்கின்ருர். 421

கூறிமற் றினைய தன்மை குரைகடல் உலகந் திக்கு
மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்
ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி
வேறிலைஎன்ன ஆங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்.

இத்தன்மைகளை எம்பெருமான கூறி, ஒலமிடும் கடல் உலகம் திக்குகள் மாறுதல் இன்றி நின்றிடும் புவனங்கள் அண்டங்கள் தேவர்கள் ஏனைய உயிர்கள் யாவும் ஆறுமுகமுடைய அருள் வள்ளலாகும் பெருமான் திருமேனியில் தான் அமைந்துள்ளன அன்றி வேறில்லை என்னும்படி அங்கு ஓர் மிகவும் அற்புதமான திருப்பெரு வடிவத்தைக் கொண்டருளினர்.

அவனது திருமேனியில்தான் எப்பொருளும் எவ்வுயிரும் அங்கன்றி வேறில்லைஎனும் உண்மைநிலை தெளிவாகிட, எல்லாம் தமதிடத்தில் தோன்றுகின்றன என்பதை காண முடியாததை காட்டிட வடிவம் கொள்கின்ருன் எமது கடவுள்.

எல்லாம் அவனிடத்தில்தான் தோன்றுவன என்பதை நாம் அறிந்தாலும், அவைகள் எமது பார்வைக்கு வேருக இருப்பன. அதை நாம் காணமுடியாது. ஆனல் அதனை அறிய தவம் செய்தலவேண்டும் என பெரியோர் மொழிவர். இந்த வடிவைக்காண்பதற்கு உற்ற ஒரு ஆவல்தானும் அவன் தந்தாலொழிய நாமாகவும் அடைய இயலாது. அது ஊழின் வழியாகும். அற்புதமாயும் அநேகமாயும் சொற்பதம் கடந்த சோதியாகியும ஓயாது எலும்பையும் ஊனையுமே உருக்கவல்ல வடிவம் ஒன்ருய் அன்றும் இன்றும் என்றும் இருப்பது இது ஒன்றே. அத்தோற்றமே சூரனுக்கு இங்கு காட்டப்பெற்றது.

இப்போது சிந்தனைக்கும் எட்டொணுத அந்த திருவுருவை கண்ணுல் காணும் படியும் பேறுற்ருன் சூரபன்மன். இப்பகுதியை அற்புதம்தோன்ற இப்பால் வரும் பாடல்களில் கூறுகின்ருர் கச்சியப்பர். 422

உள்ளடி வரைகள் யாவும் ஒண்புற வடியின் நீத்தம்
வள்ளுகிர் விரல்கள் முற்றும் வான்உரு மேறு நாள்கோள்
எள்ளரும் பரடு தன்னில் இரும்புனற் கிறைவன் சோமன்
நள்ளிருள் அனைய மேனி நிருதியோ டரக்கர் நண்ண.

அவர் கொண்ட திருப்பெரு வடிவத்தில் அவரின் திருப்பாதத்தின் உள்ளடிகளில் (உள்ளங்கால்) மலைகள் யாவும்; புற அடியில் சமுத்திரநீரும்; அழகிய நகங்கள் உடைய திருவிரல்களில் முழுவதும வானில் உள்ள இடியேறுகளும் நட்சத்திரங்களும் கிரகங்களும்; எவராலும் இகழ்ந்து நீக்கிடமுடியாத அற்புதமுடைய திருப்பாதம் மேலுள்ள பரட்டினிலே பெரும் நீர்க்கரசனுன வருணபகவானும் சோமனும் நடுயாமத்து இருள்போன்ற மேனியுடைய நிருதி என்னும் தலைவனுடன் இராட்சதரும் இருந்திடவும். 423

அடிதிரள் கணைக்கால் தன்னில் ஆரிடர் மணிகள் சானு
வடிவமை முழந்தாள் விஞ்சை வானவ ராதி யானோர்
தொடைதனின் மகவான் மைந்தன் தொடைமுதல் நடுவன் காலன்
கடிதடத் தசுரர் பக்கங் கடவுளர் யாரும் நிற்ப.

திருப்பாதமேல் திரண்டுள்ள கணைக்காலில் முனிவர்களும் சிந்தாமணி முதலிய தெய்வீகப் பொருள்களும் சானுவின் வடிவமாகத் திரட்சிகொண்டு அமைந்த முழந்தாளில் விஞ்சையர்களும் இன்னும் கருடர், கந்தருவர், கின்னரர், கிம்புருடர் முதல் ஏனைய கணத்தவரும் தொடையின்மீது இந்திரனும் அவன் மைந்தன் சயந்தனும் தொடையின் முதல பாகத்து இயமனும் அவனது மந்திரி காலனும் மிகு வலிவுடைய திருவரையின் பின்புறம் ஓர் புறத்து அசுரரும் மறுபுறத்துத் தேவர்கள் யாவரும் நிற்பவும். 424

இருப்பினில் நாகர் கோச எல்லையில் மருந்தே யுந்திக்
கருப்படும் உயிர்கள் மார்பிற் கலைகள்முந் நூலிற் போதம்
அருப்பயில் உரோமத் தண்டம் அங்கையில் அகில போகந்
திருப்பெருந் தடந்தோள் வைப்பிற் செங்கண்மால் விரிஞ்சன் மேவ.

அரையின் இடுப்பில் நாகர்களும் திருக்குறியின் நுனியின் தேவ அமிர்தமும் திருவயிற்றில் கருவாகித் தோற்றமுறும் உயிர்களும் நெஞ்சின்மீது பல கலைகளும் முப்புரியாகும் பூணூலில் ஞானமும திருமேனியின்மேல்பால் கொண்ட உரோமங்களில் சகல அண்டங்களும், அழகிய திருக்கையில் இவ்வுலகு எங்கும் யாவரும் அநுபவிக்கும் இன்பமான போகங்களும் திருமிக்க பெரும தோளின் வைப்பினிடத்தே செங்கண்ணராகும் திருமாலும் பிரமதேவனும் இருதோளிலும் ஒவ்வோர் புறமாகத் தங்கிடவும். 425

மெல்லிதழ் அனைய செங்கை விரல்மிசை அணங்கின் நல்லார்
ஒல்லொலி அங்கி கண்டம் ஒப்பிலா மணிவாய் வேதம்
பல்லிடை யெழுத்து நாவிற் பரமவா கமத்தின் பேதம்
நல்லிதழ் மனுவின் விஞ்சை நாசியிற் பவனன் மன்ன.

மிருதுவான பூ இதழை ஒத்த விரலின்மீது தேவப்பெண்களாய நல்லோரும் ஒல்லென்று ஒலித்திடும் அக்கினிதேவன் திருக்கழுத்திலும் ஒப்பிலாத முத்துப் போன்ற திருவாயில் வேதங்களும் பற்களின் இடையில் அகரமுதல் எழுத்துக்களும் நாவில் பரமாய ஆகமங்களின் பேதங்களும் நன்மையாகும் திரு இதழில் மனுவின் விஞ்சைகளும் நாசியில் (மூக்கு) வாயுபகவானும் பொருந்தியிருப்ப. 426

கருணைகொள் விழியில் சோமன் கதிரவன் செவியில் திக்குத்
திருநுதற் குடிலை வைப்புச் சென்னியில் பரம ஆன்மா
மரபினின் மேவித் தோன்ற மாறிலா திருக்குந் தொல்லை
ஒருதன துருவங் காட்டி நிற்றலும் உம்பர் கண்டார்.

கருணைகொண்ட திருவிழிகளில் சந்திரனும் சூரியனும் திருச்செவிகளில் திக்குத் திகாந்தமும் திருநெற்றியில் குடிலை என்னும் மந்திரமூல எழுத்தும் திருத்தலையில் பரமாய ஆன்மா சிவமும் எல்லாம் முறையாக என்றும் எங்கும் எல்லாவிடமும மாறின்றி இருந்திடும் மரபால் அற்புதமாய் பேரொளியாய் அளவிடற்கரியாய் நின்ற காணடற்கரியதான எல்லாம் தோன்றிடும் தொன்மையான வடிவினை ஆறுமுகப்பெருமான் காண்பித்து நிற்றலும் தேவர்கள் அதனை முன்னுறக்கண்டனர். 427

செஞ்சுடர் அநந்த கோடி செறிந்தொருங் குதித்த தென்ன
விஞ்சிய கதிர்கா னுள்ள வியன்பெரு வடிவை நோக்கி
நெஞ்சகந் துளங்கி விண்ணோர் நின்றனர் நிமல மூர்த்தி
அஞ்சன்மின் அஞ்சன்மின் னென் றருளினன் அமைத்த கையான்.

செம்மையுடைய சுடர் ஒளிகொண்ட அநந்தகோடி சூரியர் ஒருங்காகத் திரண்டு உதித்தால் எத்துணை பேரொளியாகுமோ அத்துணையிலும் மிகுந்த ஓர் பேரொளியைப் பரப்பிடும் அற்புதமாய திருப்பெரு வடிவைக்கண்டு சகிக்கமுடியாது தங்கள் நெஞ்சம் நடுக்கங்கொண்டு தேவர்கள் இது யாது ஆகுமோ என நின்றனர், அதுபோது நிமலமூர்த்தியான கடவுள் ஆறுமுகப்பெருமான், தேவர்களே! அஞ்சாதீர், அஞ்சாதீர் என தமது திருக்கரத்தை அமைத்து காண்பித்து அபயம் கொடுத்தருளினர். 428

அண்டர்கள் யாரும் எந்தை அருண்முறை வினவி யுள்ளம்
உண்டிடு விதிர்ப்பு நீங்கி உவகையால் தொழுது நின்றார்
தண்டுளி வரைய தென்னத் தணப்பறச் சிதறும் ஊழிக்
கொண்டலின் தோற்றம் நோக்கிக் குலவுறு மஞ்ஞை யேபோல்.

தேவர்கள் யாவரும் எந்தை பெருமான் ஆறுமுகன் அஞ்சாதீர் என அருளிச் செய்த முறையினை அறிந்து உள்ளத்தில் உண்டாகிய நடுக்கம் நீங்கி பேருவகையால் தொழுதவாறு நின்றார்கள். அவர்கள் கொண்ட ஆநந்த நிலை எவ்வாறாயிற்றென்றால் குளிர்ந்த மழைத்துளிகள் ஒவ்வொன்றும் ஓர் மலைபோன்று ஓய்வின்றிச் சொரிந்திடும் ஊழிக்காலத்து மேகத்தின் தோற்றம் கண்டு குலவிக் கூத்தாடி மகிழ்வுறும் மயில்போல ஆனார்கள்.

மயில் மேகத்தைக் கண்டால் இயற்கையாகவே மகிழ்வுறுவதன்றி செயற்கையாகவன்று; அந்த மயிலின் மகிழ்ச்சியும் கூத்தும் தோகைவிரித்தாடுதற்கு ஏற்கும் உணர்வும் மயிலே அறியாதே மேகத்தின் தோற்றத்தால் நிகழ்ந்த உள் உணர்வும் மகிழ்வுமாகும். இதேபோன்று பேரொளிப் பிழம்பாகும் முருகப்பெருமானது அருளும் அத்தேவர்பால் உவமை கடந்த இன்பத்தை ஊட்டி மகிழ்வுறச் செய்தது என்க. 429

இறுதியும் முதலும் இல்லா இப்பெரு வடிவந் தன்னைக்
கறைவிட முறழுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தின் நிற்ப
அறிவரும் உணர்தல் தேற்றா ஆறுமா முகத்து வள்ளல்
சிறிதுநல் லுணர்ச்சி நல்க இனையன செப்ப லுற்றான்.

முதலும் முடிவும் இல்லாத என்றும் உள்ள இப்பெருவடிவந்தன்னைக் கொடிய கரிய நஞ்சை ஒத்த சூரபன்மன் கண்டு ஆச்சரியத்துடன் நிற்ப அதுவேளை ஆறுமுகப் பிரானை அறியத்தவமியற்றி அறிய முற்படுவாரும் அறிந்திட ஒண்ணாத ஆறுமுகமுடைய அருள்வள்ளல் சூரன்பால் சிறிதே நல்லுணர்ச்சியைக் கொடுத்தருள அதன் பயனால் சூரபன்மன் தன்முன் தோன்றும் பெருமானது திருப்பெருவடிவத்தின் அற்புதத்தை நோக்கி இதனைச் சொல்லலுற்றான்.

எம்பெருமானது திருப்பெருவடிவங்கண்டு முன்னர் தேவர்கள் நடுங்கினர். ஆனால் சூரன் மட்டும் நடுங்காது சோராது ஆச்சரியத்துடன் திடமாகி நின்றதைக் காண்க. இதுதான் தவத்தின்பேறு. 430

எண்ணிலா அவுணர் தானை யாவையும் இமைப்பிற் செற்று
விண்ணுலா அண்டந் தோறும் வியன்சமர் ஆற்றி என்பால்
நண்ணினர் தம்மை எல்லாம் நாமறத் தடிந்து வீட்டி
வண்ணமான் தேரும் மீண்டு வராநெறி தடுத்தான் மன்னோ.

எண்ணற்றதான அசுரர்கள் யாவரையும் ஓர் இமைப் பொழுதில் அழித்து; அஃதன்றி விண்ணில் விளங்கிடும் அண்டந் தோறும் பெரும் சமரினைச் செய்து என் பாலாகத் தோன்றிய துணைவர் மைந்தர்கள் யாவரையும் அவர்கள் பெயர் கூட நிலவிடாதபடி அழித்து வீழ்த்தி அழகு நிரம்பிய இந்திரஞாலம் என்னும் தேரும் மீண்டு வராதபடி அதன் வழியைத் தடுத்தான் இக்குழந்தை. 431

திண்டிறல் உடையேன் தூண்டுந் திறற்படை யாவும் நீக்கிக்
கொண்டவென் மாய முற்றுங் கொடுஞ்சரம் அதனால் மாற்றி
அண்டமும் புவனம் யாவும் அமரரும் பிறவுந் தன்பாற்
கண்டிடும் வடிவ மொன்று காட்டியென் கண்முன் நின்றான்.

எவராலும் நீக்கமுடியாத திண்மை குன்றாத் திறல் உடையேன்யான் செலுத்திடும் மிகத்திறம்பட்ட படைகள் யாவற்றையும் நீக்கி நான்கொண்ட மாயவடிவங்கள் முற்றையும் கொடிய அம்புகளால் மாற்றி அண்டங்களும் புவனங்கள் யாவும் தேவரும் பிற கடவுளரும் உயிர்களும் யாவும் தன்பால் யான் கண்டிடும்படியான இந்தப் பேரொளியாய வடிவத்தைக்காட்டி என்கண் முன் நின்ருன். இந்த குழந்தை வடிவான முருகன். 432

கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி அன்றே.

கோலம் மிகுந்த மயில்வாகனத்தில் எழுந்து விளங்கிய இக்குமரனைப் பாலன் என்று யான் இருந்தேன். அம்மம்மவோ! அந்த நாளில் இவன் இப்படியானவன் என்னும் பரிசினை உணராது விடுத்தேனே! யான். இவனை நோக்கினுல் இவன்தான் திருமால் பிரமனுக்கும் அவரன்றி மற்றை ஏனைய தேவர்கட்கும் யார்க்கும் மூல காரணமாய் நின்ற மூர்த்தியாகும் சிவமே இந்த ஆறுமுகமுடைய மூர்த்தியும் அல்லவோ. 433

ஒற்றென முன்னம் வந்தோன் ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிக லின்றி நின்ற பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற எல்லாந் துணிபெனக் கொண்டி லேனல்
இற்றையிப் பொழுதில் ஈசன் இவனெனுந் தன்மை கண்டேன்.

என்னிடத்துத் தூதாக முன்னம் வந்த வீரவாகுதேவன் அன்று தன்னந்தனியாய் நிற்கும் வேலினைத் தாங்கிய பெருமானை பற்றும் வெறுப்பும் இன்றி நிற்கின்ற பராபர முதல்வன் என்றே சொல்லினன் அதுவேளை யான் அவன் சொல்லியதெல்லாம் உண்மையாகும் என எண்ணங்கொளாதிருந்தேனே. ஐய்யய்யோ ஆனல் இன்றைய இப்பொழுதில் ஈசனயவன் இக்குழந்தையே என்னும் தன்மையை நேரில் யான் கண்டுகொண்டேன். 434

மீயுயர் வடிவங் கொண்டு மேவிய தூதன் சொற்ற
வாய்மைகள் சரதம் அம்மா மற்றியான் பெற்ற அண்டம்
ஆயவை முழுது மற்றும் அறுமுகம் படைத்த செம்மல்
தூயபொற் பதரோ மத்தில் தோன்றியே நிற்கும் அன்றே.

மிக உயர்வான வடிவங் கொண்டு இங்கு வந்த அத்தூதுவன் சொல்லிய வார்த்தைகள் முழுவதும் உண்மையம்மா ஏனெனில் அத்தூதுவன் வீரவாகு சொல்லிய பிரகாரம் நான் அரசாளப்பெற்ற ஆயிரத்தெட்டு அண்டங்களும் இச் சோதி வடிவாம் ஆறுமுகப்பரம் பொருளின் தூய்மையான திருப்பாதத்துள்ள ஓர் உரோமத்தில் தோன்றியே நிற்கும். அதனைக்கண்டேன் இப்போது; 435

அண்டர்கள் முனிவர் ஏனோர் அகிலமுங் காட்டி அண்ணல்
கொண்டிடு படிவ முற்றுங் குறித்தியார் தெரிதற் பாலார்
எண்டரு விழிகள் யாக்கை எங்கணும் படைத்தோர்க் கேனுங்
கண்டிட அநந்த கோடி கற்பமுங் கடக்கும் அன்றே.

தேவர்கள் முனிவர் ஏனைய கடவுளர் உயிர்கள் எல்லா உலகுகள் யாவையும் தன்பால் காட்டி அண்ணலான ஆறுமுகன் என்முன்னகக் கொண்ட வடிவம் முழுவதையும் யாரே குறித்து அறிய முடியும் எண்ணற்ற கண்களைத் தன் உடலமெல்லாம் கொண்டவர் தாமும் இதனைக் காண்பதற்கு அநந்தகோடி கற்பகாலங்களும் கடந்திடும் அல்லவோ? அது அவ்வளவு அற்புதமும் சிறப்புமுடையது. 436

சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னில்
ஏர்க்குறும் ஒளியுஞ் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள வுலகில் அம்மா அற்புதத் தோடும் பல்காற்
பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை இன்னுமென் பார்வை தானும்.

அழகுடைய குழந்தையாகும் ஈசன் இங்கு கொண்டருளிய திருப்பெரு வடிவத்தில் அதற்கு ஏற்புடைய ஒளியும் சீரும் இளமையும் எழிலும் எல்லாம் வேறு ஆர்க்கு இந்த உலகில் உள்ளது. அம்மவோ இந்த ஈசனுடைய வடிவத்தை அற்புதத்துடன் நான் பார்க்கப் பார்க்க இன்னமும் என் பார்வையும் தெவிட்டிற்றில்லை. பார்க்கப் பார்க்க அற்புதமாய் ஆனந்தமாய் இருக்கின்றதேயொழிய ஒருக்காலேனும் அலுத்திடவில்லை எனது பார்வைஎன்றான். 437

நேரில னாகி ஈண்டே நின்றிடும் முதல்வன் நீடும்
பேருரு வதனை நோக்கிப் பெரிதுமச் சுறுவ தல்லால்
ஆரிது நின்று காண்பார் அமரரில் அழிவி லாத
சீரிய வரங்கொண் டுள்ளேன் ஆதலில் தெரிகின் றேனல்.

தனக்கு யாரும் நேரில்லாதவனாகி இவ்விடம் நின்றிடுகின்ற முதல்வனான முருகப் பெருமான் நெடியே பார்பதம் அண்டம் அனைத்துமாய்ப் பரந்த பேருருவம் அதனைக் கண்ணுற்றுப் பெரிதும் யாரும் அச்சுறுவது அல்லாமல் யார்தான் இதனைக் கொஞ்சமேனும் நின்று காண்பார், நான் காண்கின்றேன். ஏனென்றால் தேவர்கள் யாவரிலும் பார்க்க சீருடைய வரங்கொண்டுள்ளேனாதலின் இதனை யான் இங்கு நின்று தெரிகின்றேன். 438

ஆயிர கோடி காமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

ஆயிரகோடி மன்மதர்களின் அழகு எல்லாம் திரண்டு இங்குகூடி ஓர் உருவாகிப் பொருந்தின எனினும், செம்மையாகும் பேரொளியுடைய இப்பெருமானின் நின்மலமாகும் திருப்பாகத்திற்கொண்ட தூய்மையான நல்ல எழிலுருவுக்கு இணையாகாது எனச்சொன்னால், இவ்வாறான எல்லார்க்கும் முன்னைய பெருமானின் இப்பெரு வடிவின் சிறப்பிற்கெல்லாம் யார் உவமை எடுத்து வகுத்துக் கூறிட வல்லமை உடையவர். 439

இங்கென துயிர்போல் உற்ற இளவலும் இளைய சேயுஞ்
செங்கையில் வேலோன் றன்னைச் சிறுவனென் றெண்ணல் கண்டாய்
பங்கயன் முதலோர் காணாப் பரமனே யாகும் என்றார்
அங்கவர் மொழிந்த வாறுஞ் சரதமே ஆன தன்றே.

இங்கே எனது உயிர்போல் தோன்றிய தம்பி சிங்கமுகாசூரனும் இளைய மைந்தனான இரணியனும் அன்று என்னை நோக்கி, அண்ணலே! சிவந்த கையில் வேற்படையையுடைய பெருமானை ஓர் குழந்தையென எண்ணாதே! அவர்தான் பிரமன் திருமால் முதலாம் தேவர்களும் கண்டுகொள்ள முடியாத பரமன் சிவனே யாகும் என்றார்கள். அவர்கள் அன்று சொன்னதெல்லாம் இன்று நான் காணும் போது உண்மையாயிற்றே! 440

அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடியின் காறும்
எண்ணிலா ஊழி காலம் எத்திறம் நோக்கி னாலுங்
கண்ணினால் அடங்கா துன்னிற் கருத்தினால் அடங்கா தென்பால்
நண்ணினான் அமருக் கென்கை அருளென நாட்ட லாமே.

எல்லார்க்கும் மேலோரான குமரப்பெருமான் மேனியின் அடிமுதல் முடியின் காறும் எண்ணில்லாத ஊழிகாலம் வரையும் எத்திறத்தால் யான் நோக்கினுலும் அது காண்கின்ற கண்ணுக்கு அடங்கவில்லை. அல்லது அந்த வடிவை உன்னி நினைந்தாலும் அடங்கவில்லை. ஆகையால் இத்தகைய அரும்பெறல் மரபிற்குரி யனுன பெரும் கடவுள் என் பாலாகப் போரிட வந்தான் என்று சொல்வது அது அவனுடைய அருளாகும் என்றுதான் நான் உறுதியாகச் சொல்வேன் என்றான் சூரபன்மன். எல்லாவற்றையும் தானுகவே இயற்ற வல்ல இந்தக் கடவுள் என் னுடன் போரிட வந்தமை அவன் அருளுடையவன் என்பதைக் காண்பிப்பதன்றி வேறில்லை என்றான். 441

திருகிய வெகுளி முற்றுந் தீர்ந்தன செருவின் ஊக்கம்
அருகிய துரோமம் புள்ளி ஆயின விழியில் தூநீர்
பெருகிய திவன்பால் அன்பு பிறந்தன தமியேற் குள்ளம்
உருகிய தென்பு தானும் உலைமெழு காகும் அன்றே.

எம்பெருமானுடைய இப்பெருவடிவைக் காண்டலும் என்னை இதுகாறும் போட்டு வதைத்த கோபம் முழுவதும் தீர்ந்தது. போரிடவேண்டும் என்னும் எனது ஊக்கம் அருகிக் குன்றிப்போயது உரோமங்கள் சிலிர்த்து கூச்செறிகின்றது. என்னுடைய கண்களால் தூயநீர் பெருகுகின்றது. இவன்பால் என்னையறியாது அன்பு தானுகவே பிறக்கின்றது. தமியேனுடைய உள்ளம் உருகுகின்றது. இதுவன்றி இப்பகவானை நோக்கும்பொழுது என் எலும்புதானும் கொல்லனுடைய உலைமுகத் தில் வைத்த மெழுகுபோல் உருகி நிற்கின்றது. 442

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயனீ தன்றோ.

என் அகந்தை போயது. ஞான உணர்வு தோன்றியது. தூயதான. எனது வலக்கண்ணும் தோளும் துடித்தன அம்மவோ இப்புவனமெங்கும் பொருந்திய பொருள்கள் முற்றிலும் தோன்றி வெளிப்படுகின்ற தேவர்கள் நாயகராகும் பெரு மானின் திருவுருவை நான் கண்டுகொண்டேன். இது நான் செய்த நல்ல தவப் பயனுகுமன்றோ. 443

சூழுதல் வேண்டுந் தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுந் தாலு
ஆழுதல் வேண்டுந் தீமை அகன்றுநான் இவற்கா ளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

இப்பெருமானை வணங்கிட எனது கால்கள் சூழ்ந்து வரல்வேண்டும். என் அழகிய கைகள் வேறு எப்பணியும் செய்தலின்றி இவரைத் தொழுதிடல் வேண் டும். தலை இப்பகவானை தாழ்ந்து பணிந்திடல்வேண்டும். எனது நாக்கும் இவரை துதித்திடல் வேண்டும். எனது தீய எண்ணம் செயல் யாவும் ஆழ்ந்திடல் வேண் டும். இத்தீமை அகன்று நான் இன்று தொட்டு இவற்கு ஆளாகி வாழுதல் வேண்டும். இதையெல்லாம் நான் துணிவாகச் செய்திடற்கு என் நெஞ்சத்து மானம் ஒன்றுதான் இதைச் செய்யவேண்டாம் எனத் தடுக்கின்றது.

எனது உணர்வுகள் வணங்கிச் சூழ்ந்து வலம்வந்து தொழுது போற்றித் தீமைகள் ஆழ்ந்து நீங்கிச் சிந்தனை தூயதாய்ச் செயலும் அவ்வாறாகி நிற்க வேண்டும் என என்னையறியாது தூண்டி நிற்பினும், இத்தனை நாளும் போரிட்ட நான் இப்படியும் செய்யலாமோ என என் மானம் என்னைத் தடுத்தது என்றான். 444

ஒன்னலர் பொருட்டா லேகி உறுசமர் இழைத்த செம்மல்
தன்னுரு வதனைக் காண்கின் முனிவதே தகுதியாகும்
வன்னிகொள் வெண்ணெ யேபோல் வலியழிந் துருகிற் றென்றால்
என்னுடை வயத்த வன்றே உணர்ச்சியு மியாக்கை முற்றும்.

எனது பகைவர் பொருட்டால் இங்கு வந்துற்றதொரு பெரும்போரை இழைத்திட்ட இந்தத் தலைவனது உருவை யான் கண்டபோதே கோபிப்பதே தக்கதொரு கருமம். ஆனால் அதுவன்றி நெருப்பிலிட்ட வெண்ணெய்போன்று என்வலியெல்லாம் அழிந்து இவரைக் கண்டு என் உள்ளம் உருகுகிறது என்றால் என்னுடைய வசப்பட்டு நிற்பதோ இந்த உடம்பும் அல்லது உணர்வுதானும்.

பகைவரைக் கண்டபோது கோபிப்பது இயல்பு. அதுவன்றி இவரைக் கண்டபோது உருகுகின்றது எனது சிந்தை என்றால் எனது உடலையும் உணர்வையும் எனது சொற்படி இயங்குவன என்று நான் சொல்லவும் ஆமோ? என்றான். 445

ஏடவிழ் அலங்கல் மார்பன் என்னுடன் இந்நாள் காறும்
நீடிய இகற்போர் ஆற்றி நீங்கலா நின்ற தெல்லாம்
ஆடலின் இயற்கை யென்றே அறிந்தனன் அஃதான் றன்றான்
சாடிய வேண்டு மென்னின் யாரது தாங்கற் பாலார்.

இதழ்விரிந்த மாலையைக்கொண்ட மார்புடைய இந்தப் பெருமான் என்னுடன் இற்றை நாள்வரையும் நீண்டதொரு பகையுடன் போரிட்டு நின்றமை எல்லாம் எம்பெருமானுடைய திருவிளையாட்டின் இயற்கை என்றுதான் நான் இப்பொழுது அறிந்தனன். அதுவல்லாமல் என்னை இவன் கொல்ல வேண்டி நினைந்தால் அப்பாடா அதை யார் தாங்க முடியும்?

என்னுடன் போரிட்டு நின்றது இப்பெருமானுக்கு ஓர் திருவிளையாட்டு. அப்படியல்லாது இவர் கொலை செய்யும் நோக்கமுடையராயின் யார் அதனைச் சகிக்க முடியும். ஆதலால் இவனுடைய கருணையின் பெருமையை இன்று நான் கண்டு உணர்ந்துகொண்டேன். 446

ஏதமில் அமரர் தம்மை யான்சிறை செய்த தெல்லாந்
தீதென உரைத்தார் பல்லோர் அன்னதன் செயற்கை யாலே
வேதமும் அயனும் ஏனை விண்ணவர் பலருங் காணு
நாதனிங் கணுகப் பெற்றேன் நன்றதே யான தன்றே.

ஏதும் ஒரு குற்றமில்லாத அந்தத் தேவர்களுக்கெல்லாம் யான் செய்தது தீது பாவம் என்று பலர் இங்கு உரைத்தார்கள். ஆனால் அப்படி யான் செய்ததால்தானே இன்று வேதமும் பிரமனும் ஏனைய தேவர்கள் பலரும் காணமுடியாத பெரும் தலைவன் என்முன் வந்து தோன்றிடப் பெற்றேன். ஆதலின் எனது செய்கை நன்றாகத்தான் ஆகிவிட்டதல்லவோ?

ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாய் எங்கும் பரந்த இறைவனை நோக்கநோக்க அற்புதமும் உவகையும் மேல்மேல் பெருகின சூரபன்மனுக்கு. அந்தநிலை வளர்ந்து வளர்ந்து இன்பமாயதே ஒழிய குறைந்திடவில்லை. ஆதலால் அதன் அற்புதநிலையால் பண்டு யான் செய்த பழியானது இப்போது எனக்குப் பாக்கியமாயிற்று என்பதாகக் கூறினன். 447

ஒன்றொரு முதல்வ னாகி உறைதரு மூர்த்தி முன்னம்
நின்றமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினித் தளரேன் அம்மா
நன்றிதோர் பெருமை பெற்றேன் வீரனும் நானே யானேன்
என்றுமிப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்ப துண்டோ.

எல்லார்க்கும் ஒரேயொரு கடவுளாகி உறைகின்ற மூர்த்தியான இப் பெருமான் திருமுன்பு நின்று இந்நாள்வரை பெரியதொரு போரினைச் செய்திடப்பெற்றேன். ஆதலால் எதற்கும் இனி என் நெஞ்சம் தளரமாட்டேன். மிகவும் நன்றாகும் இந்தவொரு பெருமையைப் பெற்றுக்கொண்டேன். மிகவும் வீரனும் நானேயானேன். என்றும் என்னுடைய இப்புகழ் நிற்கும். ஆனால் இந்த உடம்பு நிற்பதுவும் உண்டோ? இல்லை.

எம்பெருமானுடன் முன்னின்று போரிட்ட புகழ் பலகோடி அண்டமும் பரவி ஊழி ஊழியெல்லாம் பேசப்படும். ஆனால் எனது இந்த உடல் நிற்பதோ அது நிலையாது. 448

வானுளோர் சிறையை நீக்கி வள்ளலை வணங்கி இந்த
ஊனுலாம் உயிரைப் போற்றி அளியர்போல் உறுவன் என்னின்
ஆனதோ எனக்கி தம்மா ஆயிர கோடி யண்டம்
போனதோர் புகழும் வீரத் தன்மையும் பொன்றி டாவோ.

ஆதலின் இப்போது தேவர்களது சிறையினை நீக்கி இந்த அருள் வள்ளலை வணங்கி இந்த ஊனில் உலவிடும் உயிரைப் பாதுகாத்து வாழலாம். அது தெரிந்து கொண்டேன்! ஆனால் அது எனக்கு ஆகுமோ? ஆகாதே. ஏனெனில் ஆயிரகோடி அண்டங்கள் தோறும் போனதொரு எனது புகழும எனது வீரத்தன்மையும் பொன்றிப்போகாதோ?

இது கருணையுருவம். இதை வணங்கி எனது தீய செய்கையாகும் தேவர் சிறையை நீக்கி எக்காலமும் எனது உயிருக்குக் கெடுதலின்றி வாழ முடியும். ஆனால் இன்று எல்லா உலகையும் வென்று எனக்கு ஒப்பாரும் மிக்காரும் யாருமின்றி இருக்கும் பெரும் புகழும் வீரத்தன்மையும் போய்விடுமே? பின்னர் யார்தான் இதைப் பெற முடியும். ஆகவே எனது உயிரிலும் மானமே பெரிது என்றான். 449

என்னஇத் தகைய பன்னி நிற்றலும் எவர்க்கும் மேலோன்
உன்னருந் தகைத்தாய் நின்ற ஒருபெருந் தோற்றம் நீத்து
மின்னிவர் கலாபம் ஊர்ந்த வியனுருக் கொண்டு நண்ணித்
துன்னலன் போத மாற்றித் தொன்மைபோ லாகச் செய்தான்.

என்று இத்தகையதான வார்த்தைகளைச் சூரபன்மன் எடுத்து உரைத்து நிற்றலும் அதுபோது எவர்க்கும் மேலோரான ஆறுமுகப்பெருமான் நினைக்கவும் முடியாதநிலையாகி நின்ற தனது ஒரு பெரும் தோற்றத்தை நீக்கியருளி பின்னர் முன்போல் மின்னலின் ஒளிகூடிய தோகையைக்கொண்ட மயிலின்மீது எழுந்தருளிய அற்புதத் திருவுருவைக் கொண்டு அங்கு தோன்றியருளி சூரன்பால் தோற்றுவித்த ஞான உணர்ச்சிகளையும் நீக்கி பழமைபோல அவனை விளங்கிடச் செய்தார்.

ஆக்குபவனும் காப்பவனும் அழிப்பவனும் அருள் தருபவனும் தன்பால் போக்குபவனும் அவன் தொண்டில் புகுவிப்போனும் எல்லாம் ஒருவனே; ஆகையால் காணுதனவெல்லாம் காட்டித் தன் கருணைத்தேன் காட்டித் தன் பகைவனைச்சொல்லாதன சொல்லி உவகைகூர வைத்தருளும் ஆறுமுகப்பெருமானின் திருவருட் பேற்றை யார்தான் எடுத்து ஓதிட முடியும். 450

காரண னாகித் தானே கருணையால் எவையும் நல்கி
ஆருயிர் முழுது மேவி அனைத்தையும் இயற்றி நிற்கும்
பூரண முதல்வன் மைந்தன் போதகம் அளித்து மாற்றிச்
சூரனை மயக்கஞ் செய்யுஞ் சூழ்ச்சியோ அரிய தன்றே.

எப்பொருட்கும் தானே காரணனாகித் தன் கருணையால் எவற்றையும் படைத்து எல்லா அரிய உயிர்கள்தோறும் பொருந்தி அனைத்தையும் இயற்றி நிற்கின்ற குறைவிலா நிறைவாய் நின்றருளும் முதல்வன் சிவபெருமானுடைய மைந்தன் ஆறுமுகப் பெருமான் சூரபன்மன்பால் ஞான உணர்வைக் கொடுத்து பின்னர் நீக்கி இப்படியாக மயங்க வைக்கும் சூழ்ச்சியாயது ஓர் அரிய செய்கையாவதன்று.

தானே நினைந்து தானே சத்தியும் சிவமுமாகி தானே அருள் முதல்வியுடன் கூடி உலகம் உயிர் பல பொருள்கள் யாவற்றையும் தந்து அவைகள் இயங்கிட தாம் அவைகளுடன் ஒன்றாகிநின்று அன்றும் இன்றும் என்றும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி நிற்பவன் ஈசன் சிவன். அத்தகைய பெருமான் திருக்குமரன் சூரன்பால் ஞான உணர்வைக் கொடுப்பதும் பின்னர் நீக்கி மயங்கிட வைப்பதும் ஓர் அரிய செயலோ.

எனது உடலும் உணர்வும் என் வயத்ததல்ல, ஈசனுடையதுதான் என உண்மையைத் தெளிந்து ஒருகால் அதை வாயாரச் சொல்ல வந்த அவனை திடீரென மாற்றி இல்லை இல்லை அது எல்லாம் என்னுடையதென எண்ண வைப்பதுதான் இங்கு சூரனை மயங்க வைக்கும் சூழ்ச்சி எனக் கூறினர்.

''எப்பெரும் தன்மையும் எவ்வெவர் திறமும் அப்பரிசதனால் ஆண்டு கொண்டருளி'' இதன்மேல் எதுவுமே சொல்ல முடியாது. 451

அத்தகு காலை தானே அவுணர்கோன் உணர்ச்சி நீங்கிச்
சித்தம திடையே தொல்லைச் சீற்றமும் இகலும் உற்ற
மெய்த்தகு குழவித் திங்கள் விண்ணெறி செல்லச் செல்லும்
எத்திசை இருளும் அன்ன தகன்றுழி எழுந்த தேபோல்.

அத்தகையதான காலையில் சூரபன்மன் தனது உண்மை உணர்ச்சிகள் முழுவதும் நீங்கப்பெற்று, அவனது சித்தத்திடையே முன்னைய சீற்றமும் பகையும் பொருந்திக்கொண்டன. இது எதுபோலாயிற்றென்றால்; உண்மையான ஓர் இளம் பிறை வான மேலால் சென்றிட அந்நேரம் உலகில் பரந்து எத்திசையிலும் உற்ற இருள்நீங்கி பின்னர் அந்த இளம்பிறை அத்தமனமாயபோது பழமைபோல் இருள் எழுந்ததைப் போன்றது.

எம்பெருமான் கருணையால் அறியாமை மிகுந்த அவனது உணர்வில் அறிவு கூடப்பெற்று ஈசனுடைய வியாபகத்தையும், கருணையையும், தான் மேற்கொள்ள வேண்டிய உண்மை நிலையையும் உணர்ந்துகொண்ட அவன் அந்த நிலையை இப்பொழுது நீங்கிய நிலையை எங்கும் பரந்திடும் இரவின் இருளில், குறைந்த கலையுடைய இளம்பிறை வானில் தோன்றிட அந்த இருள் நீங்கியபின்னர் இளம்பிறை அஸ்தமித்திட இருள் எழுவதுபோனறது என்றது; அறிவு ஒளியுடையது அறியாமை இருளுடையது எனபதைக் காட்டவும்; அறியாமை எல்லோரிடத்தும் பொதுவாக எக்காலமும் நிகழ்வதென்றும்; ஆனால் அதனில் அறிவு அருளால்தான் விளையும் என்றும் இங்கு எடுத்துக் காண்பிப்பதாயிற்று. 452

பிணிமுகம் உயர்த்து நின்ற பெருந்தகை தோற்றங் காணாஉத்
தணிவருஞ் சினமேற் கொண்டு சமரின்மேல் ஊக்கஞ் சேர்த்தி
அணியதென் றிண்மை என்னா அங்கையோ டங்கை தாக்கி
மணிமுடி துளக்கி நக்கு மற்றிவை புகலல் உற்றான்.

மயில்வாகனத்தின்மீது எழுந்தருளி நின்ற பெருந்தகையான ஆறுமுகப்பெருமானின் தோற்றத்தைக் கண்டு தணித்திட முடியாத அரும் கோபமடைந்து சூரபன்மன் மீண்டும் போர்மேல் ஊக்கம் கொண்டு எனது திண்மை திரும்பவும் வந்ததே என்று தனது அழகிய கையை ஒன்றுடன் ஒன்றைத்தட்டி இரத்தின முடியை ஆட்டிச் சிரித்து இந்த வார்த்தையைச் சொல்லலுற்றான்.

எம்பிரான் தோற்றம் கண்டபோது எம்பெருமான்மீது முற்றிலும் கோபமாய் நின்ற அவனது உடமபில் பெரும் மாறுதல் அடைந்துகொண்டன. உவகைக் கண்ணீரும் உடம்பு சிலிர்த்தலும் உற்சாகமும் இன்பமும் கருணையும் அன்பும பத்தியும் தன்பாட்டில் தோன்றி இறைவனுடைய அருட் பெருமையாவையும் எடுத்துப் பேசிடுமாறு கோபவெறியில்லாத சாத்வீகக் குணமாகி; மாறில்லா நன்னெறியின் வசப்பட்டமையாவும் ஈசன் கொடுத்த நல்லுணர்வின் பயனாகும். இதுவன்றி, இப்போது எம்பிரான் அவன்பாற் கொடுத்த நற்சிந்தையை நீக்கியது தன்பாட்டில் பழமைபோல் தான் என்ற அகங்காரம் தலைப்பட கையைத் தட்டி தலையசைத்து பெருமிதமுற்று சிரிக்கின்றான். ஏனெனில் அருளால் அழிந்த திண்மை பழமைபோல் தோன்றியது, தனது செயல் எனத் தன்னையே பெரிதும் வியந்தான். 453

சேயுரு வமைந்த கள்வன் செருவினை இழைக்க லாற்றான்
மாயையி னென்று காட்டி எனையிவண் மையல் செய்தான்
ஆயது துடைத்தேன் என்றால் ஆரெனக் கொப்புண் டென்றுங்
காயம தழிவி லாதேன் கருத்தழி கின்ற துண்டோ.

குழந்தை உருவான வடிவுகொண்ட இந்தக் கள்வன் என்னுடன் போரினை இழைத்திட முடியாது அலுத்தமையால் போலும் தனது மாயத்தன்மை ஒன்றினை என்பால் காட்டி மெதுவாக என்னைத் தன்பால் வசியமாக்கி வென்றிடப் பார்த்தான். அவர் போட்ட வசியத்தை நான் அழித்திடடேன்; அவன்பால் மயங்கிப் போகப் பார்த்த யான் அதனை எனது திடத்தால் நீக்கினேனென்றால் யார் இனி எனக்கு ஒப்பாவர். என்றும் என் உடல் அழிவிலாத தன்மையை உடையேன். என் கருத்தும் அழிந்திடும்படி ஆவதும் உண்டோ?

இவன் செய்த மாயத்தை நீக்கியது நான். இத்தகைய ஒரு செயலை யான் செய்தமைமால் யார் எனக்கு ஒப்பாக இவ்வுலகில் இப்படி மயக்கிட மயங்காதிருந்தார். அந்தத் திடமில்லாதவரைப்போன்று நான் ஆகாது இதிலும் வெற்றி கொண்டேன். 454

குன்றினை எறிந்த வேற்கைக் குமரனோ டமர தாற்றி
வென்றிடு கின்றேன் மெல்ல மேலது நிற்க இந்த
வன்றிறற் சமரை மூட்டி நின்றவா னவரை யெல்லாம்
தின்றுயிர் குடித்து முன்னென் சினஞ்சிறி தகல்வன் என்றான்.

கிரவுஞ்ச மலையைப் பிளவு செய்திட்ட வேலினைக் கைக்கொண்ட இக்குமரனை யான் போரிட்டு பின்னால் மெல்ல வென்றிடுகின்றேன். இது நிற்ப; இதற்கு முன்பு மகக் கடூரமான இந்தப்போரை என்பால் உண்டாக்கி நின்றனரே இந்தத் தேவர்கள் அவர்களை எல்லாம நான் பிடித்துத்தின்று உயிர் குடித்து விரைவில் எனது சினத்தைச் சிறிதே நீக்குவன் என்றான், 455

ஆயது துணிவாக் கொண்ட அவுணர்கள் மன்னன் பின்னும்
தீயதோர் தொல்லை மாயச் சீர்கொள்மந் திரத்தைப் பன்னி
ஞாயிறு மருட்கை கொள்ள ஞாலமுங் ககன முற்றும்
மாயிருள் உருவங் கொண்டு மறைந்துநின் றார்க்க லுற்றான்.

இதனைத் துணிவாகக்கொண்ட அசுரர்கள் மன்னன் சூரபன்மன் பின்னரும் தீமைகொண்டதொரு, முன்னர் காலத்துள்ளதான மாயங்கொண்ட சீருடைய மந்திரத்தை அந்த மாயையால் சூரியனும் கண்டு மயக்கமகொள்ள பூமியும் வான முழுவதும் பெரியதொரு இருள் வடிவங் கொண்டு அதனுள் மறைந்து நின்று பெரும் இரைச்சல் கொள்கின்றான். 456

தெண்டிரை நேமி தன்னில் தீவிடம் எழுந்த தென்ன
எண்டிசை எல்லை முற்றும் இருநில வரைப்பும் எல்லா
அண்டமு மாகி ஈண்டும் ஆரிருள் வடிவை வானோர்
கணடனர் அவுணன் மாய மீதெனக் கலக்க முற்றார்.

தெள்ளிய திரைகொண்ட கடல் தன்னில் தீய நஞ்சு எழுந்தது என்னும்படி எட்டுத்திசையின் எல்லை முழுவதும், இந்தப் பெரிய பூமியின் பரப்பு முழுவதும், எல்லா இடமும் உள்ள அண்டமுமாகி இருந்தாற்போல் பரந்திடும் இருளின் வடிவை வானோர் கண்டனர், ஓகோ இது சூரபன்மனின் மாயமாகும்; இனி என்ன விளையப்போகுதோ எனக் கலக்கமுற்றனர். 457

அத்துணை அவுணர் மன்னன் அவ்விருள் இடையே பாய்ந்து
பக்திகொள் சிகர மன்ன பஃறலை அளவை தீர்ந்த
கைத்தல முளதோர் யாக்கை கதுமெனக் கொண்டு விண்ணோர்
மெய்த்தொகை நுகர்வான் உன்னி விண்ணிடைக் கிளர்ந்து
சென்றான்.

அவ்வாறு தேவர்கள் கலங்கிடும் நேரத்தில் சூரபன்மன் அந்த இருளின் இடையாகப் பாய்ந்து வரிசையாக நின்றிடும் பெரும் மலைகள் போன்ற பல தலைகளையும் அளவு கடந்த கைகளையும் உடையதொரு பெரும் உருவத்தை விரைவாகக் கொண்டு அங்குள்ள தேவர்களது உண்மையான தொகை அத்தனையையும் உண்டிடும்படியாக வான்மேல் எழுந்து சென்றான். 458

ஆடியல் கொண்ட சூரன் அந்தரத் தெழலும் வானோர்
கூடிய ஓதி தன்னால் குறிப்பினாற்றெரிந்து நம்மைச்
சாடிய வருவன் என்னாத் தலைத்தலை சிதறி நில்லா
தோடினர் கூற்றை நேர்ந்த உயிரென இரங்க லுற்றார்.

போரிடும் இயல்புகொண்ட சூரபன்மன் இருளில் அந்தரத்து வானில் எழுதலும் அதனைத் தம்பால் கூடிக்கொண்ட ஞான உணர்வாலும் குறிப்பினாலும் தேவர்கள் அறிந்து நம்மைக் கொன்றிடும்படியாக இச்சூரபன்மன் வருகின்றான்போலும் என்று தலைத்தலையாகச் சிதறுண்டு அங்கு நில்லாது ஓடினார்கள். அவர்களது நிலை இயமனை முன்நேரப்பெற்ற உயிர்போல் இரங்கி ஓலமிட்டு அழுகின்றனர்,

''உற்றார் ஆர் உளரோ உயிர்கொண்டு போம்பொழுது குற்றாலத்துறையும் கூத்தா நீயன்றி'' என்றமைபோல் இங்கு சூரபன்மனால் துயருறுத்தப்போவதை உணர்ந்த தேவர்கள் யாவரும் கூற்றை நேர்ந்த உயிர்போலானார்கள். அவர்களுக்குத் தஞ்சம் ஆறுமுகப்பெருமானேதான. அதனை உணர்த்தவே கூற்றை நேர்ந்த உயிர், என உவமையாகக் கூறினார் ஆசிரியர். 459

நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமான் நல்குங் கடவுளே ஓலம் ஓலம்.

தேவரீர்பால் நண்ணினார்க்கு என்றும் இனியரே அபயம், ஞான நாயகனே உமக்கு அபயம். கடவுளர்கு எல்லாம் இறைவா அபயம். எப்பொருட்கும் மேலாய பரஞ்சுடர் ஒளியே அபயம். எண்ணவும் அரியவனே அபயம். யாவையும் படைத்தவனே அபயம். கண்ணுதற்பெருமான் சிவன் அருளால் தந்த தெய்வமே அபயம்அபயம்! 460

தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

தேவர்கட்கெல்லாம் தேவனே அபயம்; சிறந்ததொரு ஞானமூர்த்தியே அபயம்; பகைவர்க்கு இடிபோன்றவனே அபயம், வேற்படை ஏந்திய நின்மலப் பொருளே அபயம், பாடுவார்க்கு என்றும் எளிவந்து அருள் தருவாய் அபயம், பன்னிரு புயத்து எம் ஈசா அபயம். பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவராகி முதலாகின்ற மூர்த்தியே அபயம். அபயம்! 461

கங்குலின் எழுந்த கார்போல் கனையிருள் மறைவின் ஏகி
நுங்கிய செல்வான் சூரன் ஓடவும் நோன்மை யில்லேம்
எங்கினி உய்வம் ஐய இறையுநீ தாழ்க்கல் கண்டாய்
அங்கவன் உயிரை உண்டெம் மாவியை யருளு கென்றார்.

இராக்காலத்தில் எழுந்த கருமேகம் போன்று எங்கும் இருளாகிப் பரந்திடும் கொடிய மாய இருளில் மறைவில் வந்து எங்களைப் பிடித்து விழுங்க வருவான் சூரன் ஐயனே அவனைத் தப்பித்து ஓடவும் நாம் வலியில்லோம். இனி யாங்கள் எங்ஙனம் உய்வோம் எம் ஐயா. ஓர் இறைப்பொழுதும் நீர் இனித்தாமதம் கொள்ளாது அந்தச் சூரனுடைய உயிரை அழித்து எமது உயிரைக் காத்திடுவாய் என்றார்கள் அத்தேவர்கள். 462

தேற்றலை போலு மீது சிறிதுநீ பாணிப் பாயேல்
ஆற்றலின் மறைந்து நின்றே அகிலமுந் தானே யுண்ணும்
மாற்றலன் ஆவி தன்னை வாங்குதி வல்லை யென்னாப்
போற்றினன் முதல்வன் தன்னை மயூரமாய்க் கொண்ட புத்தேள்.

எம்பெருமானே! தேவரீர் இதனைத் தெரியாதுபோன்று சிறிது இவ்வேளை தாமதம் புரிந்தால் தனது ஆற்றலால் புரிந்த மாய இருளில் மறைந்து நின்ற சூரன் இந்த அகில உலகத்து உயிர் யாவற்றையும் உண்டு அழித்திடுவான். ஆதலால் ஆறுமுகத்து அரசே! இப்பகைவனுடைய உயிரை வாங்குதி வல்லையாக உடன் என்று போற்றுதல் புரிந்தான், எம்பெருமானை மயிலாகச் சுமந்திடுகின்ற கடவுள் இந்திரன். 463

அங்கவர் மொழியும் வெய்யோன் ஆற்றலுந் தெரிந்து செவ்வேள்
செங்கைய தொன்றில் வைகுந் திருநெடு வேலை நோக்கி
இங்கிவன் ஆகம் போழ்ந்தே ஏகுதி இமைப்பின் என்னாத்
துங்கம துடைய சீர்த்திச் சூரன்மேற் செல்லத் தொட்டான்.

அங்கு அவர்களது வார்த்தையும் கொடிய சூரபன்மனது ஆற்றலையும் செவ்வொளியாய மேனியுடைய ஆறுமுகப்பெருமான் தெரிந்து தமது செங்கை ஒன்றினில் வீற்றிருந்தருளும் திருநெடு வேலை நோக்கியருளி வேலே நீ சென்று இங்கு இச்சூரனுடைய உடலினைப் பிளந்து வருவாயாக என்றருள் செய்து இமைப்பொழுதில் மேன்மையான புகழினைக்கொண்ட சூரபன்மன்மேல் சென்றிடுமாறு வேற்படையைவிடுத்தருளினார். 464

ஏயென முருகன் தொட்ட இருதலை படைத்த ஞாங்கர்
ஆயிர கோடி என்னும் அருக்கரில் திகழ்ந்து தோன்றித்
தீயழற் சிகழி கான்று சென்றிட அவுணன் கொண்ட
மாயிருள் உருவ முற்றும் வல்விரைந் தகன்ற தன்றே.

சென்றிடுக என்று முருகப்பிரான் விடுத்த இருபக்கரிலும தலையுடைய வேற்படையானது ஆயிரகோடி சூரியர்கள் திரண்டதொத்த பேரொளியாய்த் தோன்றித் தீயதாகும் அழற்சுடர்கள் கக்கியவாறு சென்றிடவும், சூரபன்மன் கொண்ட பெரும இருள வடிவானது மிகுவிரைவாக மாய்ந்து அகன்று போயது. 465

அன்னவன் தனது மாயம் அழிந்ததும் ஐயன் வைவேல்
முன்னுறு மாறு நோக்கி முடிவிலா வரத்தி னேனை
என்னிவட் செய்யும் அம்மா இவன் விடும் எஃக மென்னா
உன்னினன் முறுவல் எய்தி உருகெழு சீற்றங் கொண்டான்.

அத்தகைய கொடிய சூரபன்மன் மாயம் அழிவுற்றதும் எமது ஐயனுடைய கூரிய வேற்படை முன்னாக எழுந்தருளி வருவதையும் சூரபன்மன நோக்கி அழிவிலாத வரம்பெற்ற என்னை இந்த முருகன் விடுத்த வேல் என்னதான் இங்கு செய்திடும் என்று நினைந்தான். நினைந்து புன்சிரிப்புக் கொண்டு இடி எழுந்ததுபோன்ற கோபம் அடைந்தான். 466

வாரிதி வளாகந் தன்னை மாதிர வரைப்பை மீக்கீழ்ச்
சேருறு நிலயந் தன்னைத் திசைமுகன் முதலா வுள்ள
ஆருயி ரோடும் வீட்டி அடுவன்மே லிதனை என்னுச்
சூரனும் அவுணன் மற்றைத் தொடுகடல் நடுவண் ஆனுன்.

சமுத்திரத்தால் வளைந்த இப்பிரபஞ்சத்தை திக்கின் எல்லையை மேலும் கீழுமாகச் சேர்ந்து கொண்ட ஏனைய உலகின் நிலையங்களை, இவற்றை எல்லாம் படைத்திடும் பிரமதேவன் முதலாகவுள்ள அரிய உயிரோடும் நான் அழித்து அதன்பின்பு இந்த வேலையும் சங்கரித்திடுவேன் எனக் கூறி, அச்சமும் அருளதும் இல்லாத சூரன் என்னும் அசுரன் தான் எண்ணியவாறு முடித்திட எல்லாவற்றையும் தொடுகின்ற கடலின் நடுவில் சென்றுன். 467

வன்னியின் அலங்கல் கான்று வான்தழை புகையின் நல்கிப்
பொன்னென இணர்கள் ஈன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிகள் என்னத் தீம்பழங் கொண்டு கார்போல்
துன்னுபல் கவடு போக்கிச் சூதமாய் அவுணன் நின்றுன்.

அங்கு கடல்பால் போயவன் நெருப்பின் வண்ணம்போலும் சுள்ளிகளைக் கொண்டு அதன்பாலுள்ள இலைகள் புகைபோல் விரிந்து பொன்போலும் பூந்தண்டுகளைக் கொண்டு மரகதம்போல் பச்சையான காய்களைக்கொண்டு செந்நிற இரத்தினம்போல் தித்திப்பான் பழங்களைக்கொண்டு மேகம்போலும் கரியபெரும் கொம்பர்களைப் பரப்பிய ஓர் பெரும் மாமர வடிவாய் நின்றுன் சூரபன்மன். தீம்பழம் என்பது தீமையையும் குறித்தது. இந்த ஒரு நிலையை அருணகிரி நாதரும் திருப்புகழில் சொல்கின்றுர்.

'' எழுபிறவி நீர்நிலத்தில் இருவினைகள் வேர்பிடித்து
இடர்முளைகளே முளைத்து — வளர்மாயை
எனும் உலவையே பணைத்து விரககுழையே குழைத்து
இருள் இலைகளை தழைத்து — மிகநீளும்
இழவு நனையே பிடித்து மரணபழமே பழுத்து
இடியுமுடல் மாமரத்தின் அருநீழல் ''

எனக் கூறியமையும் இங்கு ஒப்பநோக்குக. 468

மாசறு ககன கூட வரம்பதன் அளவு மேல்போய்
ஆசையின் எல்லை காறும் அளவைதீ ருலவை ஓச்சிக்
காசினி அகலந் தாங்குங் கச்சபத் துணைத்தூ ரோட்டிப்
பாசடை பொதுளி வெஞ்சூர் பராரைமால் வரையின் நின்றுன்.

இம்மாமரத்தின் உருவானது மாசற்ற வான் கூட எல்லைவரையும் மேல்போய் திக்குகளின் எல்லைவரையும் அளவுகடந்த கொம்பர்களைப் பரப்பி இப்பூமியின் அகலம் எல்லாவற்றையும் தாங்கிடும் ஆதிசேடனுடைய தலையில் தனது துணையானவேரினைச் செறித்து எங்கும் பச்சை இலைகளைப் பரப்பிக்கொண்டு அதன் அடிப்பாகம் பருத்த ஓர் பெருமலைபோலாகக் கொடிய சூரபன்மன் நின்றுன். 469

ஓராயிர நூற தென்னும் ஓசனை அளவை யான்ற
பராரைமா வுருவ மாகிப் பலவுடைச் சினைமாண் கொம்பர்
விராவிய சூழ்ச்சி தன்னுல் வேலைகள் முழுதும் விண்ணும்
தராதல வரைப்பும் எல்லாந் தண்ணிழல் பரப்பி நின்றுன்.

ஓர் இலக்கம் என்னும் யோசனை அளவு அகன்ற பருமன் உடைய ஓர் பெரிய மாமர உருவாகி பலவாகிக் கொண்ட கிளைகளை உடைய பெரும் பண்புடைய கொப்புக்களையும் கொண்டு விளங்கிய சூழ்ச்சியால், சமுத்திரங்கள் முழுவதும் வானமும் இப்பூமி முதல் எல்லா இடமும் தனது குளிர்மை வாய்ந்த நிழலைப் பரப்பி நின்றுன் சூரபன்மன். 470

நெடுங்கலை முயல்மான் கொண்டு நிலவும்அம் புலியும் நீத்தம்
அடுங்கதிர் படைத்த கோவும் அளகையை யாளி தானுங்
கடங்கலுழ் கின்ற ஆசைக் கரிகளுங் கடாவிற் செல்லும்
மடங்கலும் வெருவச் சூரன் மாவுருக் கொண்டு நின்றான்.

நெடிய கலைகளையும் முயற்கறைகளையும் கொண்டு நிலவிடும் சந்திரனும், நீரினை அழிக்கின்ற கிரணமுடைய சூரிய தேவனும், குபேரபட்டினத்து அரசனை சிங்கம் போன்ற குபேரனும் மதம் பொழிகின்ற திக்கு யானைகளும், எருமைக் கடாவில் வரும் இயமனும் கண்ணுற்று அச்சமுற சூரபன்மன் மாமர உருக்கொண்டு நின்றான். 471

மிக்குயர் உவணம் அன்ன மிசைப்படும் எகினப் புள்ளும்
மைக்குயில் சேவ லாகி மயூரமாம் வலியன் தானும்
புக்கமர் தெரிக்கும் ஆடற் பூவையுங் கொடிய தான
குக்குட முதலும் அஞ்சக் கொக்குரு வாகி நின்றான்.

மிக உயர்ந்த வானில் செல்லும் கருடனைப்போன்று வானில் எழுந்து முன்னர் போய அன்னப் பறவை வடிவு கொண்ட பிரமனும் கருமையான குயிலாகவும் சேவலாகவும் வடிவு கொண்ட வலியோன இந்திர தேவனும், போர்க்களத்தில் புகுந்து போரினை அனைவர்க்கும் தெரிய வைக்கும் நாகணவாயைப் போல் வார்த்தை கொண்ட துர்க்கா தேவியும், எம்பெருமான் தேரில் கொடியாய் அமர்ந்த சேவலாகும் முதல்வன் அக்கினி தேவனும் கண்டு அஞ்சிட மாமர வடிவாய் நின்றான்.

கொக்கு-மாமரம். உவணம்-கருடன். எகினம்-அன்னம். பூவை-நாகணவாய். பிரமன் அன்னப் பறவையாயது சோதியின் முடிதேடும் பொருட்டு. இந்திரன் குயிலாகப் பறந்தது; தக்கன் யாகசங்காரத்தின் பொழுது: சேவலாயது - அகலிகையைப் புணரும் ஆசையால் கௌதம முனிவர் ஆச்சிரமத்தில் நின்றும் அதிவேளையில் எழுப்பிட 472

காலெனு மொய்ம்பன் உட்கக் கட்செவி கவிழ்ந்து சோர
வாலிய வசுக்கள் ஏங்கி மலர்க்கரம் மறிக்க வெய்யோன்
பாலர்மெய் வியரா நிற்பப் பணைமுலை அரிவை மார்கள்
சேலெனும் விழிகள் பொத்தச் சேகர மாகி நின்றான்.

மிக்க வேகமுடைய வாயு தேவன் என்னும் வலியுடையோன் கண்டு உட்கிடவும்; கண்ணியமான பாம்புகளின் அரசன் அச்சத்தால் தலை கவிழ்ந்து சோர்ந்திடவும்; கண்ணியமான வசுக்கள் ஏங்கி மலர்போலும் கைகளை உதறிக் கொண்டிடவும்; வெப்பமுடைய சூரிய தேவனது பாலர்கள் கண்டு பயத்தால் மேனி வியர்வை கொண்டு நிற்ப ; பருத்த முலை கொண்ட பெண்கள் இம் மாமரத்தின் வடிவுகண்டு தாங்க முடியாது சேல் மீனைப் போன்ற கண்களைக் கையால் பொத்திடும்படி மாமர வடிவாகி நின்றான் சூரபன்மன். 473

அத்தியின் அரசு பேர ஆலமும் தெரிக்கில் ஏங்க
மெய்த்திறல் வாகை வன்னி மெலிவுற வீரை யாவுந்
தத்தம திருப்பை நீங்கத் தாதவிழ் நீபத் தாரோன்
உய்த்திடு தனிவேல் முன்னர் ஒருதனி மாவாய் நின்றான்.

அத்தியுடன் அரசமரமும் பேர ஆலவிருட்சமும் இதனை நோக்கில் ஏங்கிட உண்மையான திறல் உடைய வாகை வன்னி இவைகள் மெலிவுற வீரை யான மரம் யாவும் தங்கள் இருப்பிடத்தை விடுத்து நீங்கிட, மகரந்தப் பொடியவிழும் கடப்பமலர் மாலையணிந்த ஆறுமுகப் பெருமான் உய்த்திட்ட தனியான வேற்படை முன்பு, ஒரு தனியான மாமரமாகிநின்றான். 474

நிலமிசை இனைய வாறோர் நெடும்பெருஞ் சூத மாகி
உலவையின் செறிவு தன்னால் உம்பருந் திசையும் எற்றித்
தலைமுதல் அடியின் காறுஞ் சாலவுந் தளர்ந்து தள்ளாற்
றலமரு வாரிற் றானே அசைந்தனன் அசைவி லாதான்.

இப் பூமிமிசை இனையவாறோர் நெடியதொரு பெருமாமர வடிவாகித் தனது கிளைகளின் செறிவினால் வானமும் திசையும் அடித்து உடைத்து; தலைமுதல் அடிப் பாகம் வரையும் மிகவும் தளர்ந்து தள்ளாடி மயக்கமுறும் வெறிகாரர் போன்று தானுகவே அசைந்தான் எந்நிலையிலும் அசைவிலாத சூரபன்மன். 475

பைவிரி பாந்தட் புத்தேள் பரம்பொறு தழுங்கப் பாரின்
மைவிரி படிவச் சூறை மாருதம் எறிய மாழை
மெய்விரி குடுமிக் கோட்டு மேருவெற் பசைந்தா லென்ன
மொய்விரி அவுணன் யாக்கை அலைத்தனன் முடிவ தோரான்.

படம் விரித்த பாம்பாகும் ஆதிசேடன் என்னும் கடவுள் இதன் பாரத்தைப் பொறுது வருந்திட; பூமியினிடத்து இருள் விரிவது போன்று சூறுவளிக் காற்று வீசிட; அதனின் விசையால் பொன்மயமான வலிமை கொண்ட முடியுடைய மேரு என்னும் மலை அசைவது போன்று; தனது மாமர உருவை அங்கும் இங்கும் அலைத் தான்; என்னவாகி முடிவ தென்பதை உணராத சூரபன்மன். 476

இடிந்தன சரிந்த ஞாலம் ஏழ்வகைப் பிலங்கள் முற்றும்
பொடிந்தன கமட நாகம் புரண்டன புழைக்கை மாக்கள்
முடிந்தன மறிந்த வேலை முழுவதும் ஒன்று குற்ற
மடிந்தன உயிரின் பொம்மல் வரைக்குல மறிந்த அன்றே.

இச் செயலால் பூமிகள் இடிந்து சரிந்தது. ஏழுவகையான பாதாள உலகுகள் முழுவதும் பொடியாயின. ஆதியான கூர்மமும் நாகமும் நிலைவிட்டுப் புரண்டன. துதிக்கையுடைய திக்கு யானைகள் முடிவுற்றன. உலகின் உயிர்கள் மடிந்தன; இவை யன்றி மலைகளின் குலம் யாவும் சரிந்து வீழ்ந்தன. 477

தாரகை உதிர்ந்த கோளுந் தலைபனித் திரிந்த வெய்யோன்
தேரொடு மாவுந் தானுந் தியங்கினன் திங்கட் புத்தேள்
பேருறு மானம் நீங்கிப் பெயர்ந்தனன் ஏனை வானோர்
மேருவுங் கயிலை வெற்பும் புக்கனர் வெருவு நீரார்.

நட்சத்திரங்கள் உதிர்ந்தன; கிரகங்களும் அச்சத்தால் தலை நடுங்கி ஓடின சூரியதேவன் தனது தேருடனும் குதிரைகளுடனும் என் செய்வேன் எனத் தியக்க முற்றான். சந்திரனென கடவுள்தான் சென்றிடும் மார்க்கத்தை விடுத்து நீங்கி வேறு திசை போனான். ஏனைய தேவர்கள் யாவரும் மேரு மலையிலும்; திருக் கைலாய மலை யிலும் புகுந்து கொண்டனர்; மிக அச்சமுறும் தன்மை யுடையோராய். 478

ஏற்றமில் சுவர்க்க முற்றும் இற்றன அதற்கும் அப்பால்
மேற்றிகழ் முனிவர் வைகும் உலகமும் பகிர்ந்து வீழ்ந்த
நாற்றிசை முகத்தன் மாயோன் நண்ணிய உலகும் அற்றே
சாற்றுவ தென்கொல் அண்டச் சூழலுந் தகர்ந்த தன்றே.

சிறப்பேதும் இல்லாத சுவர்க்க உலகுகள் முழுவதும் அழிந்தன. அதற்கும் அப்பால் மேலாகித் திகழ்ந்த முனிவர் இருக்கும் உலகமும் வெடித்து வீழ்ந்தன. நான்கு திசையிலும் முகமுடைய பிரமதேவனது உலகும் நாராயணப் பெருமானின் வைகுந்த உலகமும் அப்படியே வெடித்து வீழ்ந்தன. நாம் என்னத்தைச் சொல் வோம் அண்டங்களின் சூழல்களும் தகர்ந்து போயின. 479

தெண்டிரை நடுவண் நின்ற தீயவன் செயலும் அன்னான்
கொண்டிடும் உருவும் உள்ளக் கொள்கையும் வலியுஞ் சீரும்
அண்டர்கள் எவர்க்கும் மேலாம் ஆதியம் பகவன் தொட்ட
விண்டொடர் தனிவேல் காண வெஞ்சினம் விளைத்த தன்றே.

தெள்ளிய திரைக்கடல் நடுவில் நின்ற தீயவன் சூரபன்மனின் செயலும், அவன் கொண்ட மாமரத்தின் கொடிய உருவும், அவன் உள்ளக் கொள்கையும் வலியும் சீரும் தேவர்கள் எல்லார்க்கும் மேலோராய் ஆதியான எம் ஆறுமுகப் பெருமான் விடுத்த வான்வழி வருகின்றவேற்படை கண்டருளியதும் மிகு கோபம் கொண்டருளியது.

உலகின் துயர் நீக்கி அருள் செய்திட உலகினை அழிக்க முயன்ற சூரபன்மன் செயல் கண்டு மிகு கோபங் கொண்டது. 480

தேயுவின் எடுத்த அண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிர கோடி அண்டத் தங்கியும் ஒன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகி ஆன்றோர் வெருவருந் தோற்றங் கொண்டு
நாயகன் தனது தெய்வப் படைக்கலம் நடந்த தன்றே.

அக்கினி மயமாகி விளங்கிடும் அண்டங்களும் நெருப்பாய் விளங்கிடும் பூமியின் தொடர்பாக உள்ள ஆயிர கோடி அண்டங்களில் உள்ள நெருப்பும் எல்லாம் ஒருங்குபட்டன என்றிடும்படியாக மேலாக உயர்ந்து எழுந்து; அறிவாளிகளாகும் பெரியோரும் அஞ்சிடும் தோற்றத்தைக் கொண்டு எமது நாயகன் சண்முகப் பெருமானது தெய்வப்படையாகும் வேல் மாமர வடிவை நோக்கிச் சென்றருளியது. 481

வயிர்த்திடு நிலைமை சான்ற வன்கணன் உயிரை வௌவச்
செயிர்த்திடுந் தெய்வச் செவ்வேல் திணிநில வரைப்பில் அண்டம்
மயிர்த்தொகை யாக ஏனைப் பூதமும் அழிய அங்கண்
உயிர்த்தொகை முருக்கத் தோன்றும் ஒருவனிற் சென்ற தன்றே

வைராக்கியம் உடைய நிலமை சான்ற வண்கண்ணனை சூரபன்மன் உயிரை எடுத்திட மிகு கோபம் கொண்ட தெய்வீகமான செவ்வேல்; திண்மையான பூமியின் எல்லையிலுள்ள அண்டங்கள் தமது திருமேனியின் மயிர்த் தொகையாகவும் ஏனைய பூதங்கள் அழிந்திடவும் அங்குள்ள உயிர் வர்க்கம் முழுவதையும் அழித்திடுவதற்கு பின்னால் தோன்றிடும் ஒருவனாகிய உருத்திர மூர்த்திபோல் சென்றருளியது. 482

மாறமர் உழந்து பன்னாள் வரம்பறு பிரம மாவார்
வேறிலை யாமே என்ற இருவரும் வெருவி நீங்க
ஈறொடு முதலும் இன்றி எழுகிரி விலக்கி விண்மேற்
சேறலின் நிலைமை காட்டிப் படர்ந்தது கடவுட் செவ்வேல்.

தங்களில் தாங்கள் மாறுபட்டு போர்புரிந்து பலநாளாக உழன்று எல்லையற்ற பிரமமாவார் யாம் அன்றி வேறில்லை என்பதை நிலைநாட்டிட நின்ற பிரமன் விஷ்ணு மூர்த்தி யாகும் இருவரும் கண்டு அஞ்சி நீங்கிட, அவர் நடுவே முடிவோடு முதல் என்பதிலாது சோதி மலையாகி எழுந்து அவரது போரை நீக்கி வான்மேல் சென்றருளும் சோதியின் நிலை இதுதான் என்பதைக் காட்டுவது போன்றுஎம்பெருமானது வேற்கடவுளும் ஒரே சோதியாகும் அக்கினிப் பிழம்பாய் சென்றருளியது. 483

வேதனை அகத்த ராகும் விண்ணவர் படைகள் தம்முள்
யாதனை இதற்கு நேரா இயம்புவ தெரியில் தோன்றிப்
பூதனை உயிருண் கள்வன் புண்டரீ கத்தன் வன்மை
சோதனை புரிந்த மேலோன் சூலமே என்ப தல்லால்.

வேதனையை தம் உளத்துக் கொண்டிருக்கும் தேவர்கள் படைகளில் எந்த ஒரு படையை இந்த வேற்படைக்கு நேராக இருந்து மொழிவது. அப்படிச் சொல்வதானால் அக்கினியில் தோன்றிய பூதனை என்னும் அரக்கியை உயிருண்ட கள்வன் கிருஷ்ணபகவான் தாமரை மலர் கொண்டு அர்ச்சனை புரிந்தபோது அவரது அர்ச்சனையில் ஒரு பூக் குறையப்பண்ணி அவரது வலிமையைச் சோதித்த சிவபெருமான் சூலப்படையே இதற்கு ஒப்பாகும் என்பதல்லாது வேறில்லை, 484

மண்டல நிலத்தின் வைப்பும் வாரிதி ஏழு மற்றைத்
தெண்டிரைக் கடலும் வானுஞ் சேணுயர் பிறங்கல் முற்றும்
எண்டிசைப் புறமும் அண்டத் தேணியின் பரப்பும் ஈண்ட
ஒண்டழற் சிகையின் கற்றை உமிழ்ந்ததால் ஒருங்கு ஞாங்கர்.

மண்தல மாகும் இப்பூமியின் வைப்பிடங்கள் எங்கும் சமுத்திரங்கள் ஏழும் மற்றைய தெள்விய திரையுடைய கடலும் வானமும், மிகு தூரத் துயர்ந்திருக்கும் மலைகள் முழுவதும் எட்டித்திக்கின் எல்லையும் எங்கும் அண்டங்களின் அடுக்காகும் வைப்பிடமும் எங்கும் பரந்திட ஒளியுடைய திரள் திரளான நெருப்புச் சுவாலை களை வேற்படை கக்கியது. 485

பற்றிய ஞெகிழி பாரில் படர்ந்தன பௌவம் யாவுஞ்
சுற்றிய திசையும் வானுஞ் சூழ்ந்தன சோதி வைகும்
பொற்றைய தொன்றே அல்லாப் பொருப்பெலாஞ் செறிந்த பொன்றோய்
கற்றையங் கதிரின் அண்டச் சூழலுங் கதுவ லுற்ற.

வேற்படையில் தோன்றிய நெருப்புச் சுவாலைகள் பூமியிற் படர்ந்தன; சமுத்தி ரங்கள் யாவும் அதனைச் சுற்றிய திசையும் வானும் எங்கும் சூழ்ந்தன; சோதி யான சிவம் வீற்றிருந்தருளும திருக்கைலாய மலை ஒன்றே அல்லாது மற்று எல்லா மலையிலும் அந்நெருப்பின் சுவாலைகள் படர்ந்தன. பொன்னுகத் தோய்ந்திடும் கதிர்களை உடைய அண்டங்களின் சூழலையும் சென்று கதுவிக் கொண்டன இந்த நெருப்புச் சுவாலைகள். 486

விடம்பிடித் தமலன் செங்கண் வெங்கனல் உறுத்திப் பாணி
இடம்பிடித் திட்ட தீயில் தோய்த்துமுன் இயற்றி யன்ன
உடம்பிடித் தெய்வம் இவ்வா றுருகெழு செலவின் ஏகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுதல் தடிந்த தன்றே.

நஞ்சினைக் கண்டத்துக்கொண்ட நின்மலனுகும் சிவபெருமானது சிவந்த நெற்றிக் கண்ணில் கொண்ட கொடிய நெருப்பில் சேர்த்து எம்பெருமான் திருக்கரத்து இடத் தைக் கொண்ட நெருப்பில் பின்னர் தோய்த்து, முன்பு இவ்வேலைச் செய்தது போன்று எமது வேலாகிய கடவுள் இவ்வாறு ஏகமாகும் அக்கினி வடிவாய் சென்று மதம்கொண்ட சூரனுகும் பெரிய மாமர முதலை சங்காரம் செய்தது 487

ஆடல்வேல் எறித லோடும் ஆமிர வடிவாய் அண்ட
கூடமும் அலைத்த கள்வன் அரற்றெடு குறைந்து வீழ்ந்தும்
வீடிலன் என்ப மன்னே மேலைநாள் வரத்தின் என்றால்
பீடுறு தவமே அன்றி வலியது பிறிதொன் றுண்டோ.

போராடலில் மிகுந்த வேற்படை வெட்டி எறிதலோடும், அவ்விடம் மாமர வடி வாய் அண்ட கூடங்களை எல்லாம் அலைத்த கள்வன் சூரபன்மன் ஐயோ எனக் கதறியவாறு வீழ்ந்தான். வீழ்ந்தாலும் அவன் இறந்திடவில்லை என்பர். அம்மவோ! முன்னாள் பெற்ற வரத்தின் பெருமையால் என்றால் பெருமை மிகுந்த தவமே யல்லாது இவ்வுலகில் மேலாகச் சிறந்த பொருள் வேறு யாதும் உண்டோ? இல்லையோ? 488

கிள்ளையின் வதனம் அன்ன கேழ்கிளர் பசுங்காய் தூங்கித்
தள்ளரும் நிலைத்தாய் நின்ற மாவுருச் சாய்த லோடும்
உள்ளுறு சினமீக் கொள்ள ஒல்லைதொல் லுருவம் எய்தி
வள்ளுறை யுடைவாள் வாங்கி மலைவது கருதி ஆர்த்தான்.

கிளிப் பிள்ளையின் சொண்டுபோல் சிவந்த அழகுமிக்க பசிய பழங்கள் தூங்கிட; நீக்கமுடியாத நிலைத்தாய் நின்ற மாமர வடிவம் சாய்தலோடும், இறவாமை பெற்ற சூரபன்மன் உள்ளத்து மிகுந்திடும் கோபத்துடன் மிகு விரைவில் தனது அரையில் கொண்ட உடைவாளை உருவி எடுத்து எம்பெருமானது வேற்படையுடன் போரிடக் கருதி ஆர்த்தான். 489

செங்கதிர் அயில்வாள் கொண்டு செருமுயன் றுருமின் ஆர்த்துத்
துங்கமொ டெதிர்ந்து சீறுஞ் சூருரங் கிழித்துப் பின்னும்
அங்கம திருகூ றாக்கி அலைகடல் வரைப்பில் வீட்டி
எங்கணும் மறைகள் ஆர்ப்ப எஃகம்வான் போயிற் றம்மா.

செவ்வொளிகாலும் கூரிய வாளினைக் கைக்கொண்டு போர்முயன்று இடிபோல் முழங்கி ஆர்த்து மேன்மையுடன் எழுந்து சீறுகின்ற சூரபன்மன் நெஞ்சினைக் கிழித்து பின்னரும் அவன் உடலை இரு கூறாக்கி அலைகொண்ட கடலிலே அவன் உடல் இரு கூறும் வீழும்படி வீழ்த்தி, எங்கணும் வேதங்கள் அரகரா என்று முழங்கி ஆர்ப்பரித்திட எம் கடவுள்வேல் வானில் எழுந்து போயது. 490

புங்கவர் வழுத்திச் சிந்தும் பூமழை யிடையின் ஏகி
அங்கியின் வடிவம் நீங்கி அருளுருக் கொண்டு வான்றோய்
கங்கையிற் படிந்து மீண்டு கடவுளர் இடுக்கண் தீர்த்த
எங்கள்தம் பெருமான் செங்கை எய்திவீற் றிருந்த தவ்வேல்.

தேவர்கள் வணங்கி வாழ்த்திச் சொரிகின்ற பூவின் மழையின் இடையாக எம்பெருமான் வேல் சென்றருளி, அக்கினியின் வடிவை நீங்கி, அனைத்துயிரும் சேமமுறும்படியான அருள் உருவைக்கொண்டு வானில் விளங்கிடும், கங்கையாற்றில் படிந்து நீராடி சூரனைக்கொன்ற தோஷத்தில் நின்றும் தீர்ந்து மீண்டு எழுந்து வந்து தேவர்களது இடுக்கணைத் தீர்த்தருளிய எங்கள் பெருமான் சிவந்த திருக் கரத்தையடைந்து அவ்வேல் வீற்றிருந்தருளியது. 491

தாவடி நெடுவேல் மீளத் தற்பரன் வரத்தால் வீடா
மேவலன் எழுந்து மீட்டும் மெய்பகிர் இரண்டு கூறுஞ்
சேவலும் மயிலு மாகிச் சினங்கொடு தேவர் சேனை
காவலன் தன்னை நாடி அமர்த்தொழில் கருதி வந்தான்.

போர்க்களத்து நெடிய வேற்படை மீண்டிட ஞானச்சுடராகும் சிவபெருமான் வரத்தால் அழிவுறாத சூரபன்மன் மீண்டும் எழுந்து வேலினால் பிளவுபட்ட உடலம் இரு கூறுகளும் சேவலாயும் மயிலாகவும் இருவடிவம் அடைந்து, சினம்கொண்டு தேவர்கள் சேனைகட்குக் காவலனான ஆறுமுகப்பெருமானை நோக்கிப் போர்த் தொழில் புரிந்திட எண்ணிப் பறந்துவந்தான்.

இவ்வளவ காலமும் அவன் எடுத்த வடிவெல்லாம் மாயத்தன்மையால் விளைந்தது. எம்பெருமான் வேல் அங்குபட்டதன் பின்பு மாயத்திற்கு இடமே இல்லை. இனி அருளுக்குத் தான் இடம் ஆதலின் இவ்வுருவம் அவனை நல்வழியாக்க அருளால் தோன்றியது என்க. 492

மணிகிளர் வரைய தொன்றும் மரகதப் பிறங்க லொன்றுந்
துணையடி சிறகர் பெற்றுச் சூற்புயல் அழிய ஆர்த்துத்
திணிநில விசும்பின் மாட்டே சென்றெனச் சேவ லோடு
பிணிமுக வுருவாய் வந்து பெருந்தகை முன்னம் புக்கான்.

நீலமணி ஒளி எழும் இரத்தினமலை ஒன்றும், மரகதப்பச்சை நிறமுடைய மலை ஒன்றும், பறத்தற்குத்துணையான சிறகுகளைக் கொண்டு அச்சிறகுகளை அடித்தலால் அச்சம் விளைவிக்கும் பெருமேகமும் கிழிபட ஆர்ப்பரித்து; திண்மையான இப்பூமியின் தொடர்பான வான் வெளியினூடே பறந்து சென்றாற் போன்று சேவலோடு மயிலின் உருவாகி வந்து ஆறுமுகமுடைய பெருந்தகையின் முன்பு புகுந்தான் சூரபன்மன்;

சூரன் பதுமன் என இருவர் முன்னர் ஆறுமுகங்களின் அற்புதத்தைக் கேள்வி யுற்றூர்கள். அவர்கள் அந்நாமம் கேட்ட நாட்கொண்டே அம்மூர்த்தி எப்படி இருப் பார், எங்குள்ளார் என அவரை அறிந்திடத் தாகம் கொண்டனர். இதனுல் அதே காதலால் பிரியாத உள்ளத்துடன் அவ்விருவரும் அந்தப் பிறவியில் எடுத்த உருவம் மங்கிட அப்பால் இரண்டுபேரும் சூரபன்மன் என்னும் ஒரு வடிவாகி காசிப முனிவனிடத்து மாயவள்பால் தோன்றினர் என்று காந்தத்தின் இன் னெரு பகுதியாகும் உபதேசகாண்டம கூறிடும்.

இதனைத் திருமுருகாற்றுப்படையில்; இரு வேறு உருவின் ஒருபேர் யாக்கை எனச் சிறப்பிக்கின்றமை காண்க. 493

ஆட்படு நெறியிற் சேர்த்தும் ஆதியின் ஊழ்தந் துய்க்கத்
தாட்படை மயூர மாகித் தன்னிகர் இல்லாச் சூரன்
காட்படை யுளத்த ணுகிக் கடவுளர் இரியல் போக
ஞாட்பியல் செருக்கில் வந்தான் ஞானநா யகன்றன் முன்னம்.

மீண்டும் அப்பெருமானுக்கே ஆளாக்குகின்ற ஆதியான ஊழ் இப்பொழுது இந்த உருவைக் கொடுத்து நின்று உய்திக்கு ஏற்ற நிலையைக் கூட்டிச் செலுத்திட; நீண்ட காலினை படையாகக் கொண்டிடும் ஓர் மயிலாகி, தனக்கு ஒப்பாரும் மிக் காரும் இல்லாத சூரபன்மன் கறுவியமுற்ற உள்ளத்தை உடையோனுகி, அங்குள்ள தேவர்கள் கண்டு அஞ்சியோடிட அன்று கொண்ட போர்ச் செருக்குடன் வந்தான் ஞானநாயகன் அறுமுகப்பெருமான் திருமுன்பு. 494

மருள்கெழு புள்ளே போல வந்திடு சூரன் எந்தை
அருள்கெழு நாட்டஞ் சேர்த்த ஆங்கவன் இகலே நீங்கித்
தெருள்கெழு மனத்த ணுகி நின்றனன் சிறந்தார் நோக்கால்
இருள்கெழு கரும்பொன் செம்பொன் ஞகிய இயற்கை யேபோல்.

மயக்கம்கொண்ட பறவை வடிவாகி வந்திடுகின்ற சூரபன்மன் மீது எந்தை பெருமானின் அருள்நிறைந்த பார்வை சேர்ந்திட அப்பார்வை ஒன்றுல் அங்கு அவன் கொண்ட கோபமுதல் கொடுமை யாவும் நீங்கித் தெளிவுடைய மனத் தனுகி சாந்தமுற நின்றூன். எதுபோலெனில் இருள்வடிவங்கொண்ட கரிய இரும்பு நெறியோர்களது பார்வையால் செவ்வொளிகொண்ட பொன்னுக மாறிடும் இயல்பு போன்று.

ஞானிகள் பார்வையால் இரும்பைப் பொன்னுக்கும் வழக்கம் உண்டு. இது அட்டமாசித்திகளை உடையரே செய்ய வல்லவர். அக்காலத்தில் பல பெரியோர் இதனைச் செய்தனர் என நூல்கள் எடுத்துக் கூறும்.

இக்காலத்து மனிதனுடைய சிந்தையை அடக்கி ஞானவழியிற்செலுத்தி மேலான சித்துக்களைப் புரிகின்றமைக்கு ஏற்றதொரு காலநிலை, கலி முற்றியதால் கூடாது போய்விட்டதுபோலும். 495

தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுன் உற்றுல்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவர் என்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றே வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.

தீய செயல்களைப் புரிந்தார்கள் என்றாலும் குமரப்பெருமான் திருமுன்பு சேரப் பெற்றுல், அவர்கள் தூயவராகி முன்கொண்ட தொன்மையான நற்கதியை அடை வார்கள் என்பதை இங்கு நாம் ஆராயவும் வேண்டுமோ? இல்லையே! ஏனெனில் எம்பெருமானுடன் கொலை நிகழும் போரினை இந்நாளில் செய்த மாயவளின் புத்திரனை சூரபன்மனும் எம்பெருமானது அளவு கடந்த அருளினைப்பெற்று உய்ந்துகொண்டான், 496

அக்கணம் எம்பிரான் தன் அருளினால் உணர்வு சான்ற
குக்குட வுருவை நோக்கிக் கடிதில்நீ கொடியே ஆகி
மிக்குயர் நமது தேரின் மேவினை ஆர்த்தி என்னத்
திக்கதே பணியி தென்னு எழுந்தது தமித்து விண்மேல்.

அவ்வாறாய நேரத்து எம்பெருமானுடைய அருளினால் நல்லுணர்வுகொண்டு நின்ற சேவலின் உருவை பகவான் நோக்கி விரைவில் நீ கொடியேயாகி மிக உயர்ந்திடும் மனோவேகம் என்னும் எனது தேரின்மீது எழுந்து ஆர்த்து நின்றிடு வாயாக என்னலும், அப்போது அச்சேவல் அதனைஏற்று பெருமானே இதுதக்க தொரு பணி என்று தனித்தே வான்மீது எழுந்துகொண்டது. 497

செந்நிறங் கெழீஇய சூட்டுச் சேவலங் கொடியொன் றாகி
முன்னுறு மனத்திற் செல்லும் முரண்டகு தடந்தேர் மீப்போய்
இந்நில வரைப்பின் அண்டம் இடிபட உருமே றுட்க
வன்னியும் வெருவ ஆர்த்து மற்றவண் உற்ற தன்றே.

சிவந்த நிறம்கொண்ட கொண்டைப்பூவுடைய சேவலானது அங்கு அழகிய கொடி ஒன்றாகி நினைக்கும் மனதிலும் வேகமாகச் சென்றிடுகின்ற பெரும் தேர் மேலாகச் சென்றிருந்து கூவி இதன் கூவலைக்கேட்டு இந்நிலத்தின் தொடர்பாக வுள்ள அண்டங்கள் இடிபட்டிட இடியும் ஏங்கி உட்கிட அங்குள்ள அக்கினி தேவ னும் அஞ்சிட ஆர்த்து அத்தேர்மேல் இருந்தது. 498

சீர்திகழ் குமர மூர்த்தி செறிவிழி கொண்ட தொல்லை
ஊர்தியின் இருக்கை நீங்கி உணர்வுகொண் டொழுகி நின்ற
சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி எம்மை என்னாப்
பார்திசை வானம் முற்றும் பரியென நடாத்த லுற்றான்.

சீர் திகழும் எழில் உருவம் கொண்டு குழந்தை வடிவாகிய ஆறுமுகப்பெருமான் மேனி முழுவதும் கண்ணாகி நின்ற இந்திரதேவன் கொண்ட மயில்வாகனத்தின்மீது எழுந்தருளி இருத்தலை விடுத்து நல்லுணர்வு கொண்டு நல்லொழுக்கம் தலை நின்ற சூரபன்மனின் உருவாய்த்திகழும் மயில்மேல் எழுந்தருளி மயிலே நம்மைச் சுமந்திடு வாயாக என அருள்புரிந்து, அம்மயிலைப் பூமி திக்குவானம் முழுவதும் குதிரையைப் போன்று செலுத்திடுவாராயினர். 499

தடக்கடல் உடைய மேருத் தடவரை இடிய மற்றைப்
படித்தலம் வெடிப்பச் செந்தீப் பதைபதைத் தொடுங்கச் சூறை
துடித்திட அண்ட கூடந் துளக்குறக் கலாபம் வீசி.
இடித்தொகை புரள ஆர்த்திட் டேகிற்றுத் தோகை மஞ்ஞை.

சூராகிய தோகை மயில் எம்பெருமான் பணியினை ஏற்று எழுந்து, சிறகுகளை அடித்து வீசி அதனால் அகன்ற கடல் கட்டுடைய மேரு எனும் பெருமலை இடிய, மற்றைய பூமிகள் வெடிப்ப அக்கினிதேவன் பதைபதைத்து ஒடுங்க சூறாவளிக் காற்று துடித்திட அண்ட கூடங்கள் நடுங்குறச் செய்து இடிகளும் அஞ்சிப் புரண்டிட அகவி இரைந்தார்த்துக் கொண்டு ஏகிற்று. 500

படத்தினின் உலகம் போற்றும் பணிக்கிறை பதைப்பப் பாங்கர்
அடுத்திடு புயங்கம் முற்றும் அலமர அவனி கேள்வன்
இடத்தமர் கின்ற பாம்பும் ஏங்குற விசும்பிற் செல்லும்
உடற்குறை அரவும் உட்க உலாயது கலாய மஞ்ஞை.

படத்தினில் உலகை ஏந்திப் போற்றிடுகின்ற பாம்புகளுக்கு அரசாகிய ஆதிசெடன் அதைக் கண்டு பயத்தால் பதை பதைத்திட, அதன் பக்கராக அடுத்திருக்கும் ஏனைய பாம்புகள் முழுவதும் அஞ்சித் துயருற, பூமிதேவியின் நாயகர் பகவான் நாராயண மூர்த்தி பள்ளிகொள்ளும் அநந்தனும் ஏங்குற; வானிற் சென்றிடும் உடற்குறை யாகும் பாம்புகள் இராகுவும் கேதுவும் பயத்தால் உள்ளம் உட்கிட, அழகிய தோகை யுடைய மயில் எம்பெருமானைச் சுமந்து எங்கும் உலாவி வந்தது. 501

பாரொடு விரிஞ்சன் தன்னைப் படைத்திடப் பன்னாள் மாயன்
காரென வந்து முக்கட் கடவுளைப் பரித்த தேபோல்
வீரருள் வீரனாகும் வேலுடைக் குமரன் தன்னைச்
சூருரு வாகி நின்ற தோகைமேல் கொண்ட தம்மா.

பூமியோடு பிரமதேவனை முன்னாள் படைத்திடுதற்கு நீலத்திருமேனியுடைய திருமால் பல நாளாக மேகம்போல் வந்து தனது அகத்தே முக்கண்ணுடைய சிவ பெருமானைத் தாங்கி நின்று தவம் புரிந்தவாறு போன்று; வீரருள் வீரனாகித் திகழ்கின்ற வேற்படை ஏந்திய குமரநாயகனை, சூரனின் வடிவாகி நின்ற தோகைமயில் தன்மேற் சுமந்து நின்றதும் அமைந்து நின்றது. 502

வெயில்விடும் அநந்த கோடி வெய்யவர் திரண்டொன் றாகிப்
புயல்தவழ் கடவுள் வானில் போந்திடு தன்மை யேபோல்
அயிலினை யுடைய செவ்வேள் மரகதத் தழகு சான்ற
மயிலிடை வைகி ஊர்ந்தான் மாகமுந் திசைகள் முற்றும்.

ஒளியினைப் பரப்பிடும் அநந்த கோடி சூரியர் திரண்டு ஒரு வடிவாகி மேகங்கள் உலவிடும் தெய்வீக வானில் போந்திடுகின்ற தன்மை வந்தால் எத்துணைச் சிறப்பு உண்டாகுமோ அதனை ஒத்து வேலினைக் கொண்டருளும் செவ்வொளிபரந்த ஆறு முகக்கடவுள் எங்கும் பிரகாசமாகும் சோதியாய் மரகத மணியின் வடிவுபோன்ற மயில்மீது எழுந்தருளித் திக்கும் வானும் எங்கும் உலாவி வந்தருளினர். 503

நேமிகள் ஏழும் ஒன்றாய் நிமிர்ந்தெழும் வடவை முற்றுந்
தாமொரு வடிவாய் அங்கட் சார்ந்திடு நிலைமை யென்ன
மாமயில் உயர்த்துச் சென்ற வாகைமேல் வீரன் மீண்டு
தீமைகொள் அவுணன் மூதூர்ச் செருநிலத் தெல்லை புக்கான்.

கடல்கள் ஏழும் ஒன்றாய்த் திரண்டு இருந்த வடவை என்னும் நெருப்பு முற்றும் தாங்கள் ஒருவடிவாகி அங்கு நீலக் கடல்மேல் நிமிர்ந்து எழுந்திடும் நிலமை இது எனும்படி; பெரிய நீல மயில் ஏறி திக்கெல்லாம் உலவிச் சென்றருளிய வெற்றி வேல் ஏந்திய ஆறுமுகப் பெருமான் மீண்டருளி, தீமை கொண்ட சூரபன்மனின் முதிய நகரம் வீரமகேந்திரபுரத்தின் போர்க்களத்து எல்லையில் வந்தருளினர். 504

புக்குள குமர மூர்த்தி பொறிமயில் உருவ மாயுங்
குக்குட மாயும் நின்ற அமரரைக் குறித்து நோக்கி
மிக்கநும் மியற்கை யாகி மேவுதிர் விரைவின் என்ன
அக்கணம் அமரருந்தொல்லை வடிவு கொண்டடியில் வீழ்ந்தார்.

போர்க்களம் புகுந்த குமரமூர்த்தி, பொறியுடைய மயில் வடிவாயும் கோழிவடிவாயும் முன்நின்ற இந்திரதேவன் அக்கினி தேவன் ஆன இரு கடவுளரையும் நோக்கியருளி நீவிர் உமது இவ்வடிவை நீங்கி முன்னைய உங்கள் உருவினைப் பெற்றிடுவீர் என்று அருள்புரிதலும், அக்கணமே அவர்களும் தங்களது முன்னைய வடிவங்களைக் கொண்டு அப்பனுடைய திருவடி முன்பு வீழ்ந்து வணங்கினர். 505

வள்ளலை வணங்கிப் பல்கால் வழுத்தியே தொழுது தத்தம்
உள்ளமும் புறத்தில் என்பும் உருகிட விழியில் தூநீர்
தள்ளுற வுரைகள் முற்றுந் தவறிடப் பொடிப்ப யாக்கை
கள்ளுண வுற்ற வண்டின் களிமகிழ் சிறந்து நின்றார்.

அருள் வள்ளலான ஆறுமுகப் பெருமானை வணங்கி பலகால் துதித்து தொழுது. தங்கள் உள்ளமும் புறத்துள்ள எலும்பும் உருகிட விழிகளில் தூய நீர் பொழிந்திட வார்த்தைகள் முற்றும் தவறிட உடலம் பொடித்திட தேன் உண்ட வண்டுபோல் ஆதியொடும் அந்தமான நலமாகும் ஆறுமுக ஐயனின் ஆநந்தமாய பேரின்பத்தில் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்து நின்றார். 506

வீசுறு சுடர்வேல் ஐயன் வெய்யசூர் முதலைச் சாடித்
தேசுறு மஞ்ஞை ஊர்ந்து வந்தது தெரிந்து போர்செய்
காசினி யிடையே நின்ற கணங்களும் வீரர் யாரும்
ஆசறும் இளவ லுஞ்சென் றடிதொழு தார்த்துச் சூழ்ந்தார்.

ஒளி வீசிடும் வேலுடைய ஆறுமுகத்து ஐயன், கொடியதான அசுரரின் முதல்வன் சூரபன்மனை சங்கரித்து ஒளியாகிப் பரந்திடும் நீல மயிலைச் செலுத்தி போர்க்களம் வந்தமையைக் கண்ணுற்றருளி, பூமியிடையாக நின்ற பூதகணங்களும் இலக்கத்தெட்டு வீரரும், குறைவற்ற வீரவாகு தேவரும் சென்று எம்பெருமானது திருவடிகளைத் தொழுது ஆர்த்து மகிழ்வால் மலர்ந்து சூழ்ந்து கொண்டனர். 507

சூரபன்மன் வதைப்படலம் முற்றும்

ஆகத்திருவிருத்தம் 2904,

## தேவர்கள் போற்று படலம்

நேரொரு சிறிதும் இல்லா நின்மலன் தனது வேலால்
சூருடல் பிளந்தி யாணர் மஞ்ஞையில் தோன்று காலைப்
பாருல கயின்ற கண்ணன் பங்கயன் அமரர் கட்கோர்
ஆரமிர் தெய்திற் றென்ன அன்னது கண்டே ஆர்த்தார்.

நேராகச் சொல்ல, சிறிதேனும் எதுவும் இல்லாத ஆறுமுகமுடைய நின்மலன் தன்னுடைய வேலினால் சூரனுடைய உடலைப் பிளந்திட்டு, பேரழகுடைய அவனாகிய மயில்மேற் தோன்றிடும் பொழுது, இப்பூமியை உண்ட திருமால் தாமரை மீதிருந்த கடவுள் பிரமன், தேவர்கள் அனைவோர்க்கும் அவ்விடத்து ஓர் கிடைத்தற்கு அரிய அமிர்தம் அடைந்துள்ளதுபோன்று அதுகண்டு ஆர்ப்பரவம் கொண்டனர். 1

ஆர்த்தனர் எழுந்து துள்ளி ஆடினர் பாடா நின்றார்
போர்த்தனர் பொடிப்பின் போர்வை பொலங்கெழு பூவின்மாரி
தூர்த்தனர் அருளை முன்னித் தொழுதனர் சுடர்வேல் கொண்ட
தீர்த்தனை எய்திச் சூழ்ந்து சிறந்துவாழ்த் தெடுக்க லுற்றார்.

தேவர்கள் யாவரும் ஆர்த்தார்கள்; எழுந்து துள்ளி ஆடினார்கள்; அப்பனைத் தோத்திரம் சொல்லிப் புகழ்ந்து பாடியவாறு நின்றார்கள். உரோமங்கள் சிலிர்த்திட மேனியெல்லாம் கூச்செறியும் பொடிப்பின் போர்வை கொண்டார்கள்: அழகும் மணமும் கொண்ட பூவின் மழையைச் சொரிந்தார்கள். திருவருளை முன்னித் தொழுதார்கள். அருள் நோக்கால் தீர்த்த நீர் ஆட்டுகின்ற ஆதியை ஆறுமுகப் பெருமானை அடைந்து சூழ்ந்து நின்று சிறந்து மகிழ்ந்து வாழ்த்தெடுக்கின்றார். 2

வேறு

கார்தடிந்து துய்க்குங் கனைகடலின் நீர்வறப்பப்
போர்தடிந்து செல்லும் புகர்வேல் தனைவிடுத்துச்
சூர்தடிந்தாய் அன்றே தொழுமடியேம் வல்வினையின்
வேர்தடிந்தாய் மற்றெமக்கு வேறோர் குறையுண்டோ.

ஆறுமுகத்து அரசே! அருளுடன் கேட்டருள்வாய். மேகங்கள் படிந்து உண்டு எழுகின்ற இரையும் கடலின் நீர் வற்றிட எப்போரையும் இல்லாது முடித்துச் சென்றிடும் கூரிய வேலினைவிடுத்துச் சூரபன்மனைக் கொன்றாய் அன்று! தேவரீர் உம்மைத் தொழுகின்ற அடியோமை அலைத்துலைய வைத்திடும் கொடிய ஊழாம் வினைகளின் மூலத்தின் வேரை அடியோடு அழித்துவிட்டாய். ஆதலின் எமக்கு இப்பாலும் வேறு ஓர் குறையும் உண்டாமோ ? 3

மாறுமுகங் கொண்டுபொரு வல்லவுணர் மாளாமல்
நூறுமுக மெட்டு நோதக் கனபுரியத்
தேறுமுக மின்றித் திரிந்தேமை ஆளவன்றே
ஆறுமுகங் கொண்டே அவதரித்தாய் எம்பெருமான்.

எம் வழிக்கு மாறுன நேர்விரோதமான கொள்கை கொண்டு எமை வாட்டிய வலியுடைய அசுரர் மாண்டு போகாது, நூற்றெட்டு யுககாலம் வரையும் நாம் சகித்திட முடியாது தவித்து றோவுறும்படியான கொடும் துயரினைப் புரிய, அதனுல் ஆற்ருது அஞ்சித் தேறிக்கொள்வதற்கும், ஓர் வழியும் இலாது அவதியுற்றுத் தயங்கினேம்; அவ்வாருகிய எம்மை ஆண்டருளிக் கொள்வதற்காகவே அறியொணுத நீ ஆறுமுகம்கொண்டு அவதரித்துள்ளாய் எம்பிரானே. 4

நீதி முறையதனில் நில்லா அசுரர்புரி
தீது பலவுளவுந் தீர்ந்தோம் பழியகன்றேம்
வேத நெறிதொல்லே வெறுக்கையொடு பெற்றனமால்
ஏதும் இலேயால் எமக்கோர் குறையெந்தாய்.

நீதி என்ற ஓர் வழியில் நில்லாத அசுரர் செய்கின்ற தீதுகள் பலவுண்டு. அவை யாவும் இன்றுடன் தீர்ந்தோம், எம் பழி யாவும் அகன்றேம். எமது வேத நெறியை முன்னேய செல்வ வளங்களோடு பெற்றுக்கொண்டோம். எந்தை பெருமானே! எமக்கு ஏதும் ஓர் குறையும் இனி இல்லையாகும். 5

மன்ற அவுணர் வருத்திடஇந் நாள்வரையும்
பொன்றி னவரென்னப் புலம்பித் திரிந்தனமால்.
இன்று பகைமாற்றி எமக்கருள் நீ செய்கையினுல்
சென்றஉயிர் மீண்ட திறம்பெற்ற னம்ஐயா.

கொடிய அசுரர் இந்நாள்வரையும் நன்ருக எம்மை வருத்திட, நாம் எல்லோரும் இறந்தார்போல ஒழுக்கம் கெட்டு, நெறிகெட்டு, உயர்வாகும் எண்ணம் கெட்டு புலம்பியே திரிந்தோம். இன்று எம்மை வருத்திய உள்ளும்புறமுமான பகையை ஒழித்து, எமக்குத் தேவரீர் அருள் செய்தலால் போன உயிர் திரும்பியதுபோன்ற திறத்தினைப் பெற்றுள்ளோம் எம் ஐயனே. 6

செய்யும்அவ னும்புலனுஞ் செய்வித்து நிற்போனும்
எய்த வரும்பொருளும் யாவையுநீ யேயென்கை
ஐய அடியேங்கள் அறிந்தனமால் அன்னதனுல்
வெய்ய பவமகன்று வீடுமினிக் கூடுதுமால்.

ஆதலினுல் எச்செயலேயும் செய்கின்ற அவனும், காண்கின்ற கண்முதல் ஐந்து புலன்களும் செய்வித்துநிற்கும் மூல முதல்வனும், இவையனைத்தாலும் அடையவரும் பேருகும் அடைதற்கரிய அரும்பொருளும் நீதான் என்பதை என் ஐயா உனது அடியோங்கள் அறிந்துகொண்டோம். அன்னதொரு எல்லாம் உனது செயல் என்னும் தெளிவால் கொடிய பாவத்தையும் நாம் அகன்று, வீட்டின்பம் ஆகும் ஜீவன் முத்தி நிலேயையும் அடைகின்றேம்

நூற்றெட்டு யுக காலம் கொடிய அசுரர் வருத்திட மிகவும் வருந்திய நாயிற் கடையாம் நாயோமை நயந்து தேவரீர் ஆறுமுகத்துடன் தோன்றி ஆட்கொண்டமையால், இம்மாயப்பிறவியும் நின் செயல் இதன்பேறும் நீ தான் என எண்ணியிருப்பதல்லால் வேறென்று ஆராய நாம் மாட்டோம், யாவும் நீயே எனத் துணிந்து தெளிவுற்றமையரல் நாம் இனி ஜீவன்முத்தராகவும் ஆகிறேம். 7

ஈண்டே எமருக் கிடர்செய் அவுணரெலாம்
மாண்டே விளியும் வகைபுரிந்து காத்தனையால்
வேண்டேம் இனி யாதும் மேலாய நின்கழற்கே
பூண்டேந் தொழும்பு புகழேம் பிறர்தமையே.

இவ்விடம் எமது மக்களுக்கு இடர்செய்த அசுரரெல்லாம் மாண்டே போகும் படியான வகையைத் தேவரீர் புரிந்து எம்மைக் காத்தருளினீர். ஆதலின் தேவரீரிடத்து இனி யாதேனும் வேண்டோம். தேறித்தெளிந்தமையால் மேலாய நின் திருவடிகட்கேதொண்டு பூண்டோம். இனித் தேவரீர் ஒருவருக்கே அன்றிப் பிறர் தமை எக்காலமும் புகழமாட்டோம். 8

என்னு இயம்பி எவருமினி தேத்துதலுங்
கொன்னுர் அயில்வேற் குமர னதுகேளா
அந்நா ரணன்விரிஞ்சன் ஆதியாம் வானோர்க்குத்
தன்னு ரருளின் தலைமை புரிந்தனனே.

என்று இவ்வாறு கூறியருளி எல்லாத்தேவரும் இனிதுடன் எம் ஆறுமுகப் பெருமானைப் போற்றி செய்தலும், பெருமையாகும் பேரருள் கொண்ட கூரிய மூவேலேந்திய குமரப்பெருமான் அது கேட்டருளி, அங்கு துதித்து நின்ற நாராயணக் கடவுள் பிரமன் முதலாய அனைவர்க்கும் தனது தலையாய பேரருளினைப் புரிந்தார். 9

தேவர்கள் போற்று படலம் முற்றும்

ஆகத் திருவிருத்தம் 2913

## இரணியன் புலம்புறு படலம்

அதுநிகழ்ந் துழியகன்பதி அவுணர் கள்ஒரு சில்லோர்
கதுமெனச் சென்று காவலன் கந்தவேள் உய்த்திட்ட
நுதிகொள் வேலினுன் மாய்ந்தனன் என்பதை நுவலுற்றார்
பதுமை அம்மொழி கேட்டனன் துணைவியர் பலரோடும்.

அது நிகழ்ந்தபோது அகன்ற அந்த வீரமகேந்திரபுர நகரத்து அசுரர்கள் சிலர் விரைவாக ஓடிச்சென்று; அந்தப்புரத்திருந்த பதுமகோமளை என்பாளை அணுகி அவளை நோக்கி அம்மையே! உனது நாயகன் சூரபன்மன்கந்தக்கடவுள் செலுத்திய கூரிய நுனிகொண்ட வேலினால் இறந்துபோயினன் என்பதைச் சொல்லலுற்றார்கள்; அந்த வார்த்தையைப் பதுமகோமளை என்பாள் தனது துணைவியர் பலருடன் கேட்டாள். 1

காவல் மன்னவன் இறந்தனன் எனுமுரை கன்னத்துள்
மேவு மெல்லை யில்அசனி ஏறுண்ட வெம்பணியேபோல்
தேவி யாகிய பதுமகோ மளையெனுந் திருமங்கை
ஆவி நீங்கினள் தலையளி ஆகிய ததுவன்றே.

தனது காவலனாகும் அரசன் சூரபன்மன் இறந்தான் என்னும் வார்த்தை காதூடாகச் சென்றிடும் நேரத்து இடியேறு வீழ்ந்த ஓர் கொடிய பாம்புபோல் பட்டத்துத் தேவியாகிய பதுமகோமளை என்னும் மகா இலக்குமிக்கு சமமாகும் பெண் தனது உயிர் நீங்கினாள். அந்த ஒரு செயல் தலையளியாயது அல்லவோ! 2

தலையளி — முத்திநிலை

எவ்வெ வர்க்குமே லாகிய அவுணர்கோற் கில்லாகி
அவ்வி டத்துறை துணைவியர் வயிறலைத் தழுங்குற்று
வெவ்வ ழற்பெருங் குண்டமொன் ருக்கியே விளிவுற்ற
தெய்வ தப்புனை வன்மகள் யாக்கைமுன் செலஉய்த்தார்.

எவ்வெவர்க்கும் மேலான அசுரர் தலைவன் சூரபன்மனுக்கு மனைவியாகி அவ்விடத்து வாழ்கின்ற மற்றைய மனைவியர் அவ்வார்த்தை கேட்டவுடன் வயிற்றில் அடித்துப் பிசைந்து ஓவென்றழுது புலம்புற்று கொடிய நெருப்பு சுவாலித்து எரியும் ஓர் குண்டத்தினை ஆக்கி அந்நெருப்பில் தேவதச்சனுடைய மகள் பதும 3
கோமளையின் உடலை முன்னுகச் சேரும்படி இட்டார்கள்.

மீன்கி ளர்ந்தன அரிமதர் மழைக்கண்மெல் லியரெல்லாம்
வான்கி ளர்ந்தெழு கின்றதோர் மாபெருங் கனலூடே
கான்கி ளர்ந்திட மலர்தருந் தாமரைக் கானத்திற்
தேன்கி ளர்ந்துதம் மினத்தொடும் புகுந்தெனச் செல்லுற்ருர்.

மான்கள் வெருட்சியுடன் எழுங்கால் கொண்ட பார்வைபோலும் புரள்கின்ற வரி விழிகளையுடைய அழகிய கருங்கண்ணுடைய மெல்லிய இயல்புடைய அசுரப் பெண்கள் யாவரும் வானில் சிறந்து எழுந்து கொள்ளுவதோர் பெரும் நெருப்பிடத்துக் காடுபோல் பரந்துள்ள தாமரைப்பூ மலர்ந்திடும் ஓர் தடாகத்தூடு தேன் உண்ணும் கரிய வண்டுகள் தம் இனத்துடன் புகுந்தது போன்று அந்தச் சிவந்து எரியும் நெருப்பினிலே கரிய உடலுடன் அப்பெண்கள் வீழ்ந்தார்கள்.

செல்லல் போதுமென் றெழிந்திட அரற்றினேர் செந்தீயில்
செல்லல் போதுநாள் மாலையும் அங்கியிற் சேர்ந்தோங்கும்
அல்லல் போதுமுன் நின்றிடு நிசியெலாம் அகன்றென்ன
அல்லல் போதுமா நகர்த்திரு ஏகினள் அதுகாலை.

தமது துயரம் போதும் என்று நீங்கிட அழுது புலம்புற்ற அசுரப் பெண்கள் செந்தியாகும் நெருப்பில் செல்லும்போது அற்றை நாளின் மாலைப்பொழுதும்; நெருப்பின் வண்ணமாக ஓங்கிடும் வலிமைகொண்ட சூரியதேவன் முன்பு இருள் நீங்கிப் போவதை போன்று வளம் கொண்ட பெரும் வீரமகேந்திரபுரத்தின் செல்வம் 5
தரும் இலக்குமியும் அவ்வேளை அகன்ருள்.

எமது துயரம் போதும் போதும் என்று அது ஒழிந்திட அழுத அந்த அசுரப் பெண்கள் அந்தச் செந்நிறமான நெருப்பில் சென்றிடும்போது அன்றைய நாளின் 4
மாலைக்காலமும் நகரத்திருளும் நீங்கியது.

இந்த வாறிவர் அங்கியுள் மாண்டனர் இதுநிற்கத்
தந்தை பட்டதுஞ் சேவலும் மஞ்ஞையுந் தானுகிக்
கந்த வேள்புடை வந்ததுங் கண்டனன் கலங்குற்றுப்
புந்தி நொந்துநின் றிரணியன் வானிடைப் புறம்புற்ருன்.

இந்த வாறிவர் நெருப்பில் போய் மாண்டனர்; இது நிற்க தந்தை இறந்ததும் சேவலும் மயிலுமாக முருகப்பெருமான் பக்கராக வந்ததும் கண்டான்; கலக்கம் கொண்டான்; மனம் நொந்தான்; இவ்வாறு நின்று இரணியன் வானிடத்துப் புலம்பதி 6
தொடங்கினன்.

வேறு

நன்றென் பதைஉணராய் நானுரைத்த வாசகங்கள்
ஒன்றுஞ் சிறிதும் உறுதியெனக் கொண்டிலையே
பொன்றும் படிக்கோ பொருதாய் புரவலனே
என்றுன்னை முன்போல் இருந்திடநான் காண்பதுவே.

என் தந்தையே! நன்று என்பதை உணராய்; நான் உரைத்த வாசகங்கள் ஒன்றையேனும் சிறிதளவிலேனும் உறுதி எனக் கொண்டாயில்லையே. நீ இறந்திடும்படிக்கோ 7
போரிட்டாய் அரசே! என்று உன்னை முன்போல் இருந்திட நான் காண்பதுவே?

அன்புடையன் கொல்லென் றயலா ரெடுத்துரைப்பத்
துன்புடையேன் போலத் துயரா அயர்கின்றேன்
என்புடையே முன்னர் எனதுயிர்கொண் டேகினனல்
நின்புடையே நின்று நெடும்பழியின் நீங்காதேன்.

உன்மீது நான் அன்புடையன் என்று எனது அயலவர் எடுத்துச் சொல்லிட, துன்புடையேன் போல துயர் கொண்டு நான் அயர்ச்சியுற்று அழுகின்றேன். ஆனல் அப்படி இப்போது செய்திடும் நான் முன்னே என் பக்கராக இந்த உயிரை அன்று போரினில் போக்கிடாதபடி வைத்துக்கொண்டு அவ்விடம் விட்டு ஏகினேன். நினது பக்கராக நின்று கொடிய போரினைப் புரிந்து பெரும் பழியில் நின்றும் நான் நீங்கிட மாட்டாது போயினேன். 8

மாற்ருர் வலிகண்டு மற்றுன்னை வன்செருவில்
போற்ரு தொளித்த பொறியிலியேன் தன்முன்னந்
தோற்ருமல் எங்கொளித்தாய் சொல்லாய் சுதன்போலக்
கூற்ருன வனைஇன்னுங் கூடமனங் கொள்ளுதியோ.

என் பகைவரது வலியைக் கண்டு மற்று உன்னை கொடிய போரினில் உடன் நின்று பாதுகாவாது ஒளித்திட்ட நல்லறிவு இலாத என் முன்பாக என் ஐயா தோற்ருமல் நீ எங்கு ஒளித்திட்டாய். நீ சொல்லாய் உன் மகனுன என்னைப்போல உனக்கு இயமனுனவனை இன்னமும் கூட நீ மனம் கொள்கின்ருயோ. 9

கையார் அழலேந்துங் கண்ணுதலோன் தந்தவரம்
மெய்யாம் ஒருகாலும் வீடாய்அஃ தெல்லாம்
பொய்யாகும் வண்ணம் புதல்வனென வந்துதித்தோன்
ஐயா உனக்கோர் அருங்கூற்றம் ஆயினனே.

திருக்கையில் ஆர்ந்திடும் நெருப்பை ஏந்திடுகின்ற நெற்றிக்கண்ணுடைய பெருமான் சிவபிரான் தந்த வரம் அழிவிலாதது; அது மெய்யாகும்; ஒரு காலும் அழிவிலாதது அதுவெல்லாம் பொய்யாகும் வண்ணம் அவருக்குப் புதல்வன் என வந்து அவதாரம் செய்த ஆறுமுகப்பெருமான் ஐயா! உனக்கு ஒரு அரியஇயமன் ஆயினனே! 10

நில்லா உடலை நிலையா மெனக்கருதிப்
பல்லா ருங்கண்டு பழிக்கும் படியுனக்குஞ்
சொல்லா தகன்றேன்நீ துஞ்சியபின் வந்தனனல்
நல்லார் களில்தேரின் நானே தலைஅன்ருே.

நில்லாத இந்த உடலை நிலையாகும் என நான் எண்ணி, பல்லாரும் கண்டு பழிக்கும்படி உனக்கும் சொல்லாது நான் அகன்றேன். நீ இறந்தபின்பு இங்கு வந்தனன். இதனை உற்றுத் தெளிந்தால் நல்லவர்கள் என்றவர்களிலே நானே தலையாவேன்! ஏனெனில் புத்தி சாதுரியமாக இக் கருமத்தை நான் நன்ருக நடத்தி உள்ளேன் போலும். 11

அத்திர நேர்கூறும் அவுணர் தமக்குள்மிகக்
குத்திர னேயாகுங் கொடியேன்நீ துஞ்சியபின்
மித்திரனே போன்றிரங்கி மீண்டேன் உனக்கென்னைப்
புத்திரனே யென்கை புவிக்கும் பொறையன்ருே.

கூரம்புபோல கொடுமை மிக்க அசுரர்களில் மிகவும் கோளமையுடையேனுகும் கொடியேன், நீ இறந்த பின்பும் உனது அன்புடையேன் போன்று அழுது இரக்கமுற்று மீண்டு இங்கு வந்துள்ளேன். ஓடிப்போனேன் திரும்பி வராது ஓடிப்போகவில்லை. ஆதலால் உனக்கு என்னைப் புத்திரன் என்று கூறுதலும், இப்பூமிக்கும் ஓர் பாரமாகுமல்லவோ? 12

ஆழியான் வேதன் அமரர்க் கிறைமுதலோர்
வாழியா யென்று வழுத்தியிட வைகியநீ
பூழியார் மேனிப் புராரிசிறு வன்தேரில்
கோழியாய் நின்று விலாவொடியக் கூவுதியோ.

சக்கரப் படையுடைய அண்ணல் நாராயணன், தேவர்கட்கு அரசன் இந்திரன் முதலாய கடவுளர் யாவரும் நீ வாழ்வாயாக என்று நித்தமும் வழுத்திப் போற்றிட இருந்த நீ; புழுதியாக நீறணிந்த மேனியுடைய முப்புரமெரி செய்த சிவபெருமானின் திருக்குமரனுடைய தேரினில் கோழிக் கொடியாய் நின்று உனது விலா ஒடியும்படி சிறகடித்துக் கூவிகின்ருயோ. 13

ஓகையால் அண்டத் துயிர்களெலாம் வந்திறைஞ்சச்
சேகையாய் மல்குந் திருத்தாள்கொண் டுற்றிடுநீ
வாகையார் கின்ற வடிவேற் கரத்தோனைத்
தோகையாய் நின்று சுமக்குதியோ தோன்ருலோ.

மிகு மகிழ்வால் வந்து அண்டங்களில் உள்ள உயிர்கள் அனைத்தும் வணங்கிட, அதனுல் சிறப்புற்ற திருவடிகளை கொண்டு வீற்றிருந்த நீ, இப்பொழுது வெற்றி மாலை சிறந்து விளங்கிடும் வடிவேலைக் கையில் கொண்டோனை தோகை மயிலாக நின்று சுமக்கின்ருயோ? எனது பெரும் தலைவன் நீயன்ருே! 14

மேற்ருன் விளையும் இஃதென்றே வினயமுடன்
ஆற்ருன் மொழிந்தேன் அதுசிறிதுங் கேட்டிலையே
மாற்ருன் எனவந்த மைந்தனுடன் போர்செய்தே
தோற்ருயே அற்ருல் மயிலாய்ச் சுமக்குதியோ.

மேலாக இந்தச் செயல் விளைந்திடும் என்றே மிக்க அக்கறையுடன் ஆதரவாக எடுத்து விளம்பினேன். அதனை நீ சிறிதேனும் கேட்டிலையே. உனக்கு மாற்ருன் என்ன வந்த அக்குமரனுடன் போரிட்டுத் தோற்ருய் அதுபரவாயில்லை. ஆனுல் அப்படி அன்று வீரம்பேசி, அவர் கடவுளல்ல குழந்தை எனச் சொல்லியநீ தோற்றும் மயிலாகவும் இப்பொழுது சுமக்கின்ருயே. 15

மாறுற்றி டாத்தொல் வடிவந்தனை இழந்து
வேறுற்ற புள்வடிவாய் மேவினுய் ஆங்கதனுல்
ஈறுற் றனைஅன்றே என்செய்கை செய்வதற்கும்
பேறுற் றிலன்வாளா பேணினேன் இவ்வுயிரே.

மாறுபாடடையாத உனது தொன்மையான வடிவத்தை இழந்து, வேருன பறவை வடிவாம் மயிலாகி தேவாதி தேவனுன ஆறுமுகப்பெருமானைச் சுமந்து நிற்பாய். ஆதலினுல் நீ இறந்தாய் அன்று; ஆதலால் நான் உனக்கு ஈமக்கடன் செய்திடற்கும் பேறில்லாமல் போயிற்றேனே: இதனுல் வீணே எனது உயிரை அன்று போரில் போக்கிடாது பேணினேன். 16

பிள்ளைப் பிறைபுனைந்த பிஞ்ஞுகன்றன் காதலனைப்
புள்ளிக் கலாபப் பொறிமயிலாய்ப் போற்றுமெல்லை
எள்ளற் பொருட்டா லியான்முன்னு ரைத்தவற்றை
உள்ளத் திடைஎந்தாய் உன்னுதியோ உன்ஞயோ.

குழைந்தையான பிறையணிந்த பெருமானின் பெரும் காதலனுன ஆறுமுக ஈசனை நீ அங்கு, புள்ளியுடைய தோகை மயிலாய்ச் சுமந்திடும் எல்லையில் இதற்கு முன்பு ஐயா! நான் சொல்வதை நீ இகழாதே என்று உன்னை இரக்கமுடன் அன்று வேண்டிக்கொண்டே சொன்ன உறுதிமொழிகளை உன் உள்ளத்திடை எந்தை பிரபுவே! நீ நினைக்கின்ருயோ அல்லது நினையாயோ? 17

பொங்குற்ற சீற்றம் பொரும்போர் இகலுள்ளந்
தங்குற்ற மானஞ் சயமகந்தை வன்மையெலாம்
அங்குற்ற நின்னை அடைந்ததிலை அவ்வனைத்தும்
எங்குற்ற தையா இயம்பாய் எனக்கதுவே.

யாரேனும் ஏதும் தவறுற்றபோது உன்பால் பொங்கிடும் கோபம்; பெரிய போர் புரிதற்கேற்ற ஆண்மையுடைய உள்ளம் எதனிலும் மேற்கொண்டதாக. உன்பால் தங்கிய மானம், வீரம், வெற்றியுடைய அகந்தை, உன் வன்மை யாவும் மயிலாகவும், சேவலாகவும் நின்றிடும் நிலையில் அங்கு காணப்படவில்லையே. என் ஐயா இவை அத்தனையும் எங்குற்றதையா. எனக்கு அதனைச் சொல்லிடுவாய். 18

என்று கனகன் இரங்கி நெடுஞ்சேணில்
நின்று தளர்ந்து நெடிதுயிர்த்துப் பூதரெனைத்
தின்று சினந்தீர்வர் தெரியினெனச் சிந்தைசெய்து
துன்றுதிரை வேலையிடைத் தொன்மைபோற் புக்கனனே.

என்று இரணியாசுரன் வானில் நின்று புலம்பி அழுது தளர்வுற்று நெடிதே பெருமூச்சுவிடுத்து ஐய்யய்யோ பூதங்கள் நான் இங்கு நிற்பதைக் காணில் என்னை பிடித்துத் தின்று தமது கோபத்தினைத் தீர்த்திடுவர் என்று மனதில் நினைந்து, உடனுக அவ்விடம்விட்டு ஒளித்து ஓடிச்சென்று பெருகிடும் திரையுடைய சமுத்திரத்தின்பால் பழமைபோல் புகுந்துகொண்டான். 19

புக்க கனகன் புலர்ந்து புகரோன்பால்
அக்கணமே எய்தி அழிவுற்ற தந்தையர்க்குந்
தக்க துணைவர்க்குந் தாயர்க்கும் ஏனையர்க்கும்
மிக்க கடன்கள் விதிமுறையே செய்தனனே.

கடலில் புகுந்த இரணியாசுரன் குருவாகும் சுக்கிரன்பால் அக்கணமே சென்று, அங்கு இறந்துபோன தமது தந்தைமார்க்கும், தகுதியுடைய தன் சகோதரர்க்கும், தாய்மார்க்கும் ஏனையவர்க்கும் செய்யவேண்டிய சிறப்புமிகுந்த கடன்களை விதிமுறை யேசெய்து முடித்தான். 20

தாக்கிச் சமர்மலைந்த தானவர்க்குச் செய்பரிசே
தூக்கிப் புரிந்து துயரினுக்கோர் வித்தென்றே
ஆக்கத் தினைவெறுத்தே ஆதிப் பிரானையுள்ளே
நோக்கிக் கதியடைவான் நோற்றெருசார் உற்றனனே.

பகைவரைத் தாக்கிப் போர்புரிந்த அசுரர்க்கு நேர்ந்துள்ள நிலைமையையே சீர்தூக்கி உணர்ந்து, இந்த வாழ்வானது துயரத்திற்கு ஓர் வித்தாகும் என்று தனது செல்வமுடைய வாழ்வை இனி வேண்டாமென்று வெறுத்து, ஆதியான பெருமானை உள்ளத்துள்ளே நோக்கியறிந்து நற்கதியடையும்படியாகத் தவம்செய்த வாறு அங்கு ஒருபால் இருந்தான் இரணியாசுரன். 21

இரணியன் புலம்புறு படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் 2934

# மீட்சிப் படலம்

மற்றது காலத்து மணிதூங் கியபசும்பொற்
பொற்றை புரையும் பொறிமஞ்ஞை மீதுவைகும்
வெற்றி நெடுவேற்கை விமலன் விறலோனைப்
பற்றி னெடுநோக்கி இனைய பகர்கின்றான்.

மற்ற அக்காலத்தில் மணிகள் தூங்கிடும் பசிய பொன்னுலான மலையை ஒத்த பொறிகள் நிலவிய மயில்மீது இருக்கின்ற வெற்றி தரும் நெடுவேலை கைக்கொண்ட பெருமான் ஆறுமுகன் வீரவாகுதேவரை பற்றோடும் பார்த்தருளி இனைய வார்த்தைகளைச் சொல்கின்றார். 1

கேட்டி இதுவீர கெடலுற்ற வெஞ்சூரன்
ஈட்டு திருவென்ன இருஞ்சிறையின் முன்வைப்ப
வாட்டமுறு சயந்தன் வானோர் தமையெல்லாம்
மீட்டு வருதி எனவே விளம்பினனால்.

வீரவாகுவே இதனைக்கேள். கெட்டழிந்த கொடிய சூரபன்மன் சம்பாதித்துக் கொண்ட செல்வம் இதுதான் எனும்படி கொடிய சிறையில் முன் அடைத்து வைப்ப அதனினால் வாட்டம் கொண்டிருக்கும் சயந்தன் முதலாகும் தேவர்கள் யாவரையும் மீட்டுக்கொண்டு இங்கு வருவாயாக என விளம்பியருளினர். 2

குன்றம் எறிந்த குமரன் இது கூறுதலும்
நன்றி தெனவே தொழுது நனிமகிழ்ந்து
வென்றி விடலை விடைபெற்றுப் போர்க்களத்தின்
நின்றும் அவுணன் நெடுநகரத் தேகினனால்.

கிரவுஞ்சமலையைப் பிளந்த குமரப்பெருமான் இதனைக் கூறிடுதலும் அதுகேட்டு; ஐயனே! நன்று இது என்று கை கூப்பித் தொழுது மிக மகிழ்ந்து வெற்றியுடைய இளமை கொண்ட தோளுடைய வீரவாகுதேவர் எம்பிரானிடம் விடைபெற்றுக் கொண்டு போர்க்களத்தின் நின்றும் சூரபன்மனுடைய நெடிய வீரமகேந்திரபுர நகரிடத்துச் சென்றார். 3

மீது படுதிண்டோள் விடலை அறந்தி றம்புங்
கோது படுதீயோர் குழீஇயநக ருட்புக்குத்
தாது படுதண்டார்ச் சயந்தன் அமரருடன்
தீது படுவெய்ய சிறைக்களத்துச் சென்றனனே.

மேம்பாடு கொண்ட திண்மையான தோளுடைய வீரவாகு தேவர் தரும நெறியை விடுத்தலால் குறைகள் சேரப்பெற்ற பாவிகளாகும் தீய அசுரர் கூடி வாழ்ந்த நகரில் சென்று அங்கு தேன் சொரியும் மாலையணிந்த சயந்தன் தேவருடன் தீதாகிய துயரடையும் கொடிய சிறைச்சாலையிடத்துச் சென்றான். 4

செல்லும் விறலோன் திறத்தை நனிநோக்கி
அல்லல் அகலும் அரிசுதனும் வானோர்கள்
எல்லவரும் அற்புதநீர் எய்திப் பதம்பூட்டும்
வல்லி பரிய மலர்க்கை குவித்தனரே.

அங்கு சென்றிடும் வீரவாகுதேவரின் செயலை மிகவும் அவதானித்து அல்லல் அகன்றிடும் இந்திரகுமாரன் சயந்தனும் தேவர்களும் எல்லவரும் அற்புத நிலைமை கொண்டு தங்கள் பாதத்தில் பூட்டிய விலங்குகள் நெரிந்திட மலர்போலும் தமது கைகளை உச்சியில் குவித்து வணங்கினர்கள். 5

செங்கை குவித்தே திறலோய் சிறைப்பட்ட
நங்கள் துயர் அகற்ற நண்ணினையோ நீயென்றே
அங்கவர்கள் எல்லோரும் ஆர்த்தெழுந்து கூறுதலும்
எங்கள் பெருமான இளவல் இதுபுகன்றான்.

தமது செங்கைகளை உச்சியில் சூடி திறல்வாய்ந்த ஐயனே! சிறைப்பட்ட எங்கள் துயரம் நீக்கிட எழுந்தருளி நீ வந்தனையோ என்று அங்கு அவர்கள் எல்லோரும் ஆர்ப்புடன் உற்சாகம்கொண்டெழுந்து கூறுதலும், எங்கள் ஆறுமுகப் பெருமானின் இளையவர் வீரவாகுதேவர் இதனைச் சொல்கின்றார். 6

வம்மின்கள் வம்மின்கள் வானத்தீர் எல்லீரும்
நும்மை அயர்வித்த நொறில் பரித்தேர் வெஞ்சூரை
அம்ம அவுணர் அனிகத் துடன்எங்கோன்
இம்மெனவே வேலால் இதுபோழ் தெறிந்தனனே.

வான உலகில் வாழ்ந்திட்ட தேவர்களே நீவிர் எல்லாரும் வாருங்கள் வாருங்கள்; நும்மை இதுகாறும் அயர்வுற்றுத் துன்புற வைத்த வீரம்கொண்ட இந்திரமா ஞாலத்தேருடைய கொடிய சூரபன்மனை அம்மம்ம இவ்வளவு எனச் சொல்லிட முடியாத அசுரச் சேனையுடன் எங்கள் பெருமான் இம்மெனும் வேளைப்பொழுதில் வேலால் சங்கரித்தார். 7

என்றுங் கிசைப்ப இமையோர் அதுகேளாப்
பொன்றுது முத்தி புகுந்தோர் எனமகிழ்ந்து
வன்றாள் மிசைப்பணிந்த வல்லிகளின் மூட்டறுத்துச்
சென்றார் அவுணன் திருநகரம் நீங்கினரே.

என்றங்கு வீரவாகு தேவர் கூறிட தேவர்கள் அதுகேட்டு தவறிலாது முத்தியிற் புகுந்தோர்போன்று மிகவும் மகிழ்ந்து தங்களினது வலிமையுடைய காலில் பூட்டிய விலங்குகளின் மூட்டுக்களை அறுத்துச் சென்றார்; சூரபன்மனுடைய வீர மகேந்திரபுரமான திருவுடைய நகரினைவிட்டு நீங்கினார்கள். 8

## வேறு

நுணங்கு நூலுடை இளையவன் முன்செல நொய்தென்ன
அணங்கி னோருடன் சயந்தனுந் தேவரும் அவண் நீங்கிக்
குணங்கர் ஈண்டிய களத்திடை நணுகியே குமரன்தாள்
வணங்கி மும்முறை புகழ்ந்தனர் திகழ்ந்தனர் மகிழ்வுற்றார்.

துவள்கின்ற பூநூல் அணிந்த வீரவாகு தேவர் இவ்வாறு அழைத்தருளி முன் செல்ல மிகுவிரைவாக அங்குள்ள ஏனைய தேவப்பெண்களுடன் சயந்தனும் தேவரும் அவ்விடம் நீங்கிப் பேய்கள் அடைந்து கூத்தாடும் போர்க்களத்தைச் சேர்ந்து என்றும் இளமையுடன் வீற்றிருந்தருளிய குமரமூர்த்தியின் திருவடிகளை தரிசித்து மும்முறை வணங்கிப் புகழ்ந்து அற்புதமாய்த் திகழ்ந்து ஆனந்தமுற்றார். 9

குன்றெ றிந்தவன் அமரர்பாற் பேரருள் கொடுநோக்கி
நன்றி யில்லவன் சிறையிடைப் பலபகல் நணுகுற்றீர்
துன்று பேரிடர் மூழ்கினீர் ஈங்கினித் துயரின்றி
என்றும் வாழ்குதிர் துறக்கமேல் வெறுக்கையில் இருந்தென்றான்.

கிரவுஞ்சமலையைப் பிளந்திட்ட குமரமூர்த்தி தேவர்கள்பால் பேரருள் கொண்டு நோக்கியருளி நீவிர் நன்றியிலாத சூரபன்மனது சிறையிடைப் பல நாள் பெருகிடும் துயரத்தில் மூழ்கினீர்; இங்கு இனி சுத்தலைகய துயரம் ஏதுமின்றி தேவ உலகில் பெரும் செல்வத்தில் இனிதுடன் என்றும் வாழ்ந்திடுவீராக எனக் கூறியருளினர். 10

கந்தன் இம்மொழி வழங்கலுங் கடவுளர் களிப்பெய்தி
உய்ந்த னம்மெனப் பின்னரும் வணங்கினர் உதுகாணு
முந்து தொல்லிடர் நீங்கியே புந்தியில் முதமெய்தி
இந்தி ரன்திருப் பெற்றிடு ஞான்றினும் இனிதுற்றான்.

ஆறுமுகப்பெருமான் இவ்வார்த்தையைக் கூறியருளலும் தேவர்கள் மிகவும் களிப்படைந்து நாம் எல்லாரும் உய்ந்தோம். எம் அரசே, ஆறுமுகனே எனக் கூறிப் பின்னரும் தொழுதனர். அதனைக் கண்டு முன்னுள்ள தனது தொன்மையான இடர்களை நீங்கி மனதில் அமுதமான மகிழ்ச்சியை அடைந்து இந்திரதேவன் தான் அன்று இந்திரப்பெருவாழ்வு பெற்றிடும் அந்நாளிலும் பார்க்க இன்று பெரிதும் சிறந்த உவகைகொண்டான். 11

கண்ட னன்தொழு மைந்தனைப் புல்லினன் களிப்புள்ளங்
கொண்ட னன்புறம் நீவினன் பல்லுகங் கொடியோன்செய்
ஒண்ட ளைப்புகுந் தெய்த்தனை போலும்என் றுரைசெய்யா
அண்டர் யாரையும் முறைமுறை தழீஇயினன் அமரேசன்.

தன்னை முன்வந்து தொழுகின்ற மகன் சயந்தனை இந்திரன் கண்டான்; தழுவினான்; ஆனந்த மயமாகும் உள்ளங் கொண்டான்; முதுகைத் தடவினான். மகனை நோக்கி பல யுககாலம் வரையும் கொடிய சூரபன் னின் சிறையிற் புகுந்து காலில் கொடும் விலங்கு பூட்டப்பெற்றிருந்து வாடினாயோ? என்று உரைத்தான். அதன்பின் தேவர்கள் யாவரையும் முறைமுறையாக அன்பாய்த் தழுவி நன்மொழி புகன்றான். 12

செற்ற மேதகு மவுணர் தங்காவலன் செருவத்தில்
அற்றை காறுமா விளிந்திடு பூதர்தம் அனிகங்கள்
முற்று மாயிடை வரும்வகை முருகவேள் முன்னுற்றான்
மற்ற வெல்லையில் துஞ்சிய கணமெலாம் வந்துற்ற.

அதுவேளை கோபம் மிகுந்துள்ள அசுரர்கள் நாயகனான சூரபன்மனுடன் புரிந்த போரினில் அன்றைய நாள்வரையும் இறந்துபோன பூதங்களான சேனைகள் முழுவதும் உய்ந்து உயிர்பெற்று அவ்விடம் வருமாறு தமது திருவுளத்துள் ஆறுமுகப் பெருமான் நினைந்தருளினார். அவ்வெல்லையில் இறந்திட்ட பூதங்கள் யாவும் உடனாக உயிர்பெற்றெழுந்து எம்பெருமான்பால் வந்துற்றன. 13

முஞ்சு தானைக ளார்ப்பொடு குழீஇக்குழீஇ முருகேசன்
செஞ்ச ரண்முனம் பணிந்துதம் மினத்தொடுஞ் செறிகின்ற
எஞ்ச லில்லதோ ரெல்லைநீர்ப் புணரியுள் எண்ணில்லா
மஞ்சு கான்றிடு நீத்தம்வந் தீண்டிய மரபென்ன.

அவ்வாறாக ஆறுமுகத்து ஐயன் அருளால் உயிர்பெற்று உய்ந்திடும் பூத சேனைகள் எழுந்து ஆர்ப்பரவுடன் கூடிக்கூடி இளநலம் குன்றாத ஆறுமுகப் பெருமானின் அருள் நலமுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிகளைப் பணிந்து எழுந்து தம் இனங்களுடன் செல்கின்றன. எதுபோலும் எனில் எல்லையில்லாததொரு நீர்ப் பிரவாகமுடைய சமுத்திரத்தை எண்ணில்லாத மேகங்கள் உண்டு பின்னர் மழையாகிப் பொழிந்திடும் அந்நீர் உண்ட கடலிடத்து அடைந்திடுதல் போன்று. 14

கருணை யங்கட லாகியோன் கனைகடற் கிறையாகும்
வருணன் மாமுக நோக்கியே வெய்யசூர் வைகுற்ற
முரணு றுந்திறல் மகேந்திர நகரினை முடிவெல்லைத்
தரணி யாமென உண்குதி ஒல்லையில் தடிந்தென்றான்.

அந்நேரத்துக் கருணைக் கடலாகிய ஆறுமுகப்பெருமான் இரைகின்ற சமுத்திர அரசனாகும் வருண தேவனின் சீருடைய முகத்தை நோக்கியருளிக் கொடிய சூரபன்மன் வீற்றிருந்தருளுகின்ற முரண்கொண்ட திறல்வாய்ந்த வீரமகேந்திரபுர நகரத்தினை உலகம் முடிகின்ற எல்லையில் இப்பூமி கடலால் கொள்ளப்படுமாறுபோல் அதிவிரைவில் அந்நகரை அழித்து உண்டிடுவாய் என்றார். 15

என்ற மாத்திரைச் சலபதி விழுமிதென் றிசைவுற்றுத்
துன்று பல்லுயிர் தம்மொடு மகேந்திரத் தொல்லூரை
அன்று வன்மைசேர் புணரியுள் அழுத்தினன் அவனிக்கீழ்
நின்று மாயவன் அடுவுல குண்டிடு நெறியேபோல்.

என்ற நேரத்தில் வருணதேவன் ஐயனே இது நன்று என்று இசைவுகொண்டு அதன் மீதுள்ள பல உயிருடன் வீரமகேந்திரபுரம் என்னும் மிகு பழமை வாய்ந்த ஊரை அன்று வலிமைகொண்ட கடலில் அமிழ்ந்திடுமாறு அமுக்கினுன். இது எப்படி இருப்பதெனில் இப்பூமியின்கீழ் நின்று நாராயணக் கடவுள் இவ் வுலகை அமுக்கி உண்டிடுகின்ற நெறியேபோல். 16

ஆன காலேயில் அறுமுகன் முகுந்தனும் மலரோனும்
வானு ளோர்களும் இறைவனும் வழுத்தினர் மருங்காக
ஏனை வீரர்கள் யாவரும் புடைவர இகற்பூதத்
தானை ஆர்த்துடன் சென்றிடச் செருநிலந் தணப்புற்ருன்.

அவ்வாருன காலேயில் ஆறுமுகப் பெருமான் நாராயணக் கடவுளும், தாமரை மலரில் இருக்கும் பிரமதேவனும் தேவர்கள் யாவரும் தேவ அரசனுகும் இந்திரனும் வணங்கிய வண்ணம் மருங்காக வந்திடவும், ஏனைய வீரர்கள் யாவரும் புடை சூழ்து வந்திடவும், இகலுடைய பூதங்களாய சேனை ஆர்ப்பரவுடன் உடன் எழுந்து சென்றிடவும், போர்நிலத்தை விடுத்து நீங்கிச் சென்றருளினுர். 17

கலங்கல் கொண்டிடு மகேந்திர வரைப்பினைக் கடந்தேபின்
இலங்கை மாநகர் ஒருவியே அளக்கரை இகந்தேகி
நலங்கொள் சீருடைச் செந்தியில் தொல்லேமா நகரெய்தி
அலங்கல் அஞ்சுடர் மஞ்ஞைநின் றிழிந்தனன் அயில்வேலோன்.

கடலினுள் அமிழ்ந்திக் கலங்கிக்கொண்டிருக்கும் வீரமகேந்திரபுர நகரினைக் கடந்து, பின்னர் இலங்கை என்னும் பெரிய நகரினை விடுத்து நீங்கிச் சமுத்திரத் தைக் கடந்து சென்று, நலம்கொண்ட சீருடைய திருச்செந்தூர் என்னும் தொல்லே வாய்ந்த நகரையடைந்து, பிரகாசமுடைய அழகிய மயில்மீதினின்றும் இறங்கியரு ளினுர் கூரிய வேலினையுடைய கடவுள் ஆறுமுகப் பெருமான். 18

கேக யத்தின்நின் றிழிந்துதொல் சினகரங் கிடைத்திட்டுப்
பாக சாதன ஞதியாம் அமரர்கள் பணிந்தேத்த
வாகை சேர்அரித் தவிசின்மேல் வதனமு விரண்டுள்ள
ஏக நாயகன் உலகருள் கருணையோ டினிதுற்ருன்.

மயில்வாகனத்தில் நின்றும் இறங்கியருளி மூலஇடமான கோயிலே அடைந்து அங்கு இந்திரனுதியான தேவர்கள் பணிந்து உடன் வணங்கிட, வெற்றி கொண்ட சிம்மாசனத்தின்மீது ஆறுமுகமுடைய ஏகமாய் அநேகமாய் எங்கும் நிறைந்திடுகின்ற நாயகன் உலகினை அருள்புரியும் கருணையுடன் அங்கு இருந் தருளினுர். 19

வேறு

ஈண்டிது நிகழ்ந்த எல்லே இப்பகல் அவுண ராகி
மாண்டவர் நமர்கள் அன்றே மற்றவர் படிவ முற்றுந்
தீண்டினங் கதிர்க்கை யாலுந் தீர்விதற் கிதுவென் பான்போல்
பூண்டகு தடந்தேர் வெய்யோன் புனற்பெருங் கடலுட் புக்கான்.

இவ்விடத்து இது நிகழ்ச்சிகள் நிறைவுற்றகாலேயில் இன்று பகற்பொழுதில் இறந்தார்கள் எமது ஆட்கள் அல்ல. ஆதலால் அவர்கள் உடலம் முழுவதையும் எனது கிரணங்களாகும் கைகளால் தீண்டினேன். இந்தத் தோஷத்திற்கு இதுதான் தீர்வு என்பதுபோல் நல்ல அழகுடைய மணித்தேர்கொண்ட சூரியபகவான் நீர் பெருகிடும்பெரும் கடலுள் புகுந்து அத்தமனமானுன்.

வேலேயின் நடுவு புக்கு மேவரும் வடவைச் செந்தீக்
காலமை திறுதி யாகக் கடிதெழீஇக் ககன நக்கிப்
பாலுற விரிந்தி யாண்டும் படர்ந்துகொண் டென்ன வந்தி
மாலேயம் பொழுதில் செக்கர் வான்முழு தீண்டிற் றன்றே.

கடலின் நடுவில் புகுந்து மேலோங்கிய வடவாமுகாக்கினியானது உலக முடிவிலே மிக விரைவில் எழுந்து வானினைத் தொட்டு பக்கராக விரிந்து எங்கும் பரந்துகொண்டது போன்று அந்திக்காலத்து மாலைப்பொழுதினில் செக்கர் ஒளி வானம் முழுவதும் விரிந்து பரந்துள்ளது. 22

## வேறு

அன்னதொரு போழ்துதனில் ஆறிரு தடந்தோள்
முன்னவனை நான்முகவ னேமுதல தேவர்
சென்னிகொடு தாழ்ந்துசிறி யேங்கள்இவ் ணுன்றன்
பொன்னடி அருச்சனை புரிந்திடுதும் என்றார்.

அன்னதான ஒரு அந்திப்பொழுதினில் பன்னிரண்டு திருத்தோளுடைய எப்பொருட்கும் முன்னவராய ஆறுமுகப் பெருமானை; நான்கு முகமுடைய பிரமதேவர் முதலாய கடவுளர்கள் தமது தலையால் தாழ்ந்து வணங்கி எம்பிரபுவே! சிறியேங்கள் இவ்விடத்து தேவரீரின் பொன்னார்ந்த திருவடிகளை அருச்சனை புரிந்திடப் போகின்றோம் என்றார்கள். 22

என்றுரைசெய் காலைஎமை யாளுடைய வண்ணல்
நன்றென இசைந்திட நறைக்கொள்புனல் சாந்தத்
துன்றுமலர் தீபம்அவி தூப முதலெல்லாம்
அன்றொரு கணத்தின்முன் அழைத்தனர் கள்அங்஧ன்.

என்று தேவர்கள் உரைசெய்த காலையில் எமை முற்றிலும் ஆண்டுகொண்ட அண்ணல் ஆறுமுகப்பெருமான் நன்று என்று இசைவுகொண்டிட, அதுவேளை அவர்கள் வாசமுடைய திருமஞ்சன நீர் சந்தனம் சிறந்திடும் பூக்கள் தீபம் நைவேத்தியம் தூபம் முதலாகப் பெரும் பூசனைக்கேற்ற திரவியம் எல்லாவற்றையும் அன்று அவர்கள் ஒரு கணத்தின்முன் அழைப்பித்தனர். 23

எந்தையுமை தேர்ந்திட இயம்பிய குமார
தந்திர நெறிப்படி தவாதறு முகற்கு
முந்திய குடங்கள்முதல் மூவகை யிடத்தும்
புந்திமகிழ் பூசனை புரிந்தனர் பரிந்தே.

எந்தை பெருமான் சிவமூர்த்தி உமையம்மையார் அன்று ஒருகால் அறிந்திடும்படி உபதேசித்திட்ட குமாரதந்திரம் எனப்படுகின்ற ஆகம விதிப்படி தவறுதல் ஏதும் இலாது ஆறுமுகப்பெருமானுக்கு தம் முன்னிறுத்திய கும்பம் அக்கினி உருவம் என்னும் மூவகையிடத்திலும் மனமகிழ்வாய் நிறையும் பூசனையைப் பரிவுடன் புரிந்தார்கள்.

குமார தந்திரம் என ஓர் ஆகமம் எல்லாம்வல்ல ஈசனுன சிவனால் உமையம்மையாருக்கு உபதேசிக்கப்பட்டது. இது ஆறுமுகமுடைய பெருமானை வழிபாடு செய்யும் முறைகளை விளக்கமாகவும் விரிவாகவும் எடுத்து ஓதுவது. இதன்படி உண்மை நெறிநின்று இந்த விதி வழுவாமல் பூசிப்பார், ஆறுமுகப் பெருமான் அருளினைப் பெற்றிடுவார்.

கும்பம் அக்கினி உருவம் என மூன்றுவகையான வடிவத்தாலும் பெருமானைப் பூசிக்கும் செயலை கோவிலில் செய்யப்பெறுவதை காணலாம். ஈசன் அருபியாயவன். அப்பெருமானை மந்திரமுறையாகத் இம்மூவகையிடத்தும் தாபித்து சிறந்த பூசனையைச் செய்வார்கள். 24

எஞ்சலில் அருச்சனை இயற்றி இணையில்லோன்
செஞ்சரணி னைத்தமது சென்னிகொடு தாழா
அஞ்சலிசெய் தேத்திடலும் ஆங்கவரை நோக்கி
நெஞ்சுறு மகிழ்ச்சியொடு நீடருள் புரிந்தான்.

எக்காலமும் குறைவிலாத அருச்சனையை இயற்றி இணையிலாத ஆறுமுகப்பெருமானின் செவ்விய திருப்பாதத்தைத் தமது தலைமீது சூடித் தாழ்ந்து வணங்கி அஞ்சலிசெய்து நிற்றலும் அங்கு அவரை எம்பெருமான் நோக்கி நெஞ்சகத்தில் உற்றிடும் மகிழ்ச்சியுடன் எக்காலமும் பெருகிடும் பேரருளினைப் புரிந்தார். 25

நீண்டவருள் செய்திடு நெடுந்தகை நுமக்கு
வேண்டுகுறை யுண்டெனின் விளம்புதிர்கள் என்னக்
காண்டகைய சூர்முதல் களைந்தெமை அளித்தாய்
ஈண்டுனருள் பெற்றன மியாதுகுறை மாதோ.

நெடிதான காலமெல்லாம் சிறந்திடும் அருளினை எம் ஆறுமுகப்பெருமான் தேவர்கள்பால் புரிந்து பின்னர் உமக்கு இன்னமும் நிரம்பவேண்டிய குறைகள் உண்டெனில் அவற்றைக் கூறுவீராக என்றிடலும் அதுபோது அவர்கள் எம்பெருமானே! நாமே நேரில் காணும்படி கொடிய சூரபன்மனைக் கொன்று காத்தருளினீர். இதனால் உமது அருளைப் பெற்றோம். எங்கட்கு இனி யாது குறையோ! 26

ஒன்றினி அளிப்பதுள துன்னடியம் யாக்கை
நின்றிடு பகற்றுணையும் நின்னிரு கழற்கண்
மன்றதலை யன்புற வரந்தருதி எந்தாய்
என்றிடலும் நன்றென இரங்கியருள் செய்தான்.

அப்படி இருப்பவும் எமக்கு தந்திடுவதற்கு இனி ஒன்று உளது. அது யாது எனில் எமது உடலம் இவ்வுலகில் நின்றிடும் நாள்வரையும் தேவரீருடைய இரு திருப்பாதத்திடை மேலான தலையாய அன்பு நாம் வைத்திட அருள்தருவாய் என்றிடலும், எம்பிரான் அதுகேட்டருளி நன்று என்று அத்தேவர்பால் இரங்கி அவ்வணமே ஆகுமாறு அருள் புரிந்தார். 27

2. இப்பாடற்கருத்தை கீழேதரப்படும் கந்தரலங்காரப் பாடலுடன் ஒப்ப நோக்குக:

சேந்தனைக் கந்தனை செங்கோட்டு வெற்பனை செஞ்சுடர்வேல்
வேந்தனை முத்தமிழ்நூல் விரித்தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனை
சாந்துணைப் போதும் மறவாதவற்கு ஒருதாழ்வில்லையே.

## வேறு

மலரய னுதியாம் வரம்பி லோரெலாம்
பலர்புகழ் குமரனைப் பரவி வைகினர்
உலகினில் யாரையும் ஒறுத்த தானவர்
குலமென மாய்ந்தது கொடிய கங்குலே.

தாமரை மலர்மீதிருந்திடும் பிரமதேவன் ஆதியான வரம்பு கடந்தோரெல்லாம், பலரும் புகழ்கின்ற எங்கள் குருபரனை ஆறுமுகப்பெருமானை அவ்விரவு வணங்கி சிறந்து மகிழ்வுற்றிருந்தார்கள். அதுவேளை உலகினில் யாரையும் ஒறுத்து துயருறுத்திய அசுரர் குலம் முற்றாக அழிந்தது போன்று அன்று கொடிய இருள்தரும் இராக்காலமும் மாய்ந்தது. 28

கங்குலுந் தாரகா கணமும் மாய்ந்திடப்
பொங்கொளி வீசியே பொருவில் ஆதவன்
இங்குள வுலகெலாம் ஈறு செய்திடுஞ்
சங்கர னுமெனத் தமியன் தோன்றினன்.

இரவும் வான நட்சத்திரங்களும் அழிந்திட அந்நேரம் பொங்கிடும் ஒளியினை வீசியவாறு நிகரற்ற சூரியபகவான் இங்குள்ள உலகெல்லாவற்றையும் முடிவு செய்திடும் மகா உருத்திரமூர்த்தியைப் போன்று தனியே கிழக்குத் திசையில் உதயமாயினன். 29

குணதிசை அமர்புரி கொடியர் உய்த்திடுங்
கணையென விரிகதிர் காட்டி அங்கவை
அணைதலுங் குருதிநீர் அடைந்த தன்மைபோல்
இணையறு செக்கர்பெற் றிரவி தோன்றினன்.

கீழ்த்திசையில் போர்புரிகின்ற கொடியராம் அசுரர் செலுத்திடுகின்ற அம்பென எங்கும் விரிகின்ற கிரணங்களைக்காட்டி அங்கு அந்த அம்புகள் படுதலால் தோன்றிடும் இரத்தநீர் பெருக்கெடுத்திடும் தன்மைபோன்று இணையற்ற செவ்வொளியினைப் பரப்பியவாறு சூரியபகவான் தோன்றினன். 30

அப்பொழு தவ்விடை அமரர் கம்மியன்
கைப்படு செய்கையாற் கந்த வேள்ஒரு
செப்பரு நிகேதனஞ் செய்வித் தீசனை
வைப்புறு தாணுவில் வருவித் தானரோ.

அப்பொழுது அவ்விடத்து தேவர் தச்சனுடைய கைப்பட்ட சிறந்த செய்கையால் ஆறுமுகப்பெருமான் ஒரு செப்பமுடியாத சிறப்புடைய ஆலயத்தை அமைத்து அதில் ஈசனைச் சோதியாகும் சிவனை அங்கு தாம் தாபித்த சிவலிங்கத்தில் வருவித்தருளினர். 31

ஆமயம் முதலிய ஐந்து கந்திகள்
மாமலர் மஞ்சனம் அமிர்தம் வான்துகில்
தூமணி விளக்கொடு தூபங் கண்ணடி
சாமரை ஆதிகள் அமரர் தந்திட.

பசுவின் சாணம், மூத்திரம், பால், தயிர் நெய் ஆகிய ஐந்து பொருள்களையும், பெரும் சிறப்புடைய பூக்களையும், திருமஞ்சன நீரையும் தேவ அமிர்தத்தையும், அழகிய இயல்புடைய பட்டாடையையும், தூய மணியையும், விளக்கையும், தூபத்தையும், கண்ணுடியையும், வெண்சாமரையையும், ஆதியான பலபொருள்களையும் தேவர்கள் எடுத்துவந்து எம்பிரானிடம் கொடுத்திட. 32

முழு தொருங் குணர்ந்திடு முருகன் யாவருந்
தொழுதகும் இறைவனூல் தொடர்பு நாடியே
விழுமிய கண்ணுதல் விமலன் தாள்மலர்
வழிபடல் புரிந்தனன் மனங்கொள் காதலால்

எல்லாவற்றையும் ஒருங்கே உணர்ந்திடுகின்ற அறிவினுன் அறிவாகும் ஆறுமுகப் பெருமான் யாவரும் தொழத்தகுகின்ற ஈசன் அருளிய வேத ஆகம நூல்களின் தொடர்புகளை நாடி உணர்ந்து மிகவும் மேன்மையாகும் நெற்றிக் கண்ணுடைய நின்மலமாய சிவம் என்னும் சோதியின் திருவடி மலர்களை வழிபாடு புரிந்தார் அப்பனிடத்து மனங்கொண்ட காதலால். 33

அசுராதிகளை சங்காரம் செய்தருளியமைக்காக தூயவராம் சிவபெருமானது திருவடிகளை வேதவிதிப்படி அர்ச்சனை புரிந்தார் ஆறுமுகக் கடவுள். அசுரர் கிளையை வேருடன் வீட்டி கொடுமையை நீக்கி மறைவுற்ற வேதநெறியை மீண்டும் உலகிற்கு தந்தருளும் பொருட்டு ஈசனே தாமே அர்ச்சனைபுரிந்தார்.

மீட்சிப் படலம் முற்றிற்று

**ஆகத்திருவிருத்தம் 2967**

யுத்தகாண்டம் முற்றுப்பெற்றது.

**கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் திருவடிகள் வாழ்க !**
**குருபரன் திருவடிகள் வாழ்ந்திடுக !**

**(ஆநந்த வருஷம் தைமாசம் 18-ம் திகதி வெள்ளிக்கிழமை)**

ல

கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## கந்தபுராணம்

ஐந்தாவது

# தேவகாண்டம்

## திருப்பரங்குன்று சேர் படலம்

இன்ன பண்பினுற் சிவனடி வழிபடல் இயற்றி
அந்தி லேக்கள நீங்கியே அமரர்கண் முனிவர்
தன்ன தானேயந் தலேவர்கள் புடைதழீஇச் சாரப்
பொன்னின் மஞ்ஞையின் எருத்தமேல் கொண்டனன் புனிதன்.

இன்னதான பண்பினுல் எம்பெருமான் முருகன் சிவபெருமான் திருவடி வழிபாட்டினேப் புரிந்து அருள்சிறந்து அந்நிலேயாகும் இடத்தை விடுத்து எழுந்தருளித் தேவர்களும் முனிவர்களும் தனது துணேவரான படைத்தலேவர்களும் பக்கராக வணங்கி வழுத்தியவாறு வந்தருள பொன்மயமான மயில்வாகனத்தின் முதுகின் மேல் ஏறியருளிக் கொண்டார். 1

சீர்தங் கியம யூரமேல் அமர்தருஞ் செவ்வேள்
சார்த லுற்றிடு மாலயன் மகபதி தம்மை
நேர்த லில்படை வீரரை நோக்கியே நீவிர்
ஊர்தி மேலராய் வம்மின் நம்புடையென உரைத்தான்.

சீர் விளங்கிய மயில்மீது எழுந்தருளி வீற்றிருந்திடும் முழுவதும் அழகான மேனி தங்கிய ஆறுமுகப்பெருமான் தம்மை அண்டிவந்திடுகின்ற திருமால் பிரமன் இந்திரன் ஆதியானவரையும், தமக்கு நிகர் பிறரிலாத படைவீரர்களேயும் நோக்கி நீவிர்களும் உங்களது வாகனங்கள் மேலாக எழுந்து எமது பக்கராக வருவீராக என உரைத்தருளினுர். 2

### வேறு

மற்றது காலேயில் வண்டு ழாய்முடிக்
கொற்றவன் முதலிய குழுக்கொ டேவரும்
வெற்றிகொள் வீரரும் வேறு தத்தமக்
குற்றிடும் ஊர்திமேல் ஒருங்குற் றீண்டினுர்.

சுவாமி சொல்லிய அக்காலேயில் வண்மையாகும் துளசிமாலே வேய்ந்த முடியுடைய திருமால் முதலாக அங்கு கூட்டாக நின்ற தேவர்கள் யாவரும் வெற்றி கொண்டு புகழ்பெற்ற வீரவாகுவேர் முதல்வீரரும் வேறுவேறுகத் தத்தமக்குற்ற வாகனங்கள் மேலாக எழுந்து எம்பெருமானே ஒருங்குடன் சேர வந்தனர். 3

ஞாயிறு கறங்கென நணுகும் பொன்முடிக்
கோயிலின் மருங்கினில் குழீஇக் குழீஇயிரண்
டாயிர வெள்ளமாம் அடல்வெம் பூதரும்
ஏயென எழுந்தனர் எழுந்த பூழியே.

சூரியபகவான் கோபுரம்மேல் பம்பரம்போல் விளங்கிடும் பொன் முடிகளே உடைய திருச்செந்தூர்க் கோவிலின் கூடிக்கூடி அமர்ந்திருந்த இரண்டாயிரமென் னும் போர்வல்ல கொடிய பூதங்களும் ஏயென்று எழுந்துகொண்டனர். அவரும் எழ புழுதியும் எழுந்தது. 4

மிக்குயர் அறிஞரை மேவில் கீழ்மைசெய்
மக்களு மேல்நெறி அடைதல் வாய்மையே
தக்கதொல் பூதர்கள் சரணந் தோய்தலில்
புக்கது பொன்நகர் புவியும் பூழியாய்.

மிக உயர்ந்த அறிவாளியை அடைந்துகொண்டால் கீழ்மையான செயலைப் புரிகின்ற மக்களும் மேலான நல்ல நெறியை அடைதல் திண்ணமாகும். ஏனெனில் தக்க அருள் சிறந்த தொன்மையான பூதங்களின் கால்கள் படலால் இப்பூவுலகமும் பொன்னகரான தேவ உலகில் புழுதியாகப் போய்ச் சேர்ந்தது. 5

அழற்றிய பல்கதிர் ஆத பத்திரம்
நிழற்றிய விண்ணளாய் நிமிர்ந்த கேதனங்
குழற்றிய துளைவயிர் கோடு காகளம்
மிழற்றிய பேரிகை மிகவும் ஆர்த்தவே.

சுடுகின்ற வெய்யில் கிரணங்களை மறைத்திட எடுத்த வெண்ணிறமான ஓர் வகைக் குடைகள் எங்கும் நிழல்செய்தன. வானில் நிமிர்ந்து கொடிகள் நின்றன. குழல்வடிவான வாத்தியங்கள் பலவும் கொம்பும் காகளமும் இசைத்து ஓசை கொண்டன. பேரிகை எனும் பறைகள் ஆர்த்தன. 6

மேக்குயர் வட்டமும் விளங்கு காம்புமாய்
நீக்கமில் கவிகைகள் நிழற்றி மல்குவ
மாற்கிளர் பஃறொடை வானக் கம்பலந்
தூக்கிய திறனென தோன்று கின்றவே.

மேற்றிகழ உயர்ந்த சந்திர வட்டமும் பிரகாசமுடைய பிடிகளுமாய் நீங்குதலின்றி விளங்கிய குடைகள் எங்கும் நிழல் செய்துவருவன எதுபோல் இருப்பதெனில் திருவிளங்கிய பலமாலைத் தொடுப்புக்களையுடைய வானக் கம்பங்களை தூக்கி இருப்பது போன்றது. 7

மேற்றலை கடவிய வெய்யன் வெம்மையால்
நோற்றலை எய்திவான் உணங்க நோன்றிரை
ஆற்றலை முயன்றென அனிக வேலையுட்
கோற்றலை அசைவவெண் கொடியின் கானமே.

வான்மீது தலைமையாய்ச் சென்றிடும் சூரியதேவன் வெப்பத்தால் தலையாய தவத்தைப் புரிந்திட்டு எழுந்து வானின் உலகங்கள் வாட்டமுற வலியாய கடல் திரைகள் ஆற்றல்கொண்டு மேலெழுதல் போன்று பூதசேனையான கடலிடத்துக் கோல்களின் தலையில் பூட்டிய வெண்கொடிகள் அசைந்திடுவன, 8

பாங்கமை பதலையே முதல பல்லியம்
ஆங்கொலி வழங்குவ அவுணத் தீயரைத்
தாங்கினை யென்றிறை தண்டஞ் செய்திட
வாங்கிய திரைக்கடல் வாய்விட் டொக்குமால்.

பாங்காக நல் அமைவுகொண்ட பறைகள் முதலாய பலவகை வாத்தியங்கள் அவ்விடத்து ஒலிகளைப் பரப்புவன எதுபோலெனில் கடலே! தீய அசுரரைத்தாங்கி வைத்திருந்தாய் என்ற அக்குற்றத்திற்காக எம்பெருமான் கடலைத் தண்டித்திட அத் தண்டனையைச் சகித்திட முடியாது கடல்வாய்விட்டு குளறியதுபோன்றது. 9

காந்தளஞ் சென்னியன் கடவு மாமயில்
கூந்தொறுங் கூந்தொறுங் குலைந்து பஃறலைப்
பாந்தளங் கசைதலும் பசலை மூக்கினால்
ஆய்ந்திடு கின்றன அகிலங் குத்தியே.

செங்காந்தள் மலரை முடிமீது அணிந்த கடவுள் ஆறுமுகப்பெருமான் செலுத்திய பெரும் மயில்வாகனமாயது எம்பிரானைச் சுமந்த பெருமையால் கூவும்தோறும் கூவும்தோறும் அதுகேட்டு அஞ்சி பல பாம்புகள் அசைதலும் அதுகால் அப்பாம்புகளை பசலை நிரம்பிய தனது மூக்கினுல் பூமியைக் குத்தி அப்பாம்பு எங்குற்றது என ஆராய்கின்றது. 10

மூக்குடை அலகினுல் முகிலைக் கீறியே
ஊக்கொடு பரலென உருமுப் பற்றுமால்
தீக்கிளர் வன்னதோர் செய்ய சூட்டுடைக்
கூக்குரல் வாரணங் கொடிய தாகையால்.

செம்மூக்கிலுள்ள சொண்டினுல் முகில்களையெல்லாம் குத்திக்கிழித்து; மிகு ஊக்கமுடன் தீன்பருக்கைகளைக் கொத்தி எடுப்பதுபோன்று; அம்முகில்களிடத்துள்ள இடிகளைக் கொத்தி எடுக்கின்றது நெருப்புக்கிளர்ந்தெழுதல்போன்று அழகிய கொண்டையை உடைய கொடியாகிக் கூவிடும் சேவலாயது. ஏன் அவ்வணம் அது செய்வதென்றுல் முன்னரும் கொடிய சூராய் இருந்து இப்போதும் கொடியானமையால் போலும். 11

இந்நிகழ் வுற்றிட எழுந்த தானைகள்
முன்னயல் கடைக்குழை மொய்த்துச் சென்றிடப்
பன்னிரு மொய்ப்புடைப் பகவர் மேலவன்
அந்நக ரத்தினும் அகன்று போயினுன்.

இந்த நிகழ்ச்சிகள் அமைந்திட எழுந்த சேனைகள் முன்பும் அயலும் பின்னருமாக மொய்த்து வந்திட பனனிரண்டு தோளுடைய எல்லாக் கடவுளர்க்கும் மேலாய ஆறுமுகப்பெருமான் அந்தத் திருச்செந்தூர் நகரத்தை அகன்று அப்பால் சென்றருளினுர். 12

பொரியரை விளவுகால் புனிற்றுத் தீங்கனி
வருபயன் கொண்டுதாம் வறிது வீழ்த்தெனக்
கரியினம் பாரிடக் கணங்கள் ஆர்ப்பினுல்
வெருவின உணர்வில மயங்கி வீழ்ந்தவே.

பெரிய அடிப்பாகமுடைய விளாமரம் காய்த்திட்ட மிக இனிய புதிய பழங்களை அப்படியே உண்ணும்போது உண்டு வெறுமனே அவ்விளாங்கனிகளை வீழ்த்திட அதனைக் கண்டார் விளாங்கனி என எடுத்து ஏமாறச் செய்திடும் யானைகள் தாம் உண்டு வீழ்த்துகின்ற விளாங்கனிபோல அங்குள்ள பூதங்களின் ஆர்ப்பினுல் அஞ்சினவாய் உணர்விலாது மயங்கி மயங்கி வீழ்வன. 13

சாற்றிடில் தம்வினை தம்மைச் சூழுமால்
ஆற்றலில் பெற்றம தலைக்கும் வல்லியம்
மாற்றருந் துப்புடை வயவர் தானையுள்
ஏற்றுரி முரசினுக் கிடைந்த ழிந்தவே.

சொல்லப்போனுல் தான் செய்தவினை தன்னை வந்து சூழ்ந்து அலைய வைக்கும்; எப்படியெனில் தனது ஆற்றலால் பல எருதுகளை எல்லாம் கொன்று அலைத்து உண்கின்ற புலிகள், இப்பொழுது மாற்றமுடியாத வலிமையுடைய பூதசேனைகளில் அப்பூதர்கள் கொண்ட எருதின் தோலால் செய்திட்ட முரசப்பறையின் முழக்க ஓசைக்குப் பயந்து வருந்தி அதனுல் நோயுற்றழிந்தன. 14

குஞ்சரம் எறிந்திடுங் கொலைவல் கோளரி
எஞ்சலில் கயமுகர் எண்ணில் பூதர்கள்
விஞ்சிய பிளிற்றெலி வினவி மெய்பனித்
தஞ்சின நஞ்செழ அயர்ந்த தேவர்போல்.

யானைகளைக் கொன்றிடும் கொலைத்தொழிலில் மிகு வலிமையுடைய சிங்கங்கள் மாறுபாடில்லா யானைமுகவராய எண்ணற்ற பூதங்கள் மிகு மதர்ப்பினால் போடுகின்ற பிளிற்றின் ஓசைகேட்டு மேனி நடுங்கிப் பயந்து ஓடுகின்றன; எதுபோலெனில் அன்று பாற்கடலில் நஞ்செழுந்திட அதுகண்டு அஞ்சி ஓடிய தேவர்களைப்போன்று. 15

உரங்குறை போழ்தில்யார் ஒடுங்கல் இல்லவர்
வரங்குறை மான்முக வயவர் ஓதையால்
கரங்குறை வின்றிநீள் கடுங்கண் யாளிபோய்க்
குரங்குறை சூழலுட் குலைந்து புக்கவே.

தமது வலிமை குன்றிடும்போது யார்தான் ஒடுங்கமாட்டார். ஏன் என்றால் அசுரரது வரங்களைக் குறைத்திட்ட மான்முகமுடைய பூதவீரர்கள் அங்குபோட்ட சத்தத்தால் தனது கையானது குறைவின்றி நீண்டிருக்கும் கொடிய கண்ணுடைய யாளிகள் போய்க் குரங்குகள் உறைகின்ற காட்டினில் நிலைகுலைந்து நடுக்கமுடன் அடைந்துகொள்வன. 16

வசைபடு பாரிடம் வழுக்க லில்வகை
மிசைபடும் ஊற்றமாய் மேற்கொண் டுற்றன
இசைபடு பாரிடம் இடிக்குங் கொட்பினால்
அசைபடு கின்றன அடுக்க லானவே.

வசைகொண்ட மலைகள் தவறுதல் இல்லாத வகையாக மேலோங்கிய நிலையாய்த் தட்டிக்கேட்பாரின்றி மேற்கொண்டு வளர்ந்து நின்றன யாவும் புகழ்பூண்ட பூதங்கள் முழங்கிடுகின்ற அதிர்ச்சியால்; அசையாது நிமிர்ந்து நின்ற அம்மலை யாவும் அசைபட்டுக் கொள்கின்றன. 17

உரகமுங் மடங்கலும் ஒடுங்கி உட்கியே
வரைகளின் முழைபுக வானத் தார்ப்பன
அரிமுக வீரர்தம் அரவத் தன்மையால்
இரிவன புரள்வன எழிலி யேறெலாம்.

பாம்பும் சிங்கமும் ஒடுங்கி உட்கியே மலைகளின் குகையில் புகுந்திட, வானில் முழங்கிடும் முகில்கள் எல்லாம் இப்பொழுது சிங்கமுகம்கொண்ட பூதவீரர்களுடைய கர்ச்சனை முழக்கத்தின் அதிர்ச்சியால் அஞ்சி ஓடுகின்றன புரள்கின்றன. 18

காட்டக எயினர்தங் கல்லென் சும்மையால்
கூட்டுறை புட்குலங் குலைவுற் றாலெனச்
சூட்டுடை வாரணந் தோகை ஆர்ப்பது
கேட்டுளம் நடுங்கினர் கிலேசங் கொண்டுளார்.

காட்டகத்து இருக்கின்ற வேடர்களது கலீரென்ற ஓசையால் கூட்டில் இருக்கின்ற பறவைக்கூட்டங்கள் நிலைகுலைந்து ஓடினாற்போல, மிகப் பெரியதொரு கொண்டையுடைய சேவலும் மயிலும் கூவி ஆர்ப்பதைக் கேட்டு அந்த வேடர் உளம் நடுங்கினராய் ஐயகோ! இஃது என்னே என்று கிலேசம் கொண்டார்கள். 19

அரங்குறு மதலைமேல் ஆடு நீரரின்
மரங்களை அலைத்திடு கடுவன் மந்திகள்
கரங்குலை வோடுபற் காட்டி வாய்வெரீஇ
இரங்கின சேவலங் கொடியி டிப்பினால்.

நாட்டிய அரங்குகளின் மேடைகள்மேல் நின்று ஆடிடுவோரின் தன்மையை ஒத்து மரங்களில் நின்று கூத்தாடி மரங்களை அலையவைத்த ஆண் குரங்குகள் சேவற்கொடியின்கூவுதல் ஆர்ப்பினால் கைகளை உதறிப்பயந்து பல்லைக்காட்டி வாய்வெரீக் கொண்டு இரக்கமுற்றன; 20

ஆரண முழங்கொலி அமரர் வாழ்த்தொலி
சீரண இயவொலி சேனைப் பேரொலி
காரணம் இல்லவன் கடவு மாமயில்
வாரண வொலிகளான் மறைத லுற்றவே.

வேதங்களின் முழக்க ஓசை தேவர்கள் வாழ்த்தெடுத்திடும் ஓசை சிருடைய வாத்தியங்களின் ஓசை சேனைகளின் பேரோசை ஆன ஓசைகள் யாவும், தனக்கு ஒரு மூலகாரணம் இல்லாத முருகப்பெருமான் செலுத்திடும் பெரிய மயில்வாகனத்தின் கூவுதல் ஓசைகளால் மறைந்திட்டன. 21

இடனுறு குறிஞ்சியில் இனைய தன்மையால்
நடவைகொள் பெரும்படை நடுவண் ஏகியே
சுடர்பொழி வேலினன் தூய கூடலின்
குடதிசை யமர்பரங் குன்றை எய்தினன்.

இடம் அகன்ற குறிஞ்சி நிலத்தில் இனையதொரு தன்மையால் நடந்திடும் பெரும்படையின் நடுவணைச் சென்றருளி சோதி ஒளிபொலிந்திடும் வேற்படை ஏந்திய கடவுள் ஆறுமுகப்பெருமான் தூய்மை வாய்ந்த மதுரை நகரின் மேற்கே விளங்கிடுகின்ற திருப்பரங்குன்றம் என்னும் மலைத்தலத்தை அடைந்தார். 22

ஆவதோர் பொழுதினில் அங்கண் முன்னுறை
மூவிரு தவத்தரும் முளரி யான்முதல்
ஏவரும் எந்தையை இறைஞ்சி இவ்விடை
மேவுதி சிறந்ததிவ் வெற்பென் றேதினர்.

அவ்வாறாகிய பொழுதினில் அங்கு முன்சென்று தங்கிய ஆறு தபோதனராகும் பராசர முனிவரின் மைந்தர்களும், தாமரைமேல் இருந்திடும் பிரமதேவன் முதல் எல்லோரும் எந்தை ஆறுமுகப் பெருமானைத் துதித்து தேவரீர் இவ்விடத்து இருந்திடு வீராக. இம்மலைத் தலமானது சிறந்ததொரு இருப்பிடமாகும் எனச்சொன்னார்கள். 23

என்றலும் முருகவேள் யாமும் இவ்வரைச்
சென்றிட நினைந்தனம் அதனைச் செப்பினீர்
நன்றும தெண்ணமும் நமது சிந்தையும்
ஒன்றிய வேயென உவப்பிற் கூறினன்.

என்று கூறியருளலும் முருகப்பெருமானும் அதுகேட்டருளி நாமும் இவ்விடத்து சென்றிட நினைந்துள்ளோம். அதனையே நீவிரும் கூறினீர். நன்றுடைய உமது எண்ணமும் நமது சிந்தையும் இப்பொழுது ஒன்றுபட்டது என்று மிகு உவப்புடன் கூறியருளினார். 24

மைம்மலை துழனியும் வடிவும் பெற்றுடைக்
கைம்மலை பொழிதரு கடாங்கொள் சாரலின்
அம்மலை யேறினன் அமலை தன்னொரு
செம்மலை யாகிவந் துதித்த சிற்பரன்.

கருமையான மலையின் வடிவமும் பேரோசையும் பெற்றுடைய கரிய நீண்ட துதிக்கையையுடைய மதம்பொழியும் யானைகள் குலவிடும் பெரும் சாரலை உடைய அம்மலைமீது ஏறியருளினான் நின்மல சொரூபியான உமையம்மையாரின் அரிய தொரு குழந்தையாகி வந்து அவதாரம் செய்திட்ட ஞானச்சுடராகும் ஆறுமுகப் பெருமான், 25

வற்றருந் திரைக்கடல் வடாது மாதிரப்
பொற்றையை நுகர்ந்தெனப் பூத சேனைகள்
கொற்றவன் வருபரங் குன்றின் சாரலைச்
சுற்றிய மிசையினுந் துவன்றிப் புக்கவே.

வற்றிடற்கரிய திரைக்கடல் தனது வடக்குத்திசையில் உள்ள பெருமலையைச் சூழ்ந்து உண்ண நிற்பதுபோன்று பூதசேனைகள் யாவும் எங்கள் குமரப்பெருமான் வந்தருளுகின்ற திருப்பரங்குன்றம் என்னும் மலைச்சாரலை சூழ்ந்திட்டன. இன்னும் சில பூதசேனைகள் அம்மலையின்மேலும் நெருக்கமாக எழுந்து சென்றன. 26

காலையங் கதுதனிற் கடவுட் கம்மியன்
மாலுறு கிரிதனில் வரம்பில் வீதியுங்
கோலநற் றெய்வதக் குலமுங் கோயிலுஞ்
சோலையும் வாவியுந் துவன்ற நல்கினன்.

அவ்வாறாகிய காலையில் தேவதச்சனானவன் யாவரும் விரும்பும்படியாக அமைந்த மலைதனில் வரம்பற்ற வீதிகளையும் கோலம் மிகுந்த நல்ல தெய்வீக மாளிகைகளையும், கோயிலும் சோலையும் குளமும் எல்லாம் நெருங்கிச் சூழ்ந் திடும்படி அழகாகப் படைத்து நின்றான். 27

அத்துணை எம்பிரான் அமரர் கம்மியன்
கைத்தொழில் நோக்கியே கருணை செய்துபோய்ச்
சித்திர மறுகிடைச் சேனை வீரரை
வைத்தனன் மந்திர வரைப்பை எய்தினன்.

அத்துணையில் எம்பெருமான் தேவர்கள் தச்சனானவனின் கைத்தொழிலின் சாமர்த்தியத்தை நோக்கியருளி கருணைசெய்து போய் சித்திரப்பாடுடைய வீதி களினூடு சேனை வீரர்கள் யாவரையும் அங்குள்ள இருப்பிடங்களில் தங்க வைத்த பின்பு தனது மந்திரமயமான கோவிலின் எல்லையை அடைந்தான். 28

ஏயின மஞ்ஞைநின் றிழிந்து நான்முகன்
மாயவன் மகபதி வயவர் மற்றையோர்
ஆயினர் புடைவர அவையி னூடுபோய்ச்
சீயமெல் லணைமிசைச் சிறப்பின் வைகினன்.

தாம் எழுந்தருளிச் சென்ற மயில்வாகனத்தில் நின்றும் இறங்கியருளி, நான்கு முகமுடைய பிரமதேவன் இந்திரன் வீரர்கள் மற்றையோராம் எல்லாரும் பக்கரில் வந்திட சபையூடாகச் சென்றருளிச் சிம்மாசனத்தின்மீது சிறப்புடன் வீற்றிருந் தருளினர் ஆறுமுகப்பெருமான். 29

பரீஇயயல் வந்திடு பங்க யன்முதல்
மரீஇயினர் தமையெலாம் வயின்வ யின்றொறும்
ஒரீயினன் அமரரை ஒல்லை யேவினன்
பொரீஇயினர் இல்லதோர் புனித மேலையோன்.

பரிவுடன் அயல்வந்திட்ட பிரமதேவன் முதல் தன்னைச்சார்ந்தார் அவர்களை எல்லாம் அந்தந்த இடம்தோறும் தங்கியிருக்குமாறு விடுத்தருளினர். தேவரையும் விரைவில் செல்லுமாறு விடுத்தார். தனக்கு ஒரு நேரானவர் இல்லாததொரு புனித மான முன்னர்ப் பழம்பொருளான கடவுள் ஆறுமுகப்பெருமான். 30

குலக்கிரி பொருவிய குறளின் வேந்தரும்
வெலற்கருந் திறலுடை வீர மொய்ம்பனும்
இலக்கரும் எண்மரும் யாரும் எந்தைதன்
மலர்க்கழல் தொழுதனர் மருங்கின் ஈண்டினர்.

பெரும் குலமலையை ஒத்த பூதங்களின் சேனாதிபதிகளும் வெல்லற்கரிய திறமை யுடைய வீரவாகு தேவரும், இலக்கம் வீரரும் அவருடனான மற்றைய எட்டுப் பேரும், யாவரும் எந்தை பெருமானது திவ்விய மலர்ப்பாதத்தைத் தொழுது அப்பனின் பக்கராக வந்து சேர்ந்துகொண்டார்கள். 31

ஏவலின் இயன்றனர் இனையர் நின்றிட
மூவிரு பராசர முனிசி ருர்களுஞ்
சேவலை யுயரிய தேவ நாயகன்
பூவடி அருச்சனை புரிந்து போற்றினர்.

எம்பெருமானுடைய ஏவலின் இவர்கள் நின்றிட, பராசர முனிவனுடைய ஆறு மைந்தர்களும் சேவற்கொடியை உயர்த்திக்கொண்ட தேவநாயகரான ஆறுமுகப் பெருமானது பூப்போலும் பாத கமலங்களை அருச்சனை புரிந்து போற்றுதல் புரிந் தார்கள். 32

வழிபடு புதல்வர்கள் வழுத்தி நின்றுழி
உழுவலன் போடுகண் ணோடிச் செஞ்சடைக்
குழவிவெண் பிறையினன் கூறுந் தொல்லருள்
முழுவதும் நினைந்தனன் முற்று ணர்ந்துளான்.

எம்பெருமானை வழிபடுகின்ற பராசரமுனிவனின் புதல்வர்கள் எமது பெருமானை வழிபட்டுநின்ற நேரத்து, எல்லாம் உணர்கின்ற எம்பிரான் மறுத்தற்கரிய மிகச் சிறந்த அன்புடன் கண்ணோட்டம் கொண்டருளி; குழந்தை வடிவான பிறையை அணிந்த சிவபெருமான் அப்பிள்ளைகளுக்கு சரவணப்பொய்கையின்மீது சொல்லிய அருட்பாட்டினை முழுவதும் நினைந்துகொண்டார். 33

சலம்புரி யும்பரா சரனெ னும்முனி
குலம்புரி தவமெனுங் குமரர் தேர்வுறப்
புலம்புரி போதகப் பொருண்மை யாவையும்
நலம்புரி குமரவேள் நவின்று வைகினன்,

சரவணப் பொய்கையிடத்துத் தவம் இயற்றிய பராசரன் என்னும் முனிவனுடைய குலம் செய்த தவம் எனச் சொல்லும்படியான இக்குமரர் ஆறுபேரும் தேர்ந்திடுமபடியாக மிகவும் நுணுக்கம் கொண்ட ஞானப்பொருளின் உண்மைப் பொருள யாவையும், எல்லார்க்கும் நலமே செய்திடும் எம் ஆறுமுகப்பெருமான் உபதேசம் செய்தருளினர். 34

பொருவரு மகேந்திர புரத்தை நீங்கியே
தரணியில் வந்தவா சாற்றி னும்இனிப்
பெருமைகொள் இந்திரன் பெண்ணை எம்பிரான்
திருமணஞ் செய்திடுஞ் செய்கை செப்புவாம்.

நைமிசாரணியத்து முனிவர்களே கேளுங்கள். நிகர்ப்பரிய வீரமகேந்திரபுரம் என்னும் நகரினை எமது ஆறுமுகப்பெருமான் விடுத்து நீங்கி இப்பூமியில் வந்த வரலாற்றை உங்கட்குச் சொல்லினோம். இனி பெருமைகொண்ட இந்திரதேவன் பெற்ற மகன் தெய்வநாயகி அம்மையாரை எமது ஆறுமுகப்பெருமான் திருக்கல்யாணம் செய்தருளிய வரலாற்றை உங்கட்கு எடுத்துச் சொல்வோம். 35

திருப்பரங்குன்றுசேர் படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் 35

# தெய்வயானையம்மை திருமணப் படலம்

காய்ந்திடு தம்பகை கடந்து பொன்னகர்
வேந்தியல் முறையருள் வேற்கை வீரற்குக்
கூந்தலஞ் சிறுபுறக் குஞ்ச ரந்தனை
ஈந்திட மகபதி இதயத் தெண்ணினுன்.

தன்னை அயர்வுற வைத்து வாட்டிய பெரும் பகையான சூரபன்மனைக்கொன்று பொன்னகரின் தேவ அரசாட்சியை மீண்டும் தனக்கு அருள்புரிந்த வேற்படையை திருக்கரத்துடைய வீரராகும் ஆறுமுகப்பெருமானுக்கு நல்ல கூந்தல்கொண்ட புறமுதுகினை உடைய தெய்வநாயகி அம்மையாரைத் திருமணம் செய்துகொடுப்பேனென இந்திரதேவன் தனது இதயத்து எண்ணியருளினுன். 1

விருத்த மதாகும்இல் விழைவை இந்திரன்
திருத்தகு மாலயன் தேவர் தேர்வுற
உரைத்தனன் வினவலும் உவகை பெற்றுநின்
கருத்துநன் றுலெனக் கழறல் மேயினுர்.

மிகவும் அற்புதமுடைய பொருத்தமாகும் இந்த எண்ணத்தை இந்திரதேவன் திருத்தமுடைய திருமால் பிரமன் தேவர்கள் யாவரும் தேர்வுறும் படியாக அவர்கட்கு சொல்லிடலும்; அதை அவர்களும் கேட்டவுடன் பெருமகிழ்ச்சி பெற்று நின்று இந்திரனே நினது கருத்து நன்றாக உள்ளது என்று பின்னரும் சொல்லத் தொடங்குகின்றனர். 2

பன்னிரு மொய்ம்புடைப் பகவன் பாற்படப்
பின்னலஞ் சுரிகுழற் பிடியும் பொய்கைவாய்
முன்னுற அருந்தவம் முயன்று வைத்தனள்
இன்னுழி அதன்பயன் எய்திற் றேகொலாம்.

பன்னிரண்டு தோளுடைய பகவான் ஆறுமுகன் பாற்படும் படியாக பின்னல் கொண்ட அழகிய சுருள் நிறைந்த கூந்தலுடைய தெய்வயானை அம்மையாரும் சரவணப் பொய்கையிடத்து முற்காலத்து அரிய தவம் புரிந்தாள். அந்தத் தவப்பயன் இப்போது வந்து சேர்ந்து கொண்டது போலும். அதனுல் தான் நீயும் இவ்வாறு நன்றுடன் நினைந்தனை. 3

கயலுறழ் விழியுடைக் கடவுள் யானையை
வியல்வரை எறிந்திடு வேற்கை அண்ணலுக்
கியல்புளி வதுவையால் ஈதற் கிவ்விடை
முயலுதி கடிதென மொழிந்து வைகினுர்.

கயல்மீனை ஒத்த கண்களையுடைய தெய்வயானை அம்மையாரைக் கொடுமை நிறைந்த கிரவுஞ்சமலையை சங்காரம் செய்த வேலைக் கையில் கொண்ட எம் அண்ணல் ஆறுமுகனுக்கு வேத விதியின் இயல்பான முறையால் கன்னிகாதானம் செய்து கொடுத்தற்கு இவ்விடத்து நீ மிக விரைவாக வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ளுதி என்றனர். 4

மற்றது போழ்தினின் மகத்தின் செம்மலோர்
ஒற்றனை நோக்கியே ஒல்லை மேருவாம்
பொற்றையின் மனைவியைப் புதல்வி தன்னுடன்
இற்றையில் விளித்தனை ஏகுநீ என்றுன்.

மற்றதான அவ்வேளை, யாகத்தின் தலைமை பெற்ற இந்திரதேவன் தனது ஒரு தேவதூதனை நோக்கி நீ விரைந்து போய் மேருவென்னும் மலையில் இருந்திடும் என் மனைவியை என் மகள் தெய்வயானையம்மையாருடன் இன்று இப் பொழுதே அழைத்து வருவாய் என்றுன். 5

என்றலுந் தூதுவன் இசைந்து மேருவிற்
சென்றனன் புலோமசைத் தெரிவை முன்புபோய்
நின்றனன் வணங்கினன் நினது சிந்தைபோல்
ஒன்றிய கேளென உரைத்தல் மேயினான்.

என்று இப்படி இந்திரதேவன் சொல்லலும் அத் தேவதூதுவன் இசைவு கொண்டு மேருமலையில் சென்று அங்கிருந்த இந்திராணியின் முன்பு போய் நின்றான், வணங்கினான். அம்மையே! உன் மனம்போல நிறைவான மங்கலவார்த்தை ஒன்றுசொல்வேன் கேளென சொல்லத் தொடங்கினான். 6

மாண்டனன் வெய்யசூர் மதலை தன்னொடு
சேண்டொடர் அமரருஞ் சிறையின் நீங்கினர்
ஆண்டலை உயர்த்தவன் அனிகந் தன்னொடு
மீண்டனன் திருப்பரங் குன்ற மேயினான்.

அம்மையே! கொடிய சூரபன்மன் மாண்டான். உனது மைந்தன் சயந்தனோடு வான உலகிலுள்ள தேவர்களும் சிறையினின்றும் நீங்கினர். கோழிக்கொடியை உயர்த்திய ஆறுமுகப்பெருமான் தன்பெரும் சேனையுடன் சூரனுடைய நகரை விடுத்து மீண்டு திருப்பரங்குன்றினை அடைந்தருளினார். 7

நின்றிட அனையது நினது நாயகன்
உன்றனை மகளொடும் ஒல்லை யிற்பரங்
குன்றிடை இருக்கையிற் கொண்டு செல்கென
இன்றெனை விடுத்தனன் ஏகுநீ யென்றான்.

அதுவெல்லாம் நின்றிட நினது நாயகன் இந்திரபகவான் உன்தன்னை உன் மகள் தெய்வயானை அம்மையாரை விரைவாக அழைத்துக்கொண்டு தனது இருப்பிடமாகிய திருப்பரங்குன்றிற்கு வருமாறு இன்று என்னை உன்பால் அனுப்பியுள்ளான். ஆதலின் விரைவில் எழுந்து நீ வருவாயாக என்றான் தேவதூதுவன். 8

அம்மொழி வினவலும் அணங்கின் நல்லவள்
விம்மித முற்றனள் விழுமம் நீங்கினள்
எம்மையும் இல்லதோர் இன்பம் எய்தினள்
கொம்மென எழுந்தனள் குமரி தன்னொடும்.

அவ்வார்த்தையை கேட்டலும் தெய்வப் பெண்கள் யாவரிலும் மிக நல்லவளான இந்திராணி விம்மிதமுற்றாள். துன்பம் நீங்கினள். எக்காலமும் இல்லாதவொரு இன்பம் அடைந்தாள். விரைவாக அன்றும் இன்றும் என்றும் குமரியாகும் தெய்வயானை அம்மையாரொடு புறப்பட்டு எழுந்தாள். 9

புடையுற வணங்கினர் போற்றி மேருவின்
இடையுறு புலோமசை ஏமமாகியே
அடலயி ராவத வானை மேற்கொடு
மடமகள் தன்னொடும் வானத் தேகினள்.

எழுந்த இந்திராணியைப் பக்கராக வணங்கினராய் தேவப்பெண்கள் சூழ்ந்திட; மகாமேரு மலையின் இடையாக இருந்த இந்திராணி சொல்லற்கரிய மகிழ்வாகி; மிகக் கொடுமையான போரினைப் புரியவல்ல ஐராவத யானையின் முதுகின்மேல் ஏறிக்கொண்டு தெய்வயானை அம்மையாருடன் வான்வழியால் வந்தனள். 10

பொருப்பினுள் மேலதாயப் புவியிற் பேர்பெறுந்
திருப்பரங் குன்றிடைச் சென்று தேவர்கோன்
இருப்பதோர் மந்திரத் தெய்தி வைகினள்
மருப்பிரண் டுடையதோர் வார ணத்துடன்,

மலைகள் எல்லாவற்றிலும் மேலதாகியது என்று இப்பூமியில் பேர்பெற்ற திருப்பரங்குன்றிடத்து இந்திராணி சென்று தேவஇந்திரன் இருக்கின்ற கோயிலை அடைந்து அங்கு தங்கினாள்; இரண்டு நீண்ட தனங்கள் என்னும் கொம்புடைய தெய்வயானை அம்மையாருடன். 11

உறையுமவ் வெல்லையின் உயர்ம கேந்திரச்
சிறையினும் அகன்றிடு தெய்வத் தையலார்
இறைவியைப் பெற்றன மியாமுய்ந் தோமெனா
முறைமுறை வணங்கினார் முகிழ்த்த கையினார்.

இந்திராணி அங்கு உறையும் அந்நேரத்தில் உயர்வான மகேந்திர நகரின் சிறையில் நின்றும் நீங்கிய தெய்வப்பெண்கள் யாவரும் அதுகண்டு மீண்டும் எம் தலைவியைப் பெற்றுள்ளோம்; யாங்கள் உயர்ந்துள்ளோம எனக்கூறி முறைமுறை யாக இந்திராணி தேவியைக் கூப்பிய கையுடன் பணிந்தார்கள். 12

சேணுறும் எழிலிவாய் திறந்த மின்னுவைக்
காணுறு கின்றதோர் கலாப மஞ்ஞைபோல்
மாணுறு புலோமசை வரலும் மாதரார்
ஏணுறு கின்றனர் ஏமம் பெற்றுளார்.

வானில் நின்றிடும் மேகத்திடத்துத் தோன்றுகின்ற மின்னலைக் காண்கின்ற தோகையுடைய மயில் மகிழ்ந்து ஆடுவதுபோன்று; மாட்சிமையுடைய இந்திராணி தேவி அவ்விடம் வரலும், அது கண்டு அத்தேவப்பெண்கள் யாவரும் ஆனந்தமுறு கின்றனர். அவர்களை அறியாதொரு இன்பம் பெற்றார்களாகி நிற்கின்றனர். 13

கண்டனள் மதலையைக் கருணை யால்தழீஇக்
கொண்டனள் மகிழ்ந்தனள் கொங்கை பாலுக
விண்டனள் கவற்சியை வெறுமை யுற்றுளோர்
பண்டுள பெருநிதி படைத்த பான்மைபோல்.

இந்திராணி தேவி அவ்விடம் தனது அருமைப் புதல்வன் சயந்தனைக் கண்டாள்; கருணையால் தழுவிக்கொண்டாள். தழுவியபோதே தனது தனங்கள் பால் சொரிந்திட மகிழ்ச்சியுற்றாள். தனது கவலை யாவும் நீங்கினாள். எதுபோலெனில் செல்வம் யாவும் நீங்கி வறுமை நிலையில் நின்றார்கள் தனது முன்னுள்ள பெரும் செல்வங்களைத் திரும்பவும் அடைந்துள்ள சிறந்ததொரு நிலைபோன்று. 14

ஆடுறு பசியினோர் ஆக்கங் கண்டுழி
நீடுறும் உவகையான் நிறைவு பெற்றென
மாடுறு புலோமசை வடிவங் காண்டலுங்
கூடினர் தன்மையுங் குரிசில் எய்தினான்.

பசியால் வாடி இருப்போர்கள் தனக்கு ஏற்றதொரு சிறந்த உணவைக் கண்ட போது நீடுற்றதொரு மகிழ்வால் அதனை உண்டதுபோல் நிறைவு பெற்றதைப் போன்று தனது பக்கராக வந்துற்ற இந்திராணியின் வடிவினைக் காண்டலும், அவளுடன் கூடிய தன்மையைப்போன்றதொரு மலர்ச்சியை இந்திரன் பெற்றான். 15

## வேறு

அப்போது வானோர் குழுவோ டயிராணி கேள்வன்
செப்போது கொங்கை மகடூஉ மணஞ்செப்பல் முன்னி
ஒப்போதும் நீர்மை யிலதாம் ஒருவன் கழற்கே
கைப்போது தூவிப் பணிந்தேத்திக் கழறல் உற்றான்.

அப்போது தேவர் குழுவுடன் இந்திராணிக்கு நாயகனுன இந்திரதேவன் செப்பின் பூண் அணிந்த தனங்களைக் கொண்ட தெய்வயானை அம்மையாரின் திருமணத்தின் திறத்தைச் சென்று விண்ணப்பிப்பதற்காக; ஆர் எனினும் ஒப்பாக இன்னெருவரிலாத ஏகன் ஆறுமுகப்பெருமான் திருவடிகட்கு கைகளில் ஏந்திச்சென்ற பூக்களைச் சொரிந்து பணிந்து துதித்து இவற்றை எமபிராற்குச் சொல்லலுற்றுன். 16

கன்னின்ற மொய்ம்பின் அவுணக்களை கட்டல் செய்தாய்
இந்நின்ற தேவர் சிறைமிட்டனை என்றனக்கு
முன்னின்ற தொல்சீர் புரிந்தாயது முற்றும் நாடிச்
செய்நன்றி யாகச் சிறியேன்செயத் தக்க துண்டோ.

பெருமானே! கல்லைப்போன்ற தோளினைக்கொண்ட அசுரர்களாகிய கொடிய களைகளை எல்லாம் களைந்தீர். அத்துடன் இங்கு நின்ற தேவர்களை எல்லாம் சிறையினின்றும் நீக்கினீர். எனக்கு முன்னுகை நின்றுள்ள தொல்பெரும் சீரினையும் சிறப்பினையும் தந்தருளினீர். இவை எல்லாவற்றையும் நாம் நன்கு நாடி அதற்குச் செய்நன்றியாகச் சிறியேன் செய்திடத்தக்கது உண்டோ? இல்லையே. 17

முந்தேதமி யேன்பெறு மங்கையிம் மொய்வ ரைக்கண்
வந்தே யமர்வாள் அவள்தன்னை வதுவை செய்து
கந்தே புரைநின் பெருந்தோளிற் கலத்தி யாங்கள்
உய்ந்தே பிறவிப் பயன்பெற்றனம் ஓங்க வென்றுன்.

முன்னே தமியேன் பெற்ற மங்கை இத் திருப்பரகுன்றம் என்னும் வலியாய பெருமலைக்கண்வந்து வீற்றிருந்தாள். அந்த அம்மையைத் தேவரீர் திருமணம் செய்து தூண்போன்று நினது தோளுடன் சேரத் தழுவிக் கலந்துகொள்வாய். அச்செயலால் யாங்கள் உய்ந்து பிறவிப்பயன் பெற்று ஓங்கிடும்படியாக என்றுன் இந்திரதேவன். 18

என்னுந் துணையில் அமரேசனை எந்தை நோக்கி
அந்நங்கை தானும் மிகநோற்றனள் ஆதலால்நீ
முன்னும் படியே மணநாளை முடித்தும் என்னத்
தன்னுங் கடந்த மகிழ்வெய்தித் தருக்கி நின்றுன்.

என்கின்ற நேரத்தில் தேவர்களின் கடவுள் இந்திரனை எந்தை பெருமான் கண்ணுற்றருளி இந்திரனே அந்தத் தெய்வ யானையும் மிகவும் தவம் செய்தனள். ஆதலால் நீ எண்ணியபடியே அம்மையை நாளை திருமணம் செய்வோம் என்றலும், அவ்வேளை இந்திரதேவன் தன்னிலும் கடந்ததொரு பெருமகிழ்ச்சியடைந்து பெருமிதத்துடன் நின்றுன்.

ஆறுமுகப்பெருமான் தெய்வயானை அம்மையாரைத் திருமணம் செய்ய ஏற்றதொரு மங்கல வார்த்தையைக் கேட்டவுடன் இந்திரதேவன் தன் உணர்வால் அறியொணுத மகிழ்ச்சி இயல்பில்கொண்டு தன் ஒப்பாரிலாத தலைவன் திருவருளால் தன் ஒப்பாரின்றி நின்றுன் என்க. 19

வடிக்கொண்ட ஒள்வேற் படைநம்பிதன் வார்க ழற்கால்
முடிக்கொண் டடியேஞ் சிறந்தேங்கள் முதல்வ என்னுக்
கடிக்கொண்ட வாய்தற் புடைவந்து கணிப்பில் காதம்
நொடிக்கொண்ட போழ்திற் படர்தூதரை நோக்கி னுனல்.

வடித்தெடுத்துக்கொண்ட கூரிய வேற்படை ஏந்திய ஆறுமுகப் பெருமானின் வார்பூட்டிய பாத கமலங்களை இந்திரன் முடிமீது சூடி வணங்கி எம் முதல்வா! அடியோங்கள் சிறந்தோம் என்று காவல்கொண்ட திருவாய்தலின் பக்கரில் வந்து அங்கு அளவற்ற காததூரங்களை ஓர் நொடிப்பொழுதில் செல்லவல்ல தூதுவரின் முகங்களை நோக்கினுன். 20

முன்னாகியுள்ள பலதூதர் முகத்தை நோக்க
அன்னார் எவரும் தொழுதேபொன் னடிவணங்கி
எந்நாயக னேதமி யேஞ்செய்வ தென்கொ லென்னப்
பொன்னா டுடையான் இஃதொன்று புகல லுற்றான்.

முன்னாகி நின்றுள்ள பல தூதுவர் முகத்தை இந்திரதேவன் நோக்கிட, அப்போது அத்தூதுவர் யாவரும் தொழுது இந்திரதேவனின் பொன்னார்ந்த திருவடிகளை வணங்கிட என் நாயகனே! நாங்கள் செய்திடவேண்டிய பணிவிடை யாதாகுமோ என்றலும், அதுகேட்ட பொன்னாட்டிற்கதிபதி இந்திரதேவன் சொல்கின்றான். 21

மூவர்க்குள் மேலோன் கிரிசேர் முசுகுந் தனாதிக்
காவற் கடவுள் தலைவர்க்கும் ககன மேவும்
தேவர்க்கும் ஏனைத் திசையோர்க்கும் முனிவ ராயோர்
ஏவர்க்கும் எந்தை மணநாளை எனச்சொல் வீரால்.

மூவர்க்குள் முதல்வனாகும் சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கைலாய மலையைச் சேர்ந்த முசுகுந்தன் முதலாய உலகைக் காத்து ஆள்கின்ற காவற்கடவுளர் அனைவர்க்கும், வானபதத்தில் இருந்திடும் தேவர்கட்கும், ஏனைய திக்கிலுள்ள யாவர்க்கும் எம்பெருமானது திருமணம் நாளை என்று நீங்கள் மங்கலசோபனம் சொல்லிடுவீராக. 22

கந்தக் கடவுள் மணத்தன்மை கழறி வல்லே
இந்தப் பொருப்பி னிடையாவரும் ஈண்டும் வண்ணம்
தந்திட்டிடுங்கள் எனவாசவன் சாற்ற லோடும்
அந்தக் கணத்தில் தொழுதொற்றர் அகன்று போனார்.

ஆறுமுகக் கடவுளின் திருமணத்தின் தன்மையை இவர்யாவர்க்கும் சொல்லி அதிவிரைவாக இந்த மலையிடத்து யாவரும் சேரும் படியாக அழைத்துத் தந்திடுங்கள் என்று இந்திரதேவன் சொல்லும் அந்தக் கணத்தில், தூதுவர் இந்திரனை வணங்கி சொல்லிய பணிபுரிய அப்பால் அகன்று சென்றார்கள். 23

### வேறு

போனபொழுது திற்புலவர் செம்மல் புலன்மிக்க
வானவர்கள் கம்மியனை வல்லையில் விளித்துக்
கானமர் கடம்புபுனை காளைதன் மணத்துக்
கானசெயல் முற்றுற அமைத்தியிவண் என்றான்.

தூதுவர்கள் போனபொழுதில் தேவர்கட்கு அரசனான இந்திரன், நுட்ப அறிவு மிகுந்த தேவர்கள் தச்சனை விரைவாக அழைத்து; அவனை நோக்கி கானத்தில் நின்றிடுகின்ற கடம்பமலர் மாலையைச் சூடிய இளமை நிறைந்த ஆறுமுகப்பெருமானது திருமணத்திற்கு வேண்டிய செய்கைகளை முற்றாகச் சிறந்த அமைப்புடன் செய்திடுவாய் என்றான். 24

புலவன துளங்கொடு பொருப்பின் ஒருசாரின்
நிலமிசை வரைப்பகல் நிதிக்கொடு விதித்துக்
குலமணி குயிற்றிநனி கோலம தியற்றி
வலனுயர் சிறப்பினொரு மண்டபம் அமைத்தான்,

இந்திரதேவனது உள்ளப்பிரகாரம் அத் திருப்பரங்குன்றத்தின் ஒருசாரில் உள்ள இடத்தினைத் தேவதச்சன் திருமணமண்டபத்திற்குரிய நிலமாகத் தேர்ந்து அந்த நிலத்தில் மலையிடத்துள்ள இரத்தினங்களால் பதித்து அடிகோலி அதனுடன் நவரத்தினங்களையும் பதித்து நல்ல கோலம் செய்து மிகச் சிறப்பாக உயர்ந்த ஒரு திருக்கல்யாணமண்டபத்தை அமைத்தான். 25

மேலைநில முற்றுற விதானவகை போக்கி
மாலையொடு பல்கவரி வான்றுகில்கள் தூக்கி
ஆலய நனந்தலையில் ஆறுமுகன் வைக
நூலின்முறை நாடியொரு நோன்தவி சமைத்தான்.

மேலாக உள்ள நிலையங்கட்கு முற்றும் மேற்கட்டிகளை விரித்துக் கட்டி, அதன் பின் மலர் மாலைகளுடன் மணிமாலைகளையும் பல கவரிகளையும் மிக உயர்ந்த பட்டாடைகளையும் தூக்கி, இவ்வாறு அமைந்த திருக்கல்யாண மண்டபத்தின் ஆதி மூலத்தில் ஆறுமுகப்பெருமான் வீற்றிருந்திடச் சிறந்ததொரு திருமண இருக்கைப் பீடமான சிம்மாசனத்தை வேத நூலில் விதித்திட்ட முறைகளை நாடி உணர்ந்து அதன்படி அமைத்துவைத்தான். 26

வேதநெறி தந்திடு விசாகன் அயல்வந்த
மாதவன் விரிஞ்சன்முதல் வானவர்கள் யாரும்
ஏதிலரும் வைகஇயல் கின்ற இடைதோறும்
ஆதனம் வரம்பில அமைத்தனன் இமைப்பில்.

அசுரரால் அழிக்கப்பெற்ற வேதநெறியை மீண்டும் விளங்கிடும்படி உலகிற்கு தந்தருளிய ஆறுமுகப்பெருமான் மணவாளக் கோலமொடு எழுந்தருளி வரும்கால், அவர்பால் அயல்வந்திடும் நாராயணக் கடவுள் பிரமதேவன் முதல் தேவர்கள் யாவரும் இன்னும் நன்னெறியுடைய முனிவர்களும் இருந்திடும் படியாக திருக்கல்யாண மண்டபத்து இயல்புடன் விளங்கிடும் இடைதோறும் பலவகையான ஆசனங்களை அமைத்தான் தேவதச்சன். 27

மன்றல்பயில் கின்றவது வைக்களன் மருங்கில்
குன்றுபுரை பல்சிகர கோபுரம் வகுத்தான்
அன்றிமணி மண்டபம் அளப்பில் அமைத்தான்
இன்றியமை யாப்பொதுவும் எண்ணில இழைத்தான்.

சிறப்பும் சீரும் விளங்கிடும் திருமண மண்டபமதனிடத்தில் ஒருபுறமாக மலை போன்று விளங்கிடும் பல முடியுடைய கோபுரங்களை வகுத்தான். அதுவன்றியும் முத்துமண்டபங்கள் பலவற்றையும் செய்து வைத்தான். இவைகள் இலாது சிறப்பு அமையாதே என்றிடும்படியான சோலைகளும் எண்ணற்றன வகுத்தமைத்தான். 28

காலம்வரை யாதுகரு துற்ற பொழுதெல்லாஞ்
சாலவெவர் கண்ணுநனி தம்பயன் வழங்குஞ்
சோலைமலர் வாவிகள் சுனைத்தொகை தொகுத்தான்
ஏலும்வது வைக்குரிய ஏனவும் அளித்தான்,

இக்காலத்தில் மட்டும் என்று ஓர்காலத்தைக் குறிப்பிடாது நினைத்தபொழுதெல்லாம் எக்காலமும் தனது பயனுகும் பழங்களை மலர்களை கொடுக்கும் சோலைகள் பூந்தடாகங்கள் சுனைநீர்க்குன்றுகள் ஆகிய பலவற்றையும் அமைத்தான். இன்னமும் விதிப்பிரகாரம் திருமணத்திற்கு வேண்டிய பொருள் யாவும் உண்டாக்கினுன். 29

அவ்வகை யெலாம்புலவன் அங்ஙனம் வகுப்பச்
செவ்விது தெரிந்துவகை செய்தமரர் செம்மல்
மெய்வதுவை யாற்றும் வழிவேண்டு கரணங்கள்
எவ்வெவையும் அங்கணுேர் இமைப்பில் வருவித்தான்.

அவ்வாருகிய வகையெல்லாம் அறிவிற் சிறந்த தேவதச்சன் திருக்கல்யாண மண்டபத்தை வகுத்திட; அவனுடைய கைத்திறத்தினை தேவேந்திரன் அறிந்து உவகைகொண்டு அழிவிலாத உண்மையாகும் அத்திருமணம் புரியும்பொழுது வேண்டுகின்ற திரவியங்கள் எவ்வெவையையும் அங்கு ஓர் இமைப்பொழுதில் வருவித்தான். 30

தேவர்முதல் வந்தனது செய்கை இதுநிற்க
ஏவலர் இசைத்திடலும் இவ்வதுவை காணக்
கோவியல் புரிந்தமுசு குந்தனெனும் நேமிக்
காவலன் வரும்பரிசு கட்டுரைசெய் கிற்பாம்.

தேவர்கள் முதல்வனது செய்கைகள் இவை இருப்ப, முன்சென்ற தேவதூதுவர் சென்று திருமணச் சோபனம் சொல்லிடலும் இந்தப் பெரும் திருமணத்தினைத் தரிசிக்கும் பொருட்டாக அரசாள்வதற்கு ஏற்ற சிறப்பினைச் செய்து ஆண்ட முகுந்தன் என்னும் பூமிகாவலன் திருப்பரங்குன்றிற்கு வருகின்ற இயல்பை எடுத்துரைத்திடுவாம். 31

கல்லருவி தூங்கு கயிலைப்பொழி லின்மேனுள்
அல்லுறழ் மிடற்றவனும் அம்பிகையு மாக
எல்லையின் மகிழ்ச்சியொ டிருப்பமுசு ஈட்டம்
வில்லுவ மரந்தொறும் வியன்சினையில் உற்ற.

கலீரென ஓசைதரும் அருவியாறுகள் ஓடுகின்ற திருக்கைலாய மலையில் உள்ள தொரு பூஞ்சோலையிடத்து முன்னுளில் நஞ்சைக்கண்டத்துடைய கடவுள் சிவபெருமானும் உமையம்மையுமாக எல்லையற்ற கருணை மகிழ்ச்சியுடன் இருப்ப அங்கு அவ்வேளை குரங்குகளின் கூட்டங்கள் வில்வமரத்தோறும் உள்ள பெரும் கொம்பர்களில் இருந்தன. 32

முற்றுணர் கருத்தின்முனி வோர்கள்என முள்காந்
துற்றிடு முசுக்கலையுள் ஒன்றிருவர் மீது
மற்றொரு வில்வத்திலை வரம்பில பறித்துத்
துற்றிடுவ தென்னநனி தூாத்துளதை யன்றே.

முழுவதையும் உணர்கின்ற கருத்துடைய முனிவர்கள் எனும்படி வில்வ மரங்களில் உள்ள முட்களை ஒடித்திருந்த குரங்குக் கூட்டங்களில் ஒன்று, அம்மையும் அப்பனுமாய இருவர்மீதும் அங்குள்ள ஓர் வில்வமரத்தின் இலைகள் அளவற்றதைப் பிடுங்கி தூவிடுவது போன்று மிகவும் ஒழுங்குடன் சொரிந்து நின்றது. 33

தூர்த்ததொரு காலைதனிற் சுந்தரிபொ ருளாய்ச்
சீர்த்திடலும் ஆங்கவள் செய்கைதனை அண்ணல்
பார்த்துநமை ஈண்டுவழி பட்டுளது தன்னை
வேர்த்திடுவ தென்னிது விடுத்தியினி என்றான்.

வில்வ இலைகளைச் சொரிந்த காலையில் அதுகண்ட அம்பிகை உள்ளம் பொருளாகி அப்படி வில்வமிலையைச் சொரிந்த அக்குரங்கைக் கோபித்திடலும், அங்கு பெருமாட்டியின் செய்கையினை எம்பெருமான் பார்த்து அவளைநோக்கி அம்மையே! இக்குரங்கு வில்வ மிலைசொரிந்து நமை வழிபட்டுளது. அதனை நீகோபிப்பது எக்காரணமாக. இச்செயலை இனி நீ விடுத்திடுவாய் என்றார். 34

என்றிடலும் அம்பிகை இகற்சின மிலாளாய்
நன்றருள் புரிந்திடலும் ஞானவடி வானோன்
வன்றிறல் முசுக்கலை மனத்திருள் அகற்றி
ஒன்றியமர் வாலுணர் ஒருங்குதவி னானல்.

என்று எம்பெருமான் கூறியருளலும் அம்பிகை தான்கொண்ட இகலுடைய சினத்தை நீக்கி, அக்குரங்கிற்கு நல்ல அருளைப் புரிதலும், அந்நேரம் ஞான வடிவான சிவமூர்த்தி வலிமையான செயலுடைய அக்குரங்கின் மனத்திருளை நீக்கி, ஏக மாகி விளங்கிடும் ஞான உணர்வை ஒருங்காக உடன் ஈந்தருளினார். 35

மெய்யுணர்வு சேர்தலும் வியன்சினை யின்நின்றும்
ஒய்யென இழிந்துமுசு உட்குவர லெய்தி
ஐயனையும் ஆய்தனையும் ஆர்வமொடு தாழ்ந்து
பொய்யடிய னேன்பிழை பொறுத்திர்என லோடும்.

அழிவற்ற ஞான உணர்வு குரங்கின்பால் அருளால் சேர்தலும், அப்பெரும் வில்வ மரத்தின் கொம்பரில் நின்றும் அக்குரங்கு விரைவாக இறங்கி வில்வமினை சொரிந்த பிழையை எண்ணிப்பெரும் அச்சமுடன் நடுக்கங்கொண்டு எமது ஐயனையும் அம்மையையும் ஆர்வத்துடன் தாழ்ந்து வணங்கி பெருமானே! பொய்க்கு அடிமைப் பட்டுள்ளேனது பிழையை பொறுத்தருள்வீர் என்று வேண்டுதல் புரிந்தது. 36

பிழையிதென அச்சமொடு பேசல்எமை ஈண்டே
விழுமியதொர் கூவிளையின் மெல்லிலைகள் இட்டு
வழிபடல் புரிந்தனை மனுக்குலம் உதித்து
முழுதுலகை யாளுகென முன்னவன் மொழிந்தான்.

அதுவேளை முன்னவராகும் சிவமூர்த்தி அக்குரங்கை நோக்கி, நீ செய்தது பிழை என அச்சமுடன் பேசிடவேண்டாம். எம்மை நீ இவ்விடத்து மிக மேன்மையுடையதான வில்வ மரத்தின் இலைகளையிட்டு வழிபாடு புரிந்தாய். ஆதலால் அதன் பயனாக நீ மனுச்சோழ அரச குலத்தில் உதித்து முழு உலகங்களையும் அரசாண்டிருப்பாய் என மொழிந்தருளினார். 37

வேறு

அம்மொழி தேர்தலும் ஆயதொர் கள்வன்
கைம்மிக வுற்ற கலங்கலுர் எய்தி
விம்மி இரங்கி விதிர்ப்பொ டெழுந்தே
எம்மிறை வற்றெழு திவ்விவை செப்பும்.

அந்தத் திருவார்த்தையை அக்குரங்கு தெளிந்து கொள்ளலும் உடனே கை கடந்து நின்ற கலக்கம்கொண்டு விம்மி அழுது நடுக்கத்துடன் எழுந்து எம்பெருமானைத் தொழுது இந்த வார்த்தையை எம்பிராற்கு மொழிந்திடும். 38

நுங்களை வைகலும் நோக்கி உவப்பாய்
இங்குறை கின்ற திகந்து நிலம்போய்
மங்குறு செல்வ வலைப்படு வேனேல்
எங்கள் பிரான்பினை எங்ஙனம் உய்கேன்.

தேவரீரையும் பிராட்டியையும் நாள்தோறும் நோக்கி மிகு உவப்பாகி கை தொழுது நித்தலும் நீங்கிடாத நிலையில் இங்கு இருக்கின்றதை விடுத்து பூமியிற் சென்று பிறந்து அங்கு என்னை மங்கிட வைக்கும் செல்வத்தின் வலையிற் சிக்கிடுவேனேல் எம்பிரானே! பின்னர் எப்படி நான் உய்வேன். 39

என்னலும் அன்னதை எம்மிறை கேளா
நின்னுளம் நன்று நிலத்திடை வைகிப்
பின்னிவண் மீள்குதி பேதுறல் எய்தி
முன்னலை யாதும் முசுக்கலை என்றான்.

என்று அக்குரங்கு கூறுதலும் எம் இறைவன் கேட்டு குரங்கே! நினது உள்ளத்துள் எண்ணம் நன்று. எமது அருளின்படி நிலத்திடைச் சென்று தங்கி இருந்து அரசாண்டு பின்னர் இங்கு மீண்டுவருவாயாக; இதற்காகப் பேதைமைகொண்டு வருந்திட வேண்டாம் என அருள் புரிந்தார். 40

பொய்ம்மறை யான புலாலுடல் போற்றி
அம்மையில் வாழ்விடை அற்ற முறுமே
இம்முக னேடுற எற்கருள் என்ன
மெய்முசு வின்கலே வேண்டிய தன்றே.

அப்போது குரங்கு எம்பெருமானை நோக்கிப் பொய்யின் மறைப்பிடமான புலாலினால் ஆகிய உடம்பைப் போற்றிப் பேணிவாழும் பூவுலக வாழ்வில் எனக்குக் குறைபாடுகள் நேர்ந்திடாதபடி, இந்தக் குரங்கு முகத்துடன் மனித வடிவாகிப் பிறந்திட வரம் தருவாயாக என அழிவிலாதஉண்மை விளக்கமுடைய குரங்கு வேண்டிக்கொண்டது. 41

அற்றமில் அவ்வரம் ஐயன் அளிக்கப்
பெற்றருள் கொண்டு பெருங்கயி லாயப்
பொற்றை யகன்று பொருக்கென இம்பர்
மற்றொர் கணத்தினில் வந்தது மன்னே.

குறைவிலாத அந்த வரத்தை எம்பெருமான் கொடுத்தருளப்பெற்று ஈசனின் பேரருளையும் கொண்டு பெரிய கையிலாய மலையை விடுத்து நீங்கி, பொருக்கென இவ்வுலகில் ஒரு கணத்தின் முன்பு அக்குரங்கு வந்துகொண்டது. 42

ஆரஞர் மூழ்கியும் ஆக்கம் இழந்தும்
வாரி சுருங்கியும் வாய்மை நிறுத்தித்
தாரணி யாள் அரிச் சந்திரன் என்போன்
ஓர்மரு மான்என வேயுதித் தன்றே.

அவ்வாறாக வந்த குரங்கு இவ்வுலகில் துன்பத்துள் மூழ்கியும், செல்வத்தை இழந்தும், வளம் சுருங்கியும் எத்தனை துன்பங்கள் நேர்ந்துகொண்டாலும் அவை ஒன்றினையும் பொருட்படுத்தாது சத்தியத்தை நிலைநிறுத்தி உலகை ஆள்கின்ற அரிச்சந்திரன் என்பானின் வழித்தோன்றலின் முன்னைய ஒருவனாகி அவதரித்துள்ளது. 43

மாமுக மேமுசு மற்றுள வெல்லாங்
காமரில் ஏர்தரு காட்சிய தாகிக்
கோமுறை சேர்முசு குந்தன் எனுவோர்
நாம இயற்பெயர் நண்ணிய தன்றே.

இவ்வாறு சோழகுலத்துதித்த குரங்கு; தன்முகம் குரங்காக அமைய மற்றைய உறுப்புகள் யாவும் மிக்க மன்மதனிலும் சிறந்த பேரழகுடைய காட்சியாக செங்கோன்முறை அரசாள்கின்ற முசுகுந்தன் எனப்பேர்கொண்ட ஓர் இயற்பெயரையும் பெற்றுக்கொண்டது. 44

ஆய வழிப்படும் அம்முசு குந்தன்
தூய பொலன்முடி தொன்முறை சூடி
மாயிரு ஞால வளாகம துள்ள
தேய மெலாமொர் செகிற்கொடு காத்தான்.

இவ்வாறாக அருளால் பூமியில் பிறந்திட்ட முசுகுந்தன் தூய்மையான இரத்தின முடியை; முன்னைய வேத விதிப்படி சூடி; இப்பெரிய அண்ட புவனங்களிலுள்ள தேசங்களை எல்லாம் தனது தோள்மீது வைத்திடுவான் போன்று எங்கும் எல்லார்க்கும் ஏற்றதொரு நீதியுடன் பரிபாலித்து உயிர்களைக்காத்து அரசாண்டான். 45

ஓவறு சீர்க்கரு வூரிடை மேவிக்
கோவியல் ஓம்புறு கொள்கை யனுகித்
தேவரை ஏவல்கொள் சீர்கெழுசூரன்
காவலின் ஆணை கடக்கலன் உற்றான்.

ஒய்ந்திடுதல் இலாத சீருடைய கருவூரில் முசுகுந்தன் என்னும் சக்கரவர்த்தி அரச இயல்பிற்கு ஏற்றவகையால் அரசாண்டும்; தேவரை எல்லாம் ஏவல்கொள்கின்ற சூரபன்மனது காவலுடைய ஆணையைக் கடந்திட முடியாது அங்கு இருந்தான். 46

சொற்றிறல் மேதகு சூரெனும் வெய்யோன்
உற்றிடும் வைப்பினில் ஓரிடை தன்னில்
மற்றொர் இளம்பிறை வைகிய வாபோல்
கொற்றவ னும்முசு குந்தன் இருந்தான்.

சொல்லின் ஆணையால் மிகு மேம்பாடுடைய சூரபன்மன் என்னும் கொடிய சூரியன் இருக்கின்ற இப்புவன வைப்பில் ஓரிடத்தில் ஓர் இளம்பிறையும இருந்துளது எனும்படி, அரசனும் முசுகுந்தன் இவ்வுலகில் சூரபன்மன் காலத்துத் தனது அளவிற்கேற்ற இயல்போடும் அரசாண்டிருந்தான் 47

சூரனை எந்தை தொலைத்தது கேளா
ஆரஞர் நீங்கி அருஞ்சிறை பெற்ற
மேருவ தென்ன வியன்மிடல் பெற்றுச்
சீரிறை மாட்சி செலுத்தி அமர்ந்தான்.

சூரபன்மனை எந்தை பெருமான் வேலால் தொலைத்த தன்மையை இம்முசுகுந்தன் கேள்வியுற்றுத் தன் கவலைகள் நீங்கிடப்பெற்று, இழந்த சிறகுகளைப் பெற்றிட்ட மேருமலையைப்போன்று வலி எல்லாம் பெற்றுச் சிறந்துள்ள தனது அரசாட்சியை மாட்சிமையுடன் செலுத்தியிருந்தான். 48

வேறு

அமரும் எல்லையின் அரசன் முன்னரே
இமைய வர்க்கிறை ஏவு தூதர்போய்க்
கமல மன்னபொற் கழல்கள் வாழ்த்தியே
தமது வன்மையாற் சாற்றல் மேயினர்.

இவ்வாறு மகிழ்வுடன் அமர்கின்ற முசுகுந்தச் சக்கரவர்த்தி முன்பாகத் தேவர்கட்கு அரசனன இந்திரன் செலுத்திய தூதுவர் சென்று தாமரை மலர்போன்ற அவனது காலில் வணங்கி வாழ்த்தித் தமது தகவுடைய வலிமையால் இதனை எடுத்துச்சொல்கின்றார். 49

உனது நண்பனாய் உறுபு ரந்தரன்
தனது தூதர்யாம் தாவில் சீர்பெறீஇ
நினது சுற்றமும் நீயும் வாழிகேள்
இனிது மங்கலம் இசைப்ப எய்தினேம்.

உனது நண்பனாய் இருக்கும் இந்திர தேவனுடைய தூதுவர் நாங்களாவோம். அரசே கேட்க எக்காலமும் குறைவிலாத சீரைப்பெற்று நீயும் உனது சுற்றமும் வாழ்ந்திடுக. இனிதான ஒரு மங்கல வார்த்தை விளம்பிட இந்திரதேவன் ஏவற்படி இங்கு நாம் வந்துள்ளோம. 50

அடாத தீமைசெய் தமரர் தஞ்சிறை
விடாத சூரனை வீட்டி வேலவன்
வடாது பூமிவாய் வந்து கூடலின்
குடாது சேர்பரங் குன்றில் வைகினன்.

அடாத தீமையினை உலகத்து உயிர்கள்பால் புரிந்து, தேவர்களைப் பல யுக காலம் சிறையில் வைத்து, விடாதிருந்த சூரனை வேலேந்திய ஆறுமுகப்பெருமான் சங்காரம் செய்து வீரமகேந்திரபுரத்தின் வடதிசையான இப்பூமியினிடத்து வந்து அங்குமதுரையின் மேற்குப்புறமாக உள்ள திருப்பரங்குன்றில் இருக்கைகொண்டார். 51

கொற்ற வேற்படைக் குமரற் கிந்திரன்
தெற்றெ னத்தருந் தெய்வ யானையை
இற்றை சென்றபின் ஈகின் றுனிது
சொற்றி டும்படி தூண்டி ஞனெமை.

கொற்றமுடைய வேற்படையைக் கைக்கொண்டருளும் குமரப்பெருமானுக்கு, இந்திரன் சிறப்புடன் தனது யானைபெற்ற தெய்வநாயகி அம்மையாரை இன்று நாள் கழிந்த பிற்பாடு நாளை கன்னிகாதானம் செய்கின்றான். இந்தச் சோபனத்தை உன்னிடம் சொல்லிடுமாறு எம்மை அனுப்பினான். 52

மாறி லாதஅவ் வதுவை காணநீ
ஈறில் சேனையோ டெழுந்து தென்றமிழ்க்
கூறு சீர்ப்பரங் குன்றந் தன்னிடைச்
சேறி யாலெனச் சிலதர் ஓதினர்.

எவ்வகையாலும் மாறுதலிலாத அந்தத் திருமணத்தைத் தரிசித்துக்கொள்வதற்கு அரசே நீ முடிவிலாத உனது சேனையுடன் புறப்பட்டுச் சென்று தென் தமிழால் உயர்த்திச் சொல்லப்பெற்ற சீருடைய திருப்பரங் குன்றம் என்னும் தலத்திடையாகச் சேர்ந்திடுவாயாக என்று தூதுவர் கூறினார்கள். 53

ஓத அன்னவன் உவகை சிந்தையின்
மீது பொங்குற மெய்ப னித்தெழீ இத்
தூத ரைத்தழீஇச் சோப னம்மிதற்
கேது மில்லையால் ஈயு மாறென்றான்.

இவ்வாறு தேவதூதர்கூறிட அதுகேட்ட முசுகுந்தச் சக்கரவர்த்தி மனதில் பேருவகை பொங்கிட உடலம் நடுக்கமுற எழுந்து தூதுவர்களைத் தழுவிக்கொண்டு இந்த மங்கலகரமான சோபன வார்த்தைக்கு நிகராக ஏதும் இங்கு இவ்வுலகில் இல்லை; யான் இதற்கு ஏற்ற பரிசு கொடுத்திடற்கு என்றான்.

இந்தச் சோபன வார்த்தை என் வாழ்வில் கேட்ட சோபனத்திற்கெல்லாம் மிக மேலானது. இத்தகைய ஓர் வார்த்தை கேட்டால் இதனைச் சொல்வார்க்கு கைம் மாறான பொருள் கொடுத்திடல் வேண்டும். இதற்கு ஒப்பாகக் கொடுத்திடற்குரியதொரு பொருள் என்னிடம் இல்லையே என்றான் முசுகுந்தன்.

திருக்கல்யாணச் சோபன வார்த்தை சொல்கின்றபோது அதற்கு மரியாதை செய்யும் முகமாக; இப்போதும் சில அறிவுடைய மக்கள் பணம் கொடுக்கும் வழக்கம் உண்டு. ஆனால் மிலேச்ச நாகரிகத்தில் ஈடுபட்டவர்கள் இதன் நன்நிலையை உணரார்கள். 54

ஈண்டை மாநிதி யாவும் நல்குகோ
காண்ட குங்குடை கவரி நல்குகோ
ஆண்டி ருந்தஎன் அரசு நல்குகோ
வேண்டு கின்றதென் விளம்பு வீர்என்றான்.

உமது சோபன வார்த்தைக்கு இவ்விடத்துள்ள முழுபெரும் செல்வத்தையும் கொடுத்திடுவேனோ? அல்லது கண்ணால் காணொணாத வனப்புடைய குடை வெண் சாமரை இந்த வரிசைகளைக் கொடுப்பேனோ? அல்லது நான் அரசாண்டிருக்கும் எனது அரசாட்சியைக் கொடுப்பேனோ? யாது வேண்டும் நீர் சொல்வீராக, என்றான். 55

கோதில் சீர்முசு குந்தன் இந்தவா
றோதும் எல்லையில் உவகை யுற்றவன்
ஆத ரத்தின தளவை நோக்கியே
தூத ராயினோர் வியந்து சொல்லுவார்.

குறைவிலாத சீருடைய முசுகுந்தச் சக்கரவர்த்தி இவ்வாறு ஓதிடுகின்ற எல்லையில் உவகை உற்றனர் அத்தூதுவர்கள். அவனுடைய அந்த ஆதரவத்தின் அளவை நோக்கியே இதனை வியந்து அத்தூதுவர்கள் சொல்லிடுகின்றனர். 56

சொல்வி னைப்படுந் தூதர்க் கிவ்வெலாம்
ஒல்வ தன்றிவை உதவிற் றெருக்குமால்
வல்வி ரைந்துநீ வாச வன்முனஞ்
செல்வ தேயெனச் செப்பிப் போயினர்.

எமது தலைவன் சொல்லியவற்றைச் செய்திடும் செயலையுடைய தூதராகிய எமக்கு இந்தப் பொருள்கள் யாவையும் ஏற்பது பொருத்தமுடைத்தன்று. இதனைச் சொல்லும்போதே இதனை எமக்குத் தந்ததை ஒக்கும். நீர் மிக விரைவுகொண்டு இந்திரன் முன்னம் செல்வதே நன்று என்று கூறித் தூதுவர்கள் போயினர்கள். 57

போய தூதுவர் புவியின் மன்னவர்
ஆயி னோர்க்கெலாம் ஆறு மாமுகச்
சேய வன்மணஞ் செப்பி மாதிரம்
ஏயி னோர்க்கும்இங் கிதுவி ளம்பினர்.

போன தூதுவர்கள் இப்பூமியின் அரசர்க்கெல்லாம், ஆறுமுகமுடைய குழந்தை வடிவாகும் ஈசனின் திருக்கல்யாணத்தின் திறனினைச் சொல்லி இதுவன்றித் திக்குப் பாலகர்கள் எங்கும் பொருந்தி இருப்பார்களே இதனைச் சொல்லினர்கள். 58

அகல்வி சும்பிடை அல்க லும்படர்
பகல வன்முதற் பகவர் யாவர்க்கும்
இகலின் மாதவர் எவர்க்கும் இச்செயல்
விகல மின்றியே விளம்பி யேகினர்.

அகன்ற வானத்திடை நித்தலும் சென்றிடுகின்ற சூரியதேவன் முதல் கடவுளர் யாவர்க்கும், கோபம்நீங்கிய தபோதனர் எவர்க்கும், எம்பிரான் திருமண வைபவத்தின் இச்செயலை யாதொரு மாறுதலும் இல்லாது எடுத்துக்கூறிவிட்டுச் சென்றார்கள் அத்தூதுவர்கள். 59

வேறு

ஆய காலையின் முசுகுந்தன் அப்பதி தன்னில்
மேயி னார்களுந் தன்பெருஞ் சேனையும் வேற்கை
நாய கன்மணங் காணிய முன்னரே நடப்பான்
பாய்ம தக்கரி மிசைமுர சறைந்திடப் பணித்தான்.

அவ்வாறாகிய காலையில் முசுகுந்தன் தனது கருவூர் என்னும் அப்பதியில் வாழ்கின்றவர்களும் தனது பெரும் சேனையும், வேலினைக் கைக்கொண்டருளிய ஆறுமுகப் பெருமானின திருமணத்தைத் தரிசித்தருளும்பொருட்டு முன்பாக எழுந்துபோகும் வண்ணம், மதம்பொழிகின்ற யானைமீது ஓர் முரசப்பறையை ஏற்றி எம்பிரானுடைய திருமணத்தின் மங்கல வார்த்தையைத் தெரிவித்திடுமாறு கட்டளையிட்டான். 60

அந்த நீர்மையை வள்ளுவன் அகன்கரு வூரில்
தந்தி யின்மிசை ஏறியே தனிமுர சறைந்து
முந்து சீர்க் கமலாலயத் தரன்விழா மொழிந்தே
இந்தி ரன்திரிந் திடுதல்போல் திரிந்தனன் இசைத்தான்.

அவன் ஆணைப்படி வள்ளுவன் அகன்ற கருவூரில் ஓர் யானையின்மீது ஏறி தனியாகும் மங்கல முரசப் பறையை அடித்து திருவாரூரில் இந்திரன், திருவாரூர் ஆண்ட சிவபெருமான் திருவிழாவை எடுத்துக் கூறித் திரிந்த அத்தன்மைபோன்று திரிந்து திரிந்து அந்த மங்கல வார்த்தையை யாவரும் அறியச் சொன்னான். 61

## வேறு

ஆனதோர் பொழுதில் அந்நகரின் மாக்களுஞ்
சேனையின் வெள்ளமுந் திசைக ளின்புறம்
போனதோர் பெரும்புறப் புணரிக் கேகுறும்
ஏனைய கடலென எழுத லுற்றவே.

அவ்வாறான பொழுதில் அந்தக் கருவூர் எனும் நகரிலுள்ள மைந்தர்களும், மகளிர்களும் சேனையின் வெள்ளங்களும், திக்குகளின் புறத்தே போனதொரு பெரிய புறவாழி சமுத்திரத்திற்குச் சென்றிடும் ஏனைய கடல் இவைதானோ எனும்படியாகத் திருப்பரங் குன்றைச் சேரப் புறப்பட்டு எழுந்துகொண்டது. 62

எண்டிசை யாற்றுவ இபங்கள் ஆதலின்
அண்டமுந் தாங்குவான் அயன் படைத்தெ்தென
வீண்டொட நின்றிடும் வேழம் எண்ணில
கொண்டல்கள் சூழிபோற் குலவச் சென்றவே.

எட்டுத் திக்கினையும் தாங்கிடுவன யானைகள் என்றபடியால், அண்டங்களையும் தாங்கிடற்கு யானைகள் வேண்டும் என்பதற்காக இந்த யானைகளை பிரமன் படைத்தனனோ? எனும்படியாக வானைத்தொட நின்றிடும் உயர்வுடைய யானைகள் எண்ணற்றன, மேகங்கள் கூடியுள்ளனபோன்று கூடிச் சென்றன. 63

வால்கிளர் கற்றையும் மதர்வை நோக்கமும்
பால்கிளர் செவிகளும் பழிப்பில் சென்னியுங்
கால்கிளர் செலவுமாய்க் கால்கள் சென்றென
மேல்கிளர் புரவியின் வெள்ளஞ் சென்றவே.

கற்றையாகக் கிளர்ந்த வால்களும் மதர்ப்புடைய பார்வையும் பால்போற் கிளர்ந்திட்ட செவிகளும் பழிப்பில்லாத தலைகளும் காற்றைப்போல் கால்கள் பாய்ந்திடுகின்ற வேகமுமாய் ; காற்று வேகமுடன் செல்வதுபோன்று ; மேற்கிளர்ந்து செல்லும் குதிரை வெள்ளங்கள் சென்றன. 64

ஐயிரு திசையினும் அணிந்து செல்வன
கொய்யுளை வயப்பரிக் குழாங்கள் பூண்டன
வெய்யவர் உதித்தென விளங்கு காட்சிய
வையமெண் ணில்லன வையம் போந்தவே.

பத்துத் திக்கிலும் அணி வகுத்துச் செல்கின்றன: அழகிய பிடரி மயிருடைய வீரக்குதிரையின் நிரைகளைப் பூண்டுகொண்டன. சூரியர்கள் உதித்து வருகின்றனவோ என்னும்படியான காட்சிப்பொலிவுற்றன; இத்தகைய தேர்கள் எண்ணற்றன இப்பூமிமீது சென்றன. 65

வலிபுணர் யாக்கையர் வயங்கொள் வாகையர்
கொலைகெழு பல்படைக் கூட்டுண் வாட்கையர்
புலியுறழ் மானவப் பொருந ராயினோர்
தலைவர்கள் தம்மொடு தழுவிப் போயினார்.

வலிசேர்ந்துகொண்ட உடலுடையவர். வெற்றி மாலை சூடிய தோளினை உடையவர். கொலை கொண்ட பல படைகளை வைத்திட்ட கூட்டுடன் வாளைக் கைக்கொண்டவர். புலியை ஒத்த வீரமுடைய வீரராயினோர் தங்கள் தங்கள் சேனைத் தலைவர்களுடன் ஒருங்கு சேர்ந்து செல்கின்றனர். 66

அடல்வலி மானவர் அங்கை ஏந்திய
படைவகை மின்னுவ பல்லி யங்களும்
இடியொலி காட்டுவ ஈண்டு தானையுட்
கொடிநிரை விசும்புதோய் கொண்டல் ஆயவே.

அடலுடைய வலிகொண்ட வீரர்கள் அழகிய தமது கரத்திடை ஏந்திய படை வகைகள் மின்னிக் கொண்டிருப்பன. பலவகை வாத்தியங்களும் இடிபோன்ற ஓசையைக் காட்டுகின்றன. எழுந்துவரும் சேனைகளிலுள்ள கொடி நிரைகள் வானத்து முகில்போன்று வடிவுடையதாக விளங்குவதால் இச்சேனையின் செல்கை முகில்கள் மின்னி முழங்கிச் சென்றிடுதலை ஒப்பது. 67

தாளுறு கழலினர் சரம்பெய் தூணியர்
தோளுறு வில்லினர் தொடையற் குஞ்சியர்
வாளுறு தடங்கணர் மருங்கு மன்மத
வேளென ஒருசில வீரர் ஏகினர்.

காலில் பூட்டிய சிலம்பினை உடையராய் அம்புகள் வைத்த தூணியை உடையராய், தோளில் மாட்டிய வில்லையுடையராய் மாலைகட்டிய கூந்தலையுடையராய், மன்மதனைப்போல வீரர் சிலர் வாள்போல் கூராய கண்களையுடைய பெண்களின் பக்கராகச் சென்றுகொண்டிருக்கின்றனர். 68

கறுத்திடுபல கைவாட் கையர் சாலிகை
பொறுத்திடு மெய்யின ராகிப் போகுவார்
மறுத்தவிர் மதிமுக மாதர் நாட்டவேல்
ஒறுத்திடு நம்மையென் றுன்னி னர்கொலோ.

கறுத்திட்ட பலகையையும் வாளையும் ஏந்திய கையையுடையர்களாய் கவசம் அணிந்த நெஞ்சையுடையவர்களாய் சில வீரர் போகின்றார்கள். அவ்வண்ணம் இவர்கள் பலகையும் வாளும் ஏந்திச் சென்றிடுதல், மறுவிலாத பூரண சந்திரனைப்போன்ற முகமுடைய பெண்களது வேல்போலும் கூரிய கண்கள் தம்மைத் துயர் செய்யும் என நினைத்தார்களோ? அதற்காகவோ போர்க்கோலமுடன் சென்ற காரணம்? 69

அடைந்திடு துன்பெலாம் ஆற்றி யம்புவி
மடந்தைமுன் செய்திடு மாத வத்தினல்
தொடர்ந்திடு பிடியினந் தொலையப் பூமிசை
நடந்தனர் வரம்பிலா நகைமென் கொம்பனர்.

இப்பூமிதேவி அடைந்திடவேண்டிய துன்பங்கள் யாவற்றையும் அனுபவித்தும், அவள் முன்செய்திட்ட பெரும் தவத்தினல் இவர்களைத் தொடர்ந்துவரும் பெண் யானைகளின் கூட்டம் நடைகெட்டுத் தொலைந்திட இப்பூமிமீது நடந்து செல்கின்றனர், நகைபூத்த மெல்லிய பூங்கொடிபோலும் பெண்கள். 70

ஏரகல் மணந்தனக் கெய்தும் ஆசையால்
வாரக முலையுடை மடந்தை மார்பலர்
பாரக மலிதரப் பரவிப் போயினர்
தாரகை விண்ணெறி படருந் தன்மைபோல்.

நிகர் பிறிதிலாத பெருமைகொண்ட திருமணத்தினை அடைந்திடும் ஆசையால், வார்பூட்டிய முலையுடைய பெண்கள் பலர் இப்பூமியில் பெரும் சிறப்புடன் கூட்டாக வணங்கியவாறு அப்பனுடைய திருமணம் காணச் செல்கின்றனர், இவர்கள் நட்சத்திரங்கள் வானின் வழியால் சென்றிடும் தன்மை போல. 71

இடையிடை கால்களும் யாறுஞ் சேர்தலில்
படிமிசை நடந்திடு பாவை மார்களை
விடலைகள் ஏந்தியே மெல்ல ஏகினுர்
கடலினும் பெரியதாங் காம மூழ்குவார்.

இடையிடை வாய்க்கால்களும் ஆறும் சேர்கின்றமையால், இப்பூமிமீது நடந்திடும் பெண்கள் அதனூடு செல்ல முடியாது போய்விடுதலாலே, அப்பெண்களை இளமையுடையதான வீரர்கள் தூக்கிக் கைகளில் ஏந்திக்கொண்டு மெல்ல அவற்றினைக் கடந்து செல்கின்றனர். அவ்வண்ணம் செய்திடும்போது கடலினும் பெரியதானதொரு காம இச்சை கொள்கின்றனர். 72

தந்தி களின்மிசைத் தைய லாருடன்
மைந்தர்க ளேகினுர் மாநி லந்தனில்
அந்தமில் சீரயி ராணி தன்னெடும்
இந்திரர் போவதோர் இயற்கை போலவே.

யானைகளின் மேலாகத் தங்கள் காதல் பெண்களுடன் சில ஆடவர் சென்றிடுகின்றனர். எதுபோலெனில் எல்லையற்ற சீருடைய இந்திராணி தேவியரோடும் இந்திர தேவர் சென்றிடுவதொரு இயற்கை இப்படியானது எனச் சொல்லும்படியாக. 73

அதிர்குரல் தேர்களில் அரிவை மாருடன்
கதுமெனப் போயினர் கணிப்பில் காளையர்
மதிமுகத் தாருடன் வரம்பில் வெய்யவர்
முதுவரைச் சிகரமேல் முடுகிச் சென்றென.

அதிர்கின்ற ஓசையுடைய தேர்களில் தங்கள் காதற்பெண்களுடன் அளவிறந்த இளமையுடைய ஆண்கள் விரைவாகச் சென்றிடுகின்றனர். இது எப்படியிருப்பதென்ருல் பூரணசந்திரருடன் கொடிய சூரியர்கள் முதிய மலையின் உச்சிமேல் முடுகிச் சென்றிடுதல்போன்று அத்துணைச் சிறப்புடையதாக இருந்தது. 74

கூற்றினை வென்றிடுங் கொலைக்க ணுர்சிலர்
ஏற்றமில் பிடிமிசை ஏறிப் போந்தனர்
ஆற்றல தின்மையால் அவர்ந டைக்குமுன்
தோற்றன நாணியே சுமத்தல் போன்றவே.

இயமனை வென்றிடுகின்ற அத்தகைய கொலைபுரியும் அழகிய கண்ணுடைய பெண்கள் சிலர், அவ்வளவு உயர்விலாத பெண் யானைமேல் ஏறிப்போகின்றனர். இதை நோக்கும்பொழுது இந்த யானைகளுக்கு ஆற்றலிலாது போனமையால் இப்பெண்களுடைய நடைக்கு முன்னர் தோற்று; நாணம் கொண்டு அதனலே அப்பெணகளின் நடைக்குத் தாங்கள் தோற்றதால் அவர்களைச் சுமந்து செல்கின்றனவோ என்னும்படியாக இருக்கின்றது. 75

காமரு கொங்கையாற் கரிம ருப்பினை
ஏமுற வென்றுளார் யானைக் கோடுகள்
மாமருங் கடைதலும் மருண்டங் கோடினுர்
தாமுதற் செய்வினை தம்மைச் சூழ்ந்தென.

அழகிய தங்களது நீண்ட தனங்களால் ஆசையூட்டும் வகையில் யானைகளின் கொம்புகளின் வனப்பை வென்றுள்ள சில பெண்கள், தாங்கள் சென்றிடும்போது அந்த யானைகளின் கொம்புகள் தம்பெரும் பக்கரில் அடைந்துகொள்ளலும் வெருண்டு ஓடிப்போகின்றனர். இதை நோக்கினல் தாங்கள் பிறர்க்குச் செய்த செயல் தமக்கு இப்போது சூழ்ந்துகொண்டது எனும்படியாயது.

ஆண்யானையின் கொம்பு, பெண் யானையை அதன் மேல் மையல் கொள்ளும்படி வைக்கும் எழில் கொண்டது. அதன் பரிசத்தால் தான் பெண்யானை தன்னையறியாது ஆண்யானைமீது மருவிட உருக்கம் கொள்ளும். இதேபோன்று பெண்களுடைய தனங்களும் யானைக்கொம்பர்போல் நீண்டு பருத்திருந்தபோது அதன் எழிலைக் கண்டு ஆண்கள் அப்பெண்கள்மீது பெரும் மையல் கொள்வர். இந்த ஒரு நிகழ்ச்சி யால் அப்பெண்கள் ஆண்களுக்கு இடரே வருவிப்பவர். இச்செயலில் யானைக் கொம்பைவிட பெண்கள் தனங்களால் வெற்றிகாண்பது மிக எளிது, ஆதலின் தன் தனத்தால் ஆசையூட்டி ஆடவரை அலைத்திட வைத்த பெண்கள், அதே தன்மையைப் புரிந்த ஆண்யானைக் கொம்பைக் கண்டு அஞ்சி ஓடினர் ஆதலிற்றான் பிறர்க்குச் செய்தவினை தனனைச் சூழ்ந்துள்ளது போன்றது எனக் கூறினர் ஆசிரியர். 76

விரிதரு சேனையில் விண்ணிற் பாய்தரு
பரிகளின் மடந்தையர் பலரங் கேகினர்
கரையறும் அமரர்கள் கடைந்த பாற்கடல்
திரைதனில் வருபல திருவைப் போலவே.

விரிவாகப் பரந்துசென்றிடும் சேனைகளில் வந்திடும் வானில் பாய்ந்திடுகின்ற குதிரைகளில் பெண்கள் பலர் ஏறிச் செலுத்திச் செல்கின்றனர். இவர்களது அழகையும் சிறப்பையும் நோக்கிடும்பொழுது எல்லையற்ற தேவர்கள் கடைந்த பாற் கடலின் திரைகள்மீது எழுந்துவரும் இலக்குமியைப் போன்றிருந்தார்கள். 77

மேகம துற்றிடு மின்னின் மீமிசைப்
போகிய சிலையொடும் போந்த தன்மைபோல்
பாகினை யன்னசொற் பாவை மார்நர
வாகனம் அவைகளின் மருவி யேகினர்.

மேகம் தன்மீது பொருந்திக்கொள்கின்ற மின்னலின்மீதாகப் போனதொரு இந்திரவில்லினுடன் போய்க்கொண்டிருக்கும் தன்மைபோல; கரும்பின் பாகுபோல் இனிய மொழி பேசுகின்ற பெண்கள் பலர் நரவாகனம் அவைகளின்மீது ஏறிக் கொண்டு அதி வனப்புடன் செல்கின்றார்கள். 78

அவிகையில் முழுமதி அளிப்பப் பல்பொறி
குவிகையி லம்புயங் குலவிச் சென்றெனக்
கவிகையி லாதபங் கரப்ப மூடுபொற்
சிவிகையி லேகினர் தெரிவை மார்சிலர்.

தேய்வுருத பூரணசந்திரன் தோற்றுவித்த பல வண்ணமுடைய கூம்புதவிலாத தாமரைப் பூக்கள் எழுந்து செல்வதை ஒத்து, குடையால் சூரியனுடைய வெப்பத்தை மறைத்தலைப்போன்ற மேற்பாகத்தையுடைய பொற்சிவிகையில் சில பெண்கள் ஏறிக் கொண்டு ஏகுகின்றனர்; 79

வேறு

பரதனங் கவரும் அல்குற் பரத்தையர் தம்மைப் பாரா
விரதநன் முனிவர் தாமும் வேதியர் பலரும் ஈண்டிச்
சுரதநண் புடைய ராகுங் கணிகையர் தோளால் தாளால்
உரதனந் தன்னால் தாக்க உளைந்துளைந் தொதுங்கிப் போனர்.

வேண்டத்தகாத தீய வருவாயுடைய பொருள்களைக் கவரும்பொருட்டு, தமது அல்குலை விற்றுண்ணும் பரத்தைப் பெண்களை ஒருகாலமும் நோக்கிடாத விரத சீலமுடைய நல்ல முனிவர்களும், பிராமணர்களும் திருமண தரிசனத்தின் பொருட்டு இங்கு போகின்ற மக்கள் கூட்டத்தில் நெருக்கமாக செல்லும்போது இவர்களுடன் புணர்ச்சியில் மிகவேட்கைகொண்ட தாசிப்பெண்கள் இவர்களைத் தமது தோளாலும், காலாலும், வலியுடைய தனத்தாலும் மெதுவாகத் தடவித் தமது விருப்பத்தைத் தெரிவிப்பதுபோன்றிட; அதனல் அவர்கள் உளைந்து உளைந்து வேதனையுற்று ஒதுங்கிப்போனர்கள். 80

வேண்டிய மாற்றங் கொள்ளாள் வெகுண்டுசென் றிடுவாள் முன்னம்
ஆண்டொரு மதமால் யானை அடர்த்துவந் திடலும் அஞ்சிப்
பூண்டிடு புலவி நீங்கிக் கணவனைப் புல்லிக் கொண்டாள்
தூண்டகு தோளினானும் இபத்தினைத் தொழுது நின்றான்.

ஓர் காதலனுடன் வெறுப்புற்றமையால் அவன் இரந்து வேண்டிச் சொல்லிய இனிய வார்த்தைகளையும் ஏற்றிடாது மிகு கோபத்துடன் முன்னாகப் போய்க் கொண்டிருப்பவளாகும் ஓர் பெண்முன்னம் அவ்விடத்து ஓர் பெரிய மத யானை மிகு வெறியுடன் அடர்ந்து வந்திடலும், அதுகண்ட அப்பெண் பெரும் அச்சமுற்று ஓடி தான் கொண்ட வெறுப்பு நீங்கித் தனது கணவனைத் தழுவிக்கொண்டாள். தான் இந்தச் செயலுக்கே இரந்து முன் வேண்டவும், இதைச் செய்யாதுபோன அவளை மீளவும் தன்னை வந்து தழுவும்படி செய்ததே இந்த யானை என, அத்தூண் போன்ற தோளினையுடைய தலைவனும் யானையைத் தொழுது நின்றான. 81

ஏமருங் கலாப மஞ்ஞை இனமெனச் செல்லு மாதர்
மாமருங் கிறுங்கொல் இற்றால் மதன்அர சிறக்கும் என்றே
காமருங் கவற்சி கொள்ளக் கரத்தினால் அவரைப் புல்லித்
தாமருங் காகப் போனார் தார்முடி இளைய ரானோர்.

இன்பமுறும் தோகை மயில்களின் இனம்போல் சிறப்புடன் செல்கின்ற அழகிய பெண்களது சிறிய இடையானது முறிந்திடுமோ? அப்படியாயின் மன்மதனுடைய அரசாட்சியும் இறந்திடுமே என்று மன்மதனும் கண்டு, ஆசையால் கவர்ச்சி கொள்ளும்படி கைகளால் அப்பெண்களைப் புல்லிக்கொண்டு, அவர்கள் பக்கராக மாலை சூடிய முடியுடைய சில ஆடவர் சொல்கின்றனர். 82

கணவன்தன் பிழையை உன்னிக் கனன்றிடுங் கணவன் தோளை
அணைவுறா நீர்மை உன்னி அழுங்குறும் அமல மூர்த்தி
மணவினை தன்னை உன்னி மகிழ்ந்திடும் இவ்வா றாகிப்
புணர்கயிற் றூசல்போலும் புந்திகொண் டொருத்தி போனாள்.

தனது கணவனுடைய பிழையை நினைந்து வேதனையுற்றுக் கோபமுற்றும் தனது கணவனுடைய தோளை அணைவுறாமையால் வந்த துயரை நினைந்து அழுபவளாயும் உள்ள ஓர்பெண் நின்மலமூர்த்தியாகும் ஆறுமுகப் பெருமானுடைய திருமணச் செயலை நினைந்து மகிழ்ந்து கவலையால் பிற்பட்டும், எம்பிரான் திருமண தரிசனத்தின் மகிழ்வால் முற்பட்டும், மரத்தில் கட்டிய ஊஞ்சல் கயிறு போன்று மனம்கொண்டு முன்னும்பின்னுமாகச் செல்கின்றாள். 83

கையிலார் கைகள் பெற்றும் காலிலார் கால்கள் பெற்றும்
மொய்யிலார் மொய்கள் பெற்றும் மூங்கைகள் மொழியைப்பெற்றும்
மையல்சேர் குருட ரானோர் வாள்விழி பெற்றுஞ் சென்றார்
ஐயன்மேல் உள்ளம் வைத்தார்க் கினையதோ அரிது மாதோ.

இவ்வாறு திருமணதரிசனத்திற்காகச் செல்வோர்களில் கையிலாதவர் கைகள் பெற்றும்; கால் இலாதவர் கால்கள் பெற்றும், வலிமை இலாதவர் வலிமைபெற்றும்; ஊமைகள் பேசப்பெற்றும்; மயக்கம் சேர்ந்த குருடரானோர் ஒளிகொண்ட பார்வையைப் பெற்றும் சென்றார்கள், எமது ஆறுமுக ஐயன் மேலாக தமது சிந்தையை வைத்தார்க்கு இக்குறைபாடுகள் யாவும் நீங்குதல் ஓர் அரிதான செயலோ? 84

விடந்தரு வேற்கண் நல்லாள் வெளிப்படு கொங்கை தன்னைப்
படந்தனில் மறைத்த லோடும் பாங்கிலோர் காளை பாராத்
தொடர்ந்தனன் அவள்பின் போனான் துணைமுலைப் படத்திற் சிக்கிக்
கிடந்ததன் மதியை மீட்கக் கிலேசமோ டேகு வான்போல்.

நஞ்சினைக் கக்கிடும் வேல்போலும் பார்வையுடைய ஓர் பெண்ணின் ஆடை மறைப்பினில் நீங்கி வெளிப்பட்ட கொங்கையை அவள் மீண்டும் தனது துகிலால் மறைத்தாள், அதுகண்டு பக்கராக நின்ற ஓர் வாலிப வீரன் கண்டு அவளைப் பின்தொடர்ந்து போயினன். அவன் செல்கின்றது தனது மதி அவளுடைய கொங்கையில் சிக்கிக் கொண்டது. ஆதலின் தன் மதியை அதனின்றும் மீட்க வழியறியாது கிலேசமுடன் செல்பவன் போன்றிருந்தான். 85

நெய்தலுங் கமலப் போதும் நீலமும் நெடுநீர்ப் பொய்கை
கொய்தனர் குமர ராஞேர் கொடுங்குழை மடந்தை மார்தங்
கைதனிற் கொடுத்துச் செல்வார் கன்னிமீர் இவையோ நுங்கண்
மைதிகழ் விழிக்குத் தோற்ற மலரெனக் காட்டு வார்போல்.

குமரரானவர்கள் நெய்தல்பூவையும் தாமரைப் பூவையும் நீண்ட நீர்க்குளத்தினின்றும் கொய்தெடுத்து, அப்பூக்களை நீண்ட கூந்தலைக் கொண்ட தங்கள் காதலிமார்களின் கைகளிலே கொடுத்து கூட்டிச்செல்கின்றூர்கள். அச்செயலால் அந்த இளைஞர்கள் அக்கன்னிகளை நோக்கி 'கன்னிமீர்களே! இப்பூக்கள் தாமோ உங்கள் கண்களுக்குத் தோற்ற பூக்கள்' எனக் காட்டிடுவார் போன்று. 86

அரிசன மேனி நல்லாள் அணிதுகில் அசைவின் சீரால்
கரிசனம் அன்ன கொங்கை காண்டலுந் தளர்ந்தோர் காளை
தெரிசனந் தன்னில் ஈதென் சிந்தையைப் பிணித்த தென்றுல்
பரிசனந் தனிவென் ஞமோ என்றுயிர் பதைத்து நின்றுன்.

மஞ்சள்பூசிய நல்மேனியுடைய பெண் ஒருத்தியின் அழகிய பட்டாடையின் அசைவின் நிலையால், யானைக் கொம்பு போன்ற அவளது கொங்கை தோன்றிட, ஓர் இளைஞன் காண்டலும் அவன் தளர்ச்சியடைந்து இவளின் கொங்கையைக் காணுமாத்திரையில் இது என் சிந்தையைப் பிணித்தது என்றுல், இதனைக்கையால் தொடும்பொழுது எம்படி இருக்கும் என்று உயிர் பதைபதைத்து நின்றுன். 87

கற்பகவல்லி அன்னுள் ஒருத்திதன் காதல் மூழ்கி
அற்பகல் ஏவல் செய்வான் ஆங்கவள் செல்லும் போதில்
பொற்புறு படாத்தின் நீங்கிப் பூண்முலை சிறிது தோன்றப்
பற்பகல் நோற்று வேண்டும் பரிசில்பெற் றுரை ஒத்தான்.

கற்பகத்தின் பூங் கொடியோலும் அழகுடைய ஓர் பெண்ணின் காதலில் ஒருவன் மூழ்கி, அதற்காக அவளுக்கு இரவும் பகலும் ஏவல் செய்பவன் அப்பெண் திருமணத்திற்குச் சென்றிடும்போது பொற்பமைந்த மார்பின் போர்வை நீங்கிச் சிறிது அவள் கொங்கை தோன்றிடுதலும் அதுகண்டு பற்பகலாக ஒருவன் தவம் செய்து, அதனுல் வேண்டிய பரிசை இன்று பெற்றுனை ஒத்து அம்மம்மா நமது ஏவலின் பலன் இன்று கிட்டியது என மகிழ்ந்திருந்தான். 88

ஒப்பிலா ஒருவேற்காளை ஒள்ளெயிற் நூறு தாங்கித்
துப்புறு பவளச் செவ்வாய் திறக்கலள் சொல்லும் ஆடாள்
அப்படி ஒருத்திசெல்ல அநங்கவேள் அமுதம் வைத்த
செப்பினிற் குறியுண் டாங்கொல் திறக்கலீர் சிறிது மென்றுன்.

ஒப்பிலாத ஓர் வேலைக் கைக்கொண்டதொரு இளைஞன் தனது கூரிய பல்லால் அவள் இதழில் கடித்த ஓர் புண்ணினைப் பெற்று அதனுல் செவ்விய பவள ஒளியுடைய வாயைத் திறந்திட முடியாதவளாகி சொல்லும் பேசிடமுடியாதவளாகி அப்படியான நிலையால் ஓர் பெண் சென்றிட, அதுபோது அந்த இளைஞன் சொல்வான் மன்மதன் தனது அமுதத்தை வைத்திட்ட செப்பிற்குத் திறப்பதற்கு ஓர் குறி இடமும் உண்டாமோ ஏன் வாய் திறவாது இருக்கின்றீர்கள் என்றுன். 89

புடைதனில் ஒருத்தல் புல்லப் போவதோர் பிடியின் மேவும்
மடவரல் வெருவ லோடும் மற்றது கண்டோர் வள்ளல்
இடையகல் தேரும் மாவும் யானையும் படையுங் கொண்டீர்
கடகரி ஒன்றற் கஞ்சுங் காரணம் யாதோ என்ருன்.

பெண் யானையின் பக்கராக வந்திடுகின்ற ஓர் ஆண் யானை, அப்பெண் யானையைத் தழுவிடச் செல்லலும்; அப்பெண்யானை மீதிருந்திடுகின்ற ஓர் பெண் அச்சம் கொள்ளுதலோடும், அதனைக் கண்ணுற்ற ஓர் சிறந்த ஆடவன் அவளைநோக்கி நீங்கள் இடையாகும் அகன்ற தேரையும் குதிரையையும் கொங்கை எனும் யானையுமான இத்தனை படையையும் கொண்டீர்களே! அப்படி இருப்பவும் மத யானை ஒன்றிற்கு நீர் அஞ்சலாமோ? எனக் கூறினன். 90

ஆழியில் அமுதம் பொங்கி அலையெறிந் தொழுகிற் றென்ன
ஏழிசை நரம்பு கொண்ட மகரயாழ் இசையப் பண்ணி
வேழமுந் தேரும் ஊர்ந்து விறலியரோடு பாணர்
நீழலும் பருந்து மென்ன நெறிப்பட இசைத்துப் போனர்.

கடலில் அமுதம் பொங்கி அலை எறிந்திடுதலைப் போன்று, ஏழுசுர இசைகொண்ட மகர யாழை இசைத்திட்டு, யானையையும் தேரையும் செலுத்திக்கொண்டு பாடினிகளோடு பாடகர்களும நிழலும் பருந்தும்போன்று சுருதி இசை தாளம் இவற்றிற்கு ஏற்ப இசைபாடிச் செல்கின்றனர். 91

வெங்கரி நுதலில் அப்பும் வீரசிந் துரம்வில் வீச
மங்கையர் மைந்தர் பூணும் படைகளும் வயங்க மாடே
தொங்கலுங் கவிகைக் காடுந் துவசமும் இருளைச் செய்யக்
கங்குலும் பகலும் மாலைக் காலமும் போலு மாதோ,

கொடிய மதயானையில் அப்பிய வீரசிந்தூரப்பொட்டு சிவந்த ஒளி வீசிடவும்: பெண்களும் ஆண்களும் அணிந்த ஆபரணமும் படைகளும் மிகு ஒளியுடன் பிரகாசமுற; பக்கராகத் தொங்கலும் குடைகளின் பெருக்கமும் கொடிகளும் இருளினைச் செய்திட; இப்படியாக இச்சேனையின் செலவு இரவும் பகலும் மாலைக்காலமும் ஒருங்கு கூடியது போன்றது. 92

கொக்கரை படகம் பேரி குடமுழாக் கொம்பு காளந்
தக்கைதண் ணுமைத டாரி சல்லரி நிசாளந் தாளம்
மெய்க்குழல் துடியே பம்மை வேறுபல் லியமுந் தாங்கி
மைக்கடல் வாய்விட் டென்ன வரம்பிலோர் இயம்பிப் போனர்.

கொக்கரை படகம் பேரிகை குடமுழா கொம்பு காகளம் தக்கை மத்தளம் தடாரி சல்லரி நீசாளம் தாளம், அழிவுருத இனிய ஓசையுடைய குழல் உடுக்கை பம்பை இன்னும் வேறுவேருன பல வாத்தியங்களையும் தாங்கி, இருண்ட கடல் வாய்விட்டது எனும்படி அளவிறந்தோர்கள் இவற்றை இயம்பிப்போகின்ருர்கள். 93

ஆரண முனிவர் தாமும் அமரரும் அகல்வான் செல்வார்
சீரணி முசுகுந் தன்மேல் திருமலர் சிதற லுற்ருர்
காரண மில்லா வள்ளல் கடிமணந் தாமுங் காண்பான்
தாரணி தன்னிற் செல்லுந் தாரகா கணங்கொ லென்ன.

வேதநெறி நின்ற முனிவர்களும் தேவரும் அகன்ற வான வழியாகச் செல்கின்ருர்கள், சிறப்புடண் விளங்கிய முசுகுந்தச் சக்கரவர்த்திமேல் சிறந்த பூக்களைச் சொரியலுற்ருர்கள். அச்செயலால் தமக்கொரு மூலகாரணமில்லாத வள்ளல் ஆறுமுக ஈசனுடைய திருமணத்தைத் தரிசிக்கும்பொருட்டு இப்பூமியில் சென்றிடும் நட்சத்திரங்களைப் போன்றனர், 94

இன்னன சனங்கள் ஈண்டி எங்குமாய் ஏகும் எல்லைத்
தன்னுறு கிளைஞர் தாமுந் தந்திரக் கிழவர் யாரும்
முன்னெடும் பின்னும் பாங்கு மொய்த்துடன் செல்லத் தானேர்
பொன்னெடுந் தேர்மேல் கொண்டு முசுகுந்தன் போத லுற்றான்.

அவ்வாறான நிலையால் சனங்கள் யாவரும் சேர்ந்து எங்குமாய்ப் பரந்து திருப்பரங்குன்றத்திற்குச் செல்கின்ற நேரத்தில், தன்னுடைய சுற்றத்தவரும் மந்திரிமார்கள் யாவரும் முன்னும் பின்னும் பக்கரிலும் மொய்த்து உடன் சென்றிட முசுகுந்தச் சக்சரவர்த்தி தான் ஓர் தேர்மேல் ஏறிக்கொண்டு செல்கின்றான். 95

### வேறு

அடவியும் இகந்தனன் அகணி நாட்டுடன்
இடையிடை அடுக்கலும் யாறும் நீங்கினன்
படர்தலும் அவன்வழிப் பரிதி நாயகன்
நடுவுறும் உச்சிமேல் நண்ணி னனரோ.

காடுகளையும் கடந்தான்; அகன்ற நாடுகளுடன் இடையிடையே காணப்பெறும் மலைகளையும் ஆறுகளையும் கடந்து நீங்கினவனாய் முசுகுந்தச் சக்கரவர்த்தி திருப்பரங்குன்றிற்கு வருதலும், அதுவேளை முசுகுந்தச் சக்கரவர்த்தியின் வழியாகச் சூரியதேவன் பகல் நடுவின் மத்தியான நேரத்திற்குச் சென்றிடும் உச்சிமேல் வந்து கொண்டான். 96

அண்ணலம் படைகளும் அளப்பின் மாக்களும்
உண்ணெகிழ் உவகையோ டொல்லை வந்திடத்
தண்ணிழல் வெண்குடைத் தரணி காவலன்
பண்ணவன் மேவுறு பரங்குன் றெய்தினன்.

மிகவும் உயர்வுடைய பெரும்படைகளும் அளவிறந்த சனங்களும் உள்ளத்துள் நெகிழ்ந்திடும் மகிழ்ச்சியோடு விரைவாக அவ்விடம் வந்திட எல்லார்க்கும் இன்பமாகும் குளிர்ச்சியைத் தந்திடுகின்ற வெண்கொற்றக்குடையுடைய பூமி காவலனாகும் முசுகுந்தச் சக்கரவர்த்தி எம்பெருமான் வீற்றிருந்தருளும் திருப்பரங்குன்றை அடைந்தான். 97

முசுமுக முடையவன் முன்னர் வந்துழி
வசுமதி இறைபுரி மன்னர் ஏவரும்
அசைவறு திருவொடும் அனிகந் தன்னொடுந்
திசைதொறுந் திசைதொறுஞ் சென்றங் கெய்தினர்.

குரங்கு முகமுடைய முசுகுந்தன் முன்னாக வந்துள்ளபோது பூமியை அரசாண்டிருக்கும் மன்னர் எல்லோரும் அசைவிலாத உத்தமமாகும் செல்வவளத்துடனும் சேனையுடனும் திருப்பரங் குன்றத்தின் நான்கு புறத்திலுமுள்ள திக்குகள் தோறும் திக்குகள் தோறும் சென்று சேர்ந்துகொண்டனர் 98

முறைநெறி யாற்றிடும் முசுகுந் தன்முதல்
இறையவர் யாவரும் ஈண்டு தானையுங்
குறைதவிர் சனங்களுங் குன்றஞ் சூழ்ந்துற
நிறுவினர் ஒன்றிய நெஞ்சங் கொண்டுளார்.

உலகில் உயிர்கள் யாவரும் இன்புறுமாறு முறையானதொரு நீதியைப் பரிபாலித்திடும் முசுகுந்தன் முதல் அரசர்கள் யாவரும் அங்கு சேர்ந்த சேனையும் குறை தவிர்ந்த சனங்களும் மலையைச் சூழத் தாம் தங்கி நின்றார்கள். எல்லோரும் அன்பினால் ஏகமனதான நிலையைக் கொண்டனர். 99

புழையுறு கரங்களாற் போத கஞ்சில
உழைவரு பிடிதனக் கும்பர் தாருவின்
குழைகளை முறித்தன கொடுத்துக் கோட்டினுன்
மழைமுகில் கீறியே வாரி நல்குவ.

துளையுடைய துதிக்கைகளால் சில ஆண் யானைகள் அன்பினல் தனது பக்கர் வந்திடுகின்ற பெண் யானைக்கு வானில் வளர்ந்து நின்ற மரங்களிலுள்ள குளைகளை முறித்துக் கொடுத்துப் பின்னர் தமது கொம்பினல் மேகங்களைக் கிழித்து அங்குள்ள நீரை எடுத்து அப்பெண் யானைகட்குக் கொடுப்பன. 100

படர்சிறை நீங்கிய பராரை வெற்பெலாம்
அடிகளின் ஒற்றியே அசைந்து போந்தெனக்
கடிகமழ் மும்மதக் கரிகள் ஓர்சில
விடலருந் தளையொடு மெல்லச் சென்றவே.

பறத்தற்கு உதவுகின்ற சிறகுகள் நீங்கிய பெருமலைகள் யாவும் கால்கள் பெற்று நடந்து வந்தது எனும்படி, வாசம கமழ்ந்திடும் மும்மதம் பொழியும் யானைகள் ஓர் சில நீக்கிடமுடியாத சங்கிலிப்பூட்டின் தொடர்புடன் மெல்லமெல்ல சென்றன. 101

மூடுறு கணமுகில் முழக்க றுததோர்
கோடுயர் குன்றினைக் குறித்து நோக்கியே
ஈடுறு திசைக்கரி ஈதென் றுன்னியே
ஓடுவ ததன்மிசை ஒன்றொர் யானையே.

மூடி நின்றிடுகின்ற கருமுகில்களின் முழக்கம் குறைந்திடாதவொரு மிக உயர்ந்த மலையினை நோக்கியே இது பெருமை மிகுந்த திக்குயானையோ என்று எண்ணி அதனுடன் போரிடும்படி ஒவ்வொரு யானையும் ஓடித்திரிவன. 102

வேறு

கலையகல் அல்கு லார்பாற் காதலான் முயங்கி வல்லே
உலைவுறு சேக்கைப் போரில் உடைந்திடு குமர ரேபோல்
மலைபொரு பிடிக ளோடு மலைந்துதம் மதநீர் சிந்தி
நிலையழி வெய்தி வெள்கி நின்றதோர் நெடுநல் வேழம்.

கலையகன்ற அல்குலுடைய பெண்கள்மேல் காதலால் உறவுகொண்டு உலைவுற வைக்கும் புணர்ச்சி எனும் போரினில் (உடலுறவு கொண்டிடும்போது கொள்கின்ற வீரிய நிகழ்ச்சியில்) அப்பெண்களுடன் இன்பநிலை நீடித்திடாது உடைவுண்டு வீரியம் சிந்தித் தளர்ந்து கொள்ளும் இளைஞர்களைப்போன்று, மலையொத்த பெண் யானைகளோடு மலைவுற்றுத் தமது மதநீரையும் சிந்தித் தமது நன்னிலையும் அழி வெய்தி நின்றிடுகின்றது ஓர்நெடிய நல்ல யானை. 103

உடம்பிடி புரையும் ஒண்கண் மோகினி யொருத்திக் காகத்
திடம்படும் அவுணர் யாருந் திரண்டுடன் சென்ற வாபோல்
மடம்படு பிடியொன் றேக மையல்மேல் கொண்டு மாடே
கடம்படும் ஒருத்தல் வேழங் கணிப்பில படர்ந்த அன்றே.

வேலினை ஒத்த கூரிய கண்ணைக் கொண்ட மோகினி ஒருத்திக்காக, வேண்டித் திடம்கொண்ட அசுரர் யாவரும் திரண்டு மோகினியின் பின் சென்றவாறுபோல; மதம்கொண்ட பெண்யானை ஒன்று சென்றிட அதன்மேல் மையல்கொண்டு அதன் மருங்கில் மதப்சொரியும் ஆண் யானைகள் அளவிறந்தன செல்கின்றன. 104

காழுற்ற தந்தம் மின்னக் கபோலத் துமதநீர் வீழ
ஊழிப்பேர் உருமுத் தன்னை உமிழ்ந்தென ஒலிமீக் கொள்ளக்
கேழுற்ற மணிவில் என்னக் கிளர்நுதல் ஓடை பொங்க
வேழத்தின் நிரைக ளெல்லாம் மேகம்போ லுலாவு கின்ற.

வலிகொண்ட தந்தம் மின்னிடவும், நெற்றியால் மதநீர் வடிந்திட ஊழிக் காலத்து மேகம் இடியினைக் கக்கும்போது முழங்குதலை ஒத்த ஓசைமேற் கொண்டிட; சிறப்புற்ற இந்திரவில் எனும்படி நெற்றியின் ஓடைபொங்கிட; விளங்கிடும் இத்தன்மையால் யானைகளின் கூட்டமெல்லாம் மேகம்போல் உலவிடுகின்றன. 105

இருநெடு விசும்பிற் செல்லும் எழிலியை எயிற்றுற் பாய்ந்து
சொரிதரு புனலை வாரித் துதிக்கையால் வீசுகின்ற
பருமணி யோடை யானை பாய்திரைப் பரவை ஏழுங்
கரதலம் எடுத்துச் சிந்துங் கண்ணுதற் களிறு போலும்.

மிகப் பெரிய வானில் சென்றிடும் மேகங்களைப் பருத்தமணிகள் தூங்கிடும் ஓடையினையுடைய யானைகள் பாய்ந்து கொம்பால் குற்றி அதனால் அம்மேகத்தினின்றும் சொரிகின்ற நீரைத் துதிக்கையால் அள்ளிவீசுகின்றன. அச்செய்கையால் அந்த யானைகள் இந்தச் சமுத்திரங்கள் ஏழினையும் தந்து திருக்கைகளில் எடுத்து வீசுகின்ற நெற்றிக் கண்ணுடைய விநாயகப் பெருமானைப்போன்று அந்த யானைகள் விளங்குவன. 106

கன்றொடு பிடிகள் சூழக் கடாம்படு கைம்மா ஒன்று
நின்றிடு கந்திற் சேர்ந்து நிகளத்தோ டமர்ந்த நீர்மை
குன்றுகள் புடையிற் சுற்றக் குருமணி நீலப் பொற்றை
ஒன்றொரு தமிய தாகி உற்றவா றொத்த தம்மா.

யானைக் கன்றினுடன் பெண் யானைகளும் சூழ்ந்திடும்படியாக முகபடாமுடைய ஆண்யானை ஒன்று அங்கு கந்தில் சேர்ந்து சங்கிலியுடன் அமர்ந்திருந்த தன்மை யானது. சில மலைகள் புடைசூழ்ந்திட சிறப்பால் மிகுந்த இந்திர நீலமலையொன்று தான் ஓர் தனிமலையாக உற்ற தன்மைபோன்று இருப்பது. 107

எருத்தமேல் இடிக்கும் பாகர் இசைக்குறி கொள்ளா தாகி
மருத்தினும் விசைமேற் கொண்டு வன்கரித் தண்ட நோக்கி
உருத்திடு கொடுஞ்சொல் தாயர் ஒறுக்கவும் ஒருவன் மாட்டே
கருத்துறு கணிகை நெஞ்சிற் போவதோர் கடுங்கண் வேழம்.

தனது எருத்தின்மேல் அங்குசத்தால் இடிக்கின்ற பாகருடைய சொல்லினை ஏற்றுக்கொள்ளாததாகிக் காற்றிலும் பார்க்க விசைகொண்டு மிகுவன்மையுடைய யானைக்கூட்டத்தினை நோக்கிப் போகின்றது ஓர் கொடுங்கண்ணுடைய ஆண்யானை. இது எப்படியிருப்பதென்றால் உடலை விற்றுண்ணும் கொடுமையுடைய நல்ல தாய்மார்கள், ஒரு நாயகனிடத்தில் மனம்கொண்ட ஓர் உத்தம மகளான வளைப் பொருளுக்காக வேண்டி வேறு பலருடன் உடலுறவு கொள்ளும்படி துயருறுத்தித் தூண்டுகின்ற போதும், அத்தாயர் சொற்கேளாது தனது ஒரே நாயகனிடத்து அன்புகொண்டு அவனையே விரும்பி அடைபவளை ஒத்திருப்பது. 108

தூவகங் கொண்ட செங்கேழ் அங்குசந் தூண்டு பாகர்
நாவகங் கொண்ட சொல்லான் நவிற்றுமந் திரத்தால் வாக்கால்
பாவகங் கொண்ட பைங்கட் பாரிடம் வழிப்பட் டாங்குச்
சேவகங் கொண்ட பொங்கர் சேர்ந்தன சிலகைம் மாக்கள்.

பூமாலை கொண்ட சிவந்த வண்ணமுடைய அங்குசத்தைச் செலுத்திடுகின்ற யானைப்பாகர்கள், நாக்கினிடத்தாகக்கொண்ட சொல்லாலும், செபித்திடும் மந்திரத்தாலும் வாக்காலும் நெருப்பினைப்போன்ற பசிய கண்ணுடைய பூதங்கள் வழிப்படும் தன்மைபோன்று தாங்கள் சேவகம்கொண்ட சோலையிடத்துச் சேர்ந்துகொண்டன சில யானைகள். 109

அந்தமி லாத செல்வத் தவுணருக் கரசன் முன்னம்
வெந்திறற் கால்கள் தம்மை வியன்சிறைப் படுத்தி யென்னக்
கந்திடைப் பிணிக்கப் பட்ட கடுநடைப் புரவி யெல்லாம்
பந்தியில் ஒழுங்கு கொண்டு நின்றன பாங்க ரெங்கும்.

எல்லையிலாத செல்வமுடைய அசுரர்கட்கு அரசன் சூரபன்மன் கொடிய திறல் உடைய வாயுக்களைக் கொடிய சிறையிட்டு அடைத்து வைத்திடுதல்போன்று, கழுத்தில் கந்துக்களால் பிணிக்கப்பட்ட வேகமுடைய நடைகொண்ட குதிரைகள் எல்லாம் பந்திபந்தியாக ஒழுங்குகொண்டு மலையின் பக்கராக எங்கும் நின்றன. 110

வீரவேல் தடக்கை வள்ளல் விழாவினைக் காண விண்ணோர்
ஊரொடு திசையும் ஏனை உலகமும் ஒருங்குற் றென்னக்
காரினும் ஒலிமேல் கொண்ட கலினவாம் புரவி பூண்ட
தேர்நிரை அநந்த கோடி செறிந்தன திசைகள் எங்கும்.

வீரவேலினைத் திருக்கரத்து ஏந்திய ஆறுமுகப்பெருமானின் திருமண விழாவினைக் காணும்படி தேவர்களின் உலகம் முழுவதுடன் திக்குகளிலுள்ள இடங்களின் உலகுகள் ஏனைய உலகுகளும் ஒருங்குடன் வந்ததென்ன மேகத்திலும் பார்க்க ஓசை மேல் கொண்டுள்ள கடிவாளமுடைய குதிரை பூட்டிய தேர்கள் அநந்த கோடிகள் திருப்பரங்குன்ற மலையின் நான்கு திசையிலும் வந்து நின்றன. 111

விடங்கெழு வேற்கணாரும் வெலற்கரும் வீரர் தாமும்
தடங்கெழு தானை வெள்ளத் தலைவரும் ஏனையோரும்
இடங்கெழு துளைத்துன் னூசி இழைதொடுத் திசைக்கப்பட்ட
படங்கெழு மாட கூடத் தாவணம் பரவிப் புக்கார்.

நஞ்சுகொண்ட வேல்போலும் கூரிய கண்ணுடைய பெண்களும் வெல்லற்கரிய வீரரும் ஆகிய யாவரும், நிலைகொண்ட சேனை வெள்ளங்களின் தலைவரும், ஏனையோரும் வலிமைகொண்ட துளையினையுடைய ஊசியால் தைத்து இழைதொடுத்திச் சேர்க்கப் பட்ட சீலைகளால் செய்து அமைக்கப்பட்ட மாடகூடங்களின் வீதிகளில் பரவலாய்ச் சென்றனர். 112

கன்னெடுந் தாரை கான்ற கார்முகில் வளைப்பச் செங்கண்
முன்னவன் நிரையைக் காத்த முதுவரை நிலைய தென்னப்
பன்னிறப் பசுங்காய் சிந்தும் பழுமரக் காமர் காவுட்
பொன்னிவர் புனைமாண் கோயில் புரவலற் கமைந்த தன்றே.

கல்போல் நீண்ட மழைத்தாரைகளைச் சொரிகின்ற கருமேகங்கள் சுற்றி வளைத்திட, அதன் நடுவே கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த செங்கண்ணனை கிருஷ்ணபகவான் பசுநிரைகளைக் காத்ததன்மைபோன்று பல வர்ணமான பசிய காய்கள் தூங்கிடும் அழகிய பெருமரங்கள் கொண்ட சோலையின் நடுவிலே பொன்னாக அமைந்ததொரு கோவில் அங்குவரும் அரசர்க்கென அமைந்துள்ளது. 113

முத்தமுந் துகிரும் பொன்னும் முழுமணிக் கலனுஞ் சந்துஞ்
சித்திரப் படமும் மற்றுந் தெற்றிமேல் நிரைத்துச் சீர்சால்
உத்தம வணிகர் உற்றூர் உணர்ச்சியுங் கற்புந் தூக்கி
அத்தகு பொருளை யார்க்கும் அளித்திடுங் கொடையி னோர்போல்.

முத்தும் பவளமும் பொன்னும் முழு இரத்தினங்களாலாய அணிகலன்களும் சந்தனமும் சித்திரப் படங்களும் ஆனவை எல்லாவற்றையும் திருவீதிபோயில் நிரைநிரையாக வைத்துச் சீரும் சிறப்புமுள்ள உத்தம வணிகர்கள் அங்கு வியாபாரம் செய்வராகி அமர்ந்திருந்தார்கள். அவர்கள் நிலையை அவதானித்தால் இவர்கள் வியாபாரம் செய்பவர்கள் அல்ல ஒருவருடைய உள்ளப்பாங்கையும் விருப்பத்தையும் அறிந்து அவர்க்கு ஏற்ற பொருளினை எவர்க்கும் கொடுத்திடும் கொடையாளிகளைப்போன்றிருப்பவர்கள். 114

மடப்பிடி மான்தேர் நீங்கி வானிடைத் தவறி மின்னின்
கொடித்திரள் செல்லு மாபோல் குவலயம் படர்ந்து பொங்கர்
இடத்தினில் ஒதுங்கி வெற்பின் எதிரெதிர் கூவி மஞ்ஞை
நடித்திடும் ஆடல் நோக்கித் திரிந்தனர் நங்கை மார்கள்.

மடம்கொண்ட பெண்யானையிலிருந்தும் தேர்களினின்றும் இறங்கிக் கூட்டாகச் சேர்ந்து வானில் நின்றும் தவறுண்டு பூமியில் மின்னற் கொடிகள் சென்றிடும் இயல்புபோல் இப்பூமி எங்கும் அழகின் ஒளியால் படர்ந்து பொங்கிடும் சோலையில் ஒதுங்கியும் மலையிடத்து எதிரொலி கேட்டு மகிழக்கூவியும் மயில்கள் நடமாடும் சிறப்புக்களை நோக்கியும் திரிந்தார்கள் அழகுடைய மங்கையர்கள். 115

கோலொடு வில்லும் வாளுங் குந்தமும் வயங்கப் பாத
சாலமுங் கழலும் ஆர்ப்பத் தபனிய மணித்தார் தாழச்
சோலையின் உலவிச் சாரல் அருவியுஞ் சுனையுங் கண்டு
மால்கரி மலையும் நோக்கி மடங்கலில் திரிந்தார் மைந்தர்.

அம்புடன் வில்லும் வாளும் குந்தப்படையும் விளங்கிட பாதசாலமும் கெண்டையும் ஆர்ப்பரித்திட பொன்னாலான முத்துமாலை தாழ்ந்திட விளங்கும் திருக்கோலமுடைய ஆண்கள் சோலைகளில் உலாவியும், மலைச்சாரலின் அருவியாறும் சுனைநீரும் கண்டும்; மத யானையின் போரினை நோக்கியும், சிங்கம்போல் சுறுசுறுப்புடன் திரிந்தார்கள். 116

தாரிடைப் படிந்த வண்டு தடமலர்க் குவளை சேர
வாரிடைப் படிந்த கொங்கை மாதரும் மைந்தர் தாமும்
ஊரிடைப் படிந்த செங்கேழ் ஆதவன் உருப்பந் தீர
நீரிடைப் படிதல் வேட்டு நெடும்புனல் துறையில் வந்தார்.

தாங்கள் அணிந்துள்ள மாலையில் படிந்த வண்டு தடாகத்தில் மலர்ந்த குவளைப்பூவில்சேர வார் இறுக்கிட விளங்கும் கொங்கையையுடைய பெண்களும், அவர் காதலர்களும் வானில் திகழ்ந்திடும் செங்கிரணமுடைய சூரியனுடைய வெயில் வெப்பம் தீர்ந்திட நீரிடை படிந்து நீராட விரும்பி நெடிய நீர்ப்பெருக்கெடுக்கும் துறைகளில் வந்துகொண்டனர். 117

வெண்ணிற முகிலின் உம்பர் விஞ்சையர் வேந்தர் தாமும்
ஒண்ணுதல் அணங்கி னேரும் ஒருங்குடன் திரண்ட தென்னக்
கண்ணகல் தடாகம் புக்க கனங்குழை மகளிர் மைந்தர்
தண்ணுறு புனல்பாய்ந் தாடித் தலைத்தலை திரிதல் உற்றார்.

வெண்ணிற முகில்மேல்சென்றிடும் விஞ்சையர்களின் வேந்தரும் அழகிய நெற்றியுடைய பெண்களும் ஒருங்குடன் திரண்டு கொண்டனர் எனும்படியாக, அகன்ற தடாகத்தில் புகுந்துகொண்ட அழகிய காதணிகளையுடைய மகளிரும், ஆடவர்களும் குளிர்ச்சியுற்ற நீரில் பாய்ந்து நீராடித் தலைத்தலை அங்கு திரிதலுற்றனர். 118

கழியுண்ட உவரிக் கானற் கடைசியர் நாட்டம் அஞ்சிப்
பழியுண்டு மறைந்த வாபோல் ஒருசிறை பயிலு நெய்தற்
குழியுண்ட போதை நோக்கிக் குரைபுனல் தடத்துக் கம்மா
விழியுண்டு கொல்லோ என்றே கொழுநரை வினவு கின்றார்.

கழியுடைய உவர் நிலத்தின் கானல்கொண்ட இருப்பிடங்களில் வசிக்கும் பெண்களின் கண்ணின் சிறப்பிற்கு பயந்து பழியடைந்து மறைந்தவாறு போன்று ஒரு புறமாகச் சாய்ந்து நின்ற ஆம்பல் பூவை அங்கு நீராட வந்த பெண்கள் நோக்கித் தமது கணவன்மாரைப் பார்த்து அம்மவோ! இக்குளத்திற்கும் விழிகள் உண்டாமோ? எனக் கேட்கின்றனர். 119

பங்கயம் வதனம் என்பார் பாசியைக் கூந்தல் என்பார்
செங்கிடை அதரம் என்பார் புள்ளொலி செப்பல் என்பார்
சங்கினைக் களமே என்பார் தடாகமும் ஒருத்தி யல்ல
மங்கையர் பலரே என்பார் திரைகளை மணித்தூ சென்பார்.

தாமரைகளை முகம்எனச் சொல்வார், பாசியைக் கூந்தலென்பார், செங்கொடியை சொண்டு என்பார்கள். பறவை ஓசையை பேசுதல் என்பார், சங்கினைக் களுத்தென் பார்கள். குளத்தின் திரைகளை இரத்தினம் போலும் பெண்கள் உடுத்திய ஆடை யென்பார்கள். இப்படியாக இக்குளம் ஒருபெண்ணல்ல பல மங்கையராகுமென் பார். 120

தத்தையை யனைய சொல்லாள் ஒருத்திதன் நீழல் தன்னை
அத்தடந் தன்னில் நோக்கி அளியனை அறியா தீண்டோர்
மைத்தடங் கண்ணி ணளை மருவினை என்று கேள்வன்
கைத்தலந் தன்னை விட்டு வெகுண்டனள் கரையிற் போனாள்.

கிளிப்பிள்ளையைப்போன்ற சொல்லினை உடைய ஒருபெண் தனது நீழலை தான் நீராடிய அக்குளத்தில் நோக்கி உடன் தனது கணவனைப்பார்த்து என்னை அறியாது இவ்விடத்தில் ஓர் மைதீட்டிய கண்ணுடையாளை நீமருவிக் கொண்டாய் என்று தனது நாயகனின் கையணைப்பை விடுத்து வெகுண்டு கரையில் போயினாள். 121

குளத்திடைப் புனல்வாய்ப் பெய்து கொப்பளித் திடுவான் தன்மேல்
உளத்திடை வெகுளி யெய்தி ஊடினள் ஒருத்தி ஏகி
முளைத்திடு கமலக் கானின் முகமலா வுறுப்பு முற்றும்
ஒளித்தனள் நிற்ப நாடிக் காண்கலன் உலைதல் உற்றான்.

குளத்தின் நீரை வாயில்கொண்டு ஒருவன் கொப்பளித்திடும்போது அந்நீர்தன் மேல் படுதலாலே உளத்திடை கோபங்கொண்டு வெறுப்புற்ற ஒருத்திசென்று முளைத் தெழுந்த காடுபோலும் தாமரைப் பூக்களின் நடுவில் தனது முகம் நீங்க மற்றை உறுப்புக்கள் முழுவதையும் நீரினுள் ஒளித்தவாறு நிற்ப, தனது மனைவியை அவன் எங்கும் தேடியும் காணமுடியாது தவிப்புடன் நின்றான். 122

தாம்பெறு கொழுநர் தம்மைத் தத்தமக் குரிய புத்தேள்
ஆம்பரி சுன்னுந் தன்மை ஐயம தில்லை யென்னக்
காம்புறழ் தடந்தோள் நல்லார் கணவர்மேற் கரத்தால் அள்ளிப்
பூம்புனல் வீசு கின்றார் பூசனை புரிகு வார்போல்.

இன்னும் சிலபெண்கள் தாங்கள் பெற்றுள்ள கணவன்மாரை தத்தமக்கு உரிய கடவுளாம்பரிசாக நினைக்கின்றார் என்னும் தன்மை இவர்களது செயலால் உண்மை யாகிறது போலும். இதற்கு ஏதுமொரு சந்தேகமுமில்லை என்று சொல்லும்படியாக; அழகுடன்திரண்டு மூங்கில்தண்டை ஒத்திருக்கின்ற பருத்த தோளுடைய பெண்கள் தங்கள் கணவன்மார்மேல் கைகளால் அள்ளி பூக்கள் போல்மிருதுவான நீரைச் சொரிந்திடுகின்றார்கள் அவர்களைப் பூசனை புரிவாரைப்போன்று. 123

ஞெண்டொடு வராலுஞ் சேலும் யாமையும் நிலாவெண் சங்கும்
புண்டரீ கத்த டாகங் குடைந்திடும் பூசல் அஞ்சித்
தெண்டிரை அமுதச் சொல்லார் சிற்சில உறுப்புத் தன்னைக்
கண்டுகண் டிரிவ தென்னத் திரிவன கலக்க மெய்தி.

நண்டுடன் வரால்மீனும் சேல்மீனும் ஆமையும் ஒளியுடைய வெண்சங்கும் தாம ரைக் குளத்தில் குளித்து நீராடி இவர்கள் நிற்கின்ற ஆரவாரத்தில் அச்சமுற்று அங்குள்ள தெள்ளிய பாற்கடலிற் தோன்றிய அமுதம்போலும் சொற்களைப் பயின் றிடும் அங்குநின்ற பெண்களது சிற்சில உறுப்புக்களைக் கண்டு நாணி ஓடிப்போவது போன்று அவதியுடன் ஓடிச்செல்வன். 124

ஏந்திழை மகளிர் தாமும் மைந்தரும் இருநீர் தன்னுட்
பாய்ந்தன ராடும் எல்லைப் பங்கய விலைக டோறுஞ்
சேர்ந்திடு திவலை ஈட்டஞ் சிறந்தவர் சேர்த லாலே
பூந்தடம் பொய்கை யாக்கை பொடித்தன போலும் அன்றே.

அழகிய ஆபரணங்களைப் பூண்ட பெண்களும் ஆடவர்களும் பெரிய நீரினிடத் தாகப் பாய்ந்து நீராடுகின்றபோது தெளித்துச் சென்றிடுகின்ற நீர்த்துளிகளின் தொகுதிகள் அங்குள்ள தாமரை மலரின் இலைகள்தோறும் எப்படி இருப்பதென்றால் சிறந்தவரான மக்கள் இங்கு சேர்ந்து கொள்ளலாலே பூக்கள் நிரம்பிய அத்தடா கமும் தனது உடலம் கூச்செறிந்துள்ளதுபோன்றிருப்பது. 125

நோக்கினும் நுழைகு றாத நுண்துகில் மறைத்த அல்குல்
தேக்குதண் பொய்கை யாடுஞ் செவ்வியில் தெரியத் தோன்ற
நீக்கரும் பெருநாண் கொண்டு நின்றிடா தொருத்தி யோடித்
தாக்கணங் கென்னப் போய்த்தன் கொழுநனைத் தழுவி
கொண்டாள்.

நோக்கினாலும் பார்வைக்கு அகப்படாது மிகு மெல்லிய சீலையை உடுத்து அத னால் மறைந்த ஓர் பெண்ணின் அல்குல் நீர்தேக்கிய தடாகத்து நீராடும்போது தெரியும்படி தோன்றுதலும் அதுபோது அவள் நீக்கமுடியாத பெருநாண்கொண்டு அங்கு நின்றிடாது ஓடிச்சென்று; ஒருவனைப் பற்றிடும் பேய்போன்று; தனது கணவனை இறுகத் தழுவிக்கொண்டாள். 126

உட்டெளி வில்லா நங்கை ஒலிபுனல் தடத்தின் ஆடுங்
கட்டழ குளதோர் காளை கவிரிதழ் வெழுப்பு நோக்கிக்
கிட்டியான் நிற்க உன்றன் கேழ்கிளர் அதரத் தெச்சில்
இட்டனள் யாரிங் கென்னு வெகுளிகொண் டிகலிப் போனாள்.

உள்ளத்து தெளிவிலாத ஓர்பெண் இரைகின்ற நீருடைய குளத்தில் நீராடுகின்ற மிக அழகுடையதொரு இளைஞன் ;நீராடியமையால் அவனது முருக்கப்பூப்போன்ற சொண்டின் வெளுப்பை நோக்கி ; சொல்கின்றாள் உனக்கு வாய்த்த ஒருபெண்ணாக நான் உனது அருகில் இருக்கவும் அதுவேளை சிறப்புற்ற உனது சொண்டினைச் சுவைத்து தன் எச்சிலை அதன்பால் தோய்த்தவள்யார் என்று கோபத்தால் சண்டையிட்டு அவ்விடம் நீங்கி அப்பால் போனாள். 127

வேறு

வெளுத்தன சேயிதழ் விழிசி வந்தன
அளித்தொகை எழுந்தன அளகஞ் சோர்ந்தன
குளித்திடு மலர்த்தடங் கொடிய னார்க்கெலாங்
களித்திடு கணவருங் கள்ளும் ஒத்ததே.

தடாகங்களில் நீராடிய பெண்களுக்கெல்லாம் சிவந்த சொண்டுகள் வெளுத்தன; கண்கள் சிவப்புற்றன; வண்டுகள் மொய்த்தெழுந்தன; கூந்தல் சோர்ந்தன: இப் படியாக நீராடிய குளம் தங்கள் கணவன்மாருடன் சேர்க்கைகொண்ட நிலையையும் கள்ளை உண்டநிலையையும் ஒருங்கே காட்டி அந்த குறிப்பை ஒத்திருந்தது. 128

பையர வல்குலார் படியும் பான்மையால்
துய்யதோர் குமிழிகள் செறிந்து தோன்றுவ
வையபூந் தடமெலாம் அவரை நோக்குவான்
மெய்யெலாம் விழிகளாய் விழித்தல் போன்றவே.

பாம்பின்படம் போன்ற அல்குலை உடைய பெண்கள் நீராடிய பான்மையால் மிகத் தூய்மையான குமிழிகள் அத்தடாகத்தில் தோற்றுவன எப்படி இருப்பதெனில் அப்பெண்களின் அழகையும் எழிலையும் கண்டு கொள்வதற்கு அப்பூந்தடாகமானது தனது மேனி எல்லாம் கண்ணுக வடிவம் கொண்டு அவர்களை நோக்கி இன்புறுதல் போன்றது. 129

மன்னரும் மகளிரும் படிந்த வாசநீர்
செந்நிறக் குங்கும நானஞ் சேர்தலான்
மின்னெடு கூடிய முகிலு மெல்லியல்
பொன்னெடு கூடிய மாலும் போலுமால்.

வீர இளைஞர்களும் இளைய பெண்களும் படிந்து நீராடிய வாச நீராயது அவர்கள் நீராடும் பொழுது அணிந்துள்ள வாசக் கலவை அந்நீரில் சேர்தலால் அத்தடாகத்தின் காட்சி மின்னலொடு கூடிய முகிலும்; மெல்லிய இயல்புடைய மகாஇலக்குமியுடன் கூடிய நாராயணப் பெருமானையும் போன்றிருப்பது. 180

வேறு

பூசு சாந்தமும் நானமும் பொய்கையில்
வாச நீரெங்கு மாகி மணங்கமழ்ந்
தாசை யெங்கும் உலாவி அவ்வானவர்
நாசி யூடு மடுத்து நடந்தவே.

இவர்கள் பூசுகின்ற சந்தனமும் நீராட்டுக்குழம்பும் எங்கும் வாசநீருடைய பொய்கையில் கலந்து மணம் கமழ்ந்து திக்கு எங்குமாகி அவ்வாசனை உலாவி அத்தேவர்களது நாசியூடும் வாசமுற மணம்நிறைத்து அப்பாலும் அந்த வாசனை போயது. 131

இன்ன தன்மையில் ஏர்கெழு மைந்தரும்
அன்ன மென்னடை யார்களும் அந்தடந்
தன்னின் ஆடித் தடங்கரை ஏறியே
பொன்னின் மாண்கலை பூணெடு தாங்கினர்.

இன்னதன்மையில் ஏர்கொண்ட அழகுடைய ஆடவர்களும் அன்னப் பறவை போன்ற நடையுடைய பெண்களும் அக்குளத்தில் நீராடி மகிழ்ந்து எழுந்து பெரிய கரையில் ஏறிச்சென்று அங்கு பொன்னிலான பட்டாடையை நல்ல ஆபரணங்களுடன் அணிந்தார்கள். 132

வெளிறு மென்னகை மெல்லியல் மாதரும்
ஒளிறு மேனி உவாக்களும் ஒன்றியே
பிளிறு மையற் பிடியும் பெருமதக்
களிறு மென்னக் கடிபொழில் ஏகினர்.

வெள்ளிய மென்மையான சிரிப்புடைய மிருதுவான பெண்களும் பிரகாசமுடைய உடலம்கொண்ட ஆண்களும் நீராடி எழுந்து களிப்புற்று கைகோர்த்து ஒருமித்து; பிளிற்றோசையுடைய மையல்கொண்ட பெண்யானையும் பெருமதம் பொழியும் ஆண் யானையும் அணைவுற்றுச் செல்வதை ஒத்து; வாசனை தருகின்ற பூமரங்களுடைய சோலையினுட் போயினர்கள். 133

ஏகி னார்க்கவ் விரும்பொழில் மீச்செறி
மேக சாலமும் மீன்தொகை ஈண்டிய
மாக நாடும்அவ் வானவர் வந்துசேர்
போக பூமிப் பொதும்பரும் போன்றதே.

அவ்வாறு சென்ற மகளிர்க்கும் மைந்தர்க்கும் அந்த பெரும் சோலையாயது மேகக் கூட்டமும் நட்சத்திரங்களும் நெருங்கி உறைகின்ற வான உலகமும்; அத்தேவர் விரும்பிச் சேர்கின்ற போகபூமியிலுள்ள கற்பகச் சோலையும் போன்று போக இன்பங்கட்கு ஏற்றதொரு இடமுமாகியது போன்று விளங்கியது. 134

பளிங்க டுத்திடு பாங்கரின் வேங்கைவீ
விளங்கு சாயையை மெய்யென நோக்கியிக்
குளங்கொள் பூமலர் கொய்துநல் கீரெனத்
தளர்ந்தொ ருத்தி தலைவனை வேண்டினள்.

பளிங்குக் கண்ணாடியை ஒத்து விளங்கிடும் குளத்தின் மருங்கு நின்ற கொன்றை மரப் பூவிளங்குகின்ற அதன் பொன்னொளியை உண்மைஎன நினைந்து இதோ இக் குளத்தில் பொன் ஒத்த பூக்கள் மலர்ந்துற்றன. என்ன அற்புதம்! என அப்பூவின் சாயைமேல் மோகமுற்று இப்பூவை பிடிங்கித்தாரும் என்று மிக்க தளர்வுடன் தனது தலைவனை ஒரு பெண்வேண்டிக்கொண்டாள். 135

அங்கொ ருத்தியை நோக்கியோ ரண்ணலுன்
கொங்கை யொத்திடாக் கோங்கலர் கொள்கென
வெங்கை தன்முலைக் கொப்பதென் றெண்ணியோ
செங்கை யாற்பறித் தீரென்று சீறினாள்.

அச்சோலையூடாகச் செல்கின்ற ஒருத்தியை அவளது தலைவவன் நோக்கி இதோ உனது கொங்கையை ஒத்திருக்கின்ற கோங்கம் மலர்கள் இவைகளை நீ வைத்திருப்பாய் என அன்பாக கொடுத்திடும்போது; அவள் அவனைநோக்கி என்ன நினைத்தாய் இந்தமலர் இளையாளின் முலைக்கு ஒப்பாகுமென்று அவளிடம் கொடுப்பதற்குகெண்ணியோ உனது செங்கையால் பறித்தெடுத்தாய் எனக்கூறி சீற்றம்கொண்டாள். 136

வேறு

மலர்ந்த வாள்முக மங்கையர் நோக்கலும் வறிதாய்ப்
புலர்ந்து நின்றிடு தருக்களும் பொலிவினை யெய்தி
அலர்ந்த வேயெனின் ஆடவர் தங்களை அன்னார்
கலந்த போதுறு மின்பமார் கட்டுரைத் திடுவார்.

மலர்ச்சியுடைய ஒளிதிகளும் முகங்கொண்ட பெண்கள் நோக்கவும் அவர்களது பார்வையால் முன்னர் வறிதே வாடிநின்ற மரங்களும் பொலிவினை அடைந்து மலர்ந்தன என்றால்; அப்பெண்கள் ஆடவர்களை உடலுறவால் கலந்திடும்போது ஆடவர் பெறுகின்ற இன்பம் எத்தகையதாக இருக்கும் என எடுத்து ஓதிட வல்லமை உடையார் யார்? ஒருவராலும் முடியாது, 137

மேற்ற லத்தெழு தாரகை மேதினி வரைப்பில்
தோற்று காட்சியோ இங்கிவை என்னவோர் தோன்றல்
கூற்ற மன்னவேற் கண்ணிநின் கூரெயிற் றிற்குத்
தோற்ற முல்லையின் அரும்புகாண் இவையெனச் சொன்னான்.

மேல்தலமான வானில் எழுந்திடும் வெள்ளிகள் இப்பூமியின் எல்லையிலும் தோன்றுகின்ற காட்சியாமோ இங்கு இவைகளாகும் என்று ஓர் தலைவன் எண்ணி தனது தலைவியைநோக்கி இயமனை ஒத்த வேல்போன்ற கண்ணுடையாளே நினது கூரிய பற்களுக்கு தோற்று வாட்டமுற்ற முல்லைப்பூவின் அரும்புகள்தான் இவை கண்டு கொள் என இன்பமொழி சொன்னான். 138

மலையும் வேற்கணாள் ஒருத்திசொல் வினவிமற் றொருத்தி
முலையின் மேல்விழி வைத்தவன் முறிகளும் முகையும்
இலையு மாப்பறித் துதவலும் உமக்குமால் ஈந்தாள்
தலையின் மேலிவை சூட்டுமென் றெறிந்தனள் தரியாள்.

போரிடுகின்ற வேல்போலும் கண்ணுடைய ஓர் பெண் சொல்கின்ற வார்த்தையை கேட்டு அதேவேளையில் அழகிய வேறொரு பெண்ணின் முலைமேல் கண்வைத்து நின்ற ஒருவன் மற்றவளின் முலையின்மேல் வைத்தபார்வையால் தன்காதலிக்கு பூக்களைப் பறிப்பதற்கு பதிலாக இலையும் மொட்டும் பூக்கலுமாகப் பிடுங்

கிக்கொடுத்தலும் அவன் காதலி அவனைநோக்கி இவற்றை அதோநின்று உனக்கு ஆசையூட்டிய அவள் தலைமேல் சூட்டுவாய் என அவற்றை தரியாது எறிந்தாள். 139

காதல் மங்கைபால் வைத்தசிந் தையன் கரவீரப்
போது கொய்யலன் இலைகொய்து பொற்கரத் தளிப்ப
ஏதி லாளநிற் சேர்தலின் இங்கிவை நுகர்ந்து
சாத லேதலை எனச்சினத் தாளொரு தையல்.

தனது காதற்பெண்ணிடத்து வைத்த அளவிறந்த ஆசையுடைய சிந்தையாலே தன்னையே மறந்து அவளுக்கு கொடுப்பதற்காக நல்லதொரு அலரிப் பூவைப் பிடுங்கிடப் போனவன் மறந்து என்செய்கின்றான் என்பதையும் தெரியாமல் இலையினைப் பிடுங்கி பூவென நினைந்துகொடுப்ப அதுவேளை அதைப்பெறுகின்ற அவள் சொல்வாள் இப்படியான முறையில் என்னை அவமதித்திடுகின்ற உன்னை நான் மணந்து கொள்வதிலும் இந்த அலரி இலையை தின்று சாதலே தலைசிறந்தது எனச் சினத்தாள் ஒருபெண். 140

வேறு

இங்குன் முலைநேர் குரும்பை இவையாய் குயம்போல்
தங்கும் மிளநீர் உவையன்னவள் தன்னை ஈன்றாள்
கொங்கை நிகரும் அடற்பாளைக் குழுவி தென்றோர்
மங்கை நகைப்ப அவைகாட்டியொர் வள்ளல் நின்றான்.

இன்னமொரு தலைவன் தன்காதலியை நோக்கி பெண்ணே இதோஇத் தென்னை மரத்தைப்பார், இம்மரத்தின் குரும்பைகள் உன்தனங்களுக்கு ஒப்பாகும். இதற்கடுத்தது உன்னைப்பெற்ற தாயின் தனம்போன்று நீருடன் தங்கும் இளநீர். தாயைப்பெற்ற உனது பாட்டியின் தனம்போன்றன முதிர்ந்த நிலையுடைய இந்த தேங்காய்களை உடையபாளை. இவைகளைப்பார் என்று ஓர் அழகுடைய காதலன் அப்பெண் சிரித்திடுமாறு சொலலி நின்றான். 141

ஓவாத தெங்கின் இளம்பாளையின் ஒன்று தன்னைத்
தாவா ஒருவன் கொடுவந்தொரு தையல் முன்போய்ப்
பாவாய் தமியேன் உயிரேநின் பணைமு லைக்காங்
கோவாத முத்தத் தொடையிங்கிது கொள்க வென்றான்.

குறைவிலாத காயுடைய தென்னமரத்தின் இளம்பாளையில் ஒன்றினை தாமதமின்றி ஒரு தலைவன் பிடுங்கி எடுத்துவந்து தனது தலைவிமுன்சென்று பாவைபோல்பவளே! தமியேன் உயிரே! உனது பணைத்த முலையுடைய மார்பில் அணிந்திடவல்ல கோவாத முத்துமாலைகள் இவை பெற்றுக்கொள்க என அப்பூம்பாளையை அவளிடம் கொடுத்து மகிழ்வுடன் நின்றான். 142

மின்னார் தமக்கோ ரரசேவெறி வேங்கை வீயும்
புன்னாக வீயுங் கொணர்ந்தேன் புனைகிற்றி என்ன
மன்னா வுனக்குப் பலருண்டுகொல் மாதர் என்னாத்
தன்னாவி அன்னான் தனைச் சீறியொர் தையல் போனாள்.

இன்னுமோர்தலைவன் தனது காதலியை நோக்கி பெண்களுக்கெல்லாம் அரசியே! வெறிதரும் வேங்கைப்பூவையும் புன்னைப்பூவையும் நீவிரும்புவாய் எனக் கொணர்ந்தேன். இதை அணிந்திடுதி என்ன; அதனைக் காணும் தலைவி அவனைநோக்கி என் மன்னா! இதுவேன் எனக்கு. என் போல்பலர் இன்னமும் உனக்கு உண்டு. அவர்பால் இவற்றைக் கொடுப்பாய் என்பாள்போல் தனது உயிர்போன்ற கிடைத்தற்கரிய கணவனைச் சீறிவிட்டு ஓர் தலைவி அப்பால் போயினாள். 143

பொன்பெற்ற மார்பன் ஒருவன்சில போது கொய்து
கொன்பெற்ற வேற்கண் மடவார்கைக் கொடுத்த லோடும்
பின்பெற்ற நங்கை வெகுண்டாள் பழுதென்று பேசி
முன்பெற் றவளும் அவைசிந்தி முனிந்து போனாள்.

பொன்போல மிளிர்கின்ற மார்புடைய ஒருவன் சில பூக்களைக்கொய்து மேன்மை பெற்ற வேல்போன்ற கண்ணுடைய பெண்கள் கையில் கொடுத்தலோடும் அப்போது அத்தலைவனை அவர்கள் சங்கடத்திற்காளாக்குகின்றனர். எவ்வாறெனில் முன்னர் காத லித்த பெண் அதனை ஒருவாறு ஏற்கும் பொழுதினில் பின்னர் காதலித்த இன் னொருத்தி இது வென்ன பழுதான பூக்கள் எனப்பேசி கோபித்தெறிந்தாள். அதனைக் கண்டவுடன் முன்னர் அதனைப் பெற்றவளும் பழுதென்று தான்பெற்றதை 144
யும் சுழற்றி வீசிக் கோபித்துப் போயினாள்.

அப்பூர் விழியாள் ஒருமூவகைத் தாய பூவும்
மைப்பூங் குழலிற் புனைந்தாளதொர் வள்ளல் நோக்கி
மெய்ப்பூவை யன்னாய் மருங்குல்முடி வெய்த மென்கார்
முப்பூ விளைந்த படியென்கொல் மொழிக வென்றான்.

நீர்பரந்த கண்ணுடையளான ஓர் தலைவி கொடிப் பூ கொம்புப்பூ நிலப்பூ எனும் மூவகையாகும் பூக்களையும் மைபோன்ற கருமையுடைய சிறந்த கூந்தலிற் புனைந் தாள், அதனை ஒருவள்ளல் பார்த்து அவளை நோக்கி உண்மையில் அழகியதொரு நாகணவாய்ப் பறவையை ஒப்பவளே! உனது இடை அற்று முடிந்திடும்படி மென் மையான கருமேகம் மூன்று வகையாக உன் தலையில் பூவாக விளைந்தது யாது கார 145
ணமோ சொல் என்றான். கார் என்றது கூந்தலை என்க.

இத்தன்மை மைந்தர் பலரும்மிகல் வேற்க ணாரும்
மெய்த்தண் மலர்க்கா வுலவாவிளை யாடி மீண்டு
தத்தம் படமா ளிகைபுக்கனர் தானும் ஆங்கே
அத்தம் மயவெற் படைத்தான்கதிர் ஆயி ரத்தோன்.

இத்தன்மையாக இளைஞர்பலரும் இகல்கொண்ட வேல்போலும் கண்ணுடைய மகளிரும் உண்மையான இன்பத்தைக் கொடுத்திடும் குளிர்ந்த பூஞ்சோலையில் உலாவி விளையாடி மீண்டு சித்திரப் படங்கள் கொண்டு செய்தமைத்த கூடாரத்தின் உட் புகுந்தனர். இவர்களது ஆடலை எல்லாம் கண்டு மகிழ்வுற்று நின்ற ஆயிரம் கதிர் உடைய சூரியதேவன் தானும் அங்கே அத்தமனமலையை அடைந்து கொண்டான். 146

வேறு

ஏலக் காவின் மாக்கள் புகுந்தே இனிதாடும்
கோலச் செவ்வி கோக்கின னுங்கொல் குடபாலின்
மாலைச் செக்கர் வானம தாகும் மலிதண்பூஞ்
சோலைக் குள்ளே தானும் அடைந்தான் சுடர்வெய்யோன்.

வாசனை நிரம்பிடும் சோலையில் புகுந்து மகளிரும் மைந்தரும் இன்புற்றிருந்து இனிதுடன்விளையாடிய நற்கோலம் நிறைந்த செவ்விய நிலையை தானும் பார்த்து ஆசையுற்றான் கொல்லோ! ஏனென்றால் அவனும் மேற்புறத்தில் மாலைக்காலத்தில் தோன்றிய செக்கர்வானம் என்னும் அற்புதமான மலரால் நிலவுற்ற தெனும்படி யான அந்தபூஞ்சோலைக்குள் சென்று புகுந்து கொண்டான் சுடரினால் ஒளியைத் 147
தந்தும் சுட்டெரிப்பான்போன்ற கொடுமையும் உடைய சூரியதேவன்.

முந்தைச் செக்க ராகிய புத்தேள் மொய்ம்பிற்சூழ்
தந்திப் போர்வை போலிருள் ஈட்டஞ் சார்வெய்த
அந்தத் தேவன் மீமிசை அண்டத் தவர்வீசும்
கந்தத் தண்போ தொப்பன தாரா கணமெல்லாம்.

முன்னரே தோன்றிய செக்கர் என்னும் கடவுள் தன்மேனியில் போர்த்திட்ட யானைத் தோலைப்போன்று இருள் கூட்டம் செக்கரை மூடி எழுந்துவர; அந்த செக்கர் என்னும் கடவுள்மீது தேவர்கள் வீசிடுகின்ற வாசனையுடைய குளிர்ந்த மலர் போன்று நிற்பன வானில் உதித்திடும் வெள்ளிகளான கணங்கள் எல்லாம்.

செக்கரின் தோற்றம் எல்லார்க்கும் தெய்வமான சிவன்போலமைய அப்பெருமான் யானைத் தோல் போர்த்துநின்ற காட்சிபோல் இருட்கூட்டம் பரந்தெழ எம்பெருமான் மீது தேவர்கள் பரவசத்துடன் சொரியும்மலர்போல் வானில் வெள்ளிகளின் மலர்ச்சிகாணப் பெற்றன. இத்தகையதொரு மாலைக்காலத்திற்கேற்ற உவமையை இவரலாது வேறுயார் எடுத்து கூறிடமுடியும். 148

படையா நேமிப் பண்ணவ ஞர்பாற் கடலுக்கோர்
தடையா யுற்ருர் என்றிமை யோர்தண் தயிர்வேலை
கடையா நிற்ப வேதிரள் வெண்ணெய் கடிதேவந்
தடையா நிற்றல் போல உதித்திட் டதுதிங்கள்.

சக்கரத்தைப் படையாக உடைய கடவுள் நாராயணப்பெருமான் பாற்கடலைக் கடைந்திடுவதற்கு ஓர் தடையாக அங்கு யோகநித்திரை கொள்கின்ருர் என்று தேவர்கள் மனதில் கொண்டு பாற்கடலை விடுத்து தயிர்க்கடலை கடைகின்ற வேளையில் அங்கு திரண்டெழுகின்ற வெண்ணெயின் திரள் விரைவாக வந்து அக்கடலில் ஒளியுடன் எழுகின்றவாறுபோன்று பூரண சந்திரன் உதயமானுன். 149

காணப் பட்டான் விண்மதி என்னக் காமத்தில்
பூணப் பட்ட மாமதி தோன்றப் புலர்வெய்தி
யாணர்க் கிண்ணத் துள்நிறை தேறல் இனிதட்டிப்
பாணிக் கொண்டே மேவுதல் உற்ருர் பலமாதர்.

வானில் காணப்பட்டான் வெள்ளிய பூரண சந்திரன் என்று காமத்தினுல் பூணப்பட்ட பெரும் சிந்தை பெண்கள் பால் தோன்றிட அதனுல் வாட்டமுற்று அப்போது அழகிய பொற்கிண்ணங்களில் நல்ல கள்ளினை இனிதுடன் வார்த்துக் கொண்டு தத்தமது கைகளில் ஏந்திக் கொண்டு நின்ருர்கள்.

சந்திரன் உதயமானுன். இது சூரிய அத்தமனத்தின் பின்னர் நடந்துள்ளது. இருளில்தான் இங்கு சந்திரன் தோன்றியது. அதுபோல் அங்குள்ள பெண்களின் மனதிலும் காம இன்பம் அனுபவிப்ப ஏற்றதொரு இச்சை தோன்றியது. தோன்றலும் அதை ஊக்குவிக்க தங்கள் கைகளில் பொற்கிண்ணத்தை ஏந்தி அதில் கள்ளினை வார்த்து இனிதுடன் உண்டிட நினைந்து நின்றனர். 150

### வேறு

தூயதன் ருகிய புனனெல்லாம் நல்கியே சூழ்ந்த தெங்கின்
காயின்வந் திடுபயன் கொள்ளுவார் போற்சில காளை மார்கள்
ஆயதண் தேறலை அரிவைமார் நுகருவான் அருளி யன்ருர்
வாயின்வந் தூறு மெல்லமிர் தினைக்கொள் வதற்குள்ளம் வைத்தரர்.

அவ்வாருன நிலையில்; அங்கு ஒருவர் தூய்மையிலாத சேற்று நீரை கொடுத்திட அதனுல் செழிப்புற்று வளர்ந்த தென்னை மரத்தின் காயின் வந்திடு நல்நீரை உண்பார் போன்று; அங்குசில இளைஞர்கள் அத்தகைய சேற்றுநீர் போன்றமைந்த கள்ளினை அங்குள்ள பெண்கள் உண்ணும்படி கொடுத்து அதன் பயனுல் அவர்கள் இசைவு கொள்ள காம இச்சையால் பெருகும் அப்பெண்களது வாயில் வந்த அமிர்தம் போலும் மெல்லிய எச்சிலை நுகரும்படி எண்ணினுர்கள். 151

தெள்ளுபேர் அமிர்தநேர் சொல்லினுர் தேறல்பெய்கின்ற வெள்ளி
வள்ளமா னவையெலாம் பொலிவன வானகத் திடையு தித்த
வெள்ளிதா கியமதி ஒன்றினை நோக்கிஒண் புவியி னூடே
கொள்ளையாய் மதிபல மாறுமா ருய்எழுங் கொள்கை போலும்.

தெள்ளிய பெரும் அமிர்தத்தை ஒத்த சொல்லுடைய பெண்கள் கள்ளினை வார்த்திடும் வெண்ணிறமான கிண்ணங்களானவையெலாம் அவர்களது கைகளில் பொலிவன எதுபோலெனில் வானத்திடை உதித்த வெள்ளிதாய ஒளியுடைய சந்திரன் ஒன்றினை நோக்கி அழகிய இப்பூமியூடு கொள்ளைக் கணக்கில் பல சந்திரர்கள் அந்த ஒரு சந்திரனுக்கு மாறாகி எழுந்திட்ட தன்மை போன்று விளங்கியது. 152

அளியினுக் குணவதாந் தேறல்வாய்க் கொண்டதோர் அரிவை யாற்றக்
களிமயக் கெய்துவாள் இந்துவை நோக்கியிக் கடிய தேறல்
துளியினைக் கோடியேல் உனதுமா சுள்ளதுந் தொலையும் இன்னும்
ஒளியினைப் பெறுதிநின் ஊனமுந் தவிர்தியென் றுரைசெய் கின்றாள்.

வண்டினுக்கு உணவாகிய கள்ளைவாயில்கொண்டதொரு பெண் மிகவும் களிப்புடைய மகிழ்ச்சி யடைந்து கொள்பவள்: அதனால் யாது பேசுவது எனவே தெளிவு கொள்ளமுடியாதவளாய் சந்திரதேவனை நோக்கி இந்தக் கொடிய கள்ளில் ஓர் துளியினை நீ உண்டிடுவாய் என்றால் உனது மேனியில் உள்ள கருமையான மாசும் தொலையும் இன்னமும் நீ ஒளியினைப் பெறுவாய் என்று கூறுகின்றாள். 153

கருதியான் உண்டிடு நறவினைக் கண்டுகா மித்து நாளுந்
திரிதியால் மதியமே நாணமுற் றுய்கொலோ செப்பு கில்லாய்
பரிதியார் தம்மின் வீறெய்துவாய் அன்னதைப் பகிர்வன் இங்ஙன்
வருதியால் என்றனள் தேறலால் தெளிவிலா மையல் பெற்றாள்.

இன்னுமோர் பெண் மதுவினை உண்டு அதனால் தெளிவிலாத மயக்கம் கொண்டு சந்திரனை நோக்கி நான் விரும்புகின்ற மதுவினைக் கண்டு இச்சை கொண்டு நாளும் எனது பின் நீ திரிகின்றாய்! சந்திரனே நீ நாணம் கொண்டாயோ! சொல்லுகின்றாயில்லை! இதோ நாணமுறாது இக்கள்ளை நீ உண்டால் சூரியனிலும் பார்க்க மிகுந்த ஒளிகொள்வாய். அக்கள்ளை நான் உனக்கு பகிர்ந்து கொடுப்பேன் இங்கேவா என அழைப்பால் போல் மொழிந்தாள். 154

என்னொடே தோன்றினாய் யானெனும் தன்மையா யாதும்வேண்டாய்
பின்னரு முன்னுமாய் வைகலுந் திரிகுவாய் பிரிகி லாதாய்
இன்னறா உண்கென உதவினுங் கொள்கிலாய் என்றெ ருத்தி
தன்னதாம் நீழலோ டூடினாள் வாடினாள் தளர்தல் உற்றாள்.

இன்னுமோர் பெண் தனது நிழலை கள்மயக்கால் நோக்கி என்னோடு நீ தோன்றிநாய். யான் என்னும் படியாகும் வடிவுடையாய் ஆனால் நான் பலவற்றையும் வேண்டினாலும் நீ யாதொன்றையும் விரும்புகின்றாயில்லை. என்பின்னரும் முன்னுமாக நித்தலும் திரிகின்றாய். என்னைப் பிரிகிலாய் நீ. இந்த இனிய மதுவை உண்கென்று கொடுத்தாலும் கொள்கின்றாயில்லை என்று ஒரு பெண் தனது நிழல் உருவத்துடன் சண்டையிடுகிறாள் வாடுகிறாள் தள்ளாடுகிறாள். 155

அங்கைவள் ளந்தனில் மதுவையுண் டயருவாள் அன்ன தற்குள்
செங்கயல் விழியையும் வாலிதழ்ப் பொலிவையுந் தெரிய நோக்கி
இங்கெனைக் கூடியே கணவர்போ யினர்கொலாம் என்றெ ருத்தி
பொங்குசீற் றத்தளாய் ஓடினாள் தேடினாள் புலர்தல் உற்றாள்.

தனது அழகிய கையில் இருந்திடும் பொற்கிண்ணத்தில் மதுவை உண்டு மயக்கினால் சோர்வு கொண்டவளாகும் ஓர் பெண் அம் மதுக் கிண்ணத்திற்குள் தனது சிவந்த கண்களையும் அழகிய சொண்டின் பொலிவையும் தெரிந்திடக் கண்டு ஓகோ என்னையறியாது என்னுடன் கூடிவிட்டு என் கணவர் போயினரோ என்று பொங்கிடும் கோபமுடையவளாய் ஓடுகிறாள் தேடுகிறாள் கிடையாது வாட்ட முற்றாள். 156

வேறு

திருந்திழை மார்சிலர் செவ்வித் தேறலே
அருந்தினர் வெறுத்தனர் அமுதந் தன்னையும்
பொருந்திடு கணவரைப் புணரும் ஆசையால்
வருந்தினர் தழலென மதியை உன்னுவார்.

திருத்தமுடன் இழைக்கப் பெற்ற ஆபரணங்களை அணிந்த சில பெண்கள் செப்பமுடைய மதுவைக் குடித்தனர். அதன் சுவை மிகுதியால் அமுதம் தன்னையும் வேண்டாமென வெறுத்தனர். அங்கு தமக்கெனப் பொருந்திய கணவன்மாரை கூடுகின்ற ஆசை மேலீட்டால் வருத்தம் கொண்டனர். அதனல் அங்கு உதயமாகிய சந்திரனை நெருப்பென நினைப்பார்கள். 157

வாடுகின் ரூர்சிலர் மகிழ்நர் வந்திட
ஊடுகின் ரூர்சிலர் உவக்கின் ரூர்சிலர்
பாடுகின் ரூர்சிலர் பணிகின் ரூர்சிலர்
ஆடுகின் ரூர்சிலர் நறவம் ஆர்ந்துளார்.

நன்ருக மதுவினை உண்டு தேக்கி மயங்குதலால் வாடுகின்ரூர் சில பெண்கள். தமது கணவன்மார் வந்திட்டபோது அவருடன் கோபித்திடுகின்ரூர் சில பெண்கள். சில பெண்கள் உவக்கின்ரூர்கள். சில பெண்கள் பாடுகின்ரூர்கள். சில பெண்கள் பணிகின்ரூர்கள். சில பெண்கள் நடனமாடுகின்றனர். 158

அந்தரப் புள்ளொடும் அளிகள் தம்மொடும்
வந்தடுத் தவரொடும் மடந்தை மார்சிலர்
சுந்தரத் தேறலைத் துய்த்து வாமமாந்
தந்திரக் கிளைஞர்போல் தம்மில் ஈண்டினர்.

வானில் சென்றிடும் பறவையுடனும் வண்டுகளுடனும் தம்முடன் வந்து கூடிக் கொண்டவருடனும் சில பெண்கள் சுந்தரமான மதுவை உண்டு களித்து; வாமம் என்னும் ஆகமவிதிப்படி மதுவுண்டு தெய்வீக வீறடைந்திடும் கூட்டத்தினர் போன்று தம்மில் தாமே சேர்ந்து கொள்கின்றனர். 159

விள்ளுறு நாணினர் வீழுந் தூசினர்
உள்ளுறு களிப்பினர் உரைம யங்கினர்
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினும் உளதுகொல் கருத்த ழிப்பதே.

நாணம் வெட்கம் என்பதை அறவே விடப்பெற்றவர். வழுவி வீழ்கின்ற ஆடையினை உடையவர்கள். உள்ளால் மிகு களிப்புற்ரூர்கள். சொல்லாலும் மயங்கிடுகின்ற நிலையுடையார்கள். தீய செயலை நீக்கி தள்ளுகின்ற தமது நல்லுணர்வில்லாது சோர்வுற்றனர். இந் நிலையை இவர்க்கு வருவித்தலால் இந்த கள்ளினும் பார்க்க இன்னு மொருபொருள் மனிதனின் கருத்தை மயக்கக் கூடியது உண்டோ இல்லையே! 160

இத்திற மதுவினை இனிதின் மாந்தினேர்
மத்தரின் மயங்கினர் மனந்தெ ளிந்துழித்
தத்தம திறைவருந் தாமுங் கூடியே
அத்தலை முயங்கினர் ஆர்வ மிக்குளார்

இத்திறமாக மதுவினை இனிதின் உண்டார்களான அப்பெண்கள் உன்மத்தர்போல் மயங்கினர்கள். தமது மனம் தெளிவுற்ற நேரத்து தத்தமது கணவரும் தாமுமாக கூடியே இன்புறவேண்டி அந்த நிகழ்ச்சியில் சேர்ந்து ஆர்வம் மிகுந்துள்ளராய் கூடிக்கொண்டனர். 161

ஏயுறு பரிசனம் இனைய தன்மையான்
மேயின இங்கிது விளம்பி னும்இனி
ஆயிடை வந்திடும் அரசர் செய்கையும்
நாயகன் வதுவையும் நவிலு வாமரோ.

முசுகுந்தச் சக்கரவர்த்தியினுடன் வந்த பரிசன மக்கள் இனைய தன்மையால் பொருந்தி நின்றார்கள். இங்கு இவரின் தன்மையை எடுத்து ஓதினோம். இனி அவ் விடத்து வந்திட்ட அரசர்களது செய்கைகளையும் நமது நாயகரான ஆறுமுகப் பெருமானுடைய திருமணச் சிறப்பையும் எடுத்து ஓதிடுகின்றோம். 162

கொன்னுனை வேல்முசு குந்த னாதியாம்
மன்னவர் யாவரும் வையம் நீங்கியே
தன்னிகர் இலாததோர் தலைவன் மேவிய
பொன்னிவர் குடுமியம் பொருப்பில் ஏறினர்.

உயர்வுடன் சிறந்த நுனியுடைய வேலினைக் கைக்கொண்ட முசுகுந்தச் சக்கர வர்த்தி முதலான அரசர் யாவரும் தத்தமது 'தேர்களை விடுத்து நீங்கி அப்பால் தனக்கு நிகர் இல்லாத ஒருவனாகும்' எம் தலைவன் ஆறுமுகப் பெருமான் வீற் றிருந்தருளிய திருப்பரங்குன்றம் என்னும் பொன்னால் விளங்கிடும் முடியுடைய அழகிய மலைமேல் ஏறினார்கள். 163

ஏறினர் வெற்பின் மேலெவருந் தெய்வத
நூறெரி கம்மியன் நுனித்துச் செய்திடு
மாறகல் திருநகர் வளங்கண் டிந்திரன்
சாறயர் வதுவையஞ் சாலை நண்ணினர்.

மலையின் மேல் ஏறினர்களாய இவர்கள் எவரும் தெய்வத்தன்மை கொண்ட ஆகம நூல்களைத் தெரிந்துணர்ந்த தேவதச்சன் மிக நுண்ணுணர்வுடன் செய்திட்ட மாறுபாடுகள் நீங்கப்பெற்ற வளம் கொண்ட அத்திரு நகரின் சிறப்பினை நோக்கி மகிழ்வுற்று இந்திரன் மணவிழாக் கொண்டாட விருக்கின்ற திருமணச் சாலையை அடைந்தார்கள். 164

அம்முசு குந்தனை யாதி யாகிய
வெம்முடி மன்னரும் இமைய வர்க்கிறை
செம்மலர் அடிகளைச் சென்னி சேர்த்தினர்
கைம்முறை தொழுதனர் களிப்பின் மேலுளார்.

அந்த முசுகுந்தச் சக்கரவர்த்தி ஆதியாகச் சொல்லப்பெற்ற எத்தகைய முடி மன்னர்கள் யாவரும் தேவர்கட்கு அரசனான இந்திரனின் செந்தாமரை மலரை ஒத்த பாதங்களை தலைமீது சூடுவோராய் தாழ்ந்து வணங்கினர். கைகளை கூப்பித் தொழுதனர். அளவற்ற மகிழ்ச்சி யுற்றனர். 165

கயமலர் குவளையில் கண்கள் மிக்குளான்
அயலுறும் அரசருக் கருளி ஆங்கவர்
செயல்முறை வினவியே சிறப்பி னாகிய
நயமொழி பலவுடன் நவின்று மேவினன்.

குளங்களில் மலர்ந்திடும் பூக்களினத்தில் சிறந்த நீலோற்பல மலரை ஒத்து மிகுந்த பல கண்களைக் கொண்ட இந்திரதேவன் தனது அயலாக வணங்கிநின்ற அரசர்கள்பால் நல்லருள் கூர்ந்து அவர்களின் செயல்களை வினவி மகிழ்ந்து சிறப் புடையதாகிய நல்வார்த்தை பலவற்றை எடுத்து உரைத்து அங்கிருந்தனன். 166

மேதகு கதியராய் விசும்பிற் சென்றிடும்
ஆதவன் மதிமுதல் அமரர் யாவரும்
மாதிர இறைவரும் மாத வத்தரும்
பாதல வாணரும் பரங்குன் றெய்தினர்.

வானமேல் விளங்கிடும் உயர்ந்த மார்க்கத்தில் செல்பவராய் நின்றிடும் சூரியன் சந்திரன் முதலாக உள்ள தேவர்கள் யாவரும்; திக்குப் பாலகர்களும்; பெரும் தவங்களைப் புரிந்திடும் முனிவர்கள் யாவரும் பாதாள உலகங்களில் இருக்கும் நாகர் முதலிய தேவ கணத்தவரும் யாவரும் திருப்பரங்குன்றை வந்து அடைந்து கொண்டனர். 167

விண்டொடர் பிறங்கலின் மிசையி வர்ந்துபோய்
அண்டரும் பிறருமாய் அமரர் கோன் தனைக்
கண்டனர் தொழுதனர் களிப்பின் மாதவர்
எண்டரும் ஆசிகள் இயம்பி எய்தினர்.

வானைத் தொட ஓங்கிய திருப்பரங்குன்றம் என்னும் மலையின் மீது தேவர்களும் பிறருமாய இவர்கள் எழுந்து சென்று அங்கு திருமணப் பந்தரிடத்திருந்த இந்திரதேவனைக் கண்டு எல்லாத் தேவரும் தொழுதார்கள். மனக்களிப்பினால் பெரும் தபோதனர்கள் யாவரும் கண்டபோதே இந்திரன்பால் எண்ணற்ற ஆசிமொழிகளை இயம்பி அவனை அடைந்தனர். 168

விறல்வரை மாதரும் விண்ணின் மாதருஞ்
செறிபுனல் மாதருந் திசையின் மாதரும்
உறுதவ மாதரும் உரக மாதரும்
மறுவகல் புலோமசை வயின்வந் தீண்டினர்.

வலிமையுடைய மலையிடத்து வாழும் தெய்வப் பெண்களும் தேவ உலகில் உள்ள தெய்வப் பெண்களும் நீரினில் வாழும் தேவப்பெண்களும் திக்கு உலகுகளில் உள்ள தெய்வப் பெண்களும்; தபோதனர்களுடைய பத்தினிப் பெண்களும்; நாகர்களுடைய பத்தினிப் பெண்களும் யாவரும் மறுவிலாத பேரழகுடைய இந்திராணி பக்கராக வந்து சேர்ந்தனர். 166

சூரர மங்கையர் தொல்லை விண்ணவர்
பேரர சியற்றிய பிரான்றன் காதலி
சீரடி வந்தனை செய்து தெய்வத
வாரண மென்பவள் மருங்கில் எய்தினர்.

பயத்தினைக் கெடுத்து நல்வாழ்வை அநுக்கிரகம் செய்யும் தேவப் பெண்கள் மிகு முன்னையோரான தேவர்கட்கு உற்ற பெரும் அரசியற்றிய பெருமான் இந்திரனுடைய காதலி இந்திராணியின் சீருடைய பாதங்களை வந்தனை செய்து அப்பால் தெய்வயானை அம்மைபால் வந்தனர். 170

தெய்வத யானைகேள் தீய சூருயிர்
வவ்விய வேலினன் மனைவி யாதியால்
எவ்வுல கிற்குநீ இறைவி யாமெனா
அவ்வவர் அடிபணிந் தன்பொ டேத்தினர்.

தெய்வயானை அம்மையே கேள்! நீர் தீயவராகும் அரசுடைய கொடிய உயிரை நீக்கிய வேற்படையை உடைய பெருமானின் காதலியாகும் மனைவியாகின் நீர். ஆதலின் எல்லா உலகங்கட்கும் நீயே அரசியாவாய் என்று தெய்வநாயகி அம்மையாரின் பாதகமலங்களை அவர்கள் யாரும் பணிந்து அன்புடன் துதி செய்தனர். 171

கயற்புரை நோக்குடைக் கடவுள் யானைபால்
இயற்படு திருநலன் இருக்கப் பின்னருஞ்
செயற்படு கோலமுஞ் சிறிது செய்திட
மயற்பட உன்னினர் மடநல் லாரெலாம்.

கயல் மீனை ஒத்த பார்வையுடைய தெய்வயானை அம்மையாரிடத்து இயல்பாகவே தெய்வப் பெண்ணிற்கு ஏற்ற அழகும் எழிலுமாய திருவெலாம் இருக்கவும் பின்னரும் எம்பெருமாட்டிக்கு சிறிதே தமது செயலால் செய்யவேண்டிய மணப் பெண்ணிற்குரிய நற்கோலமும் செய்திட இந்தத் தேவப் பெண்கள் யாவரும் தத்தமக்குரிய ஆசையால் நினைவு கொண்டார்கள். 172

பொன்னகம் அதனிடைப் புராரி சேயினைத்
தன்னக மிசையொடு தவத்தை ஆற்றினள்
பின்னக மயிர்முடிப் பிணையற் சூழலை
மென்னக விரல்களால் மெல்ல நீக்கினர்.

பொன்போல் மிளிரும் தேவ உலகில்; திரிபுரங்களையும் எரி செய்த சிவமூர்த்தியின் திருக்குமரனை தனது திருவுள்ளத்திருத்தித் தவம்புரிந்த தெய்வநாயகி அம்மையாரின் பின்புறத்து நன்குடன் பின்னி முடியப்பெற்றிருந்த கூந்தல் முடிப்பினைத் தமது மெல்லிய நகமுடைய விரல்களால் இத்தேவப்பெண்கள் மெல்லநீக்கினர்கள். 173

காசறை விரவிய கடிமென் கூந்தலில்
பூசினர் நாவிநெய் புதிய சாந்தமும்
மாசறு பளிதமும் மற்று நீவியே
நேசமொ டொண்பனி நீர்கொண் டாட்டினர்.

மயிர்ச் சாந்து பூசிய வாசமுடைய எம்பெருமாட்டியின் கூந்தலில் நாவியின் நெய்யுடன் கூட்டிய புதிய சாந்தினை அப்பியும், குற்றம் நீங்கிய கற்பூரக்குழம்பினையும் இன்னும் வேறு வாசப் பொடிகள் யாவற்றையும் எடுத்து தேய்த்து அன்புடன் எம்பெருமாட்டியை நல்ல குளிர்ந்ததிருமஞ்சன நீரால் நீராட்டினர்கள். 174

சேந்ததோர் வெம்பணி சீற்றத் தாற்கரும்
பாந்தளை வாய்க்கொடு பற்று மாறெனப்
பூந்துகில் கிழிகொடு புனல்வ றந்திடக்
கூந்தலை ஒற்றினர் குழைமென் கொம்பனர்.

எம்பெருமாட்டியை நீராட்டிய பின்; சிவந்ததொரு பாம்பு கோபத்தால் கரும் பாம்பினை கவ்விப் பற்றிடும் தன்மை போன்று; தமது சிவந்த கைகளில் மலர்போன்ற ஆடையை எடுத்து எம்பிராட்டியின் கரிய கூந்தலில் உள்ள நீர் வற்றிடும்படி அக்கூந்தலை ஒற்றினர்கள்; நற்காதணிகள் சிறந்திட பூங்கொடி போலும் வனப்புடைய அத்தேவப் பெண்கள். 175

மாந்தளி ரேயென வனப்பும் மென்மையுங்
காந்தியும் எய்தியே கடவுட் டன்மையால்
தோய்ந்திட லின்றியுந் துப்பின் வண்ணமாம்
பூந்துகில் ஒன்றினைப் புனைந்து டீஇயினர்.

மாந்தளிர் போன்ற வனப்பும் மென்மையும் தெய்வீக ஒளியும் இயல்பாகக் கொண்டு தெய்வத்தன்மையால் ஒருவரால் செய்து நிறமமைக்கப்படாததொரு அற்புதமானதும், பவளத்தின் நிறமுடையதுமானதொரு பட்டாடை ஒன்றினையும் எம் தெய்வயானை அம்மையாருக்கு சாத்தி அதனை உடுத்தினர்கள். 176

ஈரறு கதிர்களும் இம்பர் சேர்தலின்
ஆரிருள் யாவையும் அஞ்சி அவ்வைதன்
வாரொலி கூந்தலின் மறைபுக் காலெனக்
காரகில் நறும்புகை கமழ வூட்டினர்.

பன்னிரண்டு என்னும் தொகையுடைய சூரியர்களும் இத்திருப்பரங்குன்றத்தில் சேர்தலாலே இங்குள்ள கொடிய இருள்யாவும் அச்சம் கொண்டு எம்பெருமாட்டி யின் நீண்டு ஓலித்த கூந்தலில் மறைந்து புகுந்தது எனும்படி அகில் முதலியவற்றி ஞல் பெறப்படும் வாசப் புகையை எம்பிராட்டியின் கூந்தலினுக்கு ஊட்டினர்கள். 177

பொலம்புரி உத்தியும் பொருத மஞ்ஞையும்
வலம்புரி மகரமும் மரபில் வானவர்
குலம்புரி தவம்புரை கொம்பின் கூழையின்
நலம்புரி மங்கலம் நவின்று சாத்தினர்.

பொன்னினல் செய்த சீதேவி என்னும் தலைக் கோலத்தையும்; எதிர்முகமாக நிற்கும் மயிலினைப் போன்ற தலைக்கோலத்தையும்; வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும்; நெற்றியில் சுறுவினது அங்காந்த வாய்போலப் பண்ணிய தலைக்கோலத்தையும்; அவை பொருத்தப்படவேண்டிய முறையாக தலையின்மீது தங்கப்பண்ணி; தேவர்களது குலம் செய்த தவத்தை ஒத்து விளங்கும் பூங்கொடி போலும் தெய்வ நாயகி அம்மையாரின் கூந்தலில் நலம் தரும் மங்கல வார்த் தையை ஓதிச் சாத்தினர்கள்.

எல்லா உலகிற்கும் இவள் இறைவியாதலின் இவள்மேல் அணிகலம் அணிந்திடும் பொழுது நன்மங்கல மொழி நவிலல் வேண்டுவதுமரபு. எனவே நன்மங்கலம் சொல்லிச் சாத்தினர்கள். 178

விரியிணர்க் கோங்கமும் வெட்சி யுஞ்செரீஇ
மருமலர் இதழிடை வைத்து வாசமார்
தெரியலுந் தொடையலுஞ் செறியச் சூட்டியே
சுரிகுழல் முடித்தனர் சுழியத் தன்மையால்.

வேண்டுவன கூட்டி முடித்த கொண்டையில் விரிந்த இதழையுடைய கோங்கம் மலரையும் வெட்சி மலரையும் செருகி மருத மரத்தினது ஒள்ளிய பூங்கொத்து களை இடையில் வைத்து வாசம் நிரம்பிய அரும்புகளினுலும் அமைத்த தெரியல் தொடையல் எனும் வகையாகும் மாலை இனங்களை வளையவைத்து எம்பெருமாட்டி யின் சுருள் கொண்ட கூந்தலை அற்புதமான சுழியல் வடிவான கொண்டையாக அமைந்திட முடித்தார் சாமர்த்தியமுடைய அத் தேவப்பெண்கள், 179

ஒருமுயல் முழுமதி யுள்புக் காலென
இருவிழி புருவமாம் இனைய வற்றெடு
கருநிறங் கண்டிடக் காமர் சாந்தினுல்
திருநுதல் அதனிடைத் திலகந் தீட்டினர்.

ஓர் முயல் பூரண சந்திரனின் உள்ளே புகுந்தது எனும்படியாக பூரண பிரகாச முடன் விளங்கிடும் எம்பெருமாட்டியின் திருமுகத்தின் இரண்டு கண்களும் இரண்டு புருவவுமான கருமை கொண்ட இவைகளுடன் இன்னமும் கருமை நிறம் விளங்கிட அழகிய சாந்தினுல் எம்பெருமாட்டியின் திருநெற்றி மீது ஓர் திலகத்தையும் அத் தேவப் பெண்கள் தீட்டினர்கள். 180

ஊட்டிய நறும்புகை ஓதி நின்றெரீஇத்
தீட்டிய திருநுதல் திலகந் சேர்தரப்
பூட்டினர் சுட்டியைப் புயங்கம் ஒன்றுநா
நீட்டினஞ் சுமிழ்தரு நிலைமை ஈதென,

முன்னர் அகிலின் புகை ஊட்டப்பெற்ற கூந்தலில் நின்றும் இறங்கி கரும் சாந்துப் பொட்டைச் சேர்ந்து கொள்ளும்படி நெற்றிச் சுட்டியைப் பூட்டினர்கள்; அது எது போல் அமைய இருந்தது என்றுல் ஓர் பாம்பு தனது நாக்கை நீட்டி நஞ்சினை உமிழ்ந்திடுவதுபோன்று அமைய இருந்தது.

தலைச் சோடினையுடன் நெற்றிச் சுட்டி நெற்றிப் பொட்டினைச் சேர நிற்பது ஓர் பாம்பு தனது நாக்கை நீட்டி நஞ்சினை உமிழ்வது போன்றிருந்தது. 181

கோல்வளை யந்நலார் குழையில் வல்லியஞ்
சூல்வளை மிடற்றினில் தொடையல் முத்தணி
கால்வளை கஞ்சநேர் கரத்துந் தோளினும்
வால்வளை தொடியிவை வயங்கச் சேர்த்தினர்.

நன்குடன் திரண்ட வளையல்களை அணிந்த நல்லராகிய அத்தேவப் பெண்கள் எம்பெருமாட்டியின் திருச் செவியில் வல்லியம் என்னும் ஆபரணத்தையும்; சூல் கொண்ட சங்கினைப் போன்ற பெருமாட்டியின் கழுத்தில் முத்தணி மாலையும் சரடுகளையும்; வளையும் தண்டுடைய தாமரைப் பூப்போலும் கைகளிலும் தோளிலும் வளையல்களையும் வாகுவலயங்களையும் பிரகாசமுறச் சாத்தினர்கள். 182

கொட்டினர் கலவைகள் கொங்கை யின்மிசை
மட்டிமிர் பிணையலும் மணியின் கோவையும்
அட்டினர் படாமும்மொன் றதன்கட் சேர்த்தினர்
இட்டிடை யிடைதனக் கிரக்கம் வைக்கிலார்.

எம்பெருமாட்டியின் தனங்கள்மீது கலவைச் சாந்தினைக் கொட்டினர்சள். அதன் மேல் ஓர் பட்டாடையையும் சேர்த்தார்கள். இவ்வளவு அணிகலன்களையும் மாலைகளையும் அணியும்போது எம்பெருமாட்டியின் சிறிய இடை இவையாவற்றையும் தாங்கிடுமோ என அதற்குக் கொஞ்சமேனும் இரக்கம் வைக்காதவராகி இருந்தனர் அத் தெய்வப் பெண்கள். 183

மாடக யாழ்புரை மழலைப் பெண்பிளை
ஆடக விரைமலர் அனைய தாழ்களில்
பாடகம் பரிபுரம் பாத சாலங்கள்
சூடக முன்கையார் தொழுது சூழ்வித்தார்.

மாடக யாழினை ஒத்த இனிய ஓசையுடைய மழலை மொழி பேசிடும் பெண் கோலம் நிறைந்த தெய்வயானை அம்மையாரது பொன்னூர்ந்த வாசமுடைய தாமரை மலர்போலும் பாதங்களில் பாதக்காப்பு சிலம்பு தண்டை ஆகியவற்றை அத்தேவப் பெண்கள் தமதுவளையல் அணிந்த கைகளில் ஏந்தி எம்பெருமாட்டியைத் தொழுது அம்மையாரின் பாதங்களில் அணிந்தார்கள். 184

தெய்வத மடந்தையர் திருவின் செல்விபால்
இவ்வகை ஒப்பனை இயற்றி ஏத்தலும்
மைவிரி குவளைநேர் வடிவக் கண்ணினன்
அவ்விடை செய்திடும் அமைதி கூறுவாம்.

தெய்வப் பெண்கள் யாவரும் மகா இலக்குமியின் திருமகளாகும் தெய்வயானை அம்மையாரிடத்து இவ்வாறு மணவாட்டியின் கோலத்திற்கு ஏற்பதான ஒப்பனைகளைச் செய்து வைத்து வணக்கம் புரிதலும், அதுவேளை கரிய மைவிரிந்ததுபோன்ற குவளை மலரையொத்த கண்ணுடைய இந்திரதேவன் அவ்விடத்துச் செய்திடுகின்ற அரிய செயலின் சிறப்பினை எடுத்து ஓதிடுவோம். 185

வேறு

மேலை வானவர்க் கிறையவன் விரிஞ்சனை நோக்கிச்
சாலை யாகிய தெவ்வெலாத் தேவருஞ் சார்ந்தார்
மாலை தாழ்முடி எம்பெரு முதல்வற்கு மணஞ்செய்
காலை நாடியே இஃதெனக் கழறுதி யென்றான்.

முன்தோன்றிய தேவர்கட்கெல்லாம் அரசன் இந்திரன் பிரமதேவரைநோக்கி ஐயனே! திருமண மண்டபம் அமைத்தாய்விட்டது. திருமண தரிசனத்திற்கு வர வேண்டியுள்ள எந்த எந்தத் தேவரும் வந்துள்ளனர். ஆதலின் இனி நீர்

மாலைகள் நிறைந்து விளங்கிடும் முடியுடைய எம்பெரு முதல்வர் ஆறுமுகப் பெருமானுக்குத் திருமணம் செய்தற்கு ஏற்ற சுபநேரம் யாதாகுமெனக் கணிதமுறையால் நாடியறிந்து இதுதான் அம்முகூர்த்தமெனச் சொல்வீராக என்றான். 186

அப்பு ரந்தரன் மொழிதனை அம்புயன் வினவிச்
செப்பு கின்றதென் அறுமுகப் பரன்மணஞ் செய்தற்
கெப்பெ ரும்பக லாயினும் இனியதே எனினும்
ஒப்ப கன்றிடு முகூர்த்தம்இவ் வெல்லைஎன் றுரைத்தான்.

அந்த இந்திரனுடைய வாக்கைப் பிரமதேவர் கேட்டு இந்திரனை நோக்கி நான் இதற்கு யாதினைச் சொல்வேன். ஆறுமுகமுடைய பெருமான் திருமணம்செய்தற்கு எந்தவொரு நாளாயினும் நன்று. அவ்வாறு இருப்பினும் வேறொரு காலமும் தனக்கு ஒப்பிலாதபடி நிகரற்றதொரு முகூர்த்தம் இன்று நாம் சொல்லிய இப்போதைய இந்நேரம் என்று கூறினர் பிரமதேவர். 187

ஈவ தேமுறை யாயுளாய் இப்பகல் சிறந்த
தாவ தேயெனின் யான்பெறும் அணங்கைஈண் டளிப்பான்
தேவ தேவனும் அறுமுகச் செம்மலைக் கொணரப்
போவ தேகடன் எமக்கெனப் புரந்தரன் புகன்றான்.

கன்னிகாதான முறையாகக் கொடுத்தற்கு ஏற்றதொரு முறையுளதாய் இப்பகல்பொழுது சிறந்தது என இருப்பின்; யான் செய்த தவத்தினால் பெற்ற தெய்வநாயகி அம்மையாரை இவ்விடத்துக் கன்னிகாதானமாகக் கொடுத்தற்குத் தேவாதி தேவனுகும் ஆறுமுகக் கடவுளை இவ்விடம் கொண்டு வரும்படி நாம் போவதே எமது கடனுகுமென இந்திரதேவன் புகன்றான். 188

அனைய காலையில் அச்சுதக் கடவுளும் அயனும்
இனிது போதும்என் றிந்திரன் தன்னொடும் எழுந்து
முனிவர் யாவருந் தேவருஞ் சூழ்ந்துமுன் படரப்
புனித நாயகன் ஆலயம் நோக்கியே போனார்.

அவ்வாறு இந்திரன் மொழிந்த காலத்தில் நாராயணக் கடவுளும் பிரமதேவனும் அது நன்று; நாம் போவோம் என்று இந்திரதேவனுடன் எழுந்து முனிவர்கள் யாவரும் தேவர்களும் திரண்டு முன்னகச் சென்றிட எப்பொருட்கும் மூலமாய்ப் புனிதமுடையவனுகும் ஆறுமுகப்பெருமானின் ஆலயத்தை நோக்கிச் சென்றார்கள். 189

போந்து மற்றவர் பொலன்மணிக் கோயிலுட் புக்குச்
சேந்தன் மாமலர் அடிகளை முடிகளிற் சேர்த்திக்
காந்தள் மெல்விரல் மடந்தைபாற் கடிமணம் புரிய
ஏந்தல் நீயவண் வந்திட வேண்டுமென் றிசைத்தார்.

யாவரும் சென்று அழகால் சிறந்து பொன்னுல் விளங்கிடும் இரத்தினகோயிலினுட் புகுந்து அங்கு வீற்றிருந்தருளிய செவ்வொளியால் நிறைகின்ற சோதியாம் ஆறுமுகப்பெருமானின் திருவடிமலர்களில் உச்சி பொருந்தும்படி வணங்கி எழுந்து நின்று எம் அரசே! செங்காந்தள் மலரையொத்த மெல்லிய விரலுடைய தெய்வயானை அம்மையாரைத் திருமணம் புரிந்திடற்குத் தேவரீர் அங்கு எழுந்தருளி வருதல் வேண்டுமெ வேண்டினர்கள். 190

இன்ன வாசகம் வினவலும் இராறுதோ ளுடையோன்
அன்ன தாகவென் றருள்செய்து மடங்கலே றுற்றும்
பொன்னின் மாமணி அணையினும் பொருக்கென எழுந்தான்
துன்னு வீரரும் பாரிட முதல்வருந் துதிப்ப.

அந்த வார்த்தையைக் கேட்டலும் பன்னிரண்டு திருத்தோளுடைய எங்கள் பகவான் அப்படியே ஆகட்டும் என அருள்செய்து ; அங்கு தலைமைபெற்ற சிங்கங்கள் சுமந்திடும் பொன்னினாலும் இரத்தினத்தாலும் இழைத்த சிம்மாசனத்தினின்றும் விறுக்கென எழுந்தார். அங்கு அதுவேளை நின்ற இலக்கத்தெட்டு வீரர்களும் வீரவாகு தேவரும் பூதசேனாதிபதிகளும் அரகர எனத் துதித்திட. 191

எழுந்து முன்னுறு மஞ்ஞையஞ் சேவல்மேல் ஏறிச்
செழுந்த னிக்கம லத்தய னாதியாந் தேவர்
விழுந்து முன்பணிந் தேத்தியே விரைமலர் மாரி
பொழிந்து பாங்கராய் வந்திட வீதிவாய்ப் போந்தான்.

இவ்வாறு எம்பெருமான் எழுந்து தமது முன்பாக நின்ற ஆண்மயிலின்மீது எழுந்தருளிச் செழுமையாகும் தனிச்சிறப்புடைய தாமரை மலர் மீதிருந்திடும் பிரமதேவன் ஆதியாகச் சொல்லப்பெறும் தேவர்கள் யாவரும் எம்பெருமானை முன் விழுந்து வணங்கித் துதித்து வாசனையுடன் குளிர்ந்த மலர்களை மழைபோன்று பொழிந்து பக்கராகப் பரவசமுடன் வந்திட வீதியினூடாக வந்தருளினர்: 192

கொற்ற வெண்குடை எடுத்தனர் குளிர்பனிக் கவரிக்
கற்றை வீசினர் ஆலவட் டங்கள்கா லசைத்தார்
ஒற்றை வாட்படை ஏந்தினர் உடுபதிக் கடவுள்
மற்றை ஆதவன் மருத்துவன் சலபதி மறலி.

அப்போது அங்கு நின்ற இயமதேவன், கொற்றம் மிகுந்தவாட்படையை ஏந்தி யவனை வருணன் குளிர்மிகுந்த வெண்சாமரையை வீசினன் ; ஆலவட்டங்களை இயமன் காற்று நிலவிட வீசினன் வாயுதேவன். வெண்கொற்றக் குடையை சந்திரக்கடவுளும் சூரியக் கடவுளும் பிடித்தார்கள். இவ்வாறுஎம்பிரானுக்கு சேவகம் கொண்டனர். 193

ஆழி மாலயன் உவணமும் அன்னமும் அழியா
ஊழி நாயகன் ஊர்தியின் ஒலிகொலன் றுட்கக்
கேழி லாமலர்க் கிஞ்சுகச் சூட்டொடுங் கிளர்ந்து
கோழி நீள்கொடி ஆர்த்ததெவ் வண்டமுங் குலுங்க.

சக்கரத்தைத் திருக்கரத்தேந்திய பகவான் நாராயணரின் கருடனும் ; பிரமதேவனின் அன்னப்பறவையும் ; இதுதானோ அழிவிலாத ஊழிக்கால்த்து உலகினை அழித்திடவரும் உருத்திரமூர்த்தியின் ஊர்தியான இடபத்தின் ஓசையோ என அஞ்சி உட்கிட; அழகுவிளங்கிடும் முருக்கம்பூவின் செவ்வியினை ஒத்த கொண்டையுடைய சேவற்கொடி எழுந்து எல்லா அண்டங்களும் நடுங்கிடக் கூவி ஆர்ப்பரித்தது. 194

வேதர் ஆர்த்தனர் வேதமும் ஆர்த்தன விண்ணோர்
மாதர் ஆர்த்தனர் மாதவர் ஆர்த்தனர் வயவெம்
பூதர் ஆர்த்தனர் பூதமைந் தார்த்தன புடவி
நாதர் ஆர்த்தனர் நாதமிக் கார்த்தன நகமே.

எம்பிரானது கோழியான நீண்டகொடி கூவி ஆர்ப்பரித்திடுதலும் அங்கு பிரமர்கள் ஆர்ப்பரித்தனர், வேதங்களும் ஆர்த்தனர், தேவர்களது பெண்கள் ஆர்த்தனர், பெரும்தபோதனர்கள் ஆர்த்தனர். வெற்றியுடைய கொடிய பூதங்கள் ஆர்த்தன. இதுவன்றி மண் நீர்நெருப்பு காற்று வானம் எனும் பஞ்சபூதங்களும் ஆர்த்தன. திக்குப்பாலகர்களும் ஆர்த்தனர். இவர் எல்லாம் ஆர்த்தலாலே திருப்பரங்குன்ற மலையும் நாதஓசையால் எதிரொலி மிகுந்துகொண்டது. 195

திண்டி பேரிகை தண்ணுமை சல்லரி திமிலை
பண்டி யிற்பெயர் குடமுழாக் காகளம் படகம்
தொண்ட கந்துடி துந்துபி வலம்புரித் தொகுதி
அண்டம் விண்டிட இயம்பினர் பூதரில் அநேகர்.

திண்டி, பேரிகை, மத்தளம், சல்லரி, திமிலை, வண்டியிற்செல்லும் குடமுழா, காகளம், படகம், தொண்டகப்பறை, உடுக்கை, துந்துபி, சங்குகளின் தொகுதி இந்தவாத்தியங்கள் யாவையையும் அண்டங்களும் வெடித்திடும்படி முழக்கினர்கள் அங்குள்ள பூதங்களில் அநேகர். 196

அஞ்சி லோதியின் மேனகை உருப்பசி அரம்பை
கிஞ்சு கச்செவ்வாய்த் திலோத்தமை முதலினேர் கெழுமி
மஞ்ச மீதினும் மானத்தும் நின்றுவாள் விழிகள்
நஞ்சு மிழ்ந்திட அமுதெனப் பாடியே நடித்தார்.

ஐந்து வகையான கூந்தல் முடிப்பினை உடைய மேனகை, ஊர்வசி, அரம்பை, கிளிப்பிள்ளை போல்மொழியும் சிவந்த வாயுமுடைய திலோத்தமை ஆதியான தேவப் பெண்கள் கூடி மஞ்சங்களிலும் விமானங்களிலும் செறிந்து நின்று தமது கூரிய கண்களை நஞ்சு உமிழ்வதென புரட்டியும் வாயினல் அமுதம் வருவதென பாடியும் நடித்தனர். 197

யாணர் வண்டினஞ் சுரும்புடன் அலமரும் யாழும்
வீணை யுங்கரம் பற்றியே விஞ்சையர் முதலோர்
சேண ரம்பையர் களிநடத் தொடுசீர் தூக்கும்
பாணி யும்மிசை வுற்றிட இசைத்தனர் பாடல்.

அழகிய ஆண் வண்டினங்கள் பெண்வண்டுகளுடன் கூடி அலமந்து இசைத்திட்டது போல் யாழையும் வீணையையும் கையில்பற்றி விஞ்சையர் மூதலான தேவகணத்தவர்கள் : வானின் உலகில் வாழும் தெய்வப்பெண்களது அற்புதம் நிறைந்த களிநடனத்திற்கேற்ப சீரும் தூக்கும் பாணியும் இயல்புடன் பொருந்திட பாடல்களை இசைத்தார்கள். 198

பொருவில் வீரரும் பூதரும் புரந்தன் முதலாஞ்
சுரரும் மாதவர் யாவரும் பிறருமாய்த் துன்னி
ஒருவர் மெய்யினை ஒருவர்மெய் நெருக்கவுற் றிடலால்
தெருவும் முற்றமும் இடம்பெறு வாயின சிறிதும்.

நிகரற்ற வீரமுடைய வீரவாகுதேவருடன் இலக்கத்தெட்டு வீரரும் பூதசேனுதிபதிகளும் பூதங்களும் இந்திரன் முதலான தேவரும் முனிவர்கள் யாவரும் பிறருமாக நெருங்கி ஒருவருடைய மேனியை ஒருவர் நெருங்கிட வருதலால் அங்கு திருப்பரங்குன்றத்து நகரின் தெருவிலும் முற்றத்திலும் சிறிதேனும் வெற்றிடம் பெருதுபோயது. 199

## வேறு

இன்ன தன்மைகள் இயல எல்லைதீர்
பொன்னின் வீதிவாய்ப் போந்து புங்கவர்
மன்னன் ஆற்றிய மணத்தின் சாலையின்
முன்னர் வந்தனன் முடிவில் முன்னையோன்.

இவ்வாருனதன்மைகள் இயன்றிட எல்லை கடந்த பொன்னினல் புனைந்து சிறந்துற்ற அவ்விதிகள் வூடாக வந்தருளி தேவர்கட்கு அரசனை இந்திரதேவன் மைசய்தமைத்த திருமணச் சாலையின் முன்பு சேர்ந்துகொண்டான் முடிவிலாத முன்னைப் பழம் பொருளாகும் ஆறுமுகப்பெருமான். 200

ஆவ தாகிய அண்ணல் தன்மிசைத்
தாவில் கும்பமேல் தருப்பை தோய்த்தநீர்
தூவி ஆசிகள் சொற்று மாதவர்
ஏவ ருந்திரண் டெதிர்கொண் டேத்தினர்.

இவ்வாறாக திருமணமண்டபத்தின் முன்பாக சேர்ந்துகொண்ட எமது அப்பன் ஆறுமுகப் பெருமான்மீது; அங்கு அவர் திருமுன்பு வந்தமுனிவர்கள் யாவரும் தங்கள் கைகளில் ஏந்திய கும்பங்களில் நிறைவுற்றிருந்த புண்ணியதீர்த்தத்தை தருப்பையால் தோய்த்து அந்நீரைத் சுவாமிமேல் தெளித்து வேதவாக்கால் ஆசீர்வாதம் சொல்லி எல்லாருமாக எம்மணவாளனை வணங்கினார்கள், 201

செங்கை தன்னிடைத் தேவர் மாதவர்
நங்கை மாரெலாம் நாலி ரண்டெனும்
மங்க லங்களும் மரபின் ஏந்தியே
எங்கள் நாயகற் கெதிர்ந்து போற்றினார்.

சிவந்த அழகுடைய திருக்கரத்தில் தேவர்களதும் முனிவர்களதும் பத்தினிமார்கள் எல்லாரும் எட்டுவகையாகும்: கண்ணாடி நிறைகுடம் விளக்கு சாமரை ஸ்ரீவற்சம் சுவஸ்திகம் இடபம் முரசு என்னும் மங்கலப் பொருள்களை முறையாக ஏந்திவந்து எங்கள் நாயகராகும் ஆறுமுகப்பெருமான் திருமுன்பு சென்று காண்பித்து வணக்கம் புரிந்தனர். 202

பஞ்சி தூயநெய் பளித நாவியாய்
விஞ்சு தீஞ்சுடர் மிளிர்பொற் றட்டைகள்
அஞ்சில் ஓதியர் அங்கை ஏந்தியே
செஞ்செவ் வேள்முனஞ் சிறப்பித் தாரரோ.

பஞ்சின் திரியில் தூயதான நெய்யும் பச்சைக்கற்பூரமுடன் நாவிநெய்யும் உடன் கலந்து சிறப்புடன் விளங்கிடும் அழகால் ஒளிர்கின்ற மிகுந்த சுடருடைய இனிய பொன் ஆலாத்திகளை ஐந்து வகையான சிறந்த கூந்தல் முடிப்புடைய தேவப் பெண்கள் அழகிய கைமீது ஏந்திவந்து எங்கள் பெருமான் திருமுன்பு அவ் ஆலாத்திகளை செம்மையாகக் காட்டி ஆராதித்தனர். 203

காலை யங்கதிற் காலை யங்கதிர்
மேலை விண்முகில் விட்ட கன்றெனக்
கோலஞ் செய்யநங் குமர நாயகன்
நீல மஞ்ஞைமேல் நின்று நீங்கினான்.

அவ்வாறாகிய காலையில்; காலையில் உதயமாகும் சூரியக்கடவுளை மேலாக விளங்கிடும் முகில் மறைப்பதை விடுத்து நீக்கியதை ஒத்து, கோலம் நிறைந்து விளங்கிடும் எங்கள் குமரநாயகப்பெருமான் நீலநிறம் கொண்ட மயில் மீதின் நின்றும் இறங்கியருளினார். 204

ஏய மஞ்ஞைநின் றிழிந்து வேள்விசெய்
கோயில் முன்கடைக் குமரன் சேர்தலும்
ஆய போழ்தினில் அரம்பை மாரொடுந்
தூய தோர்சசி தொழுதங் கெய்தினாள்.

குழந்தை வடிவாகி எல்லார்க்கும் நாயகராகும் ஆறுமுகப்பெருமான் எழுந்தருளி வந்து மயில்வாகனத்தின் நின்றும் இறங்கியருளி; திருமண வேள்வி நடைபெற இருக்கும் திருமணக்கோயிலின் திருமுன்புள்ள கடைவாய்தலில் சேர்தலும்; அந்த ஒரு வேளையில் தேவப் பெண்களுடன் தூயவளானதொரு இந்திராணி விரைவின் அங்கு எம் பிரபுவைக் கைகூப்பித் தொழுதவாறு வந்து கொண்டாள். 205

எதிர்பு குந்திடும் இந்தி ராணிதன்
புதிய தோர்பசுப் பொழிந்த தீம்பால்
நிதியின் கொள்கலம் நிரப்பி வந்துவேள்
பதயு கங்களிற் பரிவொ டாட்டினாள்.

கும்பிட்டவாறு எதிர் புகுந்த இந்திராணிதேவி தனது புதியதொரு பசு பொழிந்த தித்திப்பான பாலினை பொன்னால் செய்த ஓர் பாத்திரத்து நிரப்பிவந்து ஆறுமுகப்பெருமானின், தாமரையின் வாசமலரொத்த பாதங்களில் பரிவுடன் பாலால் திருமஞ்சனமாட்டினாள். 206

ஆட்டித் தீம்பயன் அலருங் கண்ணியுஞ்
சூட்டி மெல்லடி தொழுது பல்சுடர்
கூட்டி வைத்ததோர் கொள்க லந்தனைக்
காட்டி மும்முறை கடவுட் சுற்றினாள்.

பாலினால் ஐயரின் பாதகமலங்களை ஆட்டி முகை விரிந்து மணம் தரும் பூவும் கண்ணியும் பாதங்களில் சூட்டி மென்மையாகும் பாதத்தினைத் தொழுது பல்சுடர் கொண்டு ஏற்றிவைத்திருந்த தீபத் தட்டினை எடுத்து எம்தேவாதி தேவர் திரு முன்பு மும்முறை சுற்றிக் காண்பித்து பெருவணக்கம் புரிந்தாள். 207

இனைய தன்மைகள் இயற்றி இந்திரன்
மனைவி வெள்கியே மடமின் னாரொடுந்
தனது மந்திரந் தன்னிற் போதலும்
அனகன் கண்டதற் கருள்செய் தேகினான்.

இனையதன்மைகள் யாவையும் இந்திரன் மனைவி இந்திராணி செய்து வணங்கி பலர் கூடிய சபையில் நாணி ஏனைய தேவப் பெண்களுடன் தனது அரண்மனையில் போனாள். போதலோடும் எமது ஆருயிருக்குயிராய ஆறுமுகமுடைய அப்பன் அது கண்டு அதற்கு அருள் புரிந்து அப்பால போயினான். 208

கோல மாமணி குயிற்றிப் பொன்னரி
மாலை நாற்றியே வனப்புச் செய்திடுஞ்
சாலை புக்கனன் தனக்கு வேறொரு
மூல மில்லதோர் முதலின் வந்துளான்.

அப்பால் போயருளி; கோலம் மிகுந்த நவரத்தின மணிகளைப்பதித்து; பொன்னரி தாரத்தின் மாலைகளைத் தூக்கி வனப்புடன் சிறக்க வைத்துள்ள திருமணச்சாலையில் புகுந்தருளினார் தனக்கு ஒரு மூலப்பொருளில்லாத முதலாய சிவப்பரஞ்சுடரின் நெற்றியம்தலத்து உலகுயிர்களை இரட்சித்தருளும் கருணையால் தோன்றிய எம் ஆறுமுகப் பெருமான். 209

## வேறு

பக்க மாய்அரி பங்கயன் ஆதியோர்
தொக்கு வந்திடத் தொன்மணி மண்டபம்
புக்கு நம்பி புரந்தரன் உய்த்திடு
மிக்க பீடத்தில் வீற்றிருந் தானரோ.

திருமணச்சாலையில் புகுந்திடும் எம்பெருமான் பக்கராக பிரமதேவன் நாராயணக்கடவுள் ஆதியான யாவரும் தொகுதியுடன் கூடிவந்திட, மிகவும் முதுமையான இரத்தினங்களாலாய திருமண மண்டபத்தின் உட்புகுந்து அங்கு சுவாமி அமர்ந்தருளும் பொருட்டு இந்திரதேவன் இட்டுவைத்த சிறந்ததொரு சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்தருளினார். 210

வீற்றி ருந்தபின் வேதனும் மாயனுந்
தேற்ற மிக்க முனிவருந் தேவரும்
ஆற்றல் வீரரும் அண்ணல்தன் ஏவலால்
ஏற்ற ஏற்ற இடந்தொறும் வைகினார்.

வீற்றிருந்த பிற்பாடு பிரமதேவனும் நாராயணக்கடவுளும் அறிவு மிகுந்து தேறித்தெளிந்த முனிவோரும் ஆற்றல் மிகுந்த இலக்கம் வீரரும் எம்பெருமானின் ஏவற்படி தம் தகுதிக்கு ஏற்ற ஏற்ற இடந்தோறும் இனிது அம் மண்டபத்து வீற்றிருந்தனர். 211

அந்த வெல்லை அவனியில் வாழ்முசு
குந்த னேமுதற் கொற்றவர் யாவரும்
வந்து வந்து வணங்கி வழுத்திடக்
கந்தன் எந்தை கருணைசெய் தானரோ.

அந்த எல்லையில் இப்பூமியில் வாழ்கின்ற முசுகுந்தன் முதலாகச் சொல்லப் பெறுகின்ற அரசர்கள் யாவரும் வந்து வந்து எம்பெருமானை வணக்கம் செய்து வழுத்திட, அதுபோது எந்தை பெருமான் ஆறுமுகக் கடவுள் அவர்கள் யாவருக்கும் நல்லருளின் கருணையைப் புரிந்தார். 212

ஆன காலை அரியயன் நாடொணு
ஞான நாயகன் நங்கையுந் தானுமோர்
மான மேல்கொண்டு மாயிருஞ் சாரதர்
சேனை சூழ்தரச் சேணிடைத் தோன்றினன்.

அவ்வாறாகிய அந்தக் காலையில் பிரமதேவனும் நாராயணக் கடவுளும் இன்னமுமே நாடிக்காணொணாத ஞான நாயகரான சிவபெருமான் உமையம்மையாரும் தானுமாக ஓர் விமான மேற்கொண்டு மிகப்பெரிய பூதங்களாகும் சேனைகள் தம்மைச் சூழ்ந்து வந்திட வானிடையாக வந்து திருக்கல்யாண மண்டபத்தின்முன் தோன்றியருளினர். 213

அம்மை யுந்தன தத்தனும் வந்தது
செம்மல் கண்டு சிறப்புடை ஓகையாய்
விம்மி தங்கொண்டு மேதகும் அன்பினால்
இம்மெ னக்கடி தேயெழுந் தானரே.

அம்மையும் தனது அப்பனும் அங்கு வந்த தன்மையை எமது தலைவர் ஆறுமுகப் பெருமான் கண்டு சிறப்புற்ற உவகைபெற்று அற்புதம் கொண்டு மேலான அன்பினால் மிகுவிரைவாகத் தமது இருப்பிடம்விட்டு எழுந்துகொண்டார். 214

கண்ண னாதிக் கடவுளர் யாவரும்
எண்ணி லாமுனி வோர்களும் எம்பிரான்
நண்ணி னான்இங்கு நாமுய்ந் தனமெனாத்
துண்ணெ னாவெழுந் தார்கை தொழுதுளார்.

அவ்வேளை நாராயணக்கடவுள் ஆதியான கடவுளரும் எண்ணிலாத முனிவோர்கள் யாவரும் எமது பெருமான் இங்கு வந்துவிட்டார், நாம் எல்லோரும் உய்ந்தோம்; என்று திடீரென யாவரும் எழுந்தார்கள், கைகூப்பித் தொழுதுகொண்டார்கள். 215

அனைய காலையில் ஆதியம் பண்ணவன்
இனிது மானத் திழிந்து கணத்துடன்
புனித நீடு பொலன்மணிச் சாலையுள்
வனிதை யாளொடும் வந்துபுக் கானரோ.

அவ்வாறான காலையில் எல்லாம்முன் தோன்றாமே தோன்றிய ஆதியாகும் சிவன் இனிதுடன் விமானத்தில் நின்றும் இறங்கித் தம்மைச் சூழ்ந்துள்ள பூதகணங்களுடன் புனிதத்தால் பெருகி, அற்புதமாகிய பொன்னாலும் மணியாலும் விளங்கும் திருமணச் சாலையுள் எம்பிராட்டியுடன் வந்து புகுந்தருளினர், 216

வேறு

அதுகண் டுநடந் தறுமா முகவன்
எதிர்கொண் டுவிரைந் திருவோர் பதமும்
முதிரன் பொடுதன் முடிசூ டினனால்
கதிருங் கமலங் களுமே வியபோல்.

அப்பனும் அம்மையும் வருதலைக்கண்டு ஆறுமுகப்பெருமான் அவர்பால் நடந்தருளிச் சென்று அவர்களை எதிர்கொண்டு இருவோரது பாதகமலங்களையும் முதிர்கின்ற அன்புடன் தாழ்ந்து முடிமேல் சூடிட வணங்கினர். அவரின் அச்செயலை நோக்கினல் சூரியதேவனும் தாமரையும் தன்பாட்டில் ஒருவர் ஒருவரை மேவி மலர்வதுபோன்றது. 217

வந்தஞ் சலிசெய் துவணங் கியதோர்
கந்தன் தனையங் கவர்கை கொடெடாத்
தந்தம் முரனூடு தழீஇ முறையே
முந்தன் பொடுயிர்த் தனர்உச் சியையே.

தம்மை வந்து அஞ்சலிசெய்து வணங்கியதொரு எம் ஐயன் ஆறுமுகப்பெருமானை அங்கு அம்மையும் அப்பனும் கையால் தூக்கி எடுத்துத் தங்கள் தங்கள் மார போடு சேரத்தழுவி முறையாக முன்னுள்ள அன்புடன் உச்சிமீது முத்தமிட்டார்கள். 218

முதுவா னவரும் முனிவோர் எவரும்
மதுசூ தனனும் மலர்மேல் அயனுஞ்
சதவேள் வியனுஞ் சகமீன் றவர்தம்
பதமீ மிசைவந் துபணிந் தனரால்.

எல்லார்க்கும் முன்னையரான முதிய தேவரும்; முனிவோர்கள் எவரும் நாராயணக் கடவுளும், தாமரைமலர்மேல் இருந்திடும் பிரமனும், நூறு யாகம் செய்து பேறடைந்த இந்திரதேவனும் அங்குவந்து இவ்வுலகம் யாவையும் தோற்றுவித்தருளும் நித்தியராகும் சிவபெருமான் பார்வதி அம்மையாரின் பாதகமலங்களின் மீது பணிந்தார்கள். 219

தாழ்வுற் றிடுவோர் உமைசங் கரனைச்
சூழ்வுற் றுவலஞ் செய்துசூழ் வினையூ
டாழ்வுற் றிடுபுன் மையகன் றடியேம்
வாழ்வுற் றனமென் றுவழுத் தினரால்

திருவடிகளில் தாழ்வுற்றிடும் இவர் யாவரும் உமையம்மையாரையும் சிவபெருமானையும் சூழ்வுற்று வலம்செய்து எம்பெருமானே! ஓயாது எம்மைப்பற்றி ஆழ்த்தித் துயருற வைக்கும் புன்மையான தீவினையின் செயல் யாவும் அகன்று அடியோம் மேலான வாழ்வுபெற்றனம் எனப்போற்றினர்கள். 220

உன்னற் கரிதா கியுயிர்க் குயிராய்
மன்னுற் றவனை மலைமங் கையுடன்
பொன்னிற் புனையும் புதுமன் றல்மனை
தன்னிற் குமரன் கொடுசார்ந் தனனுல்.

எம் நினைப்பாலும் நினைத்திட அரிதாகி எல்லா உயிர்க்கும் உயிராகி இருக்கின்ற எம் பகவானை மலையரசன் புத்திரியாகும் உமையம்மையாருடன், பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற புதுமையிற் சிறந்த மங்கலமுடைய திருக்கல்யாண மண்டபத்து எம்பிரான் ஆறுமுகன் அழைத்துச் சென்றருளினர், 221

### வேறு

ஆகியதொர் போழ்துதனில் ஆணைமுறை தன்னால்
மாகநெறி வந்ததொரு மணித்தவிசு நண்ணத்
தோகையுடை மஞ்ஞையுறழ் தோற்றமுடை மாதோர்
பாகமுற வாயிடை பராபரன் இருந்தான்.

அவ்வாருக எம்பிரான் சிவன் திருமணமண்டபத்தில் முருகப்பிரானுல் அழைத்துச் செலலப்பெறலும், அதுவேளை எம்பிரானின் ஆணையின் விதிப்பிரகாரம் அற்புதமாய தொரு சிம்மாசனம் உடன் வந்து அங்கு சேர்தலும், அப்பொழுது அந்த அற்புத மான சிம்மாசனத்தில் தோகையுடைய மயிலினை ஒத்த தோற்றமுடைய நீலவடி வாகும் உமையம்மையார் ஒருபாகத்தமர்ந்திட சிவபிரான் அந்த சிம்மாசனத்திருந் தருளினர். 222

மங்கையுமை யுஞ்சிவனும் வள்ளறனை நோக்கி
இங்குவரு கென்றுபின் எடுத்தினிது புல்லித்
தங்கள் வயின் வைத்துநனி தண்ணளி புரிந்தார்
அங்கது தெரிந்துதொழு தம்புயன் இசைப்பான்.

மங்கை நல்லாள் உமையம்மையும் சிவபெருமானும் எம் அருள் வள்ளல் முரு கப்பெருமானை நோக்கி இங்கு நீ வாவென அழைத்து, அவர் வருதலும் பின்னர் எடுத்து இனிதுடன் அணைத்துத் தழுவி தங்கள் மடிமீது வைத்து நல்ல அருளினைப் புரிந்தார்கள். அதுகண்டு மகிழ்வுற்ற பிரமதேவர் சிவபெருமானைத் தொழுது இதனைச்சொல்வார், 223

முன்னமொரு வைகல்தனில் மூவிரு முகத்தோன்
தன்னை அசு ரப்படை தடிந்திட விடுத்தாய்
அன்ன பரி சேயவுண ராயுளரை வீட்டி
நென்னல்இமை யோர்சிறையும் நீக்கி அருள் செய்தான்.

முன்னம் ஒருநாள் தேவரீர் ஆறுமுகமுடைய பெருமானை அசுரப் படைகளை அழித்திடும்படி விடுத்தீர். அத்தன்மைக்கேற்ப எம்பிரான் ஆறுமுகனும் அசுரரா யுள்ளார் யாவரையும் அழித்தொழித்து நேற்றையதினம் தேவர்கள் சிறையையும் நீக்கி எமக்கு நல்லருளினைப் புரிந்தருளினர். 224

நன்றியித னைக்கருதி நாங்கள்புரி கைம்மா
றொன்றுமிலை என்னினும் உளத்தெழும் விருப்பால்
வென்றியசு ரேசர்கிளை வீட்டுகும ரேசற்
கின்றுமக வான்மகளை ஈந்திட நினைந்தான்.

நன்றி இதனைக் கருதி நாங்கள் எம்பெருமானுக்குச் செய்கின்ற பதிலுபகாரம் யாதொன்றும் இல்லை என்னுலும், எம்முள்ளத்து எழுகின்ற பெருவிருப்பத்தால் இது காறும் பல வெற்றியுடன் உலகினை ஆண்ட அசுரரின்தலைவன் சூரபன்மனை கிளை யுடன் அழித்திட்ட குழந்தைவடிவான எம் ஈசனுக்கு இந்திரதேவன் இன்று தனது மகள் தெய்வநாயகி அம்மையாரைத் திருமணம் செய்துகொடுக்க நினைந்தான். 225

அற்றமில் இரக்கமுடன் ஆருயிர்கள் முற்றும்
நிற்றலும் அளித்தருளும் நேரிழையும் நீயும்
மற்றிதுப கற்பொழுதில் வந்தனிர்கள் என்ருல்
சிற்றடிய ரேங்கள்செயல் சீருளதை யன்றே.

எக்குறையும் காணுத இரக்கமுடன் எல்லா உயிர்களையும் நிற்றலும் பரி பாலித்தருளும் அழகிய திருவுருவுடைய அருட்செல்வி உமையாளும் நீயும் இந்த பெரியதொரு மங்கலகரமான பொழுதில் வந்தீர்கள் என்ருல் சிறுமையால் மிகுந்த அடியேங்கள் செய்யும் செயல் சீருடையதாயது அல்லவோ.

நாம் செய்யும் செயலை எம்பிரான் தந்தையான தேவரீருக்கு எடுத்து முன்னர் மொழிந்திட வேண்டியது எம்கடமை, எனினும் எம் சிறுமையால் யாம் அதனைச் செய் யாதொழியவும் பேரருளாளனை நீர் எம்பால் இரக்கமுடன் இன்று இங்கு எழுந் தருளப் பெற்றமையால் எம் செயல் சீருடையதாக அமைந்துகொண்டது என்ருர் பிரமதேவர். 226

என்றினைய நான்முகன் இசைத்திடலும் ஈசன்
நன்றென மகிழ்ச்சிகொடு நாமுமிது காண்பான்
மன்றல்மலர் கூந்தல்மலை மங்கையுடன் இங்ஙன்
சென்றனம் இதற்குரிய செய்தவினி யென்ருன்.

என்று இனைய வார்த்தைகளை நான்கு முகமுடைய பிரமதேவர் எடுத்துக் கூறிடலும் அதுகேட்டருளிய ஈசன் சிவன் அதுநன்று என்று மிக மகிழ்ச்சிகொண்டு பிரமதேவனே! நாமும் இந்த திருமணத்தைக் காணும்பொருட்டு வாசம் கமழ்ந்திடும் மலர் சூடிய கூந்தலை உடைய மலையரசன் புத்திரி பார்வதியம்மையுடன் இங்கு வந்துள்ளோம்; இனி இத்திருமணத்திற்குரிய செயல்யாவையும் செய்திடுவீராக என்ருர். 227

நாதனிவை கூறுதலும் நன்குமகிழ் வெய்தி
மாதவனும் நான்முகனும் வாசவனை நோக்கி
வேதமுறை யால்முருகன் வேட்டருள உன்றன்
கோதைதனை அன்பொடு கொணர்ந்திடுதி யென்ருர்.

எங்கள் நாதன் சிவபிரான் இவற்றைக் கூறுதலும் அதுகேட்டு நன்றுடன் மிக மகிழ்ந்து நாராயணக் கடவுளும் பிரமதேவரும் இந்திர தேவனை நோக்கி வேத முறையால் முருகப் பெருமான் உனது மகள் தெய்வயானை அம்மையாரைத் திருமணம் செய்திட உன்மகளை இங்கு அன்போடு கொண்டுவருவாய் எனக் கூறினுர்கள். 228

அந்தவமை யந்தனில் அதற்கிசைவு கொண்டே
பைந்தொடிநல் லார்களமர் பாங்கர் தனில் ஏகி
நந்தமைய ளித்தருளும் நங்கைவரு கென்னு
இந்திரன்வி ளித்திடலும் ஏந்திழையெ ழுந்தாள்.

அந்த நேரம் தனில் இந்திரக்கடவுள் அதற்கு இசைவுகொண்டு பசிய வளையல்களை அணிந்த தேவப்பெண்கள் அமர்ந்திருக்கும் அப்பக்கரில் சென்று அங்கு தேவப்பெண்கள் தொழவும் வாழ்த்தவும் சிறப்புடன் வீற்றிருந்தருளிய எம் தெய்வயானை அம்மையாரைக் கண்டு; பரவசமாகி எம்மை நித்தலும் காத்தருளும் அன்னையே எழுந்தருளி வருக என்று இந்திரக்கடவுள் வேண்டியழைத்தலும் எம்பெருமாட்டி தேவநாயகியும் எழுந்து புறப்படுகின்ருள். 229

கல்லுயர் பொருப்பினிடை காமரடி செல்ல
வல்லனகொல் என்றுமணி நூபுரம் அரற்ற
மெல்லிடை வருந்துமென மேகலை இரங்க
எல்லவரும் உண்மகிழ எம்மனை நடந்தாள்.

கல்லாகி உயர்ந்த திருப்பரங் குன்றத்திடை எம்பிராட்டியின் அழகிய மிருதுவான திருப்பாதம் நடந்திடவும் வல்லமையுடைய தாமோ என்று சொல்வது போன்று பெருமாட்டியின் பாதச் சிலம்பு சிறிதே ஓசைசெய்ய; அம்மவோ! நடந்தால் மெல்லிய இடைவருந்துமே எனத் திருவரையில் அணிந்த மேகலாபரணத்தின் மணிகள் அசைந்திரைய ;கண்டார் எல்லாரும் உள்ளம் களிகூர்ந்திட எம்தாய் தெய்வநாயகியம்மை திருமணமண்டபத்தை நோக்கி நடந்தருளினர். 230

பஞ்சிதனின் மெல்லடி பனிப்பவரை யின்பால்
குஞ்சரி நடந்தசெயல் கூறுதுபு மைத்தோ
செஞ்சுடர்வை வேலுடைய செம்மலடி தீயேன்
நெஞ்சக அடுக்கலினும் நின்றுலவும் என்ருல்.

செம்பஞ்சிலும் பார்க்க மிருதுவான பாதகமலங்கள், சிறிதே நடுக்கமுற அச்சபையூடு எம்பிராட்டி தெய்வநாயகி அம்மையார் அம்மலைத்தலத்திடத்து நடந்தருளிச் செல்வதை நாம் கூறுவது ஓர் புதுமையாக இருக்கவும் வேண்டுமோ?

இல்லை: ஏனெனில் செவ்வொளி பரந்திடும் சுடர்வேலுடைய எம்பெருமான் ஆறு முகக் கடவுளின் திவ்விய மலர்போன்ற திருவடி, தீமையுடைய எண்ணத்தை தோற்றி விக்கும் கரடுமுரடான என் நெஞ்சிடை நின்று நிலவிடுகிறது என்றால்.

யான்கொடியவன் என் நெஞ்சும் கொடிய கல்லினைப் போன்றது. அந்தக் கொடிய கல்நெஞ்சினை எக்காலமும் பிரியாது எம் அப்பன் ஆறிமுகமுடையோன் திருப்பாதம் தங்கியுள்ளதே! கொடியேனது கொடுமையான இக்கல் நெஞ்சிலும் ஐயருடைய திருப் பாதம் நிலவ சம்மதம் கொண்டு அதைச் சகிக்கின்றது என்றால், அவரின் பக்கராகப் போகின்ற தெய்வநாயகி அம்மையாரின பாதகமலங்கள் இந்தத் திருப்பரங்குன்ற மலையில் நடந்ததை ஒப்பிடும்போது என் நெஞ்சிலும் அவ்வளவு கடினமன்று. 231

தந்திமுன் வளர்ப்பவரு தையல்மிக நொய்ய
செந்தளிர் ஒதுங்கமிளிர் சீறடி ஒதுங்கி
இந்திரையும் நாமகளும் ஏனையரும் ஏத்தப்
புந்திகளி கூர்தரு புரந்தரன்முன் வந்தாள்.

ஐராவத யானை முன்னர் வளர்த்திட வளர்ந்து வருகிற தெய்வயானை மிக வும் நொய்தான செந்தளிரும் ஒதுங்கிட அத்தகைய மிருதுவாக மிளிர்கின்ற தமது சீரிய திருப்பாதம் ஒதுங்கு நடந்தருளி: மகா இலக்குமியும் சரஸ்வதிதேவியும் ஏனைய தேவப்பெண்களும் துதித்திடவும் எம்பெருமாட்டியின் அற்புதக்கோலம் கண்டு மனம் களிகூரும் இந்திரன் முன்பாக வந்தருளினாள். 232

**வேறு**

இன்ன வெல்லையில் இந்திரன் தெய்வதக்
கன்னி தன்னைக் கடிமணச் சாலையின்
முன்னர் உய்ப்ப முனிவருந் தேவரும்
அன்னை வாழியென் றேயடி போற்றினர்.

இன்னதான வேளையில் இந்திரதேவன் தெய்வநாயகியாகும் நித்திய கன்னி கையை வாசம் கமழும் மலரால் நிறைந்த திருமணச்சாலையின் முன்னாக அழைத் துச் சென்று சேர்த்திட, எம்பெருமாட்டியின் வருகையைக் கண்ணுற்ற முனிவரும்தேவ ரும் எம் அன்னையே வாழ்க வாழ்க என வாழ்த்தி அவளின் திருவடிகளைப் போற்றிப் பணிந்தார்கள். 233

கணங்கொள் பேரவை கைதொழ ஆண்டுறும்
அணங்கு தன்னுடன் ஆதியந் தேவனை
வணங்கி வேலுடை வள்ளலை நோக்கியே
சுணங்கு சேர்முலை துண்ணென வெள்கினாள்.

தெய்வ கணங்களாகவே நிரம்பிய பெரிய அச்சபை கைதொழச் சென்று அவ் விடத்து உமை அம்மையுடன் அமர்ந்தருளுகின்ற ஆதியான சிவபெருமானை வணங்கி வேற்படையை உடைய அருள்வள்ளல் முருகப்பெருமானைக் கண்ணுற்றருளி தேம லுடைய தனம்கொண்ட தெய்வயானை அம்மை திடீரென நாணங் கொண்டாள். 234

மங்கை தாழ்தலும் வாலிதின் நோக்கியே
அங்கண் நாதன் அருள்செய அண்ணலைக்
கொங்கை யாற்குழை வித்தவள் கோல்வளைச்
செங்கை யோச்சிச் சிறுபுறம் நீவினாள்.

தெய்வயானை அம்மை திருமுன்பு தாழ்ந்து வணங்குதலும், அதனை அன்புடன் நோக்கி எங்கள் நாயகரான சிவபெருமான் நல்லருள் புரிதலும், அப்போது சிவ பெருமானைக் காஞ்சியிலே தனது தனத்தால் குழையைச் செய்த உமையம்மையார் தமது வளையல் அணிந்த திருக்கரத்தை ஓச்சி எம் தெய்வயானை அம்மையாரை அணைத்து அவளின் திருமுதுகைத் தடவிக்கொடுத்தாள். 235

திருத்த குந்திறற் சேவையுஞ் சேண்மிசை
அருத்தி பெற்ற அணங்கையும் முற்படும்
பெருத்த பொன்மணிப் பீடிகை மீமிசை
இருத்தி வைத்தனள் யாவையும் ஈன்றுளாள்.

அவ்வாறு தடவிக்கொண்டபின் திருத்தமுற்ற அற்புத வடிவான தனது குமரனையும், வானிலுள்ள ஐராவத யானை பெற்று வளர்த்த தெய்வநாயகி அம்மையாரையும் முன்னாக அமர்ந்திருக்கும் பெருத்ததொரு பொன்மணிப் பீடத்தில் இருத்தி வைத்தாள் யாவற்றையும் பெறுதுபெற்ற எமது பெருமாட்டி உமையம்மையார். 236

வேறு

அதிர்கழல் ஈசனொ டம்மை இருந்தாங்
கெதிரெதிர் விம்பம் இலங்கிய வாபோல்
வதுவை யணிந்திடு மைந்தனும் மாதுங்
கதிர்மணி தோய்கன கத்தவி சுற்றார்.

அதிர்கின்ற சிலம்பணிந்த பாதமுடைய ஈசன் சிவனுடன் உமையம்மையார் அங்கு இருத்தலைப்போன்ற நிழல் அவள் முன்பாக இலங்கியதுபோன்று திருமண வதுவைக்கோலம் பூண்டுள்ள திருக்குமரன் முருகப்பெருமானும் தெய்வயானை அம்மையாரும் முத்தின் ஒளிபெருகிடும் இரத்தின சிம்மாசனத்தின்மீது வீற்றிருந் தருளினார். 237

தெய்வத மாதொடு செங்கதிர் வேலோன்
வெவ்வரி ஏற்றணை மேவுதல் காணா
வெவ்வெவ ருந்தொழு தேத்தினர் ஈன்ற
அவ்வையும் அத்தனும் ஆரருள் செய்தார்.

தெய்வநாயகி அம்மையாருடன் செவ்வொளி பரப்பிடும் வேல் ஏந்திய பெருமான் கொடிய சிங்கங்கள் சுமந்திடும் சிம்மாசனத்தின்மீது வீற்றிருத்தலைக் கண்ணுற்ற பொழுது, அங்கு வீற்றிருந்தோர் யாவரும் தொழுது வணக்கம் செய்தனர். அது கண்டருளிய தந்தையும் தாயுமான சிவபெருமானும் உமையம்மையும் அவர்கள் பால் பேரருள் புரிந்தார்கள். 238

அண்டர் தமக்கிறை யாங்கவர் கோலங்
கண்டு புகழ்ந்து கரந்தொழு துச்சி
கொண்டு மிளிர்ந்து குளிர்ந்திடு தேறல்
உண்ட சுரும்பினும் உண்மகிழ் வுற்றான்.

தேவர்கட்கு எல்லாம் அரசனான இந்திரதேவன் அங்கு எம்பெருமான் ஆறுமுக ஈசனும் தெய்வயானை அம்மையும் மணவாளக் கோலத்துடன் வீற்றிருந்தருளிய அற்புதக் கோலத்தைக் கண்நிறையக்கண்டு புகழ்ந்தான். கைகளைக் கூப்பித்தொழுது உச்சிமேற்கொண்டு உளம் மலர்ந்து குளிர்ந்து கள்ளுண்டவண்டு பெறுகின்ற மகிழ்விலும் பெரிதும் தித்திப்புடைய ஆனந்தம் உள்ளத்திடை நிறையப்பெற்று மெய் மறந்து நின்றான். 239

நெஞ்ச மகிழ்ந்த நெடுந்தகை சொல்லால்
மஞ்சன மாமலர் மற்றுள முற்றும்
எஞ்சலி லாவகை ஏந்தி அவைகண்
அஞ்சமும் அஞ்ச வருஞ்சசி வந்தாள்.

தனது நெஞ்சம் மகிழ்ந்த பெரியோனாகும் இந்திரதேவன் சொல்லின் பிரகாரம்; தனது திருக்கரத்து திருமஞ்சன நீரும் பெரும் அழகுடைய வாசமலரும் மற்றும் திருவடி பூசனைக்கு வேண்டிய திரவியங்களையும் குறைவிலாவவை ஓர் பொற் பாத்திரத்து ஏந்தி அச்சபையினிடத்து அன்னப் பட்சியும் கண்டு அஞ்சி நாணமுறும் வகை நடந்திட்டு அரிய இந்திராணிதேவி எம்பிரான் திருமுன் வந்தாள். 240

அன்னதொர் காலையில் அந்தர நாதன்
பன்னிரு மொய்ம்பு படைத்திடு புத்தேள்
முன்னர் இருந்து முறைப்பட அன்னான்
பொன்னடி பூசை புரிந்திட லுற்றான்.

அவ்வாறாகிய காலையில் அந்தர உலகில் வாழ்ந்திடும் தேவர்கட்கு நாதனான இந்திரன் பன்னிரண்டு திருத்தோளுடைய எம் கடவுள் திருமுன்பு செவ்வனே இருந்து வேதவிதிப்படி முறையாக எம்பெருமானின் பொன்னார்ந்த திருப்பாதங்களைப் பூசனை புரிந்திடத் தொடங்குவான். 241

சொல்லொரு நாணொடு தோகை மடந்தை
நல்லதொர் கன்னல் நறும்புனல் உய்ப்ப
எல்லவ ரும்புகழ் இந்திரன் ஐயன்
மெல்லடி பற்றி விளக்கினன் அம்மா.

சொலற்கரிய நாணத்துடன், மயில் போலும் சாயலுடைய இந்திராணி தேவி இந்திரன் பக்கர் நின்று நல்லதொரு பொற்பாத்திரத்தில் நின்றும் வாச நீரினை எம் பெருமான் திருப்பாதம்மீது சொரிந்திட எல்லாரும் நோக்கி இப்படியும் பேறுற்றானே இந்திரக் கடவுள் எனப் புகழ்ந்திட இந்திரதேவன் எம் ஐயர் பெருமானின் மென்மையான பாதங்களைப் பற்றி விளக்கினான். 242

செம்மல் பதங்கள் செழும்புனல் ஆட்டிக்
கைம்மலி யுங்கள பந்தனை யூட்டி
அம்மலர் சூட்டி அகிற்புகை காட்டி
நெய்ம்மலி பூஞ்சுடர் நீட்டினன் அன்றே.

எம் ஆறுமுக ஈசனின் திருப்பாதங்களினை செழுமையான வாச நீரால் திருமஞ்சனமாட்டி கைநிறைய எடுத்தேந்திய சந்தனக் குழம்பை எம்பிரபுவின் பாதங்களில் செறிய அப்பி, அதன்பின் அழகிய மலரினைச் சூட்டி அகிலின் தூபத்தினைக் காண்பித்து வணங்கி பின்னர் நெய்சிறந்து மலிந்திட எடுக்கப்பெற்ற தீபச்சுடரை நீட்டி ஆராதித்தான். 243

இவ்வகை பூசை இயற்று தலோடும்
அவ்வயி ராணி அயிற்படை யோன்றாள்
செவ்விதின் ஆட்டிய தீர்த்திகை தன்னைக்
கைவகை யேந்தியொர் காப்பிடை உய்த்தாள்.

இவ்வகையாக இந்திரதேவன் பூசனையை இயற்றுதலோடும் அந்த இந்திராணி கூரிய வேற்படையுடைய பெருமானின் பாதங்களை செப்பமுடன் திருமஞ்சன மாட்டிய தீர்த்தத்தை மிகு பயபத்தியுடன் தமது கைகளால் ஏந்தி ஓர் காவல் மிகுந்த இடத்தில் பாததீர்த்தத்தைச் சேமமுறும்படி வைத்தாள். 244

அன்னுழி இந்திரன் ஆறுமு கேசன்
தன்னொரு கையிடை தந்தியை நல்கி
நின்னடி யேன்இவண் நேர்ந்தனன் என்னாக்
கன்னல் உமிழ்ந்த கடிப்புனல் உய்த்தான்.

அவ்வாறாகிய நேரத்து ஆறுமுகக்கடவுள் திருக்கரத்தில் எம் தெய்வநாயகி அம்மையாரின் திருக்கரத்தை இந்திரதேவன் தூக்கிவைத்து எம்பெருமானை நோக்கி; தேவாதிதேவனே நினது அடியேன் இவளை தேவரிடம் இங்கு கொடுத்துள்ளேன் என்று நல்லதொரு பொற்பாத்திரத்தினின்றும் விடுகின்ற நீரைவார்த்து கன்னிகாதானம் செய்தான். 245

மருத்துவன் மாமறை மந்திர நீரால்
ஒருத்தி பொருட்டினில் ஒண்புனல் உய்ப்பக்
கரத்திடை ஏற்றன னல்கழல் சேர்ந்தார்க்
கருத்திகொள் முத்தியும் ஆக்கமும் ஈவோன்.

தேவ அமிர்தம்பெற்ற இந்திரதேவன் இவ்வாறு வேதங்கள் ஓதிய மந்திர விதியால் எல்லார்க்கும் அன்னையாகும் ஒருத்தியாம் தெய்வயானை அம்மையார் பொருட்டால் நறிய வாசநீரை வார்த்து கன்னிகாதானம் செய்து கொடுத்திட; அதனை தமது திருக்கரத்திடை ஏற்றுக்கொண்டான் எமது ஆறுமுகப்பெருமான்; இவன் ஏற்றான்; ஆனால் தன்னை வணங்குவார்க்கு எவராலும் கொடுத்திடமுடியாததொரு முத்தியினையும் பெரும் செல்வபோகங்களையும் கொடுப்பவர். 246

செங்கம லத்திறை சிந்தையின் ஆற்றி
அங்கையின் ஈந்திட ஆண்டகை கொண்ட
மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து
நங்கை முடிக்கொர் நறுந்தொடை சூழ்ந்தான்.

அப்பால் செந்தாமரை மலர்மீதிருக்கும் கடவுள் பிரமதேவர் உடன் அங்கு மனதால் செய்த தொரு மாங்கல்ய நாணினை எம் ஆண்டகையான ஆறுமுகப் பெருமானது அழகிய திருக்கையில் கொடுத்திட; பெற்றுக்கொண்ட மாங்கல்யத்தினை தெய்வநாயகி அம்மையாரின் முத்துப்போல் ஒளிவிளங்கிய திருக்கழுத்தில் எம்பிரான் அணிந்து பிராட்டியின் திருமுடிக்கு ஓர் வாச மாலையைச் சூட்டியருளினுர். 247

மாவொடு வாழை வருக்கைகொள் பைங்காய்
தீவிய கன்னல் செறிந்திடு செந்தேன்
ஆவருள் பாலிவை அண்டர்கள் செம்மல்
மூவிரு மாமுக னைநுகர் வித்தான்.

மாம்பழத்துடன் வாழைப்பழமும் பலாமரம் தந்த பசிய பலாக்காயும் தித்திப்பான கருப்பஞ்சாறுடன் கலந்த தேனையும் பசுத்தந்த பாலுடன் சேர்த்து அமைத்த திருவமுதினை இந்திரதேவன் அங்கு எடுத்து அதனை ஆறுமுகமுடைய பெருமான் உண்டருளும்படி செய்வித்தான். 248

வார்த்தொகை சூழ்தரு மத்தளி தக்கை
பேர்த்த வலம்புரி பேரி கலித்த
ஆர்த்தனர் வீரர் அருங்கண நாதர்
தீர்த்தனை வந்தனை செய்து களித்தார்.

வார்த்தொகையால் வரியப்பெற்ற மத்தளம் தக்கை எனும் மேளங்கள் முழக்கம் செய்தன. வலம்புரிச்சங்குகள் ஊதப்பெற்றன; பேரிகைகள் பேரோசையுடன் முழங்கின. அங்குள்ள வீரர்கள் அற்புதநிலையால் ஆரவாரித்தனர். அரிய சிவகண நாதர்கள் எல்லாம் எமது ஆறுமுகப்பெருமானை வந்தனை புரிந்து மகிழ்வுற்றுர்கள். 249

தண்டுள வண்ணல் சரோருக மேலோன்
எண்டிசை பாலகர் இந்திரன் என்போன்
அண்டர்கள் ஏனையர் ஆங்கவர் கோலங்
கண்டு சிறந்தது கட்புல மென்றுர்.

குளிர்ந்த துளசி மாலையணிந்த நாராயணக் கடவுள் தாமரை மலர்மீதிருக்கும் கடவுள் பிரமன் எட்டுத்திக்கின் பரிபாலகரான கடவுளர் இவர்களுடன் இந்திர தேவன் என்பவனும், ஏனைய தேவர்களும் மற்றைய அரசர்களும் ஆறுமுகப் பெருமான் தெய்வநாயகி அம்மையாரின் திருமணக் கோலத்தைத் தரிசித்து உள்ளம் நிறைவாகி இன்று இந்த நன்றுடைய எழிலைக்கண்டு எமது கண்பார்வையே சிறந்துளது என்றுர்கள்.

இதுகாறும் வேறுவேறுன காட்சிகளைத் தரிசித்திருந்தார்கள். இன்று கண்ணிற்கு அடங்கொணுத இத்திருமணத்தைத் தரிசித்து நாம் என்றும் பெருததொரு இன்ப மலர்ச்சி பெற்றேம். ஆதலினுல் கண்பெற்ற நாள்முதலாக இன்றுதான் அதனைப் பெற்ற இனியதொரு பயனை அடைந்தோம் என்றமையால் எம் கட்புலம் சிறந்தது என்றுர்கள். 250

ஆயது போழ்தினில் அம்புய முற்றோன்
காயெரி தந்து கலப்பைகள் கூவித்
தூயம ணம்புரி தொன்முறை வேள்வி
நாயக னைக்கொடு நன்றுசெய் வித்தான்.

அவ்வாறாகிய பொழுதினில் தாமரைமீதிருப்பவரான கடவுள் பிரமன் காய்கின்ற அக்கினியை விதிமுறையாக வருவித்து அதன்பின் ஆதிதேவதைகளை அழைத்து வரும் சத்திவாய்ந்த மந்திரங்களை உச்சரித்துத் தூயதான திருமணம்புரிதற்கு ஏற்ற யாகத்தினை எமது முருகப்பெருமானைகொண்டு நன்றுடனுகச் செய்வித்தான். 251

உலகருள் காரணன் ஒண்ணுத லோடும்
வலமுறை யாக வயங்கனல் சூழ்ந்து
சிலையிடை யன்னவள் சீறடி தந்தான்
மலரயனு உச்சியின் மேலடி வைத்தான்.

உலகுகள் யாவற்றையும் அருள் புரிந்த காரணப் பொருளாகும் ஆறுமுடைய பெருமான் அழகிய திருநெற்றியினையுடைய தெய்வ யானை அம்மையாருடனும் எழுந்து சுடர்விடும் சிவாக்கினியை வலமுறையாக வலம் வந்து அங்குள்ள அமமியாகும் சிலைமீது எமது பெருமாட்டி தெய்வநாயகி அம்மையாரின் திருவடியினைத் தூக்கி வைத்தருளினர்; தாமரைமீதிருக்கும் பிரமதேவன் உச்சிமீது தமது பாதங்களைச் சூட்டியருளிய எம்பகவான். 252

மாலினி காளிகள் மாமல ராட்டி
பாலின் நிறத்தி பராயினர் சூழச்
சாலினி மங்கலை தன்னொடு கண்டான்
வேலினின் மாவினை வீழ எறிந்தோன்.

மாலினி காளிகள் மகாஇலக்குமி பால்நிறமுடைய சரஸ்வதிதேவி ஆகியோர் வணக்கம்புரிந்து தெய்வநாயகி அம்மையாரைச்சூழ்ந்துவர அங்கு கற்பின் அதிதேவதையாகும சாலினி மங்கலையைக் கண்டருளினர்; வேலினல் மாவடிவாய் நின்ற சூரபன்மன் அழியும்படி எறிந்த எமது ஆறுமுகப்பெருமான்.

உலகிற்குத் தீங்கினைப் புரிந்த அசுரரைத் திருக்கை வேலால் வீசி அழித்திட்ட கடவுள் ஏனைய உலகத்தவர் தீங்கு நீங்கி வாழ்ந்திட தரிசித்திடும் அருந்ததி எனப் படும் சாலினி மங்கலையைக் கண்டார். அவர் கண்டமையால் அருந்ததியும் உலகமும் பேறுற்றன என்க.

முன்னரும் உலகைப்படைத்த பிரமதேவர் உச்சிமீது திருப்பாதம் சூடியவர் எம்பிராட்டியின் திருப்பாதத்தைத்தூக்கி அம்மிமீது வைத்தருளினர் என்றபோது அவரது அச்செயல் ஏனையோர் அம்மி மிதிப்பது போலல்லாது இந்தக் கைங்கரியம் எம்பிரானது செயலால் சிறந்தது என்க.

அம்மி மிதித்தலின் காரணம் பெண்ணினை உயர்ந்த நிலையில் வைப்பதைக் குறிக்கும். ஆதலால் தமது அருளால் எல்லாரையும் உய்ய வைக்கும் ஈசனுக்கு இவையனைத்தும் ஓர் ஆடலேயாகும். 253

இவ்வகை மன்றல் இயற்றிய பின்னைத்
தெய்வத மாதொடு செங்கதிர் வேலோன்
அவ்வை யொடத்தனை அன்பொடு சூழ்ந்து
செவ்விதின் மும்முறை சேவடி தாழ்ந்தான்.

இவ்வகையாகத் திருமணச்சடங்கைச் செய்து முடித்தருளிய பின்னர் தெய்வயானை அம்மையாருடன் செவ்வொளி பரந்திடும் வேலைக் கைக்கொண்டருளிய முருகப்பெருமான் எழுந்தருளிச் சென்று தந்தையுடன் தாயகும் பெருமாட்டியையும் அன்புடன் சூழ வலம் வந்து செப்பமான முறையால் மும்முறை அவர்களின் சிவந்த திருவடி மலர்களில் தாழ்ந்து வணக்கம் புரிந்தருளினர். 254

வேறு

அடித்த லத்தில்வீழ் மக்களை இருவரும் ஆர்வத்
தெடுத்த ணைத்தருள் செய்துதம் பாங்கரில் இருத்தி
முடித்த லத்தினில் உயிர்த்துமக் கெம்முறு முதன்மை
கொடுத்தும் என்றனர் உவகையால் மிக்ககொள் கையினர்.

திருப்பாதத்தில் வணங்குகின்ற தமது மக்களைச் சிவபெருமானும் கௌரியம்மையுமான இருவரும் ஆர்வத்துடன் தூக்கியெடுத்து மார்புடன் அணைத்து அருள் செய்து தமது பக்கரில் இருத்தித் திருக்குமரனதும் மருகியாரதும் உச்சிமீது முத்த மிட்டு அவர்களை நோககி எமக்கு உற்ற முதன்மையை உம்பால் கொடுத்தருளினோம் என்றார் உவகையால் மிகுந்த கொள்கையுடைய அவர்கள். 255

மலைம டந்தையும் இறைவனும் மைந்தறகு மகட்குந்
தலைமை செய்தருள் புரிதலுஞ் சாலையுள் இருந்த
அலர வன்முதல் அமரரும் முனிவரும் அணங்கின்
குலம டங்கலும் அவரடி முடிமிசைக் கொண்டார்.

இமய மலையில்தோன்றியருளிய அருள் முதல்வியாகும் உமையம்மையாரும் ஈசனும் தமது மைந்தற்கும் மகள் தெய்வயானை அம்மையார்க்கும் மேலாய தலைமைப்பாட்டினைப் புரிந்து அருள் செய்தலும், அதுவேளை திருமணச்சாலையில் இருந்த பிரமதேவன் முதல் கடவுளர் யாவரும் முனிவர்களும் தேவப்பெண்களின் குலம் முழுவதும் அம்மையும் அப்பனுமாய் இப்பொழுது இருந்தருளும் ஆறுமுகப் பெருமான் தெய்வயானை அம்மையாரின் திருவடி மலர்களை உச்சிமேல் சூடியவராய் வணக்கம் செய்தனர். 256

அறுமுக கன்றனை அணங்கினை அவையுளோர் எவரும்
முறையில் வந்தனை செய்தலும் முழுதருள் புரிந்து
கறைவி ளங்கிய கண்டனுங் கவுரியுங் கடிதின்
மறைத லுற்றனர் பரிசனந் தன்னொடு மன்னோ.

ஆறுமுகமுடைய பெருமானை தெய்வநாயகி அம்மையாரைச் சபையில் இருந்தோர் எவரும் முறையாக வந்தனை செய்தலும் எல்லார்க்கும முழுக்கிருபை நோக்கினைப் புரிந்தருளி நஞ்சு விளங்கிய கண்டமுடைய சிவமூர்த்தியும் கௌரி அம்பாளும் தம்முடன் வந்த பரிசனத்துடன் விரைவாக மறைதலுற்றார்கள். 257

மறைந்த காலையில் விம்மித ராய்மணச் சாலை
உறைந்த தேவரும் முனிவரும் உயிர்களுக் குயிராய்
நிறைந்த மேலையோர் நிலைமையை நினைந்தது வாயால்
அறைந்து கைதொழு தவர்பெயர் எடுத்தெடுத் தார்த்தார்.

சிவபெருமானும் கௌரி அம்மையாரும் மறைந்த காலையில் திருமணச்சாலையிலிருந்த முனிவரும் தேவரும் விம்மிதம் அடைந்துள்ளோராய் உயிர்கட்கு உயிராய் நிறைந்தருளுகின்ற இருவோரது நிலையை நினைந்து பெருமானையும் பெருமாட்டியையும் தமது வாயால் துதித்துப்போற்றி கைதொழுது அப்பனின் நாமமே எடுத்தோதி ஆரவாரங்கொண்டனர். 258

வரைப டைத்தவர் மறைந்துழி வானவர் பலரும்
நிரைப டைந்துள முனிவருங் கவன்றது நீத்தார்
திரைப டைத்துள ஆழ்கடற் பட்டுளோர் சிறந்த
கரைப டைத்தென அணங்கொடு குமரனைக் கண்டு.

திருக்கைலாய மலையை இருப்பிடமாகக்கொண்டவர் இருவரும் மறைந்தநேரத்து தேவர்கள் பலரும் நிரையாக நின்று தரிசித்துள்ள ஒழுக்கமிக்க முனிவர்களும் கவலை கொண்டும் உடன் அது நீங்கினர்; எவ்வாறெனில் திரைகொண்ட ஆழ்ந்த கடலில் அமிழ்ந்தினர் சிறந்தவொரு கரையைக் கண்டுள்ளார்போன்று அங்கு தெய்வநாகிய அம்மையாருடன் ஆறுமுகப் பெருமானைக் கண்டுகொண்டோராய்.

எம்பெருமான் ஆறுமுகனை அம்மையாருடன் காணும் அற்புதம் அது அளவிடற் கரியதொரு ஆனந்தம் என்பதை விளக்குவார்; ஆழ்கடல் அல்லற்பட்டோர் கரை கண்டு மகிழ்ந்தார்போல் விளங்கினர் என்றார். 259

உமையும் ஈசனும் இருந்திடு பீடிகை உம்பர்க்
குமர நாயகன் தெய்வதக் களிற்றொடுங் கூடி
அமர அன்னது காண்டலும் மகிழ்சிறந் தன்னார்
கமல மெல்லடி தொழுதனர் வழுத்தினர் களிப்பால்.

உமையம்மையாரும் சிவபெருமகனும் இருந்தருளிய பொற்சிம்மாசனத்தில் ஆறுமுகப்பெருமான் தெய்வயானை அம்மையாருடன் கூடி வீற்றிருந்தருள அதனைக் காண்டலும் மகிழ்ச்சியால் சிறந்து அம்மை அப்பனுடைய தாமரைபோல் வாசமலரடிகளை கைதொழுது வணங்கி யாவரும் களிப்புற்றனர். 260

இனைய காலையில் அரியணைப் பீடநின் றிழியா
அனைவ ருந்தொழு துடன்வர ஆறுமா முகத்துப்
புனித நாயகன் மங்கல இசையொடும் போந்து
தனது கோயிலுட் புக்கனன் இறைவியுந் தானும்,

இவ்வாறான காலையில் சிங்கங்கள் சுமந்திடும் சிம்மாசனப்பீடம் நின்று இறங்கியருளி எல்லாரும் தொழுது உடன்வர ஆறுமுகங்களையுடைய புனிதநாயகராகும் எம் ஈசன் மங்கல இசைகளுடன் எழுந்து புறப்பட்டுச் சென்று திருப்பரங் குன்றிலுள்ள தனது கோவிலில் புகுந்துகொண்டார் எம் தெய்வயானையம்மையாரும் தானுமாக. 261

வேலையன்னதில் குமரவேள் வேள்விநா யகற்கு
மால யன்முதல் அமரர்க்கும் மற்றுளார் தமக்கும்
ஏல வேவிடை தந்துதன் பரிசனம் எவையும்
ஆல யந்தனிற் கடைமுறை போற்றுமா றளித்தான்.

அவ்வாறாய வேலையில் ஆறுமுகப்பெருமான் யாகங்களுக்கெல்லாம் நாயகமான பேறுடைய இந்திரனுக்கும், திருமால் பிரமன் முதலாய கடவுளர்க்கும் மற்றுமுள்ள யாவர்க்கும் மீண்டு செல்வதற்கு உரிய விடையினைப் புரிந்தருளி; தனது பரிசனராகும் வீரர் யாவரும் தமது ஆலயத்தில் வாய்தல்களில் நின்று காவல்புரிந்திடும்படி விடுத்தருளினர். 262

இன்ன தன்மைய தாகவே எம்மையீன் றெடுத்த
அன்னை தன்னுடன் அறுமுகன் உறையுளின் அடைந்து
பொன்னின் மஞ்சமேற் படுத்துமெல் லமளியிற் புவனம்
மன்னு யிர்த்தொகை யுய்ந்திட முயங்கிவை கினனால்.

இன்ன தன்மையாக எம்மை ஈன்றெடுத்த அன்னையாகும் தெய்வநாயகியம்மையுடன் ஆறுமுகப்பெருமான் தமது இருப்பிடமாகிய மூல உறையுளாகும் இருப்பிடத்தையடைந்து அங்குபொன்னினாலான திருமஞ்சத்தின்மீது மென்மையான பள்ளிப்பாலின்மீது படுத்தருளி மேலாகும் உயிர்த்தொகையாவும் உய்ந்திடும்படி பிராட்டியாருடன் கலந்து வீற்றிருந்தருளினர்.

எல்லார்க்கும் தலைவனாகியவன் அருள்வடிவாகும் சத்தி தெய்வயானை அம்மையாருடன் கலந்திருந்தது உயிர்கள் யாவும் உய்ந்து வாழ்ந்திடும்படியாக என்க. தானே நினைந்து தானே அருள்வடிவாகும் தலைவியுடன்கூடி எல்லா உயிரும் தோன்றியும் சிறந்தும் ஒடுங்கியும் வாழவேதான் அந்நிலைகொண்டான். இதனை அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது என்கின்ற வாக்குடன் ஒப்பநோக்குக. 263

சேணு தித்திடு தெய்வதக் களிற்றினைச் செவ்வேள்
நாணி னிற்கட்டி நகரிடைத் தந்துநற் கலன்கள்
பூணு தற்றுறும் அங்குசங் கைக்கொடு புயமாந்
தூணு றப்பிணித் தணைத்தனன் அருளெனுந் தொடரால்.

வானில் தோன்றிய தெய்வீகமான யானையை (தெய்வயானை அம்மையை) செவ்வொளி பரந்திடும் வேலுடைக் கடவுள் நாண் என்பதான (தாலிக்கயிறு) கட்டி திருப்பரங்குன்ற நகரிடை அதனைக் கொணர்ந்து நல் ஆபரணம் பூணப்பெற்றுத் தன்னிடத்துள்ள அங்குசங்கொண்ட திருக்கையால் தமது புயம் என்னும் தூண்மீது இறுகத் தழுவிக்கொண்டார் அருள் என்னும் தொடர்பினால்.

வானில் உதித்த தெய்வயானை அது எவர்க்கும் எய்த முடியாததொன்றாய் இருந்ததை நாணில் அகப்படுத்திப் பலரும் காணுமாறு திருப்பரங்குன்ற நகரிடைச் சேர்த்து தவறுதல் இன்றி அது ஒழுகுமாறு அங்குசம்கொண்ட கையால் தூண் போன்ற தோளுடன் அணைத்து இன்புறுகின்றார் உலகம் உய்ந்திடற்கு ஏற்ற அருள் என்னும் தொடர்பால் என காரண காரிய பயன் மூன்றும் தோன்றும் நயமுடை உவமையாக எடுத்தாண்டுள்ளார் ஆசிரியர். 264

மருந்து போன்மொழிக் குமரியுங் குமரனும் மணந்தாங்
கிருந்த வெல்லையில் விரிஞ்சனும் மாலும் ஏனையரும்
விரைந்து தத்தமக் கியன்றதொல் லிருக்கையின் மேவப்
புரந்த ரன்பரி சனரொடுந் தன்மனை புக்கான்.

அமிர்தம்போன்ற மொழிபேசும் நித்திய கன்னிகையாகும் தெய்வநாயகி அம்மையாரும் உலகம் யாவும் தோன்றி மூப்பவும் தான் மூவாதிருக்கின்ற இளமையுடைய முருகப்பெருமானும் திருமணம் புரிந்தாங்கு இருந்தநேரத்தில் பிரமதேவரும் திருமாலும் ஏனைய கடவுளரும் முனிவரும் விரைவாகச் சென்று தாம் வாழ்ந்திடும் இருப்பிடத்தில் வீற்றிருந்தருள, அங்கு இந்திரதேவன் தன் பரிசன மக்களுடன் தனது இருப்பிட மனையில் புகுந்தான். 265

முகிலு யர்த்தவன் முசுகுந்த னேமுதல் உள்ள
அகில மன்னர்க்குந் தேனுவின் பலபயன் அருந்தித்
துகிலும் ஆரமும் அணிகளும் இருநிதித் தொகையும்
விகல மின்றியே கொடுத்தனன் யாரையும் விடுத்தான்.

முகிலை வாகனமாகவுடைய இந்திரதேவன் முசுகுந்தன் முதலாகச் சொல்லப் பெற்ற அகில உலக அரசர்க்கும் காமதேனு கொடுக்கின்ற பல பயன்களாகும் விருந்திற்குரிய உணவுடன் பல தின்பண்டங்களையும் உண்பித்து அதன்பின் பட்டாடைகளும் முத்துமாலைகளும் இரத்தினங்களும் சங்கநிதி பதுமநிதியாகும் பொருள்களையும் மனத்தில் மாறுபாடின்றிக் கொடுத்தான். பின்னர் யாவரையும் செல்லவிடுத்தான்.

விகலமின்றி என்றது ; கிடைத்தற்கரிய பொருள்களாகும் சங்கநிதி பதுமநிதி இவைகளை அள்ளிக் கொடுத்திடும்போது இதனையும் கொடுக்கின்றேனே என்ற மனத் தளர்ச்சி இன்றியே உவந்து கொடுத்தான் என்க 266

எல்லை யன்னதின் முசுகுந்த னாதியாம் இறைவர்
கல்ல கந்தனில் இழிந்துதஞ் சேனையின் கடலை
ஒல்லை கூடிய வேறுபல் புலந்தொறும் ஒருவித்
தொல்லை யூர்புகுந் திருந்தனர் வீடுறுந் தொடர்பால்.

அவ்வாறாகிய நேரத்தில் முசுகுந்தன் ஆதியான அரசர்கள் திருப்பரங்குன்றம் என்னும் மலைத்தலத்தில் நின்றும் இறங்கித் தனது சேனையின் கடலை விரைவுடன் அடைந்து தாங்கள் தாங்கள் போகவேண்டிய திக்குகள் தோறும் சென்றடைந்து மிகு முதுமையுடைய தமது ஊரில் புகுந்து அங்கிருந்தார்கள், எம்பெருமானுடைய திருமணம் தரிசித்தமையால் வீடுபேறான முத்தியின்பத்தை அடைந்திடவேண்டிய தொடர்ச்சியால்.

எம்பெருமானுடைய திருமணதரிசனம் மிகவும் அற்புதமாயதும் மேலானதும் அதனைத் தரிசித்தார் துன்பம் பிறப்பு இறப்பு ஆகிய இத்தொடர்கள் யாவும் கடந்ததொரு நிலையைப் பின்பு அடைவார்கள். ஆதலின் திருமணம் தரிசித்தபேற்றினால் வரும் ஊழ்; ஏனைய பந்தவினைகளைச் சேர்த்திட வையாது வழிநடத்திச் செல்லலால் வீடுறும் தொடர்பால் இருந்தனர் என்றார். 267

மன்னர் யாவரும் விடைகொடு போதலும் மகவான்
தன்ன தாகிய கடிமனைக் கிழத்தியுந் தானும்
இன்னல் தீர்தரு போகம தாற்றினன் இருந்தான்
அன்ன பான்மையிற் சில்பகல் அகன்றன அன்றே.

அரசர் யாவரும் விடைபெற்றுக் கொண்டு போதலும் இந்திரதேவன் தன்ன தாகிய இல்லக்கிழத்தியான இந்திராணியும் தானும் இன்னல் யாவும் தீர்ந்திட்ட போகங்கள் யாவற்றையும் புரிந்திருந்தான்; அன்ன தன்மையாகச் சில நாட்கள் அகன்றன. 268

ஆகத் திருவிருத்தம் 303

## விண்குடியேற்று படலம்

ஆன திற்சில வைகல்சென் றிடுதலும் அணங்குந்
தானும் உற்றிடும் உறையுளை ஒருபகல் தணந்து
வான வர்க்கிறை வினைக்குறை நிரப்புதல் வலித்துக்
கோன கர்ப்பெரும் புதவினில் வந்தனன் குமரன்.

இவ்வாறான நிலையில் சிற்சில நாள் சென்றிடுதலும், தெய்வநாயகி அம்மையும் தானும் இருந்தருளுகின்ற இருப்பிடத்தை ஆறுமுகப் பெருமான் ஒரு நாள் நீங்கி; தேவர்க்கு அரசன் இந்திரனுக்கு செய்யவேண்டிய செயல்களின் குறைபாடுகளை நிரப்பி வைப்பதற்கு திருவுளம்கொண்டு திருப்பரங்குன்றத்தின் தலைநகரின் புறத்தினில் எழுந்தருளிவந்தார். 1

உவாவின் மாதுடன் உவாவினுக் கிளையவன் உவாவில்
திவாக ரன்மதி யாமென வருதலுந் தெரிந்து
தவாத அன்புடை வயவருஞ் சாரதர் எவரும்
அவாவொ டன்னவர் அடிமுறை வணங்கிநின் றார்த்தார்.

ஐராவத யானையின் பெண்ணாகும் தெய்வநாயகி அம்மையாருடன் யானை முகமுடைய விநாயகப் பெருமானுக்கு இளையவரான ஆறுமுகப்பெருமான் பூரணையினன்று தோற்றும் சந்திரன் போன்று வருதலும், அதனைத் தெரிந்து குறைவிலாத அன்புடைய வீரரும் பூதங்கள் எவரும் கண்டு தரிசித்து மிகும் அவாவினால் அன்புடன் அவர்களது திருவடிகளைப் பணிந்தனராய் நின்று ஆனந்த மிகுதியால் ஆர்ப்பரவம்கொண்டனர். 2

அனிகம் ஆர்த்திடல் செவிப்புலம் படர்தலும் அடல்வேல்
புனித நாயகன் போந்தனன் போந்தனன் என்று
வனச மேலவன் மாலவன் மகபதி வானோர்
முனிவர் யாவரும் எழுந்தனர் விரைசெலல் முன்னி,

பூத சேனைகள் எம்பெருமான் வரவு கண்டு ஆர்ப்பரித்ததை காதூடு கேட்டுக் கொள்ளலும் போர்வேலேந்திய புனிதன் எம் ஆறுமுகப்பெருமான் வந்தார் வந்தார் என்று தாமரைமேலிருக்கும் பிரமன் திருமால் இந்திரன் தேவர்கள் முனிவர்கள் யாவரும் எம்பிரானுடன் விரைவாகச் சென்றிட நினைந்து எழுந்துகொண்டனர். 3

வேறு

எழுதரு கின்றவர் யாரும் ஓரிமைப்
பொழுதுறும் அளவையிற் போந்து மன்னுயிர்
முழுதருள் புரிதரு முதல்வன் சேவடி
தொழுதனர் இறைஞ்சினர் சூழ்ந்து போற்றலும்.

எழுந்து கொள்கின்றவர் யாவரும் ஓர் இமைப்பொழுதின் அளவின்முன் சென்று சிறந்த உயிர்கள் யாவற்றிற்கும் முழு அருளினையும் புரிகின்ற ஆறுமுகப் பெருமானின் சிவந்த மலரடிகளைத் தொழுதனர் வணங்கினர் எம்பிரானைச் சூழ்ந்து நின்று போற்றுதல் புரிதலும், 4

கொந்தவிழ் அலங்கலங் குலவுத் தோளினன்
வந்துவந் தனைபுரி வதனை நோக்கியே
நந்தனி யூர்தியை நடாத்திச் செல்கெனச்
சிந்தையில் விரைதரு தேர்கொண் டேகினன்.

கொத்தவிழ்ந்த பூமாலையணிந்த திருத்தோளையுடைய அழகிய தோளுடைய வீரவாகு தேவர் வந்து தம்மை வந்தனை செய்தலை எம்பெருமான் ஆறுமுகன் கண்ணுற்றருளி, வீரவாகுதேவனே நமது தனியான மனோவேகம் என்னும் தேரை இங்கு எடுத்து வருவாயாக எனக் கட்டளையிட ; அவ்வாறே வீரவாகுதேவர் சென்று சிந்தையிலும் விரைந்து சென்றிடும் எம்பெருமான் தேரினைக் கொண்டு வந்தார். 5

ஆசுகன் உய்த்திடும் அம்பொற் றேர்மிசை
வாசவன் அருள்புரி மடந்தை தன்னுடன்
தேசுடை அறுமுகச் செம்மல் கண்ணுதல்
ஈசனுங் கவுரியும் என்ன எய்தினன்.

வாயுபகவான் சாரதியாகச் செலுத்திடுகின்ற அழகிய பொற்றேரில் இந்திர தேவன் பெற்றருளிய மகளாகும் தெய்வயானை அம்மையாருடன் சோதிப்பிரகாச முடைய ஆறுமுகப்பெருமான் ; நெற்றிக்கண்ணுடைய சிவபெருமானும் கௌரியம் பாளும்போன்று ஏறிக்கொண்டார்கள். 6

**வேறு**

சூரி னோடு துனைபரித் தேர்மிசைச்
சூரி னோடு துணைவன்வந் தெய்தலும்
வாரி வீசினர் மாமலர் பன்முறை
வாரி வீசினர் வானவர் யாருமே.

யாவரும் கண்டு அச்சமுற வேகமாக ஓடிடும் வீரக்குதிரைகள் பூட்டிய தேர் மீது தெய்வநாயகி அம்மையாருடன் ஆறுமுகப்பெருமான் வந்து ஏறிக்கொள்ளலும், பலவகையாகும் வாசமுடைய பூக்களைப் பன்முறை தேவர்கள் யாவரும் வாரிவாரிச் சொரிந்தார்கள். 7

பூத வீரரும் போர்ப்படை மள்ளரும்
மூது ணர்ந்த முனிவன் சிறார்களுங்
கோதை வேலுடைக் கொற்றவற் காம்பணி
ஏதும் ஆற்றி இனிதயற் சுற்றினர்.

பூதவீரர்களும் அவர்களது சேனாதிபதிகளும் போர்ப்படைகளைக் கைக்கொண்ட வீரர்களும் முழுதும் உணர்ந்து தெளிந்த பராசர முனிவனின் சிறு மைந்தர்களுமான அறுவரும் மாலைதூங்கிய வேலுடைய எம்பெருமான் ஆறுமுகனுக்கு ஏற்ற பணி கள் எல்லாவற்றையும் செய்தவாறு இனிதுடன் எம்பெருமானது பக்கரில் சூழ்ந் தனர். 8

மாகர் யாரும் வணங்க அவரவர்
சேக ரத்தினிற் சேவடி சூட்டியே
தோகை மாமயில் தோன்றல்முன் நின்றதால்
ஆகை யால்தவம் ஆற்றலதே அன்றோ.

வான நாட்டில் வாழ்கின்ற தேவர்கள் யாவரும் வந்து வணக்கம் செய்திட அவ் வவர்களது உச்சியில் தனது சிவந்த பாதத்தைச்சூட்டி அருள்புரிந்து தோகை கொண்ட சூரனாகும் மயில் எம்பெருமான் திருமுன் நின்றது. ஆனமையால் தவத்திற் கும் ஓர் தனிவலியுடையதொன்றல்லவோ.

தவம் செய்தமையால் தேவர்களை அன்று சூரன் அரசனாக ஆண்டான், ஆனால் அந்தத் தவம் இறந்த பின்பும் மயிலின் வடிவமாகி எம்பெருமானைச் சுமத்தற்கும் அத்துடன் இன்று தேவர்கள் வந்து அன்பாகி வணங்கிட அருள்புரிவதற்கும் உதவியமை காண்க. 9

பூவி னன்முதற் புங்கவர் யாரையும்
மூவி ரண்டு முகத்தவன் கண்ணுறீஇ
நீவிர் எல்லிரும் நேர்ந்தநும் ஊர்தியின்
மேவி யெம்மொடு செல்லுமின் விண்ணெனன்றான்.

தாமரை மலர்மீதிருக்கின்ற பிரமதேவன் முதற் கடவுளர்யாவரையும் ஆறுமுகமுடைய எம் கடவுள் கண்ணுற்றருளி நீவிர் எல்லாரும் உங்கள் உங்களது வாகனங்கள்மீது எழுந்து எம்முடன் வான உலகிற்கு வருவீராக என அருள்புரிந்தார். 10

என்ன லோடும் இனிதென நான்முகன்
அன்ன மீதினும் அச்சுதப் பண்ணவன்
பன்ன கேசன் பகைஞன்றன் மீதினும்
முன்னர் ஏறி முதல்வனை எய்தினர்.

என்று எம்பிரான் மொழிதலும் இதுகேட்டு நல்லது என்று நான்முகக் கடவுள் பிரமன் அன்னப்பறவை மீதிலும், நாராயணப்பெருமான் பாம்புகளின் இறையாகும் ஆதிசேடனின் பகையான கருடப்பறவைமீதும் முன்னர் ஏறிக்கொண்டு முதல்வராகும் சிவசுப்பிரமணியப் பெருமானை அடைந்துகொண்டனர். 11

மாறில் வெள்ளி மலைப்படு தெண்கயத்
தூறு நீத்தத் தொழுக்கென மும்மதத்
தாறு பாயும் அடல்அயி ராவதத்
தேறி வந்தனன் இந்திரன் என்பவன்.

மாறில்லாத வெள்ளிமலையில் விளங்கிய குளிர்ந்த நீர்ச்சுனையில் ஊறுகின்ற நீர் போன்று ஓய்வின்றிப் பெருகிடும் மதநீராற்றடையுடைய ஐராவத யானையில் ஏறி வந்தான் இந்திரதேவன் என்பவன். 12

மற்று நின்றுள வானவர் யாவரும்
முற்று ணர்ந்த முனிவருந் தத்தமக்
குற்ற வூர்திகள் ஊர்ந்தெம் மிறைவனைச்
சுற்றி நின்று துதித்துடன் மேயினர்.

மற்று அங்கு நின்றுள்ள தேவர்கள் யாவரும் முழுவதையும் உணர்ந்த முனிவர்களும் யாவரும் தத்தமக்கெனப் பொருந்திய வாகனங்களில் ஏறிக்கொண்டு எமது ஆறுமுகப்பெருமானைச் சூழ்ந்து நின்று துதித்தனர். 13

வள்ளல் இத்துணை வானுல கத்திடைப்
பொள்ளெ னப்புகப் போதுகின் றானெனக்
கொள்ளை யிற்பலர் கூறலுங் கூளியின்
வெள்ள முற்றும் விரைந்தெழுந் திட்டவே.

எமது அருள் வள்ளல் ஆறுமுகப்பெருமான் வான உலகினிடையாக அதிவிரைவாகப் போகின்றார் என்று மிகுதொகைப்பட்டவர் எடுத்து மொழிதலும் அது கேட்ட பூதங்களின் வெள்ளக்கணக்கான சேனை முழுவதும் எழுந்துகொண்டது. 14

குடமு ழாப்பணை கொக்கரை தண்ணுமை
படக மாதிய பல்லியம் ஆற்றியே
புடைநெ ருங்கிய பூதரில் எண்ணிலார்
இடிமு ழங்கிய தென்ன இயம்பினர்.

எம்பெருமான் புறமாக நெருங்கி வருகின்ற பூதங்களுள் சில வீரர் குடமுழா முரசு கொக்கரை மத்தளம் படகம் ஆதியாகச் சொல்லப்பெறும் பலவாத்தியங்களை யும் ஏந்தி அவற்றை இடிமுழங்கியது எனும்படி இசைத்தார்கள். 15

ஈங்கித் தன்மையின் ஈண்டு பரிசனம்
பாங்குற் றேகப் பரஞ்சுடர்ப் பண்ணவன்
ஓங்கற் கொண்ட ஒருதனிக் கோநகர்
நீங்கிச் சேணின் நெடுநெறிப் போயினன்.

இங்கு இத்தன்மையாக நெருங்கிவருகின்ற பரிசனமாகும் விரர்கள் பக்கராகச் சென்றிட; மேலாம் சோதியுருவாகிய ஆறுமுகப்பெருமான் திருப்பரங்குன்றத் துத் தாம் இருந்தருளிய தனியான ஒரு நகரைவிடுத்து வானில் உள்ள நெடிய வழியால் மேலே போயருளினர். 16

அந்த ரத்தில் அமருல கந்தனைக்
கந்த னங்கொரு கன்னலின் நீங்கியே
இந்தி ரப்பெயர் எய்திய மாதுலன்
முந்தி ருந்த முதுநகர் மேவினன்.

வானவெளியில் விளங்கிடும் தேவ உலகங்களை முருகப்பெருமான் ஓர் நாழிகைப் பொழுதினுள் கடந்து நீங்கி இந்திரன் எனப்பெயர்கொண்ட தனது மாமன் முன் னர் வாழ்ந்திருந்த முதுமையாய பொன்னுலகை அடைந்துகொண்டார். 17

### வேறு

விண்டொடர் பொன்னகர் மேலைச் சூர்மகன்
நுண்டுகள் செய்திட நொய்தின் உற்றதும்
அண்டர்கள் இறையவன் அகங்கொள் வேட்கையுங்
கண்டனன் குமரவேள் கருணை யாழியான்.

வானில் மிகமேல்நின்ற பொன்னுலகம் முன்னுளில் சூரபன்மன் மகன் பானு கோபன் நுண்ணிய துகளாகும்படி எரித்திட அழிவுற்று இருப்பதையும் தனது பொன்னுலகம் மீண்டும் நன்நிலைக்கு வருமோ என இந்திரதேவனின் உள்ளத்தில் கொண்ட ஆசையையும் கண்டார் எம் குமரப்பெருமான். அருளினல் சிறந்த கரு ணைக் கடலாயவர். 18

வீக்குறு கனைகழல் விமல நாயகன்
ஆக்கமில் விண்ணுல களிக்கும் பெற்றியால்
தேக்கிய விஞ்சையின் தெய்வத் தச்சனை
நோக்கினன் இனையன நுவறன் மேயினன்.

வீரக்கழல் அணிந்திருக்கின்ற நின்மலசோதியாகும் ஆறுமுகப்பெருமான்; சிறப் பெல்லாம் கெட்டழிந்திட்ட விண்ணுலகை மீண்டும் பழைய நிலையில் வைத்திடும் திருவுள்ளக் குறிப்பினல் நகரம் அமைக்கும் வித்தைகளில் சிறந்த திறமையுடைய தேவதச்சனைநோக்கி இவற்றைச் சொல்லத்தொடங்குவார். 19

செல்லலை யகன்றிடு தேவர் மன்னவன்
எல்லையில் வளனெடும் இருக்கும் பான்மையால்
தொல்லைய தாமெனத் துறக்க நல்குதி
வல்லையில் என்றலும் வணங்கிப் போயினன்.

**தமது துயரம் யாவையும் அகன்றிடுகின்ற தேவர்கள் அரசன் இந்திரன் எல்லை யில்லாத சிறப்புகளுடன் இருக்கும் தன்மையாக தேவ உலகினை பழைய நிலைமை யாகும்படி விரைவாக அமைத்திடுவாய் என்றலும், தேவதச்சன் அதுகேட்டு நன் றென வணங்கிப்போயினன்.** 20

## வேறு

நூறெ ரிந்திடு நோன்மையோன், மாறில் பொன்னகர் மாடுற
வீறு மாமதில் விண்ணுலாம், ஆறு பாய அமைத்தனன்.

இவைக்குரிய நூலை நன்கு தெரிந்திட்ட மிகுவலிமையுடைய தேவதச்சன் மாறிலாத தேவ உலகின் பக்கரில் மிகச்சிறந்துள்ள பொன்மதில் ஒன்றினை வானிலுள்ள ஆகாய கங்கையும் குதித்தோடுமாறு சிறப்புற அமைத்தான். 21

ஆயி ரம்மலர் அம்புயன், சேய வாய்கள் திறந்தென
ஞாயில் மாமதில் நள்ளுற, வாயில் நான்கு வகுத்தனன்.

ஆயிரம் இதழுடைய தாமரை மலரில் இருக்கும் பிரமதேவனின் சிறந்த நான்கு வாய்களும் திறந்தெனும்படி தான் செய்தமைத்த மதிலின் நான்கு புறத்தும் நடுவிலே நான்கு வாயில்களை வகுத்தான். 22

நாற்றி சைக்கண நாதரும், ஆற்ற வேயரி தாமென
ஏற்ற கோபுரம் ஏழ்நிலை, வீற்று வீற்று விதித்தனன்.

அந்நான்கு வாயிலும் நாற்றிசையிலுள்ள கணநாதர்களும் இதைத் தாங்கிடுதற்கு மிகவும் அரிதாகும் என்பதாகச் சிறந்து விளங்கிய ஏழு நிலையுடைய கோபுரங்களை அந்தந்த இடந்தோறும் வேறு வேறு அமைத்தான். 23

வண்ண மாமதில் வைப்பினுள், அண்ண லங்கிரி யாழிசூழ்
கண்ண கன்புவிக் காட்சிபோல், எண்ணில் வீதி இயற்றினன்.

வண்ணமாகச் செய்த மதிலின் உட்புறமாக மேலான அழகிய மேரு மலையைச் சூழ்ந்த சமுத்திரமும் அதனால் சூழ்ந்த பூமிபோலும் அகன்று இருந்திடும்படி எண்ணற்ற பல வீதிகளை அங்கு முன்செய்த கோபுரங்களுடன் சேர அமைத்தான். 24

பூவின் மேல்வரு புங்கவத், தேவு நாணுறு செய்கையில்
காவல் மாநக ரத்திடைக், கோவில் ஒன்று குயிற்றினன்.

தாமரை மலர்மேல் வருகின்ற கடவுள் பிரமன் கண்டால் நாணமடையும் செய்கையாகப் பெரும் காவலுடைய அந்நகரத்திடையாகச் சிறந்ததொரு கோவிலை எம்பிரான் அமர்ந்தருளச் செய்தமைத்தான். 25

தேவு காமுறு செய்வரை, காவி மல்கு கயத்தொடு
வாவி பொய்கை வரம்பில, ஓவில் பான்மையின் உதவினன்.

தேவர்கள் விரும்பிடும் செய்குன்றுகளும் நீலோற்பல மலரும் குன்றுகளுடன் குளங்கள் தடாகங்கள் எண்ணற்றன குறைவிலாது எக்காலமும் ஓய்வின்றிப் பயன் தரும் பான்மையாக அமைத்தான். 26

மாட மாளிகை மண்டபம், ஈடு சேரரி ஏற்றணை
பாடு சேர்தரு பாழிகள், நாடி ஏர்தக நல்கினன்.

மாடங்கள் மாளிகைகள் மண்டபங்கள் இணையிலா சிறப்புப்பொருந்திய சிங்க ஆசனம் பெருமையால் சிறந்துற்ற வீதிகள் எல்லாவற்றையும் அவைகள் அமைக்கப்படவேண்டிய இடத்தை நன்குணர்ந்து நயமுறச் செய்தமைத்தான் தேவதச்சன். 27

## வேறு

ஏறுசீர் இந்திரன் இருக்குங் கோயிலும்
ஆறுமா முகப்பிரான் அமருங் கோட்டமும்
மாறிலா மாலயன் மந்தி ரங்களும்
வேறுளார் இருக்கையும் விதித்திட் டானரோ.

சீரினால் மேம்பட்ட இந்திரதேவன் இருப்பதற்கு ஒரு கோவிலும் ஆறுமுக முடைய பெருமான் வீற்றிருந்தருளுதற்கு ஏற்ற ஓர் சபையும் மாறிலாத நாரா யணக் கடவுளும் பிரமதேவரும் இருந்திடற்குரிய ஆலயங்களும் வேறுவேறு தலைவர் கட்கு ஏற்ற இருப்பிடங்களையும் ஆங்காங்கு விதிப்பிரகாரம் உண்டுபண்ணி வைத் தான் தேவதச்சன். 28

கூன்முக வால்வளைக் குரிசில் ஊரினும்
நான்முகன் ஊரினும் நலத்த தென்றிட
வான்முக வியனகர் வளமை சான்றிட
நூன்முக நாடியே நுனித்து நல்கினான்.

கூனிய முகமுடைய பாஞ்சன்யம் என்னும் சங்கினைக் கைக்கொண்ட முதல்வ ராகும் நாராயணப் பெருமானது வைகுந்த நகரிலும்; பிரமதேவனுடைய சத்திய உலகிலும் இதுவே நலமுடையது என்றிடும்படியாகவும்; வானின் உயர்ந்த இந்நகரம் வளமையுடையதாயது என எவரும் சொல்லும்படியாகவும் வளம் பெருகிடும் சிறப் பமைந்திட நூலில் சொல்லிய விதிகளைத் தேவதச்சன் நாடியுணர்ந்து மிகவும் நுண்ணறிவுடன் செய்தமைத்தான். 29

## வேறு

பொன்னி னுக்குப் புகலிட மாகவான்
மன்னி னுக்குச்செய் மாநகர் வன்மையை
என்னி னுக்கும் இயம்பவற் றேகலை
மின்னி னுக்கும் விதிப்பருந் தன்மையே.

மாக இலக்குமி விரும்பித் தங்குவதற்கு இடமாக அமைந்திட; நிகரற்ற வனப் புடன் இவ்வாறு சிறப்புடையதோர் நகரினை வான உலகின் அரசனுக்கு தேவதச் சன் அமைத்த பெருமையை என்னால் எடுத்துச் சொல்லவும் முடியுமோ? இதைப் பற்றி விரித்துக்கூறிட கலைகட்கு முதல்வியான சரஸ்வதிதேவிக்கும் எடுத்து இயம் பிட முடியாததொன்றே. 30

இனைத்தி யாவும் இமைப்பிடைச் சிந்தையின்
நினைப்பிற் செய்த நிலைமையை நோக்கியே
நனைத்து ழாய்முடி நாரணன் நான்முகன்
மனத்தி னூடு மகிழ்ச்சியை மேவினர்.

இவ்வாறான செய்கையாவையும் இமைப்பொழுதில் தன் மனதால் நினைத்துச் செய்த அச்சிறந்த நிலையை நோக்கியே அழகிய துளசி மாலையணிந்த நாராயணப் பெருமானும் நான்குமுகமுடைய பிரமதேவனும் இவைகண்டு தமது மனத்தினூடு பெருமகிழ்ச்சி விளங்கப்பெற்றனர். 31

வல்லை வேதன் வகுப்புது மற்றுனக்
கில்லை நேரென் றினிது புகழ்ந்திட
அல்லல் தீர்அம ரர்க்கிறை காண்குறீஇப்
புல்லி னான்அப் புனைவனை என்பவே.

தேவதச்சனே இந்த உலகில் யாவற்றையும் வகுக்கின்ற பிரமதேவனும் உனக்கு இச்செயலில் நிகரரானவர் அல்ல என்று இவைபோன்ற இனிதான வார்த்தைகளால் நாராயணக் கடவுள் முதலியோர் புகழ்ந்திடலும்; அதுவேளை தனது அல்லல் யாவும் நீங்கி இருக்கின்ற இந்திரதேவன் இந்நகரின் சிறப்பினைக் கண்டு தேவதச் சனை இறுகத் தழுவிக்கொண்டு மகிழ்வுற்றான் எனச் சொல்வார்கள். 32

அணங்கு சால்புரம் அவ்வகை நல்கியே
நுணங்கு நூலவன் சண்முகன் நோன்கழல்
வணங்கி நிற்பவ ருள்செய்து மாடுறு
கணங்களோடு கதுமெனப் போயினன்.

தெய்வீகத் தன்மையுடன் இன்பமூட்டுகின்ற அந்த உலகினை அவ்வகை உண்டாக்கித் திளைத்திடும் பூணூலுடன் விளங்கிய அறிஞனை தேவதச்சன் எழுந்து வந்து சண்முகப்பெருமானின் வலியால் சிறந்த பாதங்களை வணங்கி நிற்றலும்; அத்தேவதச்சன்பால் எம்பெருமான் அருள்புரிந்து தமது பக்கருள்ள தேவகணங்களுடன் விரைவாக அந்நகரினுட் போயினர். 33

அன்ன காலை அரம்பைய ரோடொரு
பொன்னின் மானம் புகுந்து புலோமசை
கன்னல் ஒன்றினில் காமரு பொன்னகர்
மன்னன் மந்திரம் வந்தடைந் தாளரோ.

அவ்வாறான காலையில் தேவப்பெண்களுடன் ஓர் பொன்னாலான சிறந்த விமானம் ஒன்றில்மேல் எழுந்து இந்திராணிதேவி ஓர் நாழிகைப் பொழுதினில் மிக அழகுடன் விளங்கிடும் பொன் மயமான தேவ உலகினிலுள்ள இந்திரதேவனுடைய அரண்மனையை வந்தடைந்துகொண்டாள். 34

அடையும் எல்லை அறுமுகப் பண்ணவன்
இடைநி லைப்படும் இந்திரன் கோநகர்க்
கடைமு தற்செலக் கஞ்சனை யாதியோர்
உடைய தத்தம தூர்தியின் நீங்கினார்.

அவ்வாறு இந்திராணி வந்து அடைகின்ற நேரத்தில் ஆறுமுகப் பெருமான் பூவுலகிற்கும் மேலுலகிற்கும் இடைநிலையில் பொருந்திய இந்திரதேவனுடைய பெருநகரின் கடைவாய்தலில் வந்து சேர்ந்தானாக; பிரமதேவன் முதலாய ஏனைய கடவுளரேல்லாம் தங்கள் தங்களுடைய வாகனங்களில் நின்றும் இறங்கினார்கள். 35

அக்க ணந்தனில் அண்டர்கள் யாவரும்
தொக்கு டன்வரத் தோகையன் னாளுடன்
செக்கர் மாமணித் தேரினுந் தீர்ந்தொராய்
புக்கு மேயினன் பொன்புனை மன்றமே.

அக்கணம் தன்னில் தேவர்கள் யாவரும் தொகுதியுடன் வந்திட மயில்போலும் சாயலுடைய தெய்வயானை அம்மையாருடன் சிவந்தஇரத்தினத்தினால் ஆக்கப்பெற்றது என்னும்படியான தேரினை விடுத்து நீங்கி அங்கு அந்நகரத்து புகுந்து தேவதச்சனால் பொன்னால் செய்தமைத்த மாட்சிமையுடைய கோவிலில் எம்பிரான் வீற்றிருந்து அருளினார். 36

வேறு

தன்றுணை மஞ்ஞை யாகித் தாங்குதல் தெரிந்தி யானும்
இன்றிவற் பரிப்பன் என்னா இளவலும் அமைந்த தென்ன
மன்றிடை இருந்த தெய்வ மடங்கலந் தவிசின் உம்பர்
வென்றியந் தனிவேல் அண்ணல் வீற்றிருந் தருளினானே.

தனது சகோதரனை சூரபன்மன் எம்பெருமானை மயிலாகச் சுமந்திடுகின்றான் என்பதைத் தெரிந்துகொண்டு யானும் இன்று பெருமானைச்சுமப்பேன் என எண்ணி இளையவனை சிங்கமுகாசூரன் சிங்கவடிவாகி அமைந்தான் என்பதையொத்து எம் பெருமானது திருக்கோயிலினுள் அமைந்திருந்த சிங்காசனத்தின்மீது வெற்றியினைத் தருகின்ற தனி வேலுடைய பெருமான் வீற்றிருந்தருளினார். 37

அன்னதோர் அளவை தன்னில் அறுமுகன் அலரிப் புத்தேள்
முன்னவர் தம்மை எல்லாம் முழுதருள் புரிந்து நோக்கி
இந்நகர் அரசு போற்ற இமையவர் இறைவற் கின்னே
பொன்னணி மவுலி தன்னைப் பொள்ளெனப் புனைதி ரென்றான்.

அவ்வாறாகிய காலத்தில ஆறுமுகப்பெருமான் தாமரைமீதிருக்கும் கடவுள் பிரம தேவன் முதல் யாரையும் முழுக்கிருபையுடன் நோக்கியருளி இந்தத் தேவ உலக அரசாட்சியை நடத்திட தேவர்கள் தலைவனாகும் இந்திரனுக்கின்னே பொன்னால் சிறந்ததொரு முடியினை விரைவில் புனைந்திடுவீராக என்று அருள் புரிந்தார். 38

என்றிவை குமரன் கூற இனிதென இசைவு கொள்ளா
அன்றொரு கணத்தின் முன்னர் அட்டமங் கலமுந் தந்து
மன்றல்கொள் கவரி ஒள்வாள் மணிமுடி கவிகையோடு
நின்றுள உறுப்பும் ஏனைப் பொருள்களும் நெறியின் உய்த்தார்.

என்று இவற்றைக் குமாரக் கடவுள் கூறிடுதலும் அதுகேட்டு அவர்கள் யாவரும் நன்று என்று இசைவுகொண்டு ஒரு கணப்பொழுதின் முன்பு அரசர்க்குரிய எண் விதமான மங்கலப்பொருள்களையும் சேகரித்து சிறப்புக்கொள்ளும் வெண் சாமரை ஒளியுடைய வாள் இரத்தினமுடி குடை ஆஞ்ஞா சக்கரம் இவற்றுடன் ஏனைய அரச உறுப்புக்களையும் முறையாக அவ்விடம் சேர்த்தனர். 39

அரசியல் உரிமைத் தெல்லாம் ஆங்கவர் அழைத்துக் கங்கைத்
திரைசெறி தெண்ணீர் ஆட்டிச் செழுந்துகில் கலன்கள் சாந்தம்
விரைசெய்தார் புனைந்து சீய வியன்பெருந் தவிசின் ஏற்றி
வரிசையோ டிந்திரற்கு மணிமுடி சூட்டி னாரால்.

அரசியலுக்குரிய சாதனப் பொருள்கள் இவை யாவையும் அங்கு அத்தேவர் அழைத்துக்கொண்டு; கங்கையாற்றின் திரைகள் செறிகின்ற நல்ல நீரால் இந்திர தேவனுக்கு நீராட்டி; அதன்பின் அவனுக்கு செழுமையான பட்டாடை அணிந்து ஆபரணங்களைச் சூட்டி சந்தனம் பூசி வாசம் உடைய பூமாலை அணிந்து அதன்பின் அவனைச் சிங்கங்கள் சுமக்கும் பெரிய சிங்காசனத்தின்மீது ஏற்றி குடை கொடி, ஆலவட்டம், சாமரை, செங்கோல் முதலிய வரிசையோடு இந்திரனுக்கு இரத்தினமுடியைச் சூட்டினார்கள். 40

சுடர்தனி மவுலி தன்னைச் சூட்டலுந் துறக்கத் தண்ணல்
அடித்துணை பணிந்தார் வானோர் அனைவரும் ஆசி தன்னை
எடுத்தெடுத் தியம்ப லுற்றார் இருடிகள் அரம்பை மாதர்
நடித்தனர் விஞ்சை வேந்தர் நல்லியாழ் நவின்றி சைத்தார்.

பிரகாசமுடைய தனி முடியினைச் சூட்டுதலும் அதுவேளை தேவஅரசன் இந்திரனுடைய என்றும் துணையான பாதங்களைத் தேவர்கள் பணிந்தார்கள்; முனிவர்கள் எல்லாருமாக நின்று நல்லாசி மொழியினை எடுத்து எடுத்து மொழிந்தார்கள்; தேவப்பெண்கள் நடனமாடினார்கள். விஞ்சையர்களின் தலைவர்கள் நல்ல யாழினை மீட்டு வாயினால் பாடி இசைகொண்டனர். 41

இந்திரன் அனைய காலை எம்பிரான் முன்னர் ஏகி
வந்தனை புரிந்து போற்றி வளமலி துறக்கநாடு
முந்துள அரசுஞ் சீரும் முழுதொருங் களித்தி எந்தாய்
உய்ந்தனன் இதன்மேல் உண்டோ ஊதியம் ஒருவர்க் கென்றான்.

இந்திரதேவன் அவ்வாறாகிய நேரத்து சண்முகப்பெருமான் திருமுன்பு சென்று வந்தனை புரிந்து போற்றி செய்து எம்பெருமானே வளம்மலிந்த தேவ உலக நாட்டின் முன்னுள்ள அடியேனின் செல்வமும் அரசும் சீரும் எல்லாம் முழுமனே ஒருங்காக அடியேனுக்கு உதவினீர். இனி அடியேன் உய்ந்தேன், இதனிலும் பார்க்க அடியேனுக்கு ஓர் பெறுபேறும் உண்டோ. பெரும்பேறு பெற்றேன் எனக்கூறினான். 42

என்றலும் அருள்செய் தண்ணல் இந்நகர் அரசு போற்றி
நன்றிவண் இருத்தி என்னு நாகர்கோன் தன்னை வைத்து
நின்றுள அமரர் தம்மை நிலைப்படும் இருக்கைக் கேவித்
தன்துணை அணங்குந் தானுந் தன்பெருங்கோயில் போந்தான்.

என்று இந்திரதேவன் மொழிந்து வணங்குதலும் எம்பெருமான் அதுகேட்டு இந்த நகரின் அரசினை நீ இனியாண்டு நன்றுடன் இருந்திடுவாய் என அருள் புரிந்து இந்திரதேவனை அங்கு நிறுவி; அவன்பால் நின்றுள்ள தேவர்களை எல்லாம் அவரது நிலையாகும் இருப்பிடங்கட்குச் செல்லுமாறு விடுத்துத் தனது துணைவி யான தெய்வயானையம்மையும் தானும் தேவ உலகிலுள்ள தமது கோயிலில் போயினர். 43

குறினெடில் அளவு சான்ற கூளியும் வயவர் யாரும்
வறியதோ ரணுவுஞ் செல்லா மரபினுல் வாயில்போற்ற
உறையுளின் இருக்கை நண்ணி ஒருபெருந் தலைவியோடும்
அறுமுக வள்ளல் பல்வே றுடல்செய் திருந்தான் அன்றே.

குறிய வடிவம் நெடியவடிவம் ஆகிய அளவுகளைக்கொண்ட பூதங்களும் வீரர்கள் யாவரும் மிகவும் நுண்ணிய அணுவும் உட்பிரவேசிக்க முடியாதவாறு முறையாக எம்பிரான் கோயில் வாயிலைக் காத்திட; கோயிலின் அமைந்த தமது இருக்கையை எம்பிரான் அடைந்து; சகமெல்லாவற்றிற்கும் ஒருபெரும் தலைவியான தெய்வயானை அம்மையுடன் ஆறுமுகமுடைய அருட்செல்வர் அங்கும் இங்கும் எங்குமாய தனதாடலைப் செய்திருந்தருளினர். 44

தூவியந் தோகை மேலோன் துணைவியோடிருந்த காலைப்
பூவினன் முதலோர் தத்தம் புக்கிடம் அமர்ந்தார் அன்றே
தேவர்கள் இறைவன் தானுஞ் சேயிழை சசியு மாக
மேவினன் இன்பந் துய்த்து விண்ணுல கரசு செய்தான்.

தூவியுடைய மயில்மேல் எழுந்துவரும் கடவுள் ஆறுமுகப் பெருமான் தன் துணைவி தெய்வயானையம்மையுடன் இருந்த காலத்துத் தேவர்களுக்கு அரசன் இந்திரதேவன்தானும் அழகுடைய நகைகள் பூண்ட இந்திராணி தேவியுடன் கூடினனுய் அளவிடற்கரிய இன்பத்தை அனுபவித்து வான உலக அரசாட்சியைப் புரிந்தான். 45

இனைத்தியல் கின்ற எல்லை இந்திர வளனே அன்றி
அனைத்துல கத்துமுள்ள ஆக்கமும் தாம்பெற் றென்ன
மனத்திடை உவகை கொண்டு மாநகர் இருக்கை புக்குத்
தனித்தனி அமரர் எல்லாஞ் சாறயர்ந் தமர்த லுற்றுர்.

இவ்வாறு நிகழ்வுறும் காலையில் இந்திரவளனே அல்லாமல் அனைத்துலகத்துள்ள செல்வங்களையும் சிறப்புக்களையும் ஒருங்கே அடைந்துகொண்டார் போன்று மனதில் பெரும் உவகை கொண்டு தமது பெரும் இருப்பிடங்களில் தனித்தனியே சென்று தங்கி கடவுளர் யாவரும் பெரும் விழாக்களைக் கொண்டாடி முன்போல் சிறந்து வாழ்தலுற்றுர். 46

விண்குடியேற்று படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருவிருத்தம் 349

# கந்தவெற்புறு படலம்

இப்படி சிலநாள் ஏக இதன்மிசை வைகல் ஒன்றில்
ஒப்பருங் கந்தவெற்பில் உறைவது கருதிச் செவ்வேள்
செப்புறழ் கொங்கை யோடுஞ் சினகரந் தணந்து செல்ல
அப்பரி சுணர்ந்து வேதா ஆதியர் யாரும் போந்தார்.

இப்படியாக தேவ உலகம் பழமைபோல் சிறப்புற்று இனிதே வாழ்கின்ற காலத்து சிலநாள் சென்ற பின்பு ஓர்நாள் எம்பெருமான் ஒப்பற்ற தனது நித்திய இருக்கையாகும் கந்த மலையில் உறைந்திட விரும்பியருளி செப்புக்கவித்ததென திரண்ட தனங்களுடைய தெய்வயானை அம்மையுடன் எழுந்து தனது தேவ உலக இருப்பிடக் கோவிலை நீங்கிச் சென்றிடலும்; எம்பெருமானது அத்தன்மையை உணர்ந்து பிரமதேவன் திருமால் முதலாய கடவுளர் யாவரும் அங்கு வந்தனர். 1

பெருந்தகை யவ்வ காலைப் பிரமன்மால் முதலோர் யாரும்
விரைந்துதம் பதங்கள் செல்ல விடைபுரிந் தங்கண் வானத்
திருந்தர சியற்ற விண்ணோர்க் கிறைவனை நிறுவித் தெய்வத்
திருந்திழை அணங்கி னோடுஞ் சென்றுதன் தேரிற் புக்கான்.

எம்பெருந்தகை ஆறுமுகப்பெருமான் அந்த நேரத்தில் பிரமன்திருமால் முதல் யாவரும் அவ்விடம் நில்லாது விரைந்து தத்தமது உலகங்களிடைச் சென்றிட விடைகொடுத்தருளி அங்கு வான உலகிலிருந்து அரசாட்சியைப் புரியுமாறு இந்திர தேவனை நிறுத்தி வைத்து, பின் எழுந்து திருத்தமுற ஒளிரும் ஆபரணங்களுடன் நிறைகின்ற தெய்வயானை அம்மையாருடன் சென்று தனது தேரில் புகுந்தருளினார். 2

தேரிடைப் புகுந்த ஐயன் திறலுடை மொய்ம்பன் பாகாய்ப்
பாரிடைச் சென்று முட்கோல் பற்றினன் பணியா லுய்ப்பப்
போருடைச் சிலைவல் லோரும் பூதர்தங் கடலுஞ் சுற்றக்
காருடைக் களத்துப் புத்தேள் கயிலைமால் வரையிற் போந்தான்.

தேரிடை எழுந்தருளிக் கொண்ட எம் ஐயன் திறலுடைய தோள்கொண்ட வீரவாகு தேவர் சாரதியாகி அத்தேர்மீதமர்ந்து சவுக்குக் கடிவாளம் இவற்றைப் பற்றி எம்பெருமான் பணியின்படி தேரைச் செலுத்திடப் போரில் வல்லமை மிகுந்த வில்லாளிகளான இலக்கத்தெட்டு வீரரும் பூத சேனைகளான வெள்ளங்களும் சூழ்ந்து வந்திட நஞ்சுடைய மையால் கருமேகம்போன்ற கண்டத்துடன் சிறந்த சிவபெருமானின் திருக்கைலாய மலையைச் சென்றடைந்தார். 3

போனதோர் காலை வையம் பொள்ளென இழிந்து முக்கண்
வானவன் தன்னை ஆயோ டடிகளை வணக்கம் செய்து
மேனதோர் கருணையோடும் விடைபெறீஇ விண்ணுளோர்கள்
சேனையந் தலைவன் கந்தச் சிலம்பினிற் கோயில் புக்கான்.

போனதொரு நேரத்துத் தமது தேரினின்றும் விறுக்கென இறங்கி முக்கண்ணுடைய சிவமூர்த்தியை தாயோடுகூடத் தாழ்ந்து பாதகமலங்களை வணக்கம் செய்து அவர்பால் சிறந்து பெற்றதொரு பெரும் கருணையுடன் விடைபெற்று மீண்டருளி; தேவர்களின் சேனையின் பெரும் தலைவன் ஆறுமுகப்பெருமான் கந்தமலை என்னும் மலையிடத்துத் தனது கோயிலில் சென்று புகுந்தருளினார்.

மேனதோர் பெருங்கருணை — இதனைக் கருணையின் பெருமை கண்டேன் காண்க என்றும், மாறிலாத மாக் கருணை வெள்ளமே என்றும் மாணிக்கவாசகரும் இத்தனையும் எம்பரமோ ஐயஐயோ எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறேயென திருநாவுக்கரசரும் கூறியபடி அந்நாயனாருடைய அனுபவத்தில் விளைந்ததொன்றைக்காணலாம் 4

புக்கதோர் குமர மூர்த்தி பொருதிறல் வயவர் யாருந்
தொக்கனர் பணியில் நிற்பத் தொல்படைக் கணங்கள் போற்ற
மைக்கருங் குவளை ஒண்கண் மடவர லோடுமேவி
மிக்குயர் மணிப்பீ டத்தி வீற்றிருந் தருளினனே.

கந்தமலையில் புகுந்துகொண்ட எம்பிரான் குமரமூர்த்தி போர் வல்லபமுடைய வீரர்யாவரும் தொகுதியாகச் சூழ்ந்து தமது ஏவல்தொண்டில் நிற்பவும், மிகமுன்னைய படைகளாகும் பூத சேனைகள் காவல் புரிந்திடவும்; மை தீட்டிய கருங்குவளை மலர்போன்ற அழகிய கண்ணுடைய தெய்வயானை அம்மையாருடன் பொருந்தி மிக உயர்ந்ததொரு மணிப்பீடத்தில் வீற்றிருந்தருளினர். 5

ஆதியும் அந்தமுமிலாத அரும்பெரும் சோதியின் நெற்றிக் கண்ணில் தீயுருவாய் தோன்றி சரவணப் பொய்கையில் குழந்தைவடிவாகி விளையாடி எங்குமே தானுகும் அருள் சிறந்து தாயாகும் உமையம்மையால் எடுத்தருளப்பெற்று விளையாடல் புரிந்து தேவர் சிறை மீட்டிட போர்க்கோலம் கொண்டு பூதப்படையுடன் எழுந்தருளி வந்து அசுரர் கிளை மாய்த்து தேவர்களைச் சிறை மீட்டு அநுக்கிரகம் செய்து வலி செய்தாரை அழித்தும் வலியற்றுரை வாழ்வுறவைத்தும் எம்பெருமாட்டி தெய்வாயானை அம்மையைத் திருமணம் செய்து எல்லா உலகும் எல்லா உயிரும் வாழ்ந்திட; தமது இருப்பிடமான கந்தமலையிடத்துச் சென்று அருளால் சிறந்து வீற்றிருந்தருளினர் எம்பெருமான் ஆறுமுகக் கடவுள்.

துய்யதோர் மறைக ளாலுந் துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீ ரடியார் வாழ்க வாழ்கஇப் புவன மெல்லாம்.

தூய்மை நிறைந்ததொரு வேதங்களாலும் துதித்திடற்கும் அரிய செவ்வொளியாகும் சோதி ஆறுமுகப் பெருமானின் செய்யதான பெரும் திருவடிகள் என்றும் வாழ்க; சேவலும் மயிலும் வாழ்க; கொடிய சூரபன்மனின் மார்பைப் பிளந்த வேற்படை வாழ்க. அவருடைய பொய்மையாவும் நீக்கியசீரான அடியார்கள் வாழ்க; வாழ்க இவ் உலகம் எல்லாம்.

கந்தவெற்புறுபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 355.

# இந்திர புரிப் படலம்

காசினி வியத்தகு கந்த வெற்பிடைத்
தேசுடை முருகவேள் சேர்ந்த செய்கையைப்
பேசினன் இங்கினிப் பிறங்கு பொன்னகர்
வாசவன் இயற்கையும் மற்றுங் கூறுகேன்.

இப்பூமியானது வியந்திடத்தக்க கந்த மலையிடத்து சோதிப் பிரகாசமான ஆறு முகப் பெருமான் சேர்ந்துகொண்ட அவர் செயலின் வரலாறுபற்றி இதுகாறும் உங்கட்கு எடுத்துச் சொன்னேன். இனிமேலாக பிரகாசமுடன் விளங்கிடும் பொன்னுலகமாகும் தேவ உலகில் வாழ்ந்திடும் இந்திரனின் இயல்பையும் செயலையும் மற்றுமுள்ள நிகழ்ச்சிகளையும் உங்கட்குக் கூறுகின்றேன். 1

துண்ணென அவுணரைத் தொலைத்த வேற்படைப்
பண்ணவன் அருளினல் பலரும் போற்றிட
விண்ணர சியற்றிய வேந்தன் ஓர்பகல்
எண்ணினன் உளந்தனில் இனைய நீரதே.

திடீரென அசுரரைத் தொலைவுசெய்த வேற்படையை உடைய ஆறுமுகப்பெருமான் நல்லருளினல் பலரும் போற்றிடும்படி தேவ அரசாட்சியை நடத்திய இந்திர தேவன் ஓர் நாள் தனது உள்ளத்தில் இத்தன்மையாக எண்ணினன். 2

பற்றலர் சிறுதொழில் பலவு மாற்றியே
உற்றதும் அளப்பிலா உகமொ ளித்தது
மற்றதன் இடையிடை வந்த தீமையும்
பெற்றிடு துன்பமும் பிறவும் உன்னினன்.

தன் பகையசுரர்க்கு அடிமைப்பட்டு அவர் இட்ட மிகக் கீழ்மையான தொழில் பலவற்றையும் புரிந்து பலகாலம் இருந்ததும்; இதுவன்றி அவர்கட்குப் பயந்து பல யுக காலம் ஒளித்திருந்த தன்மையும்; இன்னும் இதன் இடைஇடையாகத் தங்கட்கு நேர்ந்த தீமையும் அதனல் தாங்கள் பெற்றிட்ட துன்பங்களையும் பிறவற்றையும் இந்திரன் நினைந்தான். 3

மறுத்தனன் சசியுடன் வைகும் வாழ்க்கையை
வெறுத்தனன் வெறுக்கையை வேந்தியற் கையுஞ்
செறுத்தனன் தவத்தினற் சேர்வன் வீடெனத்
துறத்தலை உன்னினன் துறக்க மேயினன்.

இவ்வளவு துயரிற்கும் காலாக இருந்தது எனது இந்த வாழ்க்கையே என்று எண்ணி அதனல் இந்திராணியுடன் கூடி வாழ்ந்திடும் வாழ்க்கையை வேண்டாமென்று மறுத்தான்; செல்வத்தையும் வேண்டாமெனத் தள்ளினன். அரச இயல்பையும் வேண்டாமென செற்றத்துடன் விலக்கினன், இனியான் தவம் செய்து அதனல் பெறற்கரிய பேரின்ப முத்தியை அடைவேன் என எண்ணி யாவற்றையும் துறந்திட நினைந்தான்; எவராலும் பிரிந்திட முடியாத அத்தகையபெருவளம்கொண்ட சொர்க்க உலகில் இருந்த இந்திரதேவன். 4

இந்திரன் இயற்கையை எண்ணி வானவர்
மந்திரி யாகியும் மன்ன னகியும்
அந்தண னகியும் அமரும் பொன்னவன்
புந்தியில் ஈதொரு புணர்ப்பை உன்னினன்.

இந்திரனுடைய இந்த இயற்கையை மனதில் உணர்ந்து தேவர்கட்கு அறிவுறுத்தும் மந்திரியாகியும், அரசனாகியும், அந்தணனாகியும் அமர்கின்ற வியாழபகவான் தன்மனதில் ஈதொரு சூழ்ச்சியைப் புரிந்திட நினைந்தருளினார். 5

உன்னிய மேலவன் உம்ப ருக்கெலாம்
மன்னவ னுழைதனில் வந்து வைகியே
கொன்னவில் வச்சிரங் கொண்ட பாணியாய்
இன்னன கேளென இயம்பல் மேயினான்.

அவ்வாறு நினைந்தமேலோராகிய வியாழபகவான் தேவர்கட்கெல்லாம் அரசனாகும் இந்திரனிடம் வந்து இருந்து இந்திரனைநோக்கி மிக உயர்வான கூரிய வச்சிரப் படையைக் கைக்கொண்ட இந்திரனே! இப்போது நான் சொல்வதை நன்று கேட்டிடுவாயாக எனச் சொல்லத் தொடங்குவார். 6

புன்றொழி லாகிய பொய்யும் வாய்மையாம்
ஒன்றொரு பெரும்பயன் உதவு மாயிடின்
என்றனர் சுரகுரு இந்தி ரன்பதம்
நின்றிட ஈதொரு நிகழ்ச்சி கூறுவான்.

செயல்கள் யாவற்றிலும் மிகும் கீழ்மையுடைய செயலாகும் பொய்சொல்வதும் உண்மையாகும் எப்போதெனில் அந்தப் பொய்யும் சிறந்ததொன்றான பெரும்பயனை தந்து நிற்குமென்றால் என்று முன்னைப்பெரியோர் மொழிந்துள்ளனர். ஆதலால் தேவகுருவான வியாழபகவானும் இந்திரனுடைய பெரியபதமானது அவன் துறவியாய்ப் போதலில் அழிவுறும்படி இருப்பதை நிலைபெற்று நிற்கும் பொருட்டு இந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றார். 7

இப்போது வியாழபகவான் கூறப்போவதை தேவகுருவாயவர் அழிவிலாத உண்மைப்பொருளாகும் பேரின்ப நிலையை விடுத்துப் பொய்மையைப் பெருக்கும் சிற்றின்ப நிகழ்ச்சியின் தன்மையை கூறுகின்றமையால் அது தவறாமோ என்ற பொழுது; அதுதவறில்லை ஏனெனில் இந்திரன் துறவியாய் விட்டால் உலகம் வாழாது. அவனே மழைக்கு அதிதெய்வம்வான் வழங்காதபொழுது உலகம் எப்படி வாழமுடியும்? ஆதலால் அவனை இல்வாழ்க்கையில் ஈடுபடுத்தற்கு அதினிடத்து இன்பங்காட்டி அதன் சிறப்பை உணர வைத்து அதனால் உலகிற்கு பெரும்பயன் தரஉள்ளமையால் வியாழபகவான் கூறிட நினைத்த பொய்யும் பெரும்பயன் உலகிற்குத் தரலால் மெய்யாயது என்க.

வேறு

அன்பு நீங்கிய அவுணருக் கரசனாற் பட்ட
துன்ப மானதை உன்னியே துறக்கமேல் அரசும்
இன்ப வாழ்க்கையும் வெறுத்தனை இவைவெறுத் தனையேல்
பின்பு நோற்றுநீ ஆற்றலால் பெறும்பயன் யாதோ.

எனது அன்பனே கேள்! நீ இறந்துபோன அசுரர் அரசனான சூரபன்மனால் பட்டுக் கொண்ட துன்பமானதை மனதில் எண்ணி அதனால் சொர்க்க உலகின் அரசாட்சியையும் இன்பமுடைய வாழ்வையும் வெறுத்தாய். இவற்றை நீவெறுத்தால் பின்னாக நீ தவம்செய்து அந்தத்தவத்தால் பெறப்போகும் பயன்யாதாகும் அதனை நீ எண்ணினாயோ? 8

சிந்தை வெந்துயர் உழந்தவ ரல்லரோ திருவும்
அந்த மில்பெரு வாழ்க்கையும் எய்துவர் அதுதான்
மைந்த வாழிகேள் நின்னுள வன்றுகாண் மதிக்கின்
இந்த முவுல கந்தனில் வழங்கிய இயற்கை.

தனது மனம் பெரிதும் துயருழந்தவரல்லரோ பெரும் செல்வத்தையும் முடிவிலாத வாழ்வையும் அடைந்து கொள்வார்கள். அந்த ஒரு துன்பத்தின் பின்னுகிய இன்பம் என் மகனே நின் அளவன்று என்பதை அறி. அதனை எண்ணினுல் இந்த மூவுலகத்திலும் எல்லாஇடமும் நடைபெற்று வருகின்ற இயற்கையாகும்.

ஒவ ருந்தவம் இயற்றிய முனிவரில் உலகத்
தேவர் தங்களில் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்கள் தம்மில்
ஏவர் மங்கையர் முலைத்தலைப் போகம்விட் டிருந்தோர்.

ஒய்விலாத பெரும்தவம் இயற்றிய முனிவரில் உலகில் உள்ள தேவர்கள் தங்களில் பாதாள உலகத்தோரில் சிறந்த பிரமமா விஷ்ணு உருத்திரன் என்று பேர் பெற்ற முதல்வர்களிலே எவர்தானே பெண்களுடைய முலைகளின்பால் அணைந்து பெறுகின்ற இன்பத்தை விட்டு இருந்தார்கள். 10

போன துன்பினுக் கஞ்சியே புகுந்தவித் திருவை
ஊன மாமெனத் துறந்துநீ தமியைநோற் றுழலின்
ஆன போதுறுந் துயரினுக் கவதியும் உண்டோ
கானல் நீந்திட வெருவியே கடல்புக வற்றோ.

உனக்குக் கழிந்துபோன துன்பத்திற்குப் பயந்து இப்போது உன்னை அடைந்துகொண்ட இத்திருவை கூடாது எனவிடுத்து; நீ தனித்திருந்து தவமியற்றி உழல்கின்றபோது உனக்கு வரக்கூடிய துன்பத்திற்கு ஓர் எல்லையும் உண்டோ? ஒருவன் கானல் நீரைக் கடக்கப்பயந்தவன் கடலைக் கடந்திட அவனுல் முடியுமோ? 11

ஆக நோவுற வருத்தியே ஐம்புலன் அவித்து
மோக மாதியாம் மூவிரு குற்றமும் முருக்கி
யோகு செய்திடும் மேலையோர் பெறும்பயன் உரைக்கில்
போக மன்றிஒன் றில்லைகாண் எல்லைதீர் புகழோய்.

தவம் செய்வதனுல் தனது உடலம்நோவுற வருத்தி ஐந்து புலன்களையும் அடக்கி மோகம் காமம் குரோதம் லோபம் மதம் மாற்சரியம் என்று ஆறு குற்றங்களையும் களைந்து; யோகத்தைப் புரிகின்ற பெரியோர்கள் பெறுகின்ற பயனை நாம் சொல்லில் அதுவும் போக இன்பத்தைப் பெறும்பொருட்டல்லாது வேறென்றில்லை என்பதை எல்லைதீர் புகழுடைய என் இந்திரனே அறிவாயாக. 12

காண்ட கும்புலன் ஒடுங்குமாங் கரணமும் இலையாம்
பூண்ட செய்கையும் ஒழியுமா மியாக்கையும் போமாம்
ஆண்டொர் பேரின்பம் உண்டென்பர் அதனையார் அறிந்தார்
ஈண்டு கண்டதே மெய்யென்பர் உலகுளோர் யாரும்.

அந்நிலையில் தவம் செய்து பெறப்போகின்ற இன்பத்தை சொல்வேன்; நாம் காண்கின்ற புலன்கள் எல்லாம் ஒடுங்கிப்போமாம்; அந்தக் கரணங்களும் இல்லையாம்; உடலே இருக்கின்றது என்னும் உணர்ச்சியும் இலாது போமாம்; இப்படியான நிலையான ஒரு முத்தியின்பம் உண்டென்பர். இதனை யார் அறிந்தார். ஒருவரும் அறிந்தாரில்லை, ஆதலால் இங்கு அனுபவித்துக் கண்டதே மெய்யென்பார்கள் இந்த உலகத்தவர்கள் எல்லாரும். 13

பொய்ம்மை உற்றிடு கானலைப் புனலென விரும்பிக்
கைம்மிசைக் கொண்ட அமிர்தினைக் கமருகுத் தாங்கு
மெய்ம்மை யிற்சிலர் உண்டெனும் வீடுபே றுன்னி
இம்மை யிற்பயன் இழக்குதி நன்றுநின் எண்ணம்.

பொய்யாக விளங்கிடும் கானலை நீரென்று உண்ண விரும்பி ஒருவன் கையில் வைத்திருந்த நீரை வெடிப்பிலே ஊற்றியதுபோன்று; உண்மையிற் சிலர் உண்டு என்று கூறிடும் முத்தியின்பத்தை விரும்பி இம்மையிலே சிறப்புடன் இலேசில் பெறக்கூடிய பெரும் பயனை இழக்கப்போகின்றாய்; நல்லாக இருக்கின்றது உனதுஎண்ணம் 14

மங்கை மார்இடத் தின்பமே இன்பமற் றவரோ
டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே இயல்புறும் வாழ்க்கை
அங்க வர்ப்பெறு செல்வமே செல்வம்ஆங் கவர்தங்
கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர் வறுமை.

பெண்களிடத்தில் பெறுகின்ற இன்பமே இன்பம்; அவர்களுடன் இங்கு கூடி வாழ்கின்ற வாழ்க்கையே இயல்பில் சிறந்ததொரு வாழ்க்கை; அழகுடைய பெண்களை அணையப்பெறும் செல்வமே செல்வம். அப்பெண்களுடைய முலைகளைப் பிடித்திடாததால் வருகினற குறைபாடுதான் உண்மையில் கொடியதொரு வறுமை. 15

மறுவி லாதவாள் மதிமுக மடந்தையர் புணர்ப்பைச்
சிறிய இன்ப மென்றுரை செய்வர் அன்னதன் சிறப்பை
அறிவ ரேயெனின் ஆங்கதே பேரின்ப மாகும்
இறைவ நீயது கேட்டியேல் மொழிகுவன் என்றான்.

மறுவிலாத ஒளியுடைய பூரண சந்திரனைப் போன்ற முகமுடைய அழகிகளை உடலுறவால் சேர்வதைச் சிறிய இன்பமென்று உரைப்பார்கள். ஆனால் அதனின் சிறப்பை உண்மையில் எண்ணிடுவாரெனின் அது பேரின்பமாகும், என் அரசே நீ அதன்விபரத்தை அறிந்திடும்படி கேட்பாயாகில் உனக்கு அதனை மொழிவேன் என்றார் வியாழபகவான். 16

ஏமஞ் சான்றிடு குரவன்மற் றிவையிவை இசைப்ப
நாமஞ் சான்றிடு குலிசமாப் படையினன் நகையா
ஓமஞ் சான்றிடு தீமுன்னர் இழுதென உடைந்து
காமஞ் சான்றிடும் உளத்தனாய் இனையன கழறும்.

அன்பே உருவாகி அமர்ந்த வியாழபகவான் இதனை எடுத்து மொழிந்திட; பெரும் புகழுடன் விளங்கிய குலிசப் பெரும்படையைக் கையில் உடைய இந்திரதேவன் அது கேட்டுச்சிரித்து; ஓமாக்கினியின் முன்பு வைத்திடப் பெற்ற நெய்யினைப் போன்று சிந்தை உடைந்து காமம் தோன்றப்பெறும் சிந்தையை உடையனாய் இதனைச் சொல்லிடுகின்றான். 17

பொருந்துமாசினை அகற்றிநற் காட்சியைப் புரியும்
மருந்து போலுறு குரவநீ மடந்தையர் சிறப்புந்
திருந்து காமநல் லின்பமும் எனக்கருள் செய்யா
திருந்த காரண மென்கொலோ இன்றுகா றென்றான்.

என்னிடத்துப் பொருந்துகின்ற அழுக்குச் சிந்தைகளை அகற்றி நல்ல காட்சியைப் பெறும் அறிவினை ஊட்டுகின்ற அமிர்தம்போன்ற எனது குருவே! நீர் இதுகாறும் வரை அழகிகளின் சிறப்பையும் அவருடன் உடலுறவால் பெறுகின்ற திருந்திய காம இன்பத்தையும் பற்றிய வரலாற்றை இவ்வளவு நாளும் எனக்குசொல்லாமலிருந்ததென் காரணமென்னவோ? எனக்கேட்டான் இந்திரதேவன். 18

## வேறு

வெற்றுட லத்தில் விழித்தொகை பெற்ற
சிற்றறி வோன்இவை செப்புத லோடும்
மற்றிவன் உள்ளம் மயங்கினன் என்னுக்
கற்றுணர் மந்திரி கட்டுரை செய்வான்.

வெறும் உடல் எங்கும் கண்கள் தொகையாகப் பெற்றுடைய சிறிய அறிவுடைய இந்திரதேவன் இவற்றைச் செல்லுதலோடும் அதைக் கண்ட வியாழபகவான் ஓகோ இந்திரதேவன் உள்ளம் மயங்கித் திரும்பியுள்ளான் என்று யாவற்றையும் கற்றுணர்ந்த மந்திரியான வியாழபகவான் இதனைச் சொல்கின்றார். 19

மாதர்கள் மேன்மைகள் மன்மத நன்னூல்
ஓதிடும் உண்மையை ஓர்ந்துணர் கின்ற
காதல் இலாவழி கட்டுரை செய்யார்
ஆதலின் ஐய அறைந்திலன் இந்நாள்.

பெண்களது மேன்மைகளைப்பற்றி மன்மதசாத்திரம் என்னும் நூல் எடுத்து ஓதிடும்; அதனை எவரும் அறியவேண்டும் என்ற விருப்பம் இல்லாத நேரத்து ஒருவரும் அதனை எடுத்து ஓதிடார்கள். ஆனதினாலே இவ்வளவு நாளும் நீயும் கேட்காதபடியால் உனக்கு நான் சொல்லவில்லை. 20

கோண்மதி யேகுடை யாவரு கோன்தன்
மாண்மதி நூலெனும் வான்கடன் முற்றும்
நீண்மதி யால்உணர்ந்தேன் அதன் நீர்மை
கேண்மதி யென்று கிளத்திடு கின்றான்.

சந்திரனைக் குடையாகக் கொண்டுவரும் தலைவன் மன்மதனின் மாட்சிமை மிகுந்த யுத்தி அனுபவம் எனப்படும் நூலாகும் பெருங்கடல் முழுவதையும் எனது நீண்டதொரு மதியால் அறிந்து உணர்ந்துளேன். அதன் விரிவை நீ நன்றுடன் கேட்டிடுவாயாக இந்திரனே எனக் கூறுகிறான் வியாழபகவான். 21

ஈறில வென்றும் இயம்பினர் பத்தே
நூறுடன் எட்டெனும் நூலும் நுவன்றார்
வேறும் இசைத்தனர் மெய்ச்சம யந்தான்
ஆறென ஓதினர் ஆங்கவை தம்முள்

சமயங்களின் தொகை முடிவில்லை என்று உரைத்தார்கள் அல்லது ஆயிரத்தெட்டு என்றும் நூலில் சொல்வார்கள்; வேறாகவும் சொல்வார்கள். இவற்றினுள் எல்லாம் உண்மையான சமயம் ஆறு என எடுத்தோதினார்கள். 22

சுதையமு தேயெனத் துய்த்திடு நீரார்க்
கிதமிக நல்குவ திம்மையின் முத்திக்
கதியருள் கிற்பது காமர் உலோகா
யதமென வேநெறி யொன்றுள தன்றே.

வெண்மை நிறமுடைய அமிர்தத்தை உண்கின்றவர்கட்கு இப்பிறவியில் இதம் மிகக்கொடுப்பதும்; இம்மையிலே முத்தி என்கின்ற கதியினைத் தந்து நிற்பதுமான சிறந்த உலோகயுதம் என்றொரு சமயம் முன்சொல்லிய ஆறு சமயங்களில் ஒன்றாக உளது. 23

அச்சம யத்தலை யாற்றிடை நின்றே
எச்சமில் வீடுபெற் றின்புறு கின்றோர்
மெச்சியல் ஆடவர் மேலதை ஈவோர்
நச்சுறு கூர்விழி நாரியர் தாமே.

அந்த உலகாயுதம் என்னும் சமயத்தின் நெறி வழி நின்று ஒழுகி வாழ்ந்து குறைவிலாத முத்தியினைப் பெற்று, இன்புறுவோர் யாவராலும் மெச்சத் தகுந்த இயல்புடைய ஆண்கள். ஆனால் அம்முத்தியின்பத்தை ஆடவர் அனுபவிக்கக் கொடுப்பவர் நஞ்சுவோலும் கூரிய விழியுடைய பெண்கள் என்பதை அறிவாயாக. 24

அம்மட வார்இய லானவும் அன்னோர்
தம்மை அடைந்திடு தன்மையும் மேவுஞ்
செம்மைகொ ளாடவர் செய்கையும் எல்லாம்
மெய்மைய தாக விளம்பிடும் வேள்நூல்.

அந்தப் பெண்களுடைய இயல்பையும் அப்பெண்களை உடலுற்வால்கூட வேண்டிய விதிப்பிரகாரங்களையும் அவர்களை கூடிடும் செப்பமான நிலையுடைய ஆடவர்களின் செய்கையும் எல்லாவற்றையும் மன்மத சாத்திரம் உண்மையாகச் சொல்லிடும். 25

சாதி இயற்கைகள் தத்துவம் மாந்தர்
தீதில் குணத்தொடு தேசம் அவத்தை
போது கருத்திவை ஆதிய போர்வேள்
வேதம் உரைக்கும் விழுப்பொருள் மாதோ.

பெண்களின் ஆடவரின் சாதி இயற்கை தத்துவம் மனிதரின் தீதில்லாத குணத்துடன் தேசம் அவத்தை காலம் கருத்து இவையாதியானவற்றின் சிறப்புகளைப்பற்றி மன்மத நூல் என்னும் வேதம் எடுத்து கூறிடும் மேலான பொருள்கள் என்பதை நீ உணர்வாய். 26

வசைதவிர் மானினி மால்வட வைப்பேர்
இசையினி அத்தினி ஏந்திழை யோர்க்காம்
அசைவறு தொல்மர பாடவர் யார்க்குஞ்
சசன்இட பன்அசு வன்இவை தாமே.

வசைதவிர் பதுமினி சித்தினி சங்கினி அத்தினி ஆகியவை நான்கும் அசைவிலாத நெறியாகத் தொன்று தொட்டு வழங்கிவரும் பெண்கட்குரிய சாதியாகும். ஆண்கள் யாவர்க்கும் சசன் இடபன் அசுவன் இவையாகச் சொல்லப்பெறும். 27

முன்னம் உரைத்திடும் மும்மர புக்குட்
கன்னியர் ஆடவர் காமர் குறிக்கு
மன்னிய ஆழமும் நீளமும் முற்றும்
இன்னன வென்றிட ஏற்ப தியற்கை.

முன்னே சொல்லிய மூன்று மரபிற்குரிய ஆடவரதும் கன்னியரதும் காமர் குறிக்கு பொருந்திய ஆழமும் நீளமும் மற்றும் இப்படியென எடுத்தோதல் இயற்கை என்னும் பகுதியின் பாற்படும். 28

அந்தமில் தேவர் அருந்தவர் நாகர்
கந்தரு வத்தர் கணங்கெழு பூதர்
முந்தும் அரக்கர் இயக்கர் முரட்பேய்
தந்திறன் ஆவது தத்துவ மாமே.

முடிவிலாத தேவர் அரீய தபோதனர் நாகர் கந்தருவர் வலிகொண்ட பூதர் முன்னைய இராட்சதர் இயக்கர் முரணுனபேய் இவற்றின் திறம்பட்டு இருப்பது தத்துவத்தின் பாற்படும். 29

எண்மைகொள் தத்துவ யாற்றிடை நின்ற
பெண்மைய ரைவளி பித்தென ஓதும்
வண்மைகொள் முக்குணம் மன்னினர் மற்றவ்
வுண்மை படைத்திடல் ஒண்குண ளுமே.

முன் சொல்லிய எட்டுவித தத்துவவழியில் நின்ற பெண்கள் சிலேட்மம் வாதம் பித்தம் எனச் சொல்லிய வலியாகும் முக்குணத்தினைப் பொருந்தினர் அதன் அதன் உண்மையான இயல்பைப் பெற்றிடுதலே சிறந்த குணம் என்னும் பகுதியில் எடுத்துக் கூறும் மன்மத நூல். 30

## வேறு

உருவும் வண்ணமும் ஓங்கும் செயற்கையும்
அரிவை மார்கள்தம் நாளும் அனையவுந்
தெரிய நாடித் தெளிந்தறி கிற்பரால்
மரபு தான்முதல் வான்குணத் தீறுமே.

உருவமும் வண்ணமும் மேற்கொண்ட செயலும் பெண்களை அனைய வேண்டிய அவர்களது நாளும் அத்தனையையும் தெளிவுற நாடித் தெரிந்து கொள்வார்கள் சாதிமுதல் மேலான குணம் எனச் சொல்லப்பெறும் இவைகளின் இயல்பிலிருந்து. 31

ஏறுதேசந்தொ றீண்டிய மாதர்தம்
ஊறும் நீதியும் உள்ளமுஞ் செய்கையும்
வேறு வேறு வினவியெல் லோர்களுந்
தேற நிற்பது தேச இயற்கையே.

மேலாகிய பல்வேறு தேசம் தோறும் பெண்களுடைய உடம்பும் நீதியும் உள் ளமும் செய்கையும் வேறுவேருக எடுத்துக்கூறி எல்லாரும் தெளிந்து கொள்ளும்படி நிற்பது தேசம் எனப்படும் மன்மத நூலின் பகுதியின் இயல்பாகும். 32

தரித்த வாலை தருணை பிரவுடை
விருத்தை யாகும் வியன்பரு வங்களின்
உரைத்த காலமும் உள்ளத்தின் வேட்கையும்
பிரித்த றிந்திடப் பெற்றத வத்தையே.

விளங்கிடுகின்ற வாலை தருணை பிரவுடை விருத்தை எனச் சொல்லப்பெறும் மேலான பெண்களின் பருவங்களில் அவர்களைக் கூடற்கு சொல்லப்பெற்ற காலத் தையும் உள்ளத்தின் வேட்கையையும் இப்படியென பிரித்தறித்திடப் பெற்றது அவத்தை எனும் பகுதியாகும். 38

கோல மாம்முக் குணத்தர்முப் பான்மையர்
நால்வர் எண்மராம் நாரியர் பற்றுற
ஏலும் ஆடவர் எய்துதற் கேற்றபல்
கால முந்தெரி கிற்பது காலமே.

கோலம் நிறைந்த முக்குணத்தை உடையரை மூன்று வகையானவரை நான்கு சாதியாய் எட்டுவகைத் தத்துவ இயல்புடன் கொண்ட பெண்கள் விருப்பங்கொள்வதற்கு அவர்கட்கு ஏற்ற ஆடவர்கள் அவர்களை அடைதற்கேற்ற காலத்தைத் தெரிவிப்பது மன்மத நூலில் உள்ள காலம் என்ற பகுதியாகும். 34

மக்கள் காமம் வடிவினில் வைகலும்
பக்கந் தோறும் இழிந்துயர் பான்மையால்
புக்க தோரிடை நாடிப் புரையொரீஇத்
தக்க செய்வதுஞ் சாற்றிய மேலதே.

மக்கள் காமருபியான இயல்பில் நிற்றலும் ஒவ்வோர்வேளையும் உடலுறவிற்கு இழிந்ததாகவும் உயர்ந்ததாகவும் நிற்றலால் அந்த நேரம் தோறும் அவற்றின் இடையைத் தெரிந்து குற்றங்களை நீக்கி மாண்புடைய செயலைச் செய்வதற்கு ஏற்ற காலத்தை உணர்த்துவது முன் சொல்லிய காலத்தின் பாலாகும். 35

பற்று ளோரையும் பற்றிலர் தம்மையும்
முற்று ளோரையும் முற்றிலர் தம்மையும்
மற்று ளோரையும் மாந்தர்கள் தேற்றுமால்
துற்ற செய்கை உளங்கொள் கருத்ததே.

இச் செயலில் பற்றுளோரையும் விரும்பாதவரையும் இதனில் முன் ஈடுபட்டோரையும் ஈடுபடாதவரையும் மற்றும் வேறு பேரையும் மனிதமுறையாக இச் சைவசப்படுத்திவைக்கும் செய்கையை விரும்பத்தக்க கருத்தின் பகுதியில் மன்மத நூல் கூறிடும். 36

வேறு

இங்கிவை ஆடவர் இயல்புஞ் சால்புறு
மங்கையர் பான்மையும் வகுத்த தன்னவர்
பொங்கிய புணர்வகை புணர்ச்சிக் கேற்பதோர்
அங்கிதம் பிறவுமேல் அறைய நின்றவே.

இங்கு இவைகள் ஆடவர்கள் இயல்பும் சால்புற்ற பெண்கள் பக்குவமும் வகுத்தது என்க, இனி அவர்கள் மனதில் எழுகின்ற விருப்பத்திற்கேற்றிடுமாறு உடலுறவு கொண்டிட; உடலுறவுக்கேற்பதொரு இதமாகும் செய்கைகள் மேல் சொல்லப் பெற இருக்கின்றன. 37

புல்லுதல் சுவைத்திடல் புணர்ந கக்குறி
பல்லுறல் மத்தனம் பயிலுந் தாடனம்
ஒல்லொலி கரணமோ டுவகை ஆகிய
எல்லையில் புணர்நிலைக் கியைந்த என்பவே.

அணைத்து இறுகத்தழுவல் இதழைச்சுவைத்தல் நகத்தால் குறியிடல் பல் அழுத்தல் தட்டல் தூக்கி தாடனம் செய்தல் இனிய ஓசை கரணம் இவையுடன் உவகை ஆகிய இவை எல்லையற்ற நல்நிலையால் உடல் உறவு கொள்ளற்கு ஏற்ற வகையாக இயைந்தது என்பார்கள். 38

வேறு

விரைதலே சமந்தூக் கென்னும் வேகமும் உச்சம் நீசம்
புரைதவிர் சமமென் றேதும் பொருண்மையுங் குணத்திற் பற்றிப்
பரவும்ஐ வகையில் ஈரையும் பகுதியாற் பிறவாற் சேர்தல்
உரைதரு புணர்ச்சி யாகும் உபரியும் அனைய தொன்றே.

விரைதல் சமம் தூக்கு என்றிடும் வேகமும் உச்சம் நீசம் குற்றம் தவிர்ந்த சமம் என்று ஓதிடும் பொருண்மையும் குணத்தின் பாலுடைய ஐவகை யாகவும் பத்து வகையாகவும் வேறுவகையாகவும் சேர்தல் சொல்லப் பெறும் புணர்ச்சியாகும் உபரி என்பதும் அதைப்போன்றதென்றே. 39

உறுத்தலே நெருக்கல் மெல்ல உரோசுதல் உறுதல் முன்னு
மறுத்தவிர் தருவு சூழ்ந்த வல்லியே மரமேற் கோடல்
செறித்தவெள் ளரிசி பாலார் தீம்புனல் செயிதீர் காட்சிப்
புறத்தி லோர்உறுப் புறுத்தல் புணற்சியிற் புல்லற் பால.

உறுத்தல் நெருக்கல் மெல்லத் தடவுதல் சாய்த்தல் முன்னுள்ள கசடு நீங்கிய மரத்தைச் சூழ்ந்த கொடிபோலப் பிணைதல் சிறந்த வெள்ளரிசி பால் நீர் ஆகியவற்றின் குறைதீர்ந்த வடிவினை வெளியில் ஓர் உறுப்பைஉறுத்தல் இவைதான் உடலுறவில் அணைத்தலாகும். 40

வைத்தலே துடித்தல் ஒற்று மரபொப்பு விலங்கு சுற்றே
உத்தர மதுக்கல் உள்ளீ டோங்குசம் புடாதி தன்னால்
பத்துடன் ஒன்றும் ஏனைப் பல்வகை உறுப்பு நாடி
முத்திறத் தமிர்தம் உண்டல் முன்மொழி சுவைத்த லாமே.

வைத்தல் துடித்தல் ஒற்று மரபொப்பு விலங்கு சுற்று உத்தரம் அதுக்கல் உள்ளீடு மேலோங்கிய சம்புடம் முதலியவற்றால் பதினொரு உறும்பும் ஏனைய பலவகை உறுப்புகளையும் நாடி மூவகையான அமிர்தத்தை உண்டல்தான் முன்னர் சொல்லிய சுவைத்தலின் குறியாகும். 41

சுரிதகம் எண்ணாட் டிங்கள் தூயமண் டலமே மஞ்ஞை
நிரலடி முயலின் புன்கால் நெய்தலின் இதழே வேங்கை
உருகெழு நகவி ரேகை உருவில்ஏழ் உறுப்பி லங்கும்
வரன்முறை நகத்தால் தீட்டல் வள்ளுகிர்க் குறிய தன்றே.

சுரிதகம் எட்டாவது நாளின்சந்திரனின் தூய மண்டலம் மயிலின் அழகிய கால் முயலின் மென்மையான கால் ஆம்பல் பூவிதழ் வேங்கை உருவில்கொண்ட நகவிரேகை இந்த வடிவில் ஏழுவகை உடல் உறுப்பில் தங்கும்படி நகத்தால்கீறிடுதல் நகக்குறி எனப்படும். 42

துவர்படு பவள மாலை சுனகமு டிகமே ஏனக்
கவரடி மணிபோழ் வட்டக் கடிகண்டப் பிரத முற்றும்
இவைஅல பிறவும் போல இன்னமு துண்ட தானம்
அவைதமில் நெறியால் தந்தம் அழுத்தல் பற்குறிய தம்மா.

சிவப்புக் கொண்ட பவளமாலை நாய் எலி பன்றிக்கால் பவள முத்தினைப் பிளந்த வட்டம் கடிகண்டப் பிரதம் முழுவதிலும் இவைபோல அல்லது பிறவும்போல இனிய அமுதம் வரும் தானங்களில் பற்களைமுறையாக அழுத்தல் பற்குறியாகும். 43

உரமுதல் ஐந்தில் ஐம்பால் உணர்தொழிற் முறையால் ஏப்பப்
பொருவரு புணர்ச்சி வேலை புடைத்திடல் புடைப்ப தாகும்
கரிகர மாதியாய கனங்குழை மகளிர் வெஃக
மருவிய வழிபா டன்றே மத்தனம் என்ப வல்லோர்.

நெஞ்சு முதலிய ஐந்திடங்களிலும் ஐந்துவகையாக உணர்வு கொள்ளும் முறையாக நிகரிலா இன்பம் பெறும்படி நிகரற்ற உடலுறவுகொள்ளும் நேரத்தில் புடைத்தலை புடைத்தல் எனச் சொல்வார்கள். கரிகரம் ஆதியான முறையால் அழகிய ஆபரமணிந்த பெண்கள் விரும்பிச்சேரும் வழியை மேற்கொள்ளல் மத்தனம் என இதில் வல்லமை உடையார் சொல்வர். 44

மயில்புற வன்னங் காடை வண்டு வாரணஞ் செம்போத்துக்
குயிலென இசைக்கும் எட்டின் குரலினைப் பயின்று காமர்
இயலுறு மகளிர் பாங்கர் எய்துழி இவையில் வேண்டுஞ்
செயல்வகை புரியு மாறு சிறந்சீற் காரமாமே.

மயில்புரு அன்னம் காடை வண்டு சேவல் செண்பகம் குயில் என்று சொல்லப் பெறும் எட்டுபறவைகளின் குரலினைப் பயின்று அழகிய பெண்கள் பக்கரில் அடையும்போது இவைகளின் செயல்வகைகளை வேண்டியபடி புரிதல் சிறந்த ஓசை எனப் படும். 45

பாரியல் கிராமி யஞ்சீர்ப் பவுத்திக நாக பாசம்
ஏரியல் நாக ரீகம் இந்திரா ணிகமே கூர்மஞ்
சாரிதம் ஆய்தம் மூர்த்தஞ் சங்கிரா ணிகமண் டூகம்
பாரிசம் பிடிதஞ் சூலஞ் சுரும்பிதம் பதும பீடம்.

பெரும் இயல்புடைய கிராமியம் சீருடைய பவுத்திகம் நாகபாசம் சிறப்புடைய நாகரீகம் இந்திராணிகம் கூர்மம் சாரிதம் ஆய்தம் மூர்த்தம் சங்கிராணிகம் மண்டூகம் பாரிசம் பிடிதம் சூலம் சுரும்பிதம் பதுமபீடம். 46

எண்டகுஞ் சம்பு டம்வேட் டிதம்விசும் பிதமுற் புல்லம்
பிண்டிலம் பீடி தம்மே பிரேதுகை அநுபா தந்தான்
பண்டதங் கடகமத்த பத்மவா சனஞ்ச மூர்த்தம்
தண்டகம் லளிதம் வேணுச் சாரிதஞ் சமவே சன்னம்.

சிறந்து கொள்ளப்பெறும் சம்புடம் வேட்டிதம் விசும்பிதம் உற்புல்லம் பிண்டிலம் பிடிதம் பிரேதுகை அநுபானம் பண்டதம் கடகம் பத்மவாசனம் மூர்த்தம் தண்டகம் அளிதம் வேணு சாரிதம் சமவேசன்னம். 47

ஆடவஞ் சமபு டத்தோ டமர்பரி வத்த கஞ்சங்
காடகந் தேனு கம்மற் கடகம்ஐம் பதமே சானு
மாடமர் துகிலம் பீனம் ஆத்திக மேகூர்ப் பன்னம்
பீடிதோ ருகமம் பீதம் பீடிகை யோடு பின்னும்.

ஆடவம் சமபுடத்தோடமைந்த பரிவத்தகம் சங்காடகம் தேனுகம் மற்கடகம் ஐம்பதம் சானு மேல்விளங்கும் துகிலம் பீனம் ஆத்திகம் கூர்ப்பன்னம் பீடிதோருகமம் பீதம் பீடிகையோடு பின்னரும்.

ஒட்டுவிக் கிரம மேகோ யூதகம் என்னும் நாற்பான்
எட்டுள திறத்தி னனும் இவையல பிறவாற் றானும்
மட்டமர் குழலி னர்கள் மகிழ்தர மதனூல் தேறுஞ்
சிட்டர்கள் புணரும் பான்மை சித்திரக் கரண மாமே.

ஒட்டுவிக்கிரமம் கோயூதகம் என்று சொல்லப்பெறும் நாற்பத்தெட்டு வகையாலும் இவையல்லாது இன்னும் பிறவழியாலும் தேன்சொரியும் மலர்சூடிய கூந்தலை உடைய பெண்கள் மகிழ்வுறும்படி மன்மத நூலை நன்கு தெரிந்த அறிவாளிகள் உடலுறவு கொள்கின்ற பாங்கினை சித்திரமுடைய கரணம் என்னும் பகுதியில் சொல்லப்பெறும். 49

திணைநிலை மகளிர் தத்தந் திறங்களுஞ் சேர்தல் மாண்பும்
உணர்குவ ரெனினும் மற்ற ஒண்குழு வதனுள் நின்ற
கணிகையிற் பரத்தை காமக் கன்னியர் ஒழிந்தோர் தம்மைப்
புணர்கையும் பிறவுந் தேர்தல் புலமையோர் கடனும் அன்றே.

திணை நிலை வகையால் பெண்கள் தங்களின் திறமும் சேர்கின்ற மாண்பினையும் உணர்ந்து கொள்வர் என்றாலும் இந்த பெண்கள் குழுவில் நின்ற கணிகைப் பெண் பரத்தைப்பெண் காமக்கிழத்தி இவை நீங்கிய ஏனையோரைப் புணர்கின்ற செயலும் பிறவும் தெளிந்து கொள்ளல் ஓர் அறிஞனின் கடமையாகும். 50

முன்னுற மதன நூலின் முறையெலாந் தொகையிற் கூறி
அன்னதன் வகையுங் கூறி அகலமும் எடுத்துக் கூறிப்
பொன்னவன் இருத்த லோடும் புரந்தரன் அவற்றை ஓர்ந்து
கன்னியைப் புணருங் காமக் கவலைமேற் கருத்தை வைத்தான்.

முன்னாக வியாழதேவன் மனமத நூலின் முறை எல்லாவற்றையும் தொகைப் படக்கூறி; அதன் வழியாகவரும் வகையும் கூறி அதன்பின் தனித்தனிப்பதங்களின் விரிவும் எடுத்துக் கூறி இருத்தலோடும் இந்திரன் அவற்றை உணர்ந்து தானும் ஓர் கன்னியை உடலுறவால் கூடிடும் காய எண்ணத்தை உள்ளத்தில் கொண்டான். 51

கொற்றவெங் குலிச வள்ளல் குரவனை இறைஞ்சி எந்தை
சொற்றிடு பான்மை யெல்லாந் துணிவது வாகக் கொண்டேன்
மற்றொரு பொருளும் வெஃகேன் வரம்பிலா இன்பந் தன்னைப்
பெற்றனன் போலும் என்னப் பெருமகிழ் வெய்திப் போனான்.

கொற்றமுடைய கொடிய குலிசப் படைக்கு நாயகனான இந்திரதேவன் குரு வாகும் வியாழபகவானை வணங்கி எந்தை பெருமானே நீர் சொன்னவகை யாவற் றையும் துணிபாக நன்று என் உள்ளத்திற் கொண்டுள்ளேன். இனி இந்த இன் பத்தை விட வேறொரு பொருளும் விரும்பேன். எல்லையிலாத இன்பத்தை நான் பெற்றேன் போலும் என்று கூறிட அது கேட்டவியாழபகவான் பெரும் மகிழ்ச்சி அடைந்து தனது எண்ணம் வாய்த்தது என மகிழ்ந்து போயினார். 52

**வேறு**

திரைசெறி கடலெனத் திளைக்கும் இன்பநூல்
உரைசெய்து பொன்னவன் உவப்பிற் போந்திட
விரைசெறி தொங்கலான் மேலைப் பொன்னகர்
அரசினை மதலைபால் ஆக்கி னனரோ.

திரைகள்கொண்ட கடலினைப்போன்று பெருகிடும் இன்பநூலாகும் மன்மத சாத் திரத்தை வியாழதேவன் எடுத்துக்கூறி மிக மகிழ்வுடன் அப்பால் போயிட; உட னாக வாசம் கமழும் மாலையணிந்த இந்திரதேவன் மேலாகிய பொன்உலகின் அர சியல் பொறுப்பை தனது மகன் சயந்தனிடம் கொடுத்தான். 53

விண்ணுல காளுறும் வேந்தி யற்கையை
அண்ணலஞ் சயந்தனுக் கருளி இந்திரன்
தண்ணுறு சசிமுகச் சசியைக் கூடியே
எண்ணரும் போகமுற் றினிது வைகினான்.

வான உலகை ஆள்கின்ற அரசியலின் பொறுப்பை மேலான திறலுடைய தனது மகன் சயந்தனிடம் கொடுத்து பின்னர் குளிர்ச்சிபொருந்திய பூரணசந்திரனைப் போன்ற முகமுடைய இந்திராணியை உறவினால் அணைந்து நினைந்திடற்கரிய போக இன்பத்தை அநுபவித்திருந்தான் இந்திரதேவன். 54

அலைகடல் அமிர்தினை வெறுக்கும் ஆயிழை
இலவிதழ் அமுதமே இனிதென் றுண்டிடுங்
கொலையயி ராவதந் துறக்குங் கோல்வளை
முலையயி ராவத முயங்கி மேவுமே.

அலைக்கின்ற திரைகடலில் வந்த அமிர்தத்தை வேண்டாமென வெறுப்பான்; ஆனால் அதன்மேலாக தனது மனைவி இந்திராணியின் இலவ மலர்போலும் சிவந்த சொண்டால் பெருகிடும் எச்சிலான அமுதமே இனிதென்று உண்பான். கொலையினைப் புரியும் வேகமுடைய ஐராவதயானைமேற் செல்லும் உல்லாசத்தை நீக்கி நல்ல வளை யல்களை அணிந்த பெரும்தனங்களுடைய இந்திராணி என்னும் தன்காதலியுடன் அணைந்து முலைமேல் இன்புறுவான். 55

வெல்குறும் வலியுடை விருத்தி ரன்மிசைச்
செல்குறுந் தெய்வதத் தேரைச் சீறிடும்
ஒல்குறு நுசுப்பினை உடைய மங்கைதன்
அல்குலந் தேர்மிசை அசைந்து வைகுமே.

யாவரையும் வெல்கின்ற விருத்திராசூரன் என்னும் அசுரன் மேலாக போரிடச் செல்கின்ற தெய் வீகமான தேரைச்செலுத்திடுவதை கோபித்து நீக்கி மிகவும் சிறிய இடையுடைய இந்திராணியின் அல்குல் என்னும் தேர்மீது அசைந்தசைந் திருப்பான். 56

கருங்கடல் சூழ்புவி கவிழ்ந்து துன்புற
இரங்கிய இடிக்கொடி இகழ்ந்து காய்ந்திடும்
பொருங்கணை விழியுடைப் புலோம சைத்திரு
மருங்குல்மின் கொடியின்மேல் மகிழ்ச்சி கொள்ளுமே

கரிய கடல்சூழ்ந்த பூமி கவிண்டு துன்புற பெரும் ஓசையுடன் முழங்கும் இடி யாகும் கொடியை இது நன்றன்று என்று இகழ்ந்து நீக்கிடும்; ஆனால் போரிடும் அம்புபோன்ற கூர்மையான கண்ணுடைய இந்திராணி தேவியின் திருவுடைய இடை யாகும் மின்னல் கொடியைக் கண்டு மகிழ்ச்சி கொள்வான் இந்திரன். 57

இயற்படு தவமுனி யாக்கை என்பினாற்
செயற்படு வச்சிரஞ் செங்கை நீத்திடு
மயிற்பெடை யன்னதோர் மடந்தை கண்ணெனும்
அயிற்படை சேர்ந்திட அதனைத் தாங்குமே.

இயல்பான தவவாழ்க்கையுடைய ததீசி முனிவரின் உடலின் முதுகெழும்பினால் செய்யப்பெற்ற வச்சிராயுதமானதை தனது கையில் நின்றும் நீக்கிடுவான். ஆனால் பெண்மயிலினை ஒத்த சாயலுடைய இந்திராணியின் கண் என்கின்ற கூரியவேல் அவளை அணைத்திடும்போது தனது உடல்மேல்பட அதனைத்தாங்குவான். 58

இருள்நிற விசும்பினில் இடைய றுமலே
வருசிலை இரண்டையும் மறக்கு மாமலர்த்
திருநிகர் வனப்புடைத் தெய்வ மங்கைதன்
புருவவெஞ் சிலைகளே பொருளென் றுன்னுமால்.

பெரிய ஆகாயத்து இடையறுது தோன்றிவரும் தனது வில் இரண்டினையும் நீக் கிடும். ஆனால் பெரும தாமரை மலரில் வாழும் மகா இலக்குமியை ஒத்த வனப் புடைய தேவப்பெண்ணாகும் இந்திராணியின் புருவங்களாகும் கொடிய விலைகளை பொருள் என்று நினைப்பான், 59

ஏந்தலம் புயலினை இகழும் ஏந்திழை
கூந்தலம் புயல்மிசை உவகை கூர்ந்திடும்
பூந்தரு வல்லியை முனியும் பூண்முலை
வாய்ந்திடும் உரோமமாம் வல்லி புல்லுமே.

மேலான வாகனமான மேகத்தை இந்திரன் வெறுப்பான் இந்திராணிதேவியின் கரும் கூந்தல் என்னும் மேகத்தையே காணும் தோறும் உவகைகொள்வான். அழகிய பூக்கள் தருகின்ற கற்பக விருட்சத்தை வெறுப்பான். அழகிய இந்திராணி தேவியின் பூண்கொண்ட முலைமீதுள்ள உரோமமான கொடிகளை அணைத்துப் பிடிப்பான். 60

இத்திறம் இந்திரன் இந்தி ராணிபால்
வைத்தடும் உளத்தினன் மறுமை எய்தினுங்
கைத்திடு கருத்தினன் காமத் தின்பமே
துய்தனன் மதனனூல் துணிபு நாடியே.

இத்திறமாக இந்திரதேவன் இந்திராணியிடத்தில் எக்காலமும் வைத்திருக்கின்ற சிந்தையுடையோனாய்த் தனக்கு முத்தி வருவதென்றாலும்கூட அதை வெறுக்கின்ற உள்ளத்தினனாய்க் காமத்தின் இன்பத்தையே அனுபவித்திருந்தான் மன்மத சாத்திரத்தில் சொல்லிய துணிபின் பிரகாகம். 61

வேறு

அன்னதோர் நாளில் ஓர்நாள் அமரர்கோன் ஆணை போற்றிப்
பொன்னகர் செங்கோல் ஓச்சிப் புரந்திடு சயந்தனன் என்போன்
தன்னயல் வந்து வைகுந் தாபதர் அமரர் தம்முள்
முன்னுறு கின்ற ஆசான் முகனெதிர் நோக்கிச் சொல்வான்.

அன்னவாறான நாளில் ஓர் நாள் இந்திரபகவானுடைய ஆணையைக் காத்து பொன் உலகத்தில் செங்கோலினைச் செலுத்தி அரசாண்டிருக்கின்ற சயந்தன் என்னும் மைந்தன் தனது அயலில் வந்து கூடியிருந்த முனிவர்கள் தேவர்களில் முன்னாக நின்ற குருவாகிய வியாழபகவானின் முகத்தை நோக்கிச் சொல்கின்றான். 62

எந்தைகேள் மலரோன் ஆதி இயம்பிய அமரர் யாரும்
அந்தமில் முனிவர் யாரும் ஆற்றல்வெஞ் சூரன் தன்னால்
வெந்துயர் உழந்து தொல்லை மேன்மையும் இழந்து தாழ
வந்தகா ரணம தென் கொல் என்றலும் மறையோன் சொல்வான்.

எந்தை பிரபுவே கேட்பீராகத் தாமரை மலரில் இருக்கின்ற பிரமதேவன் ஆதியாகச் சொல்லப்பெறுகின்ற கடவுளரும் தேவர்களும் முடிவுகாண்பரிய முனிவர்களும் யாரும் ஆற்றலுடைய கொடிய சூரபன்மனால் கொடிய துயரை உழன்று முன்னைய மேன்மையையும் இழந்து தாழ்ந்துபோகும்படி வந்த காரணம் யாதாகும் அதனைச் சொல்வீராக என்றலும் அப்போது அவன் வார்த்தையைக்கேட்டு வியாழ பகவான் சொல்வார். 63

விண்ணவ ராயி னோர்க்கும் மேதகு முனிவர் யார்க்கும்
எண்ணமில் சூரன் தன்னால் எய்திய தீமை யெல்லாம்
நண்ணலர் புரமூன் றட்ட நாதனை அன்றித் தக்கன்
பண்ணிய மகத்திற் புக்க பாவத்தால் விளைந்த தென்றான்.

சயந்தனே கேள்! தேவர்கள் யாவருக்கும் மேன்மையுடைய முனிவர்களுக்கும் எதனையும் எண்ணாத பெரிய சூரபன்மன் தன்னால் துயரப்படவேண்டிய தீமை யாவும் பகைவரின் முப்புரங்களையும் எரித்தருளிய சிவபெருமானை விடுத்துத் தக்கன் செய்த யாகத்தில் புகுந்திருந்த அந்த பாவத்தால் விளைந்தது என்றார். 64

என்றலுஞ் சயந்தன் கேளா ஈதுகா ரணமேல் அந்தப்
புன்றெழில் தக்கன் வாழ்க்கை புரமெரி படுத்த தேவை
அன்றியே செய்த வேள்வி ஆயிடை நிகழ்ச்சி யாவும்
ஒன்றற உரைத்தல் வேண்டும் சிறியனேன் உணர்தற் கென்றான்.

என்று வியாழபகவான் கூறிடுதலும் சயந்தன் அதனைக் கேட்டு எம் குருவே! நீர் சொல்லிய இதுவே காரணமாக இருந்தால் அந்த கீழ்மையான செயலுடைய தக்கனின் வாழ்க்கையும் முப்புரமெரி செய்த விரிசடைக் கடவுள் சிவனை அவன் நீக்கிச் செய்த வேள்வியையும் அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவையும் ஒன்றும் தவறிடாது எனக்குச் சொல்லல்வேண்டும் சிறியேன் அதனை நன்கு உணர்ந்திடும் பொருட்டு என்றான். 65

சயந்தனென் றுரைக்கும் வள்ளல் சாற்றிய துணரா ஆற்ற
வயந்தனை எய்தி வாழி மதலைகேள் இதனை என்னா
வியந்திடும் அகந்தை தன்னால் மிக்குறு தக்கன் காதை
நயந்தரு மொழியால் ஆசான் இத்திறம் நவிலல் உற்றான்.

சயந்தன் என்று பலராலும் போற்றப்படும் பெருந்தகை சொல்லிய வார்த்தையை குருவாகும் வியாழ பகவான் உணர்ந்து; சயந்தனே நீ மிகவும் வலிமை பெற்று வாழ்ந்திடுக. என் மகனே இதனைக் கேட்பாயாக என்று தன்னையே பெரிதும் வியக்கின்ற அகந்தையால் மேம்பட்டு நின்ற தக்கனுடைய கதையை நயமுடைய மொழியால் இந்த வண்ணமாக எடுத்து ஓதிடுகின்றார். 66

இந்திரபுரிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் 421

தேவகாண்டம் முற்றுப்பெற்றது.

ஆக காண்டம் ஐந்திற்கும் திருவிருத்தம் 8277

கச்சியப்பசிவாச்சாரிய சுவாமிகள் திருவடி வாழ்க

குருபரன் திருவடிகள் வாழ்க.

உயரப்புலம்,
ஆனந்த வருஷம் மாசி மாதம் 17 ஆம் திகதி
ஞாயிற்றுக்கிழமை.

